# குமுதினி

அல்லது



# ஒற்றுமையும் வேற்றுமையும்



ரவீந்த்ரநாத் டாகுர்

எழுதியது

ஸ்ரீ. ர[illegible]நாயகி

மொழி[illegible]ர்த்தது

(ஆசிரியரின் [illegible]தி பெற்ற

மொழி[illegible]ர்ப்பு)

வெளியிட்டோர்:

சென்னை லா ஜர்னல் அச்சுக்கூடத்தார்

மயிலாப்பூர்.

1936

 [விலை ரூ. 1—௮—ப.

"Translation is always a treason and as a Ming author observes, ca[illegible]its best be only the reverse side of a brocade— all [illegible]reads are there, but not the subtlety of colour o[illegible]gn"—Okakura's Book of Tea.

# நன்றியுரை

இந்த நவீனத்தின் மொழி பெயர்ப்பு ஆனந்த விகடனில் சுருக்கமாய் வெளிவந்த சமயம் அதன் ஆசிரியராகிய ஸ்ரீமான். ரா. கிருஷ்ணமூர்த்தி அவர்கள் அதைத் திருத்திப் பிரசுரித்து உதவிபுரிந்தார். பிறகு புத்தக ரூபமாய் வெளியிடுவதற்காகச் செய்த மொழிபெயர்ப்பை அவருடைய விருப்பத்தின்படி ஸ்ரீமான் த. நா. குமாரஸ்வாமி அவர்கள் மூலத்திற்குச் சரியாகச் சோதித்தும், பல இடங்களில் தாமே மொழிபெயர்த்தும் அதிக உதவி புரிந்திருக்கிறார். இவ்விருவருக்கும் நான் மிகவும் கடமைப்பட்டிருக்கிறேன்.

ஏழாவது அத்தியாயத்தில் இருக்கும் இரண்டு சிறிய பாட்டுக்களைச் சரிவர அமைத்துக் கொடுத்தவர் ஸ்ரீமான் எஸ். தேசிக விநாயகம் பிள்ளை அவர்கள்.

ஸ்ரீ. ரங்கநாயகி.

# குமுதினி

## 1

இன்று ஆடி மாதம் ஏழாந்தேதி. அவிநாச கோஷாவின் ஜன்மதினம். அவருக்கு முப்பத்திரண்டு வயது நிரம்பிற்று. அதைக் கொண்டாடி மகிழ்ச்சி தெரிவிக்கும் நண்பர்களிடமிருந்து காலையிலிருந்து தந்திகளும் பூமாலைகளும் செண்டுகளும் ஏராளமாய் வந்துகொண்டிருந்தன.

கதைக்கு இதுவே ஆரம்பம். ஆனால் ஆரம்பத்திற்கு முன் பீடிகை இருக்கிறது. விளக்கு சாயங்காலமே ஏற்றப்படுகிறதென்றாலும், அதற்குக் காலையிலிருந்தே எண்ணெயும் திரியும் இட்டுத் தயாரித்து வைக்கிறார்களன்றோ!

இக்கதையின் பூர்விக விருத்தாந்தத்தைக் கவனித்தால் கோஷாலவம்சம் ஆதியில் சுந்தரவனம் என்ற இடத்தில் வசித்து வந்ததென்றும், பிறகு ஹூக்ளி ஜில்லாவில் நூர் நகரத்திற்கு வந்ததென்றும் அறிகிறோம். அவ்விதம் வந்ததற்குக் காரணம் போர்த்துகீஸியரின் கொடுமையா, அல்லது உள்ளூரில் சுற்றத்தாருடன் ஏற்பட்ட முரண்பாடா வென்பது சரியாய்த் தெரியவில்லை. வாழ்க்கையில் துன்பத்தை அநுபவிக்கப் பாரகன வாஸ்கானக்கை

விட்டு வேறிடம் செல்பவர்களுக்கு, புதிய இடத்தில் சீக்கிரம் முன்னுக்கு வரவேண்டுமென்னும் உணர்ச்சியும் அநேகமாய் இருக்கும். நூர்நகரிலும் ஏதேஷ்டமான மாடு கன்றுகள், நிலங்கள், வேலையாட்கள் ஆகியவர்களுடன் ஆதியில் கோஷாலவம்சத்தார் சுபிக்ஷமாக வாழ்ந்தார்களென்று தெரியவருகிறது. அவர்களுடைய கிராமமாகிய சேயாகுலியில் சுமார் நான்கு ஏகர் விஸ்தீரணமான கோஷாலகுளம் அவர்களுடைய புராதன கௌரவத்திற்கு அத்தாட்சியாக இன்னும் இருக்கிறது. ஆனால் பெயருக்கு மட்டும் அது அவர்களுடைய குளமேயொழிய அதை இப்போது அநுபவிப்பவர்கள் சட்டர்ஜிவம்சத்தினரே. இவ்விடத்திலும் கோஷாலவம்சத்தார் தங்கள் பிதுரார்ஜிதத்திற்கு எள்ளும் நீரும் விட்டுவிட்டுப் பராதீனராகப் போனதெவ்விதம் என்பது தெரியவேண்டாமா?

சட்டர்ஜிவம்சத்தார்களுடன் இவர்கள் அடிக்கடி சண்டையிட்டு வந்தார்களென்பது இவர்கள் புராதன சரித்திரத்திலிருந்து தெரியவருகிறது. கடைசிச் சண்டை சொத்து முதலியவைகளைப்பற்றியதன்று. கோஷாலகுடும்பத்தார் சட்டர்ஜிகுடும்பத்தாருடன் போட்டியிட்டு அம்மன்திருவிழாவில் தங்கள் முறைதினத்தன்று பிரதிமையை ஒரு சாண் உயரமாகச் செய்தார்கள். சட்டர்ஜிகள் இதை அறிந்ததும் சும்மா இருக்கவில்லை. இரவோடு இரவாக வேலைசெய்து பிராகாரத்தில் அம்மன் செல்ல முடியாமல் தடுக்கும் வண்ணம் அங்கங்கே தோரணங்கள் கட்டிவைத்தார்கள். உத்ஸவக்காரர்கள் தோரணங்களைப் பிய்த்து எறிய வந்தார்கள். தோரணக்காரர்கள் இவர்கள் மண்டையைப் பிளந்து விடுகிறோமென்று ஓடினார்கள். மற்ற வருஷங்களைக்காட்டிலும் இந்த வருஷம் அம்மன

அதிக இரத்தபலி பெற்றாள். வியவகாரம் அடிதடியிலிருந்து கோர்ட்டுவரைக்கும் போய்விட்டது. கோஷாலவம்சம் இன்சால்வெண்ட் ஆன பிறகே அச்சண்டை முடிவடைந்தது.

நெருப்பு அணைந்தது; தழல்கூட இல்லாமல் எல்லாம் எரிந்து சாம்பராகிவிட்டது. சட்டர்ஜிவம்சத்தாரின் தசையும் மங்கி வந்தது. நிர்ப்பந்தத்தினால் இருதிறத்தாரும் சமாதானமாய்ப் போனாலும் அதனால் அவர்களுக்கு உண்மையில் மனச்சாந்தி ஏற்படுமோ? ஜயித்தவனுக்கானாலும் சரி, தோற்றவனுக்கானாலும் சரி, உள்ளத்தில் ஆத்திரம் பொங்கிக்கொண்டுதான் இருக்கும். சட்டர்ஜிகுடும்பத்தார்கள் கோஷாலர்கள்மீதிருந்த எஞ்சிய கோபத்தையும் தீர்ப்பதற்குச் சமூகம் என்னும் கத்தியை உபயோகித்தார்கள். 'இவர்கள் தாழ்ந்தகுலப் பிராம்மணர்கள்; அதை மறைக்கிறார்கள்' என்றெல்லாம் சட்டர்ஜிகள் புரளிவிட்டனர். இவ்விதம் சொன்னவர் கட்சியில் பணத்தின் செல்வாக்கு இருந்தது. அவர்கள் சொன்னதைச் சாஸ்திரப் பிரமாணத்துடன் நிரூபிக்க வைதிகசிரோமணிகள் முன்வந்தார்கள். இக்களங்கத்தை நீக்குவதற்குத் தக்க அத்தாட்சியைக் காட்டவோ, தக்ஷிணை கொடுத்து வாயை அடக்கவோ அச்சமயம் கோஷாலகுடும்பத்தாருக்குச் சக்தியில்லை. ஜாதிக்கட்டுப்பாட்டின் நிர்ப்பந்தத்தினால் அக்குடும்பம் மறுபடியும் இருப்பிடம்விட்டு வேறிடம் தேடலாயிற்று. அக்குடும்பத்தினர் ரஜபபுரம் சென்று ஒரு சாதாரணக் குடிசை ஏற்படுத்திக்கொண்டு அங்கு வசிக்கலாயினர்.

அடிக்கிறவன் தான் செய்ததைச் சகஜமாய் மறந்துவிடுகிறான். அடிபடுபவன் அதை எளிதில் மறப்பதில்லை.

கையைவிட்டுச் சக்தி போய்விட்டபோதிலும் தோல்வியுற்ற வர்கள் மனதில்மாத்திரம் ஒரு கொதிப்பு இருந்துகொண்டு தானிருக்கும். நீண்ட காலமாகப் பலமற்றவர்களாய் இருந்தபோதிலும் கோஷாலர்களுடைய ஆத்திரம்மட்டும் பரம்பரையாய் வளர்ந்துகொண்டே வந்தது. அவ்வப் போது அவர்கள் சட்டர்ஜிகளை எவ்விதம் அவமானப் படுத்திவந்தார்களென்ற கதைகள் உண்மையுடன் கைச் சரக்கும் சேர்க்கப்பட்டு இன்னும் அவர்கள் வீட்டில் சொல் லப்பட்டுவருகின்றன. ஒழுகும் குடிசையில் உட்கார்ந்து மழைக்காலத்து இரவுகளில் சிறு பிள்ளைகள் அவைகளைக் கேட்டுக்கொண்டிருப்பார்கள்.

சட்டர்ஜிகளைச் சேர்ந்த தாசு ஸர்தார் என்பவனை ஒருநாள் இரவு அவன் தூங்கும்போது பத்துப்பதினைந்து ஆட்கள் தடியுடன்வந்து பிடித்துக்கட்டிக் கோஷாலர் வீட் டிற்கு இழுத்துச் சென்று, அங்கே பைசல் செய்த கதை நூறு வருஷமாய்க் கோஷாலர் வீட்டில் வழங்கிவருகிறது. போலீசார் தேடிக்கொண்டு வந்த சமயம் இவர்களைச் சேர்ந்தவனான புவன விச்வாஸ் என்பவன் வாய் கூசாமல், "அவன் இங்கே வந்தது உண்மையே. ஏதோ சொந்த வேலையாய் வந்தான். நாங்கள் அவனை அவமானப்படுத்தி யதும் வாஸ்தவந்தான். அவன் அப்புறம் எங்கேயோ போய்விட்டான்" என்றான். அதிகாரிகளுக்குச் சந்தேகம் சந்தேகந்தான்.

"அவனை நான் தேடிக் கொடுக்கிறேன். இந்த வருஷம் முடிவதற்குள் அவனை நான் கண்டுபிடித்துக் கொடுக்கா விடில் என் பெயர் புவன விச்வாஸ் அல்ல" என்று அவன் சபதம் செய்தான். சில நாட்கழித்துத் தாசு என்ற பெய ருடைய ஒரு திருடனைப் பிடித்துவந்தான். அவன் ஏதோ

ஒரு செம்பைத் திருடினதற்காக ஒரு மாதம் தண்டனை பெற்றான். தாணாவில் தாசு என்ற பெயர் பதிவு செய்யப்பட்டது. ஜெயிலை விட்டுத் திருடன் வெளிச் செல்லும் தினம் புவன், "டாக்கா ஜெயிலில் தாசு ஸர்தார் கைதியாயிருக்கிறான்" என்று மாஜிஸ்ட்ரேட்டிற்குச் செய்தி யனுப்பினான். விசாரித்ததில் தாசு என்ற ஒருவன் ஜெயி லில் இருந்தது உண்மையே. ஆனால் அவன் முந்தின தினம் விடுதலையடைந்து தனது கந்தல் சால்வையை ஜெயிலுக்கு வெளியில் மைதானத்தில் எறிந்துவிட்டு எங்கேயோ சென் றான் என்று தெரியவந்தது. அங்கே கிடந்த சால்வை தாசு ஸர்தாருடையதே என்று நிரூபிக்கப்பட்டது. அதற்குப் பிறகு அவன் எங்கே சென்றானோ, அதற்கெல் லாம் புவனே பொறுப்பாளி!

இவ்விதக் கதைகள எளிய நிலைமையடைந்த குடும்பங் களின் புராதன மகிமையைத் தெரியப்படுத்த உதவு கின்றன. கௌரவமாயிருந்த தினங்கள் கழிந்துவிட்டன. அதனாலேயே பழைய கௌரவத்தைப் பாதுகாப்பதில் இவ்வளவு ஆர்ப்பாட்டம்.

எவ்விதமிருப்பினும், திரி எவ்வண்ணம் தயாரிக்கப்படு கிறதோ அவ்வாறே விளக்கும் எரியும். அதற்குத் தகுந் தாற் போலவே இரவும் கழிக்கப்படும்.

அவினாசின் தகப்பனான மதுசூதனனின் அதிர்ஷ்ட வேகத்தினால் இருளடைந்த கோஷாலவம்சம் மீண்டும் சூர்யோதயத்தைக் காணலாயிற்று.

## 2

மதுசூதனனின் தகப்பனார் ஆனந்தகோஷால் ரஜபபூரில் ஒரு தரகனிடம் குமாஸ்தாவாயிருந்தார். மட்டமான சாப்பாடு, மட்டமான வஸ்திரம் இவைகளுடனேயே அவரது ஜீவனம் நடந்துவந்தது. வீட்டுப்பெண்களின் கையில் சங்குவளையல்களே. புருஷர்கள் கழுத்தில் ஒரு பித்தளை இரட்டை, ஒரு தடித்த பூணூல்; பிராமணனுக்குரிய மான மரியாதைக் குணங்கள் க்ஷீணித்துவிட்டன. பூணூல் ஒன்றே அவர்கள் பிராம்மண்யத்திற்கு அடையாளமாயிருந்தது.

மதுசூதனன் முதலில் கிராமப் பள்ளியில் வித்தை பயின்றான். அதனுடன் கூடவே தரகுக் கடையிலும் நதிக்கரையில் சணல் மூட்டைகளின் மேல் உட்கார்ந்தும் பல விஷயங்களை இலவசமாகக் கற்றுவந்தான். கிராமத்துக் குடியானவன், வியாபாரி, செட்டி, வாடகைவண்டிக்காரன் இவர்கள் கூட்டத்திலேயே அவன் தன் ஓய்வுநேரங்களைக் கழிப்பான். மார்க்கெட்டில் தகரக்கொட்டகையின் கீழ் அடுக்கியிருக்கும் வெல்லமூட்டை, புகையிலைக்கட்டு, மண்ணெண்ணெய் டின் இவைகளின் நடுவில் உலாவிக்கொண்டு ஒரு நந்தவனத்தில் உலாவுவதைப் போன்ற ஆனந்தத்தை யடைவான்.

பிள்ளை முன்னுக்கு வருவானென்றும், எவ்விதமாகிலும் தார்க்குச்சிபோட்டு இரண்டு மூன்று பரீக்ஷைகள் தேறிவிடும்படிச் செய்தால் பள்ளிக்கூட உபாத்தியாயர் முதல் வக்கீல்தொழில் வரையிலுள்ள மோக்ஷ சாதனங்களுள் ஒன்றைப் பிடித்துக்கொண்டு பிள்ளை கரையேறி விடுவான் என்றும் தகப்பனார் எண்ணியிருந்தார். மற்ற மூன்று பிள்ளைகளின் பாக்கியரேகை குமாஸ்தா வேலையிலேயே

தள்ளுவண்டியைப் போல் ஒரே இடத்தில் நின்றுவிட்டது. அவர்களில் ஒருவன் தாகனுயிருந்தான். மற்றொருவன் தாலுக்காக் கச்சேரியில் காதில் பேனவைச்செருகிக் கொண்டு குமாஸ்தா வேலை பார்த்துக்கொண்டிருந்தான்.

ஆனந்த கோஷாலுக்கு இருந்த சொல்ப சொத்தின் உதவியினல் மதுசூதனன் கல்கத்தா சென்று ஒரு ஹாஸ்டலில் விடுதி அமர்த்திக்கொண்டு படித்தான். அவன் பரீக்ஷையில் முதல்வனகத் தேறிக் க்காலேஜிற்குக் கீர்த்தி அளிப்பானென்று உபாத்தியாயர்கள் எதிர்பார்த்தார்கள். இந்தநிலையில் தகப்பனர் மரித்தார். மதுசூதனன் பாடப் புத்தகம், நோட்டு புத்தக முதலிய எல்லாவற்றையும் விற்றுவிட்டு இனித் தானே சம்பாதித்துச் சாப்பிடுவது எனத் தீர்மானித்தான். தாயார் அழுதாள். தன் பிள்ளை பரீக்ஷையில் தேறிப் பட்டம் பெற்று அந்தஸ்துள்ளவர்களது கூட்டத்தைச் சேர்ந்தவனவான், பிறகு உத்யோகம் என்ற கௌரவத்தைப் பெறுவானென்றெல்லாம் அவள் மனக் கோட்டை கட்டியிருந்தாள்!

சிறு வயதிலிருந்தே சாமான்களை மதிப்பிடுவதில் மதுசூதனன் திறமை பெற்றிருந்ததுபோலத் தன் நண்பர்களை மதிப்பிடுவதிலும் தேர்ச்சி பெற்றிருந்தான். இதில் ஒரு முறையேனும் அவன் ஏமாற்ற மடைந்ததில்லை. அவனுக்கு முக்கிய நண்பன் கானயிலால் குப்தன் என்பவன். குப்தனின் முன்னேர்கள் பெரிய பெரிய வியாபாரிகளிடம் வேலை பார்த்திருக்கிறர்கள். அவன் தகப்பனர் ஒரு பிரசித்தமான மண்ணெண்ணெய்க் கம்பெனியில் உயர்ந்த வேலையிலிருந்தார்.

மதுசூதனனது நல்ல காலம்—அவருடைய பெண்ணுக்கு விவாகம் நடந்தது. மதுசூதனன் அங்கவஸ்திரத்தை இடுப்பில் கட்டிக்கொண்டு வேலையில் முனைந்தான்;

பந்தல் போடுவது, தோரணம் கட்டுவது, அச்சாபீஸிற்குச் சென்று தங்க எழுத்தில் முகூர்த்தப் பத்திரிகை அச்சிடக் கொடுப்பது, இரத்தினக் கம்பளம் இரவல் வாங்குவது, வாசலில் நின்று வந்தவர்களை உபசரிப்பது, சாப்பாடு பரி மாறுவது வரைக்கும் ஒன்றும் பாக்கி இல்லாமல் எல்லா வற்றையும் கவனித்துப் பொறுப்புடன் செய்தான். ரஜனீ பாபு அந்தச் சந்தர்ப்பத்தில் அவன் காட்டிய சாமர்த்தி யத்தைக் கண்டு சந்தோஷித்தார். அவர் வேலைத் திறமை யுள்ளவனை அறிந்துகொள்வார். இவன் முன்னுக்கு வருவா னென்பதை உணர்ந்து தம் கையிலிருந்து ஜாமீன் தொகை கொடுத்து மதுசூதனனுக்கு ரஜபபூரில் மண்ணெண் ணெய் ஏஜண்டு வேலை யொன்று சம்பாதித்துக் கொடுத்தார்.

நல்ல தசை அடிக்க ஆரம்பித்தது. அது வந்த வேகத் தில் மண்ணெண்ணெய் டிப்போ இருந்த இடம்தெரியாமல் மறைந்துவிட்டது. வரவரச் சந்திலிருந்து பெரிய தெரு விற்கும், சில்லறை வியாபாரத்திலிருந்து ஆபீசிற்குமாக உத்தியோகம் ஓங்கிற்று. "சுக்ர தசை என்கிறார்களே அது தான் இது!" என்று எல்லோரும் சொல்லிக் கொண்டார் கள். அதன் அர்த்தம் பூர்வ ஜன்மத்தில் செய்த பூஜா பலனால் இந்த ஜன்மத்தில் இதை அநுபவிக்கக்கொடுத்து வைத்திருக்கிறான் என்பதே. ஆனால் மதுசூதனனுடைய அபிப்பிராயம் அதுவல்ல. தான் மிகக் கவனத்துடன் கணக்கில் பிசகாமல் இருப்பதனாலேயே தன்னுடைய பாக்கியம் விருத்தி அடைகிறதென்றும், வாழ்க்கையெனும் பரீக்ஷையில் பரீக்ஷகரின் 'கிராஸ் மார்க்கு'—(தவறு என்கிற குறி)—போடப்படவில்லை யென்றும் அவன் கருதினான்.

மதுசூதனன் அழுத்தமான சுவபாவமுள்ளவன். அவன் தன் நிலைமையைப்பற்றி ஒருவரிடமும் ஒன்றும் சொல்வதில்லை. இருந்தும் பார்ப்பவர்களுக்கு வற்றின நதியில் வெள்ளம் வந்திருக்கிறதென்பது புலப்பட்டது. சாதாரணமாய் இவ்வித நிலைமையிலிருப்பவர்கள் விவாகத்தைப் பற்றிச் சிந்திப்பார்கள். இகலோகத்தில் தன் சம்பாத்தியத்தை அநுபவிக்கவும், பரலோகத்தில் தனக்குப் பிண்டம் அளிக்கவும் அவசியமான வம்சவிருத்தியைப்பற்றிச் சிந்தை ஏற்படுவது இயல்பு. பெண்ணை வைத்துக் கொண்டிருப்பவர்கள் அவனுக்கு உத்சாகம் உண்டாக்குவதில் பின் வாங்கவில்லை. மதுசூதனனே "முதலில் ஒரு வயிற்றுக்கு வழி தேடிக்கொண்டல்லவா மற்றொரு வயிற்றின் பொறுப்பை ஏற்றுக்கொள்ளவேண்டும்" என்று சொல்லிவிட்டான். இதிலிருந்து அவன் இதயம் எவ்விதமிருந்தபோதிலும் அவன் வயிறு சாமான்யமானதல்லவென்பது தெரியவந்தது.

இச்சமயம் மதுசூதனனின் முயற்சியினால் ரஜபுரத்துச் சணல் பெயரெடுக்கலாயிற்று. அவன் நதிக்கரையில் குறைந்த விலைக்கு நிறைய நிலம் வாங்கினான். செங்கல் காளவாய்கள் கட்டப்பட்டன. நேபாளத்திலிருந்து பெரிய மரக்கட்டைகளும், சில்ஹட்டிலிருந்து சுண்ணும்பும், கல்கத்தாவிலிருந்து வண்டி வண்டியாகக் "காருகேட்" தத்தநாகத் தகடுகளும் வந்து குவிந்தன. ஜனங்கள் ஸ்தம்பித்து விட்டனர். "அடேடே! கையிலே பணம் ஏறியிருக்கிறது போலே இருக்கிறது. ஆச்சு, இனி திவாலாவதற்கு வழிதான்" என்று சொல்லிக்கொண்டனர்.

மதுசூதனன் போட்ட கணக்கு இம்முறையும் பிசகவில்லை. அவன் பார்த்துக்கொண்டிருக்கையிலேயே ரஜபபூர்

ஒரு பெரியவியாபார ஸ்தலமாயிற்று. குமாஸ்தாக்களும் மார்வாடிகளும் கூடினர். மில்கள் ஏற்பட்டன. அவற்றின் புகை போக்கிகளிலிருந்து கிளம்பிய புகை ஆகாயத்தைக் கறுப்பாய்ச் செய்ய ஆரம்பித்தது.

கணக்குப் புத்தகத்தைப் பாராமலும், கண்ணுக்குக் கண்ணாடியின் அவசியமில்லாமலும், எல்லாருக்கும் இப்போது மதுசூதனனின் பெருமை விளங்கலாயிற்று. மார்க்கெட்டிலுள்ள கட்டிடங்கள் முழுவதற்கும் அவன் ஒருவனே சொந்தக்காரனுனன். இரண்டு மாடிகளையுடைய மாளிகை ஒன்றின் வாசலில் "மதுசக்ரம்" என்று பெயர் செதுக்கப்பட்ட பளிங்குக்கல் ஒன்று புதைக்கப்பட்டது. இந்தப்பெயரை முன்பு இவன் பள்ளிக்கூடத்திலிருந்த ஸம்ஸ்கிருத உபாத்தியாயர் அளித்தார். என்ன காரணத்தாலோ மதுசூதனன் மேல் அவருக்குத் திடீரென்று அதிக அன்பு ஏற்பட்டிருந்தது.

விதவையான தாயார் அஞ்சியவண்ணம் பிள்ளையை அணுகி, "அப்பா, பகவான் திருவடி சேருமுன் நாட்டுப் பெண் முகத்தைப் பார்க்கவேண்டுமே!" என்றாள். மதுசூதனன் முகத்தைக் கடுமையாய் வைத்துக்கொண்டு, "அதற்கெல்லாம் எனக்கு இப்போது சாவகாசமில்லை" என்று சொல்லிவிட்டான். மீண்டும் வற்புறுத்தத் தாயாருக்குத் தைர்யமில்லை. அவன் ஒன்று சொன்னால் சொன்னதுதான் என்பது எல்லாருக்கும் தெரியும்.

மேலும் சிலகாலம் கழிந்தது. வியாபாரம் விருத்தியடையவே காரியாலயம் கிராமத்தை விட்டுக் கல்கத்தாவுக்குப் போயிற்று. பேரன் பேத்திமார்களை அடையும் பாக்கியம் பெறாமல் கல்கத்தாவில் தனிமையில் வசித்த அவனுடைய தாயார் சீக்கிரம் காலகதியானாள். கோஷால கம்பெனி

யின் பெயர் நாடெங்கும் பரவிற்று. அதன் வியாபாரம் ஒரு பெரிய இங்கிலீஷ் கம்பெனியால் நடத்தப்பட்டது. ஒவ்வோர் இலாகாவிற்கும் ஒவ்வோர் ஆங்கில துரை மானேஜராயிருந்தார்.

இப்போது மதுசூதனன் வலுவில் "எனக்கு விவாகம் செய்துகொள்ளச் சாவகாசமிருக்கிறது" என்று சொன்னான். பெண்கள் மார்க்கெட்டில் அவனுக்கு நல்ல மதிப்பு ஏற்பட்டுவிட்டது. உயர் குடும்பத்தாரின் கர்வத்தை அடக்கக்கூட அவனுக்குச் சக்தியிருந்தது. நாலா பக்கத்திலும் இருந்து அநேக குலவதி, வித்யாவதி, ரூபவதியான பெண்களின் பேச்சு வரலாயிற்று. ஆனால் அவன் மட்டும் "எனக்கு அந்தச் சட்டர்ஜி வம்சத்துப் பெண்தான் வேண்டும்" என்றான்.

புண்பட்ட வம்சம் புண்பட்ட புலியைப்போல் பயங்கரமானது.

---

## 3

பெண்வீட்டாரின் நிலைமையை உரைப்போம்.

தற்சமயம் நூர்நகரத்தில் சட்டர்ஜிகளின் நிலைமை திருப்திகரமானதாக இல்லை. ஐச்வர்யத்தின் அணை உடைந்துவிட்டது.

குடும்பத்ினர் தனித்தனியாகப் பிரிந்துவிட்டதனால் சட்டர்ஜி வம்சம் கலகலத்துவிட்டது. அவ்விதம் பிரிந்து சென்றவர்கள் தங்கள் சொத்தை அழும்பு செய்துவிட்டு வீண் ஆர்ப்பாட்டங்களில் காலம் கழித்தனர். ராதாகாந்த ஸ்வாமியின் தேவஸ்தான தர்மகர்த்தாவாக இருந்து கோவில் வருவாயைக் கண்ட விதங்களில், கோர்ட்டுவழக்கு

களுக்கும் இஷ்டப்படி தங்கள் செலவிற்கும் உபயோகித்து வந்தனர். அதனால் நூர்நகரத்தில் அவர்களுக்கு இருந்த பழைய கௌரவமும் போய்விட்டது. வரும்படியே யில்லாமல் நாளுக்குநாள் செலவுமட்டும் அதிகரித்துக்கொண்டே வந்தது. கடன் என்னும் சிலந்தி அவர்கள் ஜமீனைச் சுற்றி வலை பின்னிவிட்டது.

சட்டர்ஜி மூலகுடும்பத்தில் இரண்டு சகோதரர்களும் ஐந்து சகோதரிகளும் இருந்தார்கள். தகப்பனார் இருக்கும்போதே நாலு பெண்களுக்கு நல்ல குலத்தில் விவாகமாகிவிட்டது. பெண்களைப் பெறுவதனால் ஏற்படும் அபராதத்தை அவர் செலுத்தினார். அவர் சொத்து தற்காலத்தியது; கௌரவமோ பண்டைக் காலத்தியது. முக்கால் வட்டிக்குக் கூடக் கிடைக்காமல் ஒரு வட்டிக்குக் கடன் வாங்கித் தம் அந்தஸ்துக்குத் தகுந்தவாறு வெகு விமரிசையாக விவாகங்களை நடத்தினார். குடும்பத்தின் இப்போதைய ஸ்திதியைப் பார்த்துவிட்டுச் சின்னப்பிள்ளை ஆத்திரத்துடன், "இங்கிலாந்து சென்று, பாரிஸ்டர் பரீக்ஷையில் தேறி வருகிறேன். சம்பாதிக்காமல் காலக்ஷேபம் செய்யமுடியாதுபோலிருக்கிறது" என்றான். அவன் சீமைக்குப் போய்விட்டான். குடும்ப பாரம் முழுவதும் பெரிய பிள்ளையாகிய விப்ரதாஸ் ஒருவன் தலையிலேயே விழுந்தது.

சட்டர்ஜிகளுக்கும் கோஷாலருக்கும் வெகு நாட்களாக ஏற்பட்டிருந்த பிரிவு நீங்கி இச்சமயம் மறுபடி கூட்டுறவு ஏற்படலாயிற்று. அதன் விவரம் வருமாறு—இவர்கள் பட்டிருந்த கடன் முற்றும் படோபஜாரிலிருந்த சாவுகாருக்குக் கொடுக்க வேண்டியதாக இருந்தது. வட்டியைச் சரிவரச்செலுத்தி வந்ததனால் இதுவரை கடனைப்பற்றி ஒரு

விதப்புகாரும் வரவில்லை. தசராவிடுமுறை சமயத்தில் இவர்கள் வீட்டிற்கு விப்ரதாஸின் சகபாடியான அமூல்யதனன் வந்திருந்தான். அவன் கல்கத்தாவில் ஒரு பெரிய அட்டர்னியிடம் தலைமைக் குமாஸ்தாவாக இருந்தான். அவன் நூர்நகரத்து விஷயத்தை ஜாடையாக அறிந்துகொண்டான். அமூல்யதனன் கல்கத்தா திரும்பினவுடன் சாவுகார், தான் சர்க்கரை வியாபாரம் செய்யப் போவதாகவும், பணம் அவசியமாக வேண்டுமென்றும் கட்டாயப்படுத்தினான். விப்ரதாஸ் என்ன செய்வதென்று தெரியாமல் தவித்தான்.

அப்போது அமூல்யதனன் வந்து, "மதுசூதனனைக் கடன் கேள். கொடுப்பான். அவனுக்கு இப்போது தான் 'ராஜா பகதூர்' என்ற பட்டம் கிடைத்திருக்கிறது. ரொம்ப சந்தோஷமா யிருக்கிறான்" என்று சொன்னான். அவ்விதமே கடனும் கிடைத்தது. அரை வட்டிக்குப் பதினொரு லக்ஷம் வாங்கி, சட்டர்ஜி குடும்பக்கடன் முற்றும் தீர்த்த பின்னரே விப்ரதாஸிற்குப் போன உயிர் திரும்பிற்று.

குமுதினி அவனுடைய கடைசி தங்கை. அவர்களுக்கு எஞ்சிய செல்வமும் அவளே தான். அவளுக்கேற்ற வரனையும் வரதக்ஷிணையையும் நினைக்கும்போதே விப்ரதாஸ் கதி கலங்குவான். புன்னை மலரின் காம்பை யொத்த மெலிந்த உயரமான தேகம். கண்கள் விசாலமா யில்லா விடினும் நல்ல கருப்பு வர்ணமானவை. அவள் நாஸி ஒரு மலர் இதழ்கொண்டு அமைக்கப்பட்டமாதிரி இருந்தது. சங்கத்தை யொத்த வெளுத்த மேனி. அதி வசீகரமான கைகள். அவள் கரங்களிலிருந்து ஏதாகிலும் பெறுவது ஸாக்ஷாத் ஸ்ரீதேவியின் கைகளிலிருந்து வரதானம் பெறுவதற்கு நிகராகும். அவ்விதம் பெறுபவர் தம்மைத் தன்யராய்

நினைக்கலாம். அவள் முகத்தில் துயரமும் அன்பும் கலந்த பொறுமைக்குறி காணப்பெற்றது.

குமுதினி தன்னைப்பற்றி ரொம்பக் குறைவாக நினைத்துக்கொண்டாள். தான் துரதிருஷ்டசாலி என்பது அவள் எண்ணம். புருஷர்கள் தங்கள் சக்தியினால் பொருளைச் சம்பாதித்துக் கொடுக்கிறார்களென்றும், பெண்கள் தங்கள் பாக்கிய விசேஷத்தினால் வீட்டிற்கு லக்ஷ்மிகடாக்ஷம் கொண்டுவருகிறார்களென்றும் அவள் கேட்டிருந்தாள். அவளால் அவ்வித ஸௌபாக்கியம் கொண்டுவர முடியவில்லை. அவளுக்கு நினைவு ஏற்பட்ட நாள் முதல் தன்னைச் சுற்றிலும் துர்ப்பாக்கியத்தின் பாப திருஷ்டியையே கண்டிருக்கிறாள். தவிர, தான் கன்னிகையாயிருப்பது தன்னைச் சேர்ந்தவர்களுக்கு ஒரு பெரிய பாரமாயிருப்பதையும் உணர்ந்தாள். துக்கமும் அவமானமும் ஒருங்கே அவளைச் சூழ்ந்தன. தன் விதியை நொந்து கொள்வதைத் தவிர்த்து அவளால் வேறெதுவும் செய்யமுடியவில்லை. ஆனால் பகவான் வேதனையை அநுபவிப்பதற்கு மட்டும் சக்திகொடுத்திருக்கிறார். ஏதாகிலும் எதிர்பாராத சம்பவம் ஒன்று நடக்காதா! ஒரு தேவதையின் வரப்பிரசாதமோ, ஒரு யக்ஷிணியின் புதையலோ, பூர்வஜன்மத்தில் கொடுக்காமல் விட்டுப்போன ஒரு கடனின் பாக்கியோ, ஏதாகிலும் ஏற்படாதா, பகவானே!

ஒவ்வொருநாள் நடுநிசியில் குமுதினி எழுந்து உட்கார்ந்து வெளியே அசையும் மரங்களைப் பார்த்தவண்ணம் —“என்னை யாட்கொள்ளும் அரசே, நீ எங்குற்றாய்? என் சகோதரர்கள் படும் கஷ்டத்தை நீ வந்து நீக்காயோ! நான் உனக்கென்றும் அடிமைப்பட்டிருப்பேன்” என்ற பாவனையில் ஆழ்ந்திருப்பாள்.

வம்சத்தின் மலினதசைக்குக் காரணம், தான் என்று அவள் தன்னையே எவ்வளவு நொந்துகொண்டாளோ, அவ்வளவு தன் உள்ளத்தின் அமிருதமயமான அன்பு அனைத்தையும் தன் சகோதரர்கள்மீது செலுத்தியிருந்தாள். குமுதத்தின் விஷயத்தில் தங்கள் கடமையைச் செய்ய முடியவில்லையே யென்று விசனித்து அவள் சகோதரர்களும் அவளிடத்தில் அளவற்ற அன்புகொண்டிருந்தார்கள். தாய் தகப்பனற்ற இவளுக்கு விதியினால் வஞ்சிக்கப்பட்ட அன்பனைத்தையும் தாங்கள் பூர்த்தி செய்யவேண்டுமென்பதே அவளுடைய தமையன்மார்களின் இச்சை. இருளடைந்த அவர்களுடைய எளியதசையில் ஒளிதந்து இன்பத்தை யூட்டவந்த அம்புலியின் ஒரு கதிராக விளங்கினாள் குமுதினி என்பது அவர்கள் எண்ணம். ஒவ்வொரு சமயம் அவள் தன்னை நொந்துகொள்ளும்போது அவள் சகோதரன் விப்ரதாஸ் சிரித்துவிட்டு—"குமு, நீதான் எங்கள் ஸௌபாக்கியம். நீ இல்லாவிடில் இந்த வீட்டில் லக்ஷ்மி ஏது?" என்பான்.

குமுதினி வீட்டிலேயே எழுதப் படிக்கக் கற்றுக் கொண்டாள். வெளிவிஷயம் ஒன்றும் தெரியாது. பழமை, புதுமை இவ்விரண்டு நாகரிகத்தின் இருளும், ஒளியும் சேர்ந்து அவள் மனதில் ஒரு தனித்தோற்றம் பெற்றிருந்தது. அவள் உலகம் தெளிவானதல்ல. க்ஷுத்ர தெய்வங்களிடத்தில் பயம், விசேஷ திதிகளில் சந்திரனைத் தரிசிப்பது, கிரகணபீடை போக்கிக்கொள்ளச் சங்கத்வனி செய்வது, ஆடி மாதம் கிருஷ்ண பக்ஷத்தில் உபவாசமிருந்தால் பாம்பு கடிக்காது என்று நினைப்பது, தெய்வத்திற்கு வேண்டி மஞ்சள் துணியில் காசுகொண்டு முடிப்பது, தேங்காய் உடைத்துக் கற்பூரம் ஏற்றுகிறேன் என்று பிரார்த்தனை

செய்துகொள்வது இவை போன்ற சுபாசுபங்களை முன்னிட்டுச் செய்யும் பல வழக்கங்களில் அவளுக்குக் குருட்டு நம்பிக்கை இருந்தது. சுபவேளையில் செய்த காரியங்கள் அசுபமாக முடிந்திருப்பதைப் பிரத்தியக்ஷமாகப் பார்த்திருந்தும், அவளுக்குமட்டும் பழைய வழக்கங்களின் மேலிருந்த மோகம் விடவில்லை. இது உண்மை, அது பொய் என்று ஆராய்ந்து அறியும் சக்தி அவளுக்குப் போதாது. அதனலேயே அவள் முகத்தில், பார்ப்பவர் பரிதாபப்படும்படி துயரம் கலந்த ஒரு பார்வை தென்பட்டது. தன் பேரில் குற்றமில்லாதபோதிலும் தானே அபராதி என்று எண்ணிக்கொண்டாள். எட்டு வருஷத்திற்கு முன் நடந்த —தகப்பனர் உயிருக்கு உலையாக இருந்த—அப்பெரும் பாதகத்தைத் தானே செய்துவிட்டதாகஅவளுக்கு ஏக்கம்.

---

## 4

புராதன தனிகர்கள் பழைய காலத்து வாசனையிலேயே ஊறியிருப்பவர்கள். புதிய காலத்தைப் பின்பற்ற அவர்களால் எங்ஙனம் முடியும்? அவ்விதம் செய்வதென்றல் பழைய வழக்கங்கள் என்னும் நெடிய மதில்களைத் தாண்ட வேண்டியிருக்கிறது. அப்படித் தாண்டிவரப் பிரயத்னப்பட்டாலும் மிகத் தாமதத்துடன் தான் வருகிருர்கள். விப்ரதாவின் தகப்பனர் முகுந்தலால் பாபுவும் இந்தக் கோஷ்டியைச் சேர்ந்தவர். தாவிச் செல்லும் புதிய யுகத்தை அவரால் பிடிக்க முடியவில்லை.

அவர் உயரமான தேகமும் வெளுத்த வர்ணமுமுள்ளவர். கழுத்தளவுக்கு வெட்டி விட்ட தலைமயிர்; பிரபுத்வத்தைத் தெரியப்படுத்தும் விசாலமான கண்கள்; கனீ

ரென்றிருக்கும் தம் குரலால் கூப்பிட்டாரானால் வேலையாட்களின் நெஞ்சம் படபடவென்று அடித்துக்கொள்ளும். பயில்வானிடம் குஸ்தி செய்து பழகிக்கொண்டிருந்தபோதிலும் அவருடைய அழகான தேகத்தில் சிரமத்தின் சின்னமே இராது. உடம்பில் மடிப்புக் கலையாத மெல்லிய மஸ்லின் ஷர்ட்டு; இடுப்பில் டாக்கா மஸ்லின் வேஷ்டி; ஒழுங்காகக் கொசுவின அதன் கச்சம் தரையில் புரண்டு கொண்டிருக்கும். இஸ்தாம்புல் அத்தர் வாசனை அவர் வருகையை முன்னுடியே தெரிவிக்கும். தங்க வெற்றிலைப் பெட்டியை ஏந்தியவண்ணம் கான்ஸாமா எப்போதும் பின்புறம் வந்துகொண்டிருப்பான். வெளி வாசலுக்கருகே வில்லை தரித்த சேவகன் எப்பொழுதும் சித்தனுக இருப்பான். உள் வாசலுக்கு அருகே கிழவனுன ஜமேதார் சந்திர பானு ஹுக்கா தயாரிக்கும் வியாஜத்துடன் உட்கார்ந்து தனது தாடியை இரண்டு பாகமாய்ப் பிரித்து அடிக்கடி அதைக் கையால் தடவிக் காதைச் சுற்றி இழுத்துவிட்டுக் கொண்டிருப்பான். அவனுக்குக் கீழ்ப்பட்ட சேவகர்கள் கத்தியும் கையுமாகக் காவல்செய்துகொண்டிருப்பார்கள். ரேழிச் சுவரில் பண்டைய காலத்திய கத்தி, கேடயம், ஈட்டி, வாள், துப்பாக்கி முதலியவை தொங்கிக் கொண்டிருந்தன. கூடத்தில் பெரிய ஆசனத்தின்மீது திண்டின்மேல் சாய்ந்தவண்ணம் முருகுந்தலால் வீற்றிருப்பார். அண்டை அயலார் இவரைக் காண வந்தோர் முதலியவர்கள் எதிரில் இருபுறமும் வரிசையாய்க் கீழே உட்கார்ந்திருப்பார்கள். அவரவர்கள் அந்தஸ்துக்கு ஏற்ற படி பலவகையான ஹுக்காய்க் குழாய்கள் அவர்களுக்கு வழங்கப்படும். எஜமானருக்குத் தனியே பன்னீர் மணம் கமழும் ஹுக்கா வைக்கப்பட்டிருக்கும்.

வீட்டின் மற்ளுரு புறத்தில் மேனாட்டு ரீதியாக அமைந்த அறை. அங்கே பதினெட்டாம் நூற்றுண்டைச் சேர்ந்த சீமைச் சாமான்கள் இருந்தன. நுழைந்ததும் எதிரில் பாதரஸம் கறுத்துப்போன பெரிய நிலைக்கண்ணுடி. அதன் முலாம் பூசிய சட்டத்தின் இருபுறத்திலும் இரண்டு இறகை விரித்த கந்தர்வப் பதுமைகள் கைகளில் மெழுகு வர்த்தியை ஏந்தி நின்றன. மேஜைமேல் கறுப்புச் சலவைக் கல்லால் அமைந்த ஒரு கடிகாரம்; பொன் ரேக்குகளால் அது சித்திரிக்கப்பட்டிருந்தது. அதனுடன் சில கண்ணுடி பொம்மைகளும் இருந்தன. பெரிய பெரிய கனத்த நாற்காலிகளும், சோபாக்களும், மேலிருந்து தொங்கின பெரிய லஸ்தர் விளக்குகளும், கொலு அறையை அலங்கரித்தன. சுவர்களில் குடும்பத்தைச் சேர்ந்தவர்களின் தைலசித்திரங்களும் வம்சத்தின் இரக்ஷகர்களான சில ஐரோப்பிய பிரபுக்களின் சித்திரங்களும் மாட்டப்பட்டிருந்தன. பளிச்சென்று வர்ணபுஷ்பக் கோலங்கள் வரையப்பட்ட சீமை இரத்தினக் கம்பளங்கள் அறை முழுதும் விரிக்கப் பட்டிருந்தன. விசேஷ தினங்களில் துரைமார்கள், ஜில்லா கலெக்டர்கள் ஆகியவர்களை வரவேற்க இப்பெரிய அறை சுத்தம்செய்யப்பட்டுத் திறந்து வைக்கப்படுவது வழக்கம். வீட்டில் இது ஒன்றுதான் புது அமைப்புள்ள அறை. ஆனால் பார்க்குங்கால் நித்திய உபயோகத்திலிராமல் புழுங்கிய வாசனையுடன் இருக்கும் இந்த அறையே வெகு நாளாகப் பூதங்காத்த அறைபோல் நிச்சப்தம் குடி கொண்டதாயிருக்கும்.

முகுந்தலாலிடமிருந்த படாடோபங்களெல்லாம் சாதாரணமாய் அக்காலத்தில் ஜமீன்தார்களிடம் இருந்தவையே. அளவற்ற பணவிரயம் செய்வது செல்வம்படைத்த

தன் கௌரவத்தைக் காட்டுகிறது என்றும், பணத்தை ஜாக்ரதையாக வைத்துக்கொண்டு அழகு பார்ப்பதைவிட அதைப் பல துறைகளில் அலக்ஷியமாகச் செலவுசெய்வதே உத்தம மார்க்கம் என்றும் அவர்கள் கருதினர்போலும்! இவர்களுடைய ஸ்வாதீனம் வெளியே தாராளமாகத் தான தர்மவிஷயங்களில் வாரி இறைக்கச் செய்தது. வீட்டில் தங்கள் போகவிலாசங்களுக்காகவும் தண்ணீர்மாதிரிச் செலவழிக்கத் தூண்டிற்று. இவ்விரு வழிகளிலும் இவர்கள் செல்வமனைத்தும் பறக்க ஆரம்பித்தது. முகுந்தலாலுக்குத் தம்மை ஆச்ரயித்தவர்களிடம் எவ்வளவு உதார குண மிருந்ததோ அவ்வளவு பதைபதைப்புத் தங்களை மீறினவர்களை அடக்குவதிலும் இருந்தது. திடீரென்று புதிதாய்ப் பணம் படைத்த ஓர் அயல் வீட்டுக்காரர் ஏதோ ஒரு பெரிய தவறுக்காக ஒரு சமயம் இவருடைய தோட்டக்காரன் பிள்ளையின் காதைத் திருகினாராம். அந்தப் பணக்காரருக்குப் புத்திபுகட்டுவதற்காகச் செலவழிக்கப்பட்ட தொகை இக்காலத்தில் சொந்தப் பிள்ளையைக் காலேஜ் வரை படிக்க வைப்பதற்குக்கூடச் செலவழியாது.

முன்காலத்திய ஜமீன்தார்களிடம் வழக்கமாக இருந்ததுபோல முகுந்தலாலின் வாழ்க்கையும் இரண்டு விதமாக இருந்தது. ஒருபுறம் கிருகஸ்தனுக்குரிய கடமைகள், மற்றொருபுறம் லீலாவினோதங்கள். அதாவது: ஒருபுறம் பத்துவித தர்மகாரியங்கள் செய்துவந்தாரென்றால் மற்றொருபுறம் அதைவிட அதிகமான அக்கிரமங்களும் செய்துவந்தார். வீட்டில் எஜமானியம்மாள் பூஜை அர்ச்சனை, விரத உபவாசம், பிராம்மணபோஜனம், ஏழைகளுக்குப் பிச்சை, குரு புரோகிதர்மரியாதை, அண்டை

அயலாருடன் சினேகப்பான்மை இவைகளைப் பரிபாலித்து வந்தாள். வீட்டின் எல்லைக்கு வெளியே ஜமீன்தார், நவாப்தர்பாரும் ஆடல் பாடல் விநோதங்களும் நடத்தி வந்தார். அநேக ஸ்திரீகள் இவருடைய விலாசவிழாக் களில் கலந்துகொண்டனர். அப்போதைய ஜமீன்தார்கள் இவர்களோடு சேர்ந்து செய்யும் துர்நடத்தைகளை மிகவும் கண்ணியமானவையென்றே கருதிவந்தனர். முகுந்தலாலின் மனைவி நந்தராணி மிகுந்த ரோஷமுள்ளவள். அவளால் இவையெல்லாம் பொறுப்பது கஷ்டமாயிருந்தது. வெளி யில் தன் கணவர் எவ்வளவு சேஷ்டைகள் செய்தாலும் அவர் தன்னிடமே உண்மையான பாசம் கொண்டிருக்கிறு ரென்று அவள் அறிவாள். ஆகையால்தான் கணவர் தனது பரிசுத்தமான அன்பிற்குத் தானே கேடு விளைத்துக் கொள்வதை அவளால் சகிக்க முடியவில்லை. இந்தத் தடவையும் அவள் தன் பொறுமையை இழக்க நேரிட்டது.

---

# 5

ராஸக்ரீடை உற்சவம் ஆரவாரத்துடன் ஆரம்ப மாயிற்று. வீட்டில் அதிகக் கூட்டம் கூடிற்று. கல்கத்தா விலிருந்தும் டாக்காவிலிருந்தும் விலாசத் திரவியங்கள் வந்தன. முகுந்தலாலின் பங்களாவிற்கு எதிரே ராஸ க்ரீடை உற்சவம் கொண்டாட ஏற்பாடுகள் செய்யப் பட்டன. வீட்டு முற்றத்தில் பஜனைகளும் காலட்சேபங் களும் நடைபெறும். இங்கே அண்டை அயலாரும் வீட்டுப்பெண்களும் கூடி அவைகளைக் கேட்பார்கள். ஆனுல் முகுந்தலால் தம் கொலு அறையில் தமோகுணமான சிங்காரக் கேளிக்கைகளில் ஈடுபட்டிருந்தார். அந்தப்புர

ஸ்திரீகளுக்கு இரவில் நித்திரை கிடையாது. கதவிடுக்கின் வழியாய்த் தென்படும் சில விஷயங்களைப் பார்த்ததும் அவர்களுக்குத் தூக்கம் நெஞ்சை அடைத்துக்கொள்ளும். இந்தத் தடவை விலாச கேளிக்கைகள் நதியில் சிங்காரத் தோணியில் நடக்க ஏற்பாடாயிற்று. சதிர்க் கச்சேரி வரைக்கும் வந்துவிட்டது.

அங்கே என்ன நடக்கிறதென்று அறிய முடியாததால் ந்தராணியின் நெஞ்சம் வாய்விட்டுச் சொல்ல முடியாத துக்கத்தோடு துடித்தது. வீட்டுக் காரியங்களையும், வருகிறவர் போகிறவர்களைக் கவனிப்பதையும் சிரித்தமுகத்துடன் செய்தே தீரவேண்டியிருந்தது. ஆனால் மனத்தில் தைத்த முள் அவளை இடை இடையே பாதித்துக்கொண்டிருந்தது. இந்தப்புறம் எல்லோரும், "ராணியம்மாளுக்கு மங்கள முண்டாகட்டும்!" என்று மனப்பூர்வமாய் வாழ்த்திவிட்டுச் சென்றனர்.

உற்சவக் கொண்டாட்டமெல்லாம் முடிந்தன. வீட்டில் நிச்சப்தம் குடியேறிற்று. எஞ்சிய எச்சலிற்கும் குப்பை கூளத்திற்கும் கூடிய காக்கைகளும் நாய்களுமே சண்டையிட்டுக்கொண்டு உற்சவத்தின் கடைசிக்காட்சியை நடத்தின. வேலையாட்கள் பந்தல்களைப் பிரித்து விளக்குகளைக் கழற்றினார்கள். லஸ்தர்களில் எரிந்து அணைந்த பாதிவத்திகளுக்கும் பந்தலில் ஒட்டின வர்ணக்காகித ஜால்ராக்களுக்கும் ராமத்துப் பிள்ளைகள் ஒருவரோடொருவர் சச்சரவிட்டுக்கொண்டிருந்தனர். இவைகளுக்கிடையே உரத்த கூச்சலும், சிறுவர்களின் உச்ச ஸ்தாயியில் அழும் சப்தமும் ஆகாயத்தைப் பிளந்தன. அந்தப்புரத்திற்குப் பின்கட்டிலிருந்து வரும் காற்று பழையசாதம் கறி வகையறுக்களின் புளித்த கந்தத்துடன்

வீசிற்று. எங்கே பார்த்தாலும் குப்பையும் கூளமும். எல்லோரும் சோர்வுற்றிருந்தனர். இவ்வளவும் முடிந்த பிறகும் வீட்டு எஜமானர் வீட்டிற்குத் திரும்பி வராத காரணத்தினால் இந்த நிச்சப்தம் இன்னும் பயங்கரமாய்த் தோற்றியது. அவரை அணுக உபாயமில்லாமற் போகவே நந்தராணிக்கு இருந்த சொற்பப் பொறுமையும் போய்விட்டது.

திவானைக் கூப்பிட்டுத் திரைக்குப் பின் இருந்தவாறே "அம்மாவுக்கு உடம்பு சரியாயில்லை. நான் இன்றைக்குப் பிருந்தாவனம் புறப்படப்போகிறேன். எஜமானரிடம் இந்தச் செய்தியைச் சொல்லிவிடும்" என்றாள்.

திவான் சிந்தையிலாழ்ந்தவராய், வழுக்குத்தலையைத் தடவிக்கொண்டே, "அம்மணி! எஜமானரிடம் நீங்கள் சொல்லிவிட்டுப்போவது உசிதம். அவர் இரண்டொரு நாளில் வந்து விடுவார்" என்று மெதுவாய்ச் சொன்னார்.

நந்தராணிக்கும் எஜமானர் இரண்டொரு நாளில் வந்துவிடுவாரென்ற விஷயம் தெரியும். ஆகையாலேயே அவர் வருவதற்குள் போக இச்சித்தாள். "அவர் இனித் தாம் இவ்விதம் செய்வதில்லை என்று சொல்லி சாகசம் செய்து மன்னிப்புப் பெற்று விடலாமென்றிருக்கிறார். ஒவ்வொரு முறையும் இவ்விதமே நடக்கிறது. சரியான தண்டனை பெறாமலேயே தப்பிவிடுகிறார். இம்முறை தகுந்த தண்டனை அளிக்க வேண்டும்" என்று எண்ணித் திவானிடம் "இனித் தாமதிக்க முடியாது", என்று சொல்லிப்புறப்பட்டாள்.

புறப்படுவதற்கு ஒரு க்ஷணம் முன்பு அவள் கால்கள் வீட்டை விட்டுச் செல்ல விரும்பவில்லை. குப்புறப்

படுத்துத் தேம்பித்தேம்பி அழுதாள். ஆயினும் போவதை நிறுத்தவில்லை.

கார்த்திகை மாதம்; பகல் இரண்டுமணி. வெயிலினால் காற்று உஷ்ணமாக அடித்துக்கொண்டிருந்தது. ரஸ்தா ஓரத்திலிருந்த வாகைமரத்தின் சலசல சப்தத்துடன் உடைந்த குரலில் குயில்களின் இன்னிசை கலந்துவந்தது. பல்லக்குப் போகும் பாதைக்கு அப்பால் கதிர்விட்டிருக்கும் வயல்களைத் தாண்டித் தூரத்தில் நதியின் நீலரேகை கண்களில் தென்பட்டது. நந்தராணியால் இருக்க முடியவில்லை. மெதுவாய்ப் பல்லக்கின் கதவைத் திறந்து எட்டிப் பார்த்தாள். நதியின் எதிர்க்கரையில் தோணிகட்டப்பட்டிருப்பது அவள் கண்ணில் பட்டது. பாய்மரத்தின்மேல் கொடி பறந்தது. தோணியின் மேல்தட்டில் தனக்குத் தெரிந்த 'குபி' என்ற வேலைக்காரன் உட்கார்ந்திருப்பது அவளுக்குத் தூரத்திலிருந்தே தெரிந்தது. அவன் மாட்டியிருந்த பித்தளை வில்லை சூரியகிரணம் பட்டு ஜொலித்தது. நந்தராணி சிவிகையின் கதவைப்படீரென்று அடைத்தாள். அவள் நெஞ்சம் பாறைபோல் கடினமாகிவிட்டது.

---

## ௬

புயலில் அடிபட்டுப் பாய்மரம் ஒடிந்த கப்பலைப் போல் முகுந்தலால் வெறுப்புடன் வீடுவந்து சேர்ந்தார். குற்றத்தின் பாரம் அவருடைய இதயத்தை அழுத்தியது. மிதமிஞ்சிச் சாப்பிடுபவனுக்குச் சாப்பாட்டில் வெறுப்புண்டாவதுபோல் தாம் அநுபவித்த கேளிக்கைகளின் ஞாபகங்கள் அவருக்கே அருவருப்பை விளைவித்தன.

அவ்விதக் கேளிக்கைகளில் அவரைத் தூண்டிவிடுபவர்கள் இச்சமயம் அவரெதிரில் இருந்திருந்தால் சவுக்கடி பெற்று ஓடியிருப்பார்கள். இனி எக்காலும் இவ்விதம் செய்வதில்லை யென்று பிரதிஜ்ஞை செய்துகொண்டார்.

அவருடைய விரிந்த தலைக்கோலத்தையும், சிவந்த கண்களையும், சுண்டின முகத்தையும் பார்த்த யாருக்கும் வீட்டில் எஜமானியம்மாள் இல்லை என்று சொல்லத் தைரியம் உண்டாகவில்லை. மிக்க தயக்கத்துடன் அவர் அந்தப்புரம் வந்தார். "மன்னித்துவிடு; *படோபஹூ, பெரிய அபராதம் செய்துவிட்டேன். இனிமேல் இவ்விதம் செய்யமாட்டேன்" என்ற வார்த்தைகளை மனத்திற்குள் சொல்லிக்கொண்டே படுக்கையறைக் கதவருகில் சற்றுத் தயங்கிவிட்டு உள்ளே நுழைந்தார்.

'அவள் கோபித்துக்கொண்டு படுக்கையில் படுத்திருப்பாள். நாம் அவள் காலில் விழுந்து மன்னிப்புப் பெற்றுவிடலாம்' என்று எண்ணியிருந்தார். ஆனால் அவ்வறை சூன்யமாயிருப்பதைக் கண்டு அவருக்குத் திடுக்கென்று வாரிப்போட்டது. வெளியேவந்து தாழ்வாரத்தின் ஒரு மூலையில் வேலைக்காரி தூண்மறைவில் நிற்பதைப் பார்த்து, "எஜமானி எங்கே?" என்று கேட்டார்.

"தாயாரைப் பார்ப்பதற்காக முந்தாநாள் பிருந்தாவனம் சென்றார்" என்று அவள் சொன்னாள்.

அவள் சொன்னது அவருக்கு விளங்கவில்லை. அவர் மனம் குழம்பிற்று. நெஞ்சில் துக்கம் அடைக்க அவர், "எங்கே போயிருக்கிறாள்?" என்று மறுபடியும் கேட்டார்.

---

* வங்காளிகள் தங்கள் மனைவிகளை பஹூ என்றும் படோ பஹூ என்றும் கூப்பிடுவது வழக்கம்.

"பிருந்தாவனத்திற்கு. தாயாருக்கு உடம்பு சரியா யில்லையாம்."

முகுந்தலால் முதலில் தாழ்வாரத்தைச் சுற்றியிருந்த கைப்பிடிச்சுவரின்பேரில் சற்றுச் சாய்ந்து நின்றார். பிறகு வேகமாய்ச் சென்று தம் அறையில் போய் உட்கார்ந்தார். அவர் வாயிலிருந்து ஒரு வார்த்தைகூட வரவில்லை. அவருக்கருகிற் செல்ல ஒருவருக்கும் தைர்யமுமில்லை.

திவான் வந்து நடுக்கத்துடன், "அம்மாவை அழைக்க ஆள் அனுப்பவா?" என்று கேட்டார். வேண்டாமென்று கைவிரலால் சமிஜ்ஞை கிடைத்தது. திவான் சென்றதும் வேலையாளைக் கூப்பிட்டு, "பிராந்தி கொண்டு வா" என்று உத்தரவிட்டார்.

எல்லாரும் பிரமித்துவிட்டார்கள். பூமியின் ஆழ்ந்த கர்ப்பத்திலிருந்து பூகம்பம் உண்டாகும் சமயத்தில் அதை அடக்கமுயலுவது வீண். அதனால் விளையும் துன்பத்தைப் பொறுப்பது தவிர வேறு வழியில்லை. அவருடைய போக்கும் அவ்வாறே இருந்தது.

இரவுபகலாய் ஜலம் கலக்காத பிராந்தியையே குடித்தார். ஆகாரத்தைத் திரும்பிக்கூடப் பார்க்கவில்லை. உடம்பு முன்பே கெட்டுப்போயிருந்தது. இதுவும் சேரவே ஜுரத்துடன் இரத்தவாந்தி கண்டது. கல்கத்தாவி லிருந்து டாக்டர் வந்து சிகித்சை செய்வதில் முனைந்தார். இரவும் பகலும் அவர் தலையில் பனிக்கட்டி வைத்துக் கொண்டிருந்தார்கள்.

தமக்கு விரோதமாகச் சதி செய்வதாக எண்ணி முகுந்தலால் யாரைக்கண்டாலும் அவர்கள்மேல் எரிந்து விழுந்தார். எஜமானி போகும் சமயம் இவர்கள் ஏன்

தடுக்காமலிருந்தார்கள் என்ற கோபமே அவர்மனத்தில் குமுறிக்கொண்டிருந்தது.

அவர் அருகில் போகக்கூடியவள் குமுதம் ஒருத்தியே. அவள் அவரண்டையில் போய் உட்கார்ந்திருப்பாள். அவளுடைய ஸ்தானத்தில் வேறு யாரையோ எதிர்பார்ப்பது போல அவளைச் சூந்ய திருஷ்டியுடன் நோக்குவார். சில சமயம் அவளை மார்போடு அணைத்துக்கொள்வார். கண்களிலிருந்து தாரைதாரையாகக் கண்ணீர் வடியும். கவன மறதியாகக்கூட அவர் அவளுடைய தாயார் பெயரைச் சொல்லவில்லை. பிருந்தாவனத்திற்குத் தந்தி கொடுத்தார்கள். மறுதினமே எஜமானி வருவாளென்று எதிர்பார்த்திருந்தனர். ஆனால் அவள் வர முடியாதவண்ணம் ஓரிடத்தில் ரயில்பாதை உடைந்து விட்டதென்று செய்தி கிடைத்தது.

---

## 7

அன்று திருதியை; சாயங்காலம். ஒரு பெரும் புயல் அடித்தது. தோட்டத்தில் மரக்கிளைகள் முறிந்து விழும் சப்தம். நின்று நின்று காற்றும் மழையும் கடுவேகமாக அடித்தன. பெரிய போஜனக் கூடத்தின் மேலுள்ள சில துத்தநாகத்தகடுகள் புயலின் வேகத்தினால் பிடுங்கிக் கொண்டு அருகிலுள்ள குளத்தில் போய் விழுந்தன. பாணத்தினால் அடிபட்ட புலிபோலக் காற்று ஆவேசத்துடன் ஆகாயத்தில் சுழன்று உறுமிற்று.

திடீரென்று அடித்த ஒரு காற்றின் வேகத்தினால் ஜன்னல்களும் வாயில் கதவுகளும் கிடுகிடுத்தன. முகுந்தலால் குமுதினியின் கையைப் பிடித்துக்கொண்டு "அம்மா! குமுதம், நீ ஏன் பயப்படுகிறாய்? நீ ஒரு தவறும் செய்ய

வில்லையே. அதோ பார், அதோ பார்! அவர்கள் பல்லைக் கடிக்கிறார்கள். அவர்கள் என்னை அடிக்க வந்திருக்கிறார்கள்" என்று கதறினார்.

தகப்பனார் தலையில் பனிக்கட்டி ஒத்தடம் கொடுத்துக்கொண்டிருந்த குமுதினி, "யார் அடிக்க வருகிறார்கள்? புயல்தானே அடிக்கிறது. சீக்கிரம் அடங்கிவிடப் போகிறது" என்றாள்.

"பிருந்தாவனம்....பிருந்தாவனச் சந்திர..சக்கரவர்த்தி. எங்கப்பா காலத்துப் புரோகிதர்....அவர் செத்துப் போய்விட்டாரே! அவர் வருவாரென்று யார் சொன்னார்?"

"ஏனப்பா அலட்டிக் கொள்கிறாய். சற்றுத் தூங்கேன்."

"அதோ பார். அதோ பார். யாரையோ பார்த்துப் பத்திரம் பத்திரம் என்று மிரட்டுகிறான் பார்."

"ஒன்றுமில்லை யப்பா. காற்றில் மரங்கள் அலைபடும் சப்தந்தான்."

"ஏன், இத்தனை கோபம் ஏன்? நான் என்ன தப்புச் செய்தேன் நீயே சொல்லம்மா."

"ஒரு தப்புமில்லை, அப்பா, தூங்கு."

"பிருந்தாய்! வீணில் நீ ஏனோ கோவிந்தனை நிந்தனை உரைக்க வந்தாய்........" என்று கண்களை மூடிக் கொண்டு முணுமுணுத்த வண்ணம் பாடினார்:

"இன்னிசைக் குழறிற் பிருந்தா வனத்தில்
யாரடி ஊதுகின்றார்
என்னருந் தோழி! என் வீட்டினிற் சற்றும்
யானினி நில்லேனடி."

"ஏய், பிராந்தி கொண்டுவா."

குமுதினி தலை குனிந்து, "என்ன, அப்பா, சொன்னாய்?" என்று தகப்பனாரைப் பார்த்துக் கேட்டாள்.

முகுந்தலால் கண்களை விரித்துப் பார்த்தார். பார்த்ததும் வாயை மூடிக்கொண்டார். அறிவிழந்திருக்கும் அந்த நிலைமையிலும் குமுதினியின் முன்பு குடிக்கக்கூடாதென்று அறிவார்.

சற்று மௌனமாயிருந்து விட்டு மறுபடி,

"கண்ணனைக் கார்முகில் வண்ணன் குழலினைக்
கைக்கொண் டிடுவேனடி - இந்த
எண்ணம் வீணாகிலிப் பிருந்தாவனத்தை யான்
என்றுமே விட்டொழிவேன் - தோழி
என்றுமே விட்டொழிவேன்."

தாறுமாறாய்ப் பாடப்படும் இந்தப் பாட்டுக்களைக் கேட்கும்போது குமுதினிக்கு நெஞ்சு உடைந்துவிடும்போலிருந்தது. இவரைத் தனியாய் விட்டுச் சென்ற தாயார் பேரில் கோபமுண்டாயிற்று. தாயார் சார்பாய் இவர் காலில் விழுந்து மன்னிப்புக் கேட்கப் பெரிதும் விரும்பினாள்.

முகுந்தலால் திடீரென்று திவானைக் கூப்பிட்டார். திவான் வந்ததும், "அது என்ன 'டக் டக்' என்று சப்தம் கேட்கிறது?" என்றார்.

"காற்றில் கதவு அசைகிறதே ஒழிய வேறொன்றும் காணோமே!" என்றுரைத்தார் திவான்.

"கிழவன் வருகிறான். பிருந்தாவனச் சந்திரன் வழுக்கைத்தலையுடன் கையில் தடியை ஊன்றிக்கொண்டு சால்வையைப் போர்த்துக்கொண்டு வருகிறான். உங்களில் யாருக்கும் தெரியவில்லையா? அதுதான் 'டக் டக்' என்று சப்தம்

கேட்கிறது; கைத்தடி சப்தமா?..இரு..பாதக்குறடு சப்தமா?"

இரத்த வாந்தி சற்று நின்றது. இரவு மூன்று மணிக்குப் பின் மறுபடி ஆரம்பித்தது. முகுந்தலால் படுக்கையில் நான்கு புறமும் கைகளால் தடவிப்பார்த்துவிட்டு நாக்குழற, "படோ பஹூ, ஒரே இருட்டாயிருக்கிறதே, விளக்கேற்றேன்," என்றார்.

படகிலிருந்து திரும்பி வந்தபிறகு தம் மனைவியிடம் அவர் சொன்ன முதல் வார்த்தையும் இதுவே. அவருடைய கடைசி வார்த்தையும் இதுவே.

* * * * *

பிருந்தாவனத்திலிருந்து திரும்பி வந்த நந்தராணி வாயிலை அடைந்ததும் மூர்ச்சித்து விழுந்தாள். அவளை எடுத்துப் படுக்கையில் விட்டார்கள். மூர்ச்சை தெளிந்த பிறகும் அவளுக்கு ஒன்றிலும் அக்கரை உண்டாகவில்லை. கண்களில் கண்ணீர் உலர்ந்து விட்டது. தன் குழந்தைகள் முகத்தைப் பார்த்துக்கூட அவளுக்கு ஆறுதல் ஏற்படவில்லை. குலகுரு வந்து சாஸ்திர சுலோகங்களைப் படித்தார். ஆனால் அவள் தன் முகத்தைத் திருப்பிக்கொண்டாள். கையில் கட்டிய *இரும்பு வளையலைக்கூட கழற்றவில்லை. "நான் கட்டிய கங்கணம் நீங்காது என்று சொன்னாரே. அது பொய்யாகுமா?" என்றாள்.

க்ஷேமா என்பவள் தூரத்து முறையில் நாத்தனாராக வேண்டும். அவள் தன் தலைப்பினால் கண்களைத் துடைத்துக்கொண்டு, "நடந்தது நடந்தாய் விட்டது. அவர்

---

* லோஹார்பாலா...என்று வங்காளி ஸுமங்கிலிகள் அணியும் நம் தேசத்துத் தாலிக்கு ஈடான மங்கள ஸூத்ரம்.

போகும்போது கூட 'படோ பஹூ, விளக்கு ஏற்றமாட்டாயா" என்றுரே. போடியம்மா, இனி வீட்டுக் காரியத்தைப் போய்க் கவனி" என்றுள்.

நந்தராணி எழுந்து உட்கார்ந்து, "போகிறேன், விளக்கேற்றத்தான் போகிறேன். இனித் தாமதிக்கமாட்டேன்" என்றுள். அதைச் சொல்லும்போதே கையில் விளக்கெடுத்துப் போவதுபோல அவள் வெளுத்த முகம் ஒருவிதப் பிரகாசம் அடைந்தது.

சூர்யன் உத்தராயணம் சென்றுன். மாசிமாதம் வந்தது. சுக்லபட்சம் சதுர்த்தசி. நந்தராணி நெற்றியில் குங்குமம் இட்டுச் சிவப்புப் புடைவை அணிந்து சிரித்த முகத்துடன் இகஸம்ஸாரத்தை விட்டுப்போய்விட்டாள்.

---

## 8

தகப்பனுர் மரித்த பின்பு விப்ரதாஸ் தான் ஆச்ரயித்திருக்கும் மரம் முற்றும் உள்ளுக்குள் செல்லரித்துவிட்டதென்று அறியலானுன். சொத்தின்மேலுள்ள கடனின் சுமை கொஞ்சம் கொஞ்சமாக ஆளை இழுத்துக்கொண்டிருந்தது. செலவைக் குறைப்பது அவசியமாயிற்று. குமுதினியின் விவாகத்தைப்பற்றியும் அடிக்கடி கேள்வி உண்டாகவே, அதற்குப் பதில் சொல்வது கஷ்டமாயிருந்தது. முடிவில் கல்கத்தா வந்து பாக்பஜாருக்கு அருகில் ஒரு வீட்டில் அமர்ந்தான்.

பழைய வீட்டிலிருப்பது குமுதத்திற்கு மிக ஒத்திருந்தது. அவளுக்குப் பிரியமான புஷ்பங்கள், மாட்டுக் கொட்டில், வயல்கள், அவளைச் சுற்றிலும் இருந்தன; பழகிய வேலையாட்களும் இருந்தார்கள். அந்தப் புரத்துத்தோட்டத்தில் புஷ்பங்கள் பொறுக்குவாள்;

குடலை நிறைந்துவிடும்; உப்பு, மிளகாய், தனியா முதலிய வைகளை இலந்தைக் காயோடு அரைத்து உண்பாள். அரிநெல்லிக்காயைப் பறித்து வைப்பாள். வைகாசி, ஆனி மாதங்களில் மாந்தோப்பிற்குச் சென்று மாங்காய் பொறுக்குவாள். தோட்டத்திற்குக் கிழக்குப்புறம் நெல் லுக் குத்துகிற தாழ்வாரம். அங்கே பணியார வகைகள் செய்ய மாவை இடிக்கும் நிமித்தம் பெண்கள் கூடிப் பேசும் சமயங்களில் இவளும் சேர்ந்துகொள்வாள். புறக்கடை யில் அடர்ந்த நாணல்களாற் சூழப்பட்ட குளம். மரநிழல் அடர்ந்து குளுகுளு வென்றிருக்கும். குயில், புரு, மைனு இவைகள் கூவுவதனால் அவ்விடம் கலகலப்புடனிருக்கும். அங்கே அவள் தினமும் குளத்தில் நீந்திக் குதிரைக்குளம்பு பறிப்பாள். புஷ்பங்கள் கட்டிச் சிற்சில சமயம் படிகளில் உட்கார்ந்து இனிமையான கற்பனைகளி லாழ்ந்திருப்பாள். சில சமயங்களில் தனிமையாக உட்கார்ந்துகொண்டு நூல் வேலை செய்வாள். கிராமத்தில் அழகிய இயற்கைத்தேவி யின் விழாக்களாகிய ருதுக்களுடன் மாந்தரின் விழாத்தினங் கள் ஒவ்வொன்றும் இணைந்திருக்கிறது. அக்ஷய திருதியை முதற்கொண்டு டோல உற்சவம், வாஸந்தி பூஜை வரைக் கும் எத்தனையோ பண்டிகைகள்! மனிதனும் இயற்கையும் ஒன்றுகூடித் தங்கள் திறமையினுல் விசித்திர வழிகளில் ஆண்டு முழுவதையும் இன்பமுறச் செய்கின்றனர். இம் மாதிரியான பண்டிகைகள், உற்சவங்கள் இவைகளுக் கிடையே வீட்டில் சம்சார கலகம், பெண்டுகள் ஒருவர் மேல் ஒருவர் கொள்ளும் பொறுமை, விரோதம் போன்ற காட்சிகள், தினப்படி ஊர்ந்து செல்லும் காரியங்கள், எஜமானர் செய்கிற அக்கிரமங்கள், அதனுல் வீட்டில் அமைதியின்மை, அடிக்கடி குமுதினியின் மனத்தில்

தோன்றும் திகில், கலவரம், வாய்விட்டுச் சொல்ல முடியாமல் தாயார் மறைவாகக் கண்ணீர் விடும் காட்சி, வீட்டில் நடக்கும் பிரமாதங்களைக் குறிக்கச் சிறுவர்கள் முகத்தில் தோன்றும் வாட்டம் இவைபோன்ற இன்ப துன்பங்களுக்கு நடுவே குமுதினி வளர்ந்துவந்த அந்தப் பெரிய சம்சாரம் பல விதங்களில் அலைக்கப்பட்டது.

இவைகளையெல்லாம் விட்டு விட்டுக் குமுதினி கல்கத்தா வந்தாள். அது ஒரு பெரிய சமுத்திரம்போ லிருந்தது. ஆனால் தாகம் அடங்க ஒரு பொட்டுத் தண்ணீர் ஏது? இவள் கிராமத்து வானமும் காற்றும் கூட இவளுக்கு நித்ய பரிசயமுள்ளவைகளாயிருந்தன. கிராமத்தின் எல்லையில் தோன்றும் இருண்ட காடு, மணல் திடர், நதியின் நீரோட்டம், கோயிலின் கோபுரம், பரந்த வெளி, சவுக்கந்தோப்பு, வளைந்து செல்லும் வழி, விசாலமான வானம் இவைகளின் உருவம் பல வர்ணங்களில் குமுதினியின் மனத்தில் தீட்டப்பட்டு அவளுக்கென்றே சிருஷ்டித்த மாதிரி இருந்தன. சூரிய வெளிச்சத்தில்கூட ஒரு தனிமை அழகு இருந்தது. வாவித்தட வயல்கள், செம்படவர் படகின் பழுப்பு நிறப் பாய்மரம், மூங்கிலின் தளிர் இலைகள், பலாவின் செழித்த பசுமை, அக்கரையில் தென்படும் வெளிறிய மஞ்சளான மணல்வெளிகள்: இவைகள் ஒவ்வொன்றிலும் வெவ்வேறு விதம் கலந்து பிரகாசிக்கும் கதிரவன் ஒளி அவளுக்கு வெகு நாட்களாகப் பழக்கமானவை. கல்கத்தாவில் இவை களில் ஒன்றுமில்லாமல் வீட்டின் சுவரும் கூரையும் கொண்ட வானம் சிறிதும் லாவண்யமில்லாமல் அவளைக் கடுமையுடன் பார்ப்பவைபோலத் தென்பட்டன. இங் கிருக்கும் தெய்வங்கள்கூட அவளை ஒதுக்கிவிட்டன போல அவளுக்குத் தோன்றிற்று.

விப்ரதாஸ் அவளைத் தன் அருகில் கூப்பிட்டு, "ஏன், குமுதம், இவையெல்லாம் பிடிக்கவில்லையா?" என்று கேட்டான்.

குமுதினி சிரித்து விட்டு, "இல்லை, அண்ணா, பிடிக்காமலென்ன!" என்றாள்.

"வருகிறாயா? மியூஸியம் பார்க்கலாம்."

"வருகிறேன்."

விப்ரதாஸ் புருஷனாயில்லாவிடில் அவள் அந்த வார்த்தையை அதிக உற்சாகத்துடன் சொல்வதிலிருந்தே அந்த உற்சாகம் சுவபாவமானதல்ல என்று தெரிந்துகொண்டிருப்பான். மியூசியம் பார்க்கப் போவதில் அவளுக்குச் சிறிதும் இஷ்டமே கிடையாது. வெளி மனிதர்களுக்கு எதிரில் வந்து பழக்கமில்லாததால் அவளுக்கு இருக்கும் சங்கோஜத்திற்கு அளவு கிடையாது. கைகால்கள் வெலவெலத்துப் போகும்; தலைநிமிர்ந்து வஸ்துக்களை நன்றாய்ப் பார்ப்பதற்குக்கூடக் கூச்சம் உண்டாகும்.

விப்ரதாஸ் அவளுக்குச் சதுரங்கம் ஆடச் சொல்லிக் கொடுத்தான். அவன் நன்றாய் ஆடுவான். புதிதாகக் குமுதம் அந்த விளையாட்டைக் கற்றுக்கொண்டு விளையாடுவதைப் பார்ப்பதில் அவனுக்கு அதிக சந்தோஷமாயிருந்தது. கல்கத்தாவில் குமுதத்திற்கு ஏற்ற தோழி ஒருவரும் இல்லையாதலால் இந்தச் சகோதரனும் சகோதரியும் இரு சகோதரர் போல ஆனார்கள். சம்ஸ்கிருத இலக்கியங்களில் விப்ரதாஸிற்கு அதிகப் பிரேமை. அவனிடமிருந்து குமுதம் வியாகரணம் கற்றாள். குமாரசம்பவத்தைப் படித்ததுமுதல் தபஸ்வினியான உமாதேவியின் கடுந்தவத்தின் பலனாகக் கிடைத்த மகாதபஸ்வியாகிய சிவபெருமானையே அவள் பூஜிக்கலானாள். அக்கன்னிகையின்

மனத்தில் அவளுக்கு ஏற்படப்போகும் கணவனும் ஒருவித தெய்விகத் தோற்றத்துடன் பிரகாசிக்கலானார்.

விப்ரதாஸிற்குப் புகைப்படம் பிடிக்கத் தெரியும். அந்த வித்தையைக் குமுதத்திற்கும் சொல்லிக்கொடுத்தான். அவர்களில் ஒருவர் படம் எடுத்தால் மற்றவர் அதைத் தயாரித்துக் கழுவி எடுப்பார்கள். துப்பாக்கிசுடுவதிலும் விப்ரதாஸிற்கு நல்ல பழக்கம் உண்டு. பண்டிகைக் காலங்களில், அவன் ஊருக்கு வரும்போது குளத்தில் இளநீர், வில்வக்காய், அக்ரோட் காய் முதலியவைகளை மிதக்க விட்டுக் குறிபார்த்துச் சுடப் பழகுவது வழக்கம். அச் சமயங்களில் அவன் குமுதினியைப் பார்த்து, "வருகிறாயா? நீயும் சுடக் கற்றுக்கொள்ளேன்" என்பான். தன் தமையனுக்கு எந்த எந்த விஷயத்தில் ருசியிருக்கிறதோ அந்த அந்த விஷயங்களில் குமுதினியும் பற்றுடையவளாக இருந்தாள். தமயனிடமிருந்து 'எஸ்ராஜ்' என்ற வாத்தியம் வாசிக்கக் கற்றுக்கொண்டாள்; முடிவில் அவள் அதில் பெற்ற தேர்ச்சியைக் கண்டு விப்ரதாஸ், "குருவிற்கு மிஞ்சிய சிஷ்யை" என்று சொல்லலானான்.

இவ்விதம் சிறுவயது முதல் அவனிடம் வைத்திருந்த அன்பு குமுதம் கல்கத்தாவிற்கு வந்தபிறகு பன்மடங்கு அதிகரித்தது; அவனிடம் பற்றுதல் மிகுதியாயிற்று.

குமுதம் இயற்கையில் தனிமையை விரும்புபவள். மலைவளர் காதலி போன்ற அவள் ஏதோ ஓர் மானஸ தீர்த்தக் கரையில் கற்பனைத் தபோவனத்தில் வசித்து வந்தாள். ஜன்மம்முழுதும் தனிமையை விரும்புவோர்க்கு, பரந்த ஆகாயமும், நிர்மாநுஷ்யமும் இன்றியமையாதவை. இந்த நிலையில் அவர்கள் தாங்கள் விரும்பும் ஒருவனைத்தான் பூர்ண அந்தக்கரணத்துடன் பூஜிக்கமுடியும். குமுதினியைக்

கண்டால் மற்றப் பெண்களுக்குப் பிடிக்காததற்குக் காரணம் அவள் யாருடனும் பழகாமல் பெண்களிடம் இல்லாத இந்தத் தனிப்பான்மையுடனிருப்பதே. இதை அவர்கள் கர்வம் என்றும் நினைத்துக்கொள்வார்கள். இவ் வித குணம் அவளுக்கு இருப்பதனாலேயே கிராமத்திலும் கூட அவளுக்குத் தோழிகள் அதிகம் கிடையாது.

தகப்பனார் இருக்கையில் விப்ரதாஸிற்கு விவாகம் நிச்சயிக்கப்பட்டிருந்தது. ஆனால் விவாகம் நடந்தேறு வதற்கு முன்பே பேசின பெண் ஜுரம் கண்டு இறந்து விட்டாள். பிறகு அவன் ஜாதகத்தைப் பார்த்ததில், "குரு பலம் வரவில்லை" என்று தெரியவந்தது. விவாகம் தள்ளி வைக்கப்பட்டது. பிறகு தகப்பனார் மரித்தார். அதற்குப் பின் விவாக விஷயமாய்ப் பேச்செடுக்கத் தக்க சமயம் கிட்டவில்லை. ஒரு சமயம் விவாகத் தரகன் விப்ரதாஸி டம் வந்து அதிக ஸ்ரீதனத்துடன் ஒரு ஜாதகம் வந்திருக்கிற தென்று சொல்லி அவனுக்கு ஆசை காட்டினான். ஆனால் அவன் எண்ணம் பலிக்காமல் கைகால்கள் வெலவெலக்க அவ்விடத்தை விட்டு வீட்டுக்கு வெகு வேகமாய்த் திரும்ப நேரிட்டது.

---

## ௭

சீமையிலிருக்கும் சுபோதினிடமிருந்து ஆரம்பத்தில் கடிதங்கள் சரியாய் வந்துகொண்டிருந்தன. இப்போது நடுவில் நடுவில் கடிதமே வராமலிருக்கும். குமுதம் தபாலை எதிர்பார்த்துக் காத்திருப்பாள். ஒரு தினம் வேலையாள் ஒரு கடிதத்தை அவள் கையில் கொடுத்தான். விப்ரதாஸ் கண்ணாடியின்முன் நின்று முகக்ஷவரம் செய்து கொண்டிருந்தான். குமுதினி வேகமாய்ச் சென்று,

"அண்ணு, சின்னண்ணுவிடமிருந்து கடிதம் வந்திருக்கிறது" என்ருள்.

க்ஷவரம் முடிந்ததும் நாற்காலியில் உட்கார்ந்து விப்ரதாஸ் மனத்திற்குள் சற்று பயத்துடனேயே கடிதத்தைப் பிரித்தான். படித்து முடிந்ததும் ஏதோ மிக்க துன்பத்தை அடைந்தவன்போல் அதைக் கையில் வைத்து நன்ருய்க் கசக்கிவிட்டான்.

குமுதினி கலக்கமடைந்து, "சின்னண்ணுவிற்கு உடம்பு சரியாயில்லையா?" என்று கேட்டாள்

"செளக்கியமாய்த்தான் இருக்கிருன்."

"கடிதத்தில் என்ன எழுதியிருக்கிருன்? சொல்லேன்."

"அவன் படிப்பு விஷயத்தைப்பற்றி."

சில தினங்களாகவே விப்ரதாஸ் குமுதத்திற்குச் சுபோதின் கடிதங்களைக் காண்பிப்பதில்லை. சிற்சில பாகங்களை மாத்திரமே வாசித்துக் காட்டுவான். இப்போது அவ்விதமும் செய்யவில்லை. கடிதத்தைக் கொடு என்று கேட்க அவளுக்குத் தைர்யமில்லை. அவள் நெஞ்சம் மட்டும் படபடவென்று அடித்துக்கொண்டிருந்தது.

சுபோது முதலில் மிகவும் ஜாக்ரதையுடன் செலவு செய்துவந்தான். பிறகு வீட்டு வியவகாரங்கள் ஒரு நிழல்போல் அவன் மனத்தில் மறையவே செலவும் அதிகரிக்கலாயிற்று. மேன்மையான ரீதியில் வசிக்காவிடில் அங்குள்ள பெரியமனிதர்கோஷ்டியில் சேரமுடியாதென்றும் அவ்விதம் அவர்களுடன் பழகாவிடின் இங்கிலாந்து வந்ததே வீணுகும் என்றும் எழுதியிருந்தான்.

நிர்ப்பந்தத்திஞல் விப்ரதாஸ் இரண்டொரு முறை தந்தி மூலமாய்ப் பணம் அனுப்ப நேரிட்டது. இப்போது

நாற்றைம்பது பவுன் அவசியமாய் வேண்டுமென்று கடிதம் வந்திருந்தது.

விப்ரதாஸிற்கு என்ன செய்வதென்று தெரியவில்லை: 'எவ்வளவோ சிரமப்பட்டுக் குமுதினியின் கலியாணத்திற்காகச் சேர்த்து வைத்த பணத்தை இழுக்கும்போலிருக்கிறதே! குமுதினியின் வருங்கால வாழ்க்கையைப் பாழாக்கிவிட்டு அந்தப் பணத்தைக் கரைத்து சுபோது பாரிஸ்டர் பண்ணி என்ன ஆகவேண்டும்!!'

அன்றிரவு விப்ரதாஸ் மாடியில் வெளித்தாழ்வாரத்தில் உலாவிக்கொண்டிருந்தான். குமுதத்திற்கும் நித்திரையில்லையென்பதை அவன் அறிவான். கடைசியில் குமுதத்தினால் பொறுக்கமுடியாமற் போகவே எழுந்து ஓடி வந்தாள். விப்ரதாஸின் கைகளைப் பிடித்துக்கொண்டாள்; "நிஜத்தைச் சொல்லு, அண்ணு; சின்னண்ணுவிற்கு என்ன? உன் காலில்விழுந்து 'கெஞ்சுகிறேன்: என்னிடம் மறைக்காதே' என்முள் குமுதினி.

மறைப்பதனுல் அவள் கவலை அதிகமாகுமென்று விப்ரதாஸ் உணர்ந்தான். சற்று மௌனமாயிருந்துவிட்டு "சுபோது ரூபாய் கேட்கிருன். அவ்வளவு ரூபாய் கொடுக்க எனக்குச் சக்தி ஏது?" என்ருன்.

குமுதம் விப்ரதாஸின் கைகளைப் பிடித்துக்கொண்டு, "அண்ணு, நான் ஒன்று சொல்லுகிறேன்: கோபித்துக் கொள்ளாமலிருக்கிருயா?" என்ருள்.

"கோபமுண்டாகும் வார்த்தையைச் சொன்னுல் எப்படிக் கோபியாமலிருக்கிறது?"

"இல்லை அண்ணு. இது விளையாட்டல்ல. என் வார்த்தையைக் கேள்: அம்மாவின் நகை எனக்காக இருக்கிறதே; அதை எடுத்து—"

"உஸ்! உன் நகையை நாங்கள் தொடலாமா?"

"நான் தொடலாமல்லவா?"

"கூடாது, நீயும் தொடக்கூடாது. இவையெல்லாம் இருக்கட்டும். நீ தூங்கப் போ."

கல்கத்தா நகரத்தில் விடியற்காலை. காக்கைகள் கரையும் சப்தமும் குப்பை வண்டிகள் கடகடவென்று செல்லும் ஒலியும் காதில் பட்டன. தூரத்திலிருந்து சிலசமயம் கப்பல்களின் ஊதுகுழலொலியும் சில சமயம் எண்ணெய் ஆலைகளின் சங்கநாதமும் கேட்கும். வீட்டிற்கு எதிரில் ஒருவன் "ஜ்வராரி வடிகா"வின் விளம்பரத்தை ஒட்டிவிட்டுச் சென்றான். குழாயில் முதலில் யார் தண்ணீர் பிடிப்பதென்று ஒரு ஹிந்துஸ்தானிக்காரிக்கும், ஒரு ஒரியா பிராம்மணனுக்கும் மென்னிப்பிடி சண்டை விவாதம் நடந்தது. விப்ரதாஸ் தாழ்வாரத்தில் உட்கார்ந்திருந்தான். எதிரில் மேஜையின் பேரில் இருந்த பத்திரிகை பிரிக்கப்படாமலே யிருந்தது.

குமுதம் வந்து, "அண்ணா, மாட்டேனென்று சொல்லாதே" என்றாள்.

"என் இஷ்டப்படி நடப்பதைக்கூடத் தடுப்பாயா? இரவும் பகலும் உன் ஆட்சிக்கு அடங்கி நடக்க வேண்டுமா?"

"இல்லை, நான் சொல்வதைக் கேளேன்: என்நகையைக் கொண்டு உன் கவலையை ஒழி."

"உன் நகையால் என் கவலை எப்படி ஒழியும்?"

"அது எனக்குத் தெரியாது. நீ கவலைப்படுவதைப் பார்க்க என்னால் பொறுக்க முடியவில்லை."

"கவலைப்படுவதனாலே கவலையை ஒழிக்க முடியும். அதை ஒதுக்கப்பார்த்தால் அது அதிகமாய் வளர்ந்து விடும். கொஞ்சம் பொறுமையாயிரு; ஏதாவது வழி பார்க்கிறேன்."

தன் தம்பிக்கு விடை எழுதுகையில் விப்ரதாஸ், "ரூபாய் அனுப்புவதென்றால் குமுதத்தின் ஸ்ரீதனத்தில் எடுக்கவேண்டிவரும். அம்மாதிரி செய்வது நன்றாயிராது" என்று எழுதினான்.

உரிய காலத்தில் அதற்கு விடை கிடைத்தது. குமுதத்தின் ஸ்ரீதனப்பணம் தனக்கு வேண்டாமென்றும், சொத்தில் தன் பாகத்தை விற்றுப் பணம் அனுப்பும்படியும் சுபோது எழுதியிருந்தான். அதனுடன் தனக்காகச் சொத்தை விற்கும் அதிகாரப் பத்திரத்தையும் அனுப்பியிருந்தான்.

இக்கடிதம் விப்ரதாஸை ஓர் அம்பு போல் துளைத்தது. "இவ்வளவு நிஷ்டூரமாகவா சுபோது எழுதியிருக்கிறான்!" உடனே கிழவரான திவானைக் கூப்பிட்டு, "கரீம்ஹாட்டி கிராமத்தைப் பூஷணராயர் வாங்க விரும்பினாரே? எவ்வளவு கொடுப்பதாய்ச் சொன்னார்?" என்று கேட்டான்.

"இருபதினாயிரம்வரை கொடுக்கலாம்."

"அவருக்குச் சொல்லி யனுப்பும். அவருடன் பேச வேண்டும்."

விப்ரதாஸ் குடும்பத்தில் மூத்த பிள்ளை. அவன் பிறந்த சமயம் அவனுடைய தாய்வழிப்பாட்டனார் இக் கிராமத்தை அவனுக்கென்று எழுதிக் கொடுத்திருந்தார். பூஷணராவ் பெரிய பணக்காரர். இருபது லக்ஷத்திற்குச் சொத்து இருக்கும். அவர் பிறந்த இடம் கரீம்ஹாட்டி. அதனால் வெகுநாளாக அக்கிராமத்தை வாங்க வேண்டு

மென்று முயன்றுகொண்டிருந்தார். பணத்தட்டால் ஒவ்வொரு சமயம் இதற்கு விப்ரதாஸ் சம்மதித்திருந்தான். ஆனால் குடிகள் வந்து அழுதார்கள்: "அவரை நாங்கள் எப்படி ஜமீன்தாராகக் கௌரவிப்பது?" என்றனர். அதனாலேயே பேச்சு நின்றுவிட்டது. இம்முறை விப்ரதாஸ் அதை விற்பதென்று தீர்மானித்தான். சுபோது பணம் கேட்பது இம் முறையுடன் நில்லாது என்பதை அவன் நன்கு அறிவான்.

திவானால் விப்ரதாஸ் எதிரில் ஆட்சேபிக்க முடியவில்லை; குமுதத்தினிடம் சென்று, "அம்மா! நீ சொன்னால் அவர் கேட்பார். அவரை வேண்டாமென்று தடுத்துவிடு. இந்த அநியாயம் அடுக்காது" என்றார்.

விப்ரதாஸின் மேல் அவன் வீட்டில் எல்லாருக்கும் பிரியம் உண்டு. மற்றவனுக்காக இவன் தன் சொத்தை இழப்பது ஒருவருக்கும் சம்மதமில்லை.

வெகுநேரம்வரை விப்ரதாஸ் அந்தக் கிராமத்து தஸ்தவேஜிகளைப் புரட்டிப் பார்த்துக்கொண்டிருந்தான். இன்னும் ஸ்நானம் செய்யவில்லை; சாப்பிட வில்லை. குமுதம் அடிக்கடி அவனுக்குச் சொல்லியனுப்பினாள். கடைசியில் சுண்டின முகத்துடன் அவன் உட்புறம் வந்தான். அவனைப் பார்க்கையிலேயே குமுதத்தின் நெஞ்சிற் சுரீரென்று தைத்தது.

குளித்துச் சாப்பிட்டுவிட்டு விப்ரதாஸ் கால்களை நீட்டிக்கொண்டு படுக்கையில் சாய்ந்து அமர்ந்ததும், குமுதம் வந்து அவன் தலைமாட்டில் உட்கார்ந்தாள். மெதுவாய் அவனுடைய தலைமயிரைக் கோதியவண்ணம், "அண்ணா! உன் கிராமத்தை நீ விற்காதே" என்றாள்.

"நீ என்ன ..வாப் சிராஜுத்தௌலாவா? எல்லாக் காரியத்திலும் உன் சாஸனமோ?

"இல்லை, அண்ணு! பேச்சை மாற்றுதே."

அதற்கு மேல் விப்ரதாஸால் பொறுக்க முடியவில்லை. நன்ருய் எழுந்து உட்கார்ந்தான். குமுதத்தை இழுத்துத் தன் எதிரில் உட்காரவைத்து, தொண்டையைச் சரிப் படுத்திக் கொண்டு, "சுபோது என்ன எழுதி யிருக்கிருன், தெரியுமா? இதைப் பார்" என்ருன்.

தன் மேஜையிலிருந்து சுபோதின் கடிதத்தை அவன் எடுத்துக் கொடுக்கவே குமுதம் கடிதம் முழுவதும் படித்துப் பார்த்தாள். பிறகு தன் கைகளால் முகத்தை மூடிக் கொண்டு, "ஐயோ! சின்னண்ணுவா இப்படி எழுதி யிருக்கிருன்!" என்ருள்.

"அவன் தன் சொத்து என் சொத்து என்று வித்தியாசம் பார்க்கையில் நான் எப்படி என் சொத்தைத் தனி யாய்ப் பிரித்துவைக்க முடியும்? அவனுக்குத் தகப்பனர் இல்லை. ஆபத்துக்காலத்தில் நான் உதவாமல் வேறு யார் உதவுவார்?" என்று விப்ரதாஸ் சொன்னுன்.

அதற்குமேல் குமுதத்தால் ஒன்றும் சொல்ல முடிய வில்லை. கண்களில் நீர் நிறைந்தது. விப்ரதாஸ் மறுபடி திண்டில் சாய்ந்து கண்களை மூடிக்கொண்டான்.

வெகுநேரம் தமையன் காலண்டை உட்கார்ந்து அதை வருடிக் கொடுத்துக் கொண்டிருந்த குமுதினி," அண்ணு! அம்மாவின் பணம் அம்மாவைச் சேர்ந்ததே. அவள் நகை...."

விப்ரதாஸ் சட்டென்று எழுந்து உட்கார்ந்து, "குமுதம்! உனக்கு இதுகூடத் தெரியவில்லையா? உன் நகை களை விற்றுச் சுபோது சீமையில் நாடகமும் நடனமும்

பார்த்துவிட்டுத் திரும்பி வந்தானென்ருல், பிறகு அவனை என்ருல் மன்னிக்க முடியுமா? அல்லது அவன்தான் முகத்தை வெளிக் காட்ட முடியுமா? அவனை இவ்வளவு பெரிய தண்டனைக்கு உள்ளாக்க ஏன் விரும்புகிருய்?" என்று கேட்டான்.

இதைக் கேட்டுக் குமுதம் பேசவில்லை. அவளுக்கு ஒரு வழியும் தெரியவில்லை. முன்பு பல முறை சிந்தித்ததுபோல் சிந்திக்கலானுள். ஏதாவது எதிர் பாராத சம்பவம் நடக்காதா? சுபசகுனங்கள் என்னவோ தென்பட்டுக்கொண்டே இருந்தன. சில தினங்களாய் அவளது இடது கண் துடித்துக்கொண்டிருக்கிறது. இதற்கு முன் எவ்வளவோ முறை இடது கண் துடித்ததுண்டு. அதைப் பற்றி எண்ணவே யில்லை. இம்முறை அந்த நன்னிமித்தம் வலுவில் அவள் மனத்தில் பதிந்தது.

---

## 10

மழைக்காலம். விப்ரதாஸிற்கு உடம்பு சரியாக இல்லை. போர்த்துக்கொண்டு சாய்ந்து பத்திரிகை படித்துக் கொண்டிருந்தான். குமுதத்தின் பூனை அச்சால்வையின் ஒருபுறத்தில் சுகமாய்ச் சுருண்டு படுத்துத் தூங்கிக்கொண் டிருந்தது. விப்ரதாஸின் 'டெரியர்' நாய் நிர்ப்பந்தத்தால் அப்பூனை அங்கிருப்பதைச் சகித்துக்கொண்டு எஜமானன் காலடியில் படுத்துத் தூங்கியவண்ணம் நடுவே நடுவே சொப்பனம் கண்டுகொண்டிருந்தது.

அச்சமயம் ஒரு கல்யாணத்தரகன் வந்தான்.

"நமஸ்காரம்"

"நீ யார்?"

"பெரிய எஜமானருக்கு என்னை நன்ருய்த் தெரியும். தாங்கள் அச்சமயம் மிகச் சிறியவர். என் பெயர் நீலமணி கடகன். கங்காமணி கடகனின் பிள்ளை."

"வந்தது என்ன காரியம்?"

"நல்ல வரன் கிடைத்திருக்கிறது. தங்கள் வீட்டிற்குத் தான் தகுந்தது."

விப்ரதாஸ் நிமிர்ந்து எழுந்து உட்கார்ந்தான். கடகன் ராஜா பகதூர் மதுசூதன கோஷாலின் பெயரைச் சொன்ஞன்.

விப்ரதாஸ் ஆச்சரியத்துடன், "அவருக்குப் பிள்ளை இருக்கிருஞ?" என்று கேட்டான்.

"இல்லை. அவர் இன்னும் விவாகம் செய்துகொள்ளவில்லை. யதேஷ்டமான ஐச்வர்ய மிருக்கிறது. இப்போது வேலையிலிருந்து ஓய்வு எடுத்துக்கொண்டு சம்சாரம் நடத்த வேண்டுமென்று அவருக்கு அபிலாஷை ஏற்பட்டிருக்கிறது" என்று தரகன் சொன்ஞன்.

விப்ரதாஸ் சற்று நேரம் ஹுக்கா குடித்தவண்ணம் மௌனமாயிருந்தான். அதன் பிறகு சட்டென்று கண்டிப்பாய், "அவருக்குச் சரியான வயதுள்ள பெண் இங்கே ஒருத்தியும் இல்லை" என்று சொன்ஞன்.

கடகன் இலகுவில் விடுபவனல்லன். அந்த வரனுக்கு எவ்வளவு ஐச்வர்ய மிருக்கிறது, கவர்னரிடம் அவருக்கு எவ்வளவு செல்வாக்கு இருக்கிறது முதலிய விவரங்களை நீள வர்ணித்தான்.

விப்ரதாஸ் எல்லாவற்றையும் மௌனமாகக் கேட்டுவிட்டு மறுபடியும் சற்றுக் கோபத்துடன், "வயது ஈடில்லை" என்று சொல்லிவிட்டான்.

"யோசித்துச் சொல்லுங்கள். இரண்டு நாள் கழித்து வருகிறேன்" என்று சொல்லித் தரகன் சென்றான்.

விப்ரதாஸ் ஒரு பெருமூச்சு விட்டுப் படுக்கையில் சாய்ந்துகொண்டான்.

தமையனுக்காக டீ எடுத்துக்கொண்டு குமுதம் வந்துகொண்டிருந்தாள். அறைக்கு வெளியில் நனைந்து தண்ணீர் சொட்டிக்கொண்டிருந்த பழைய குடையையும் சேறுபடிந்த செருப்பையும் பார்த்து அறைக்குள் யாரோ பேசும் குரலையும் கேட்டு அங்கேயே நின்றுவிட்டாள். இவர்கள் வார்த்தை கொஞ்சம் அவள் காதில்பட்டது. அச்சமயம் தரகன், "ராஜா பகதூர் இந்தவருஷ முடிவிற்குள்ளேயே மகாராஜா என்ற பட்டம் பெறுவார். இது நேரே கவர்னர் வாய்மூலமாய் வந்த செய்தி. அதனாலேயே இவ்வளவு நாட்கள் கழித்து அவருக்குச் சிந்தை உண்டாயிருக்கிறது. மஹாராணி ஸ்தானம் காலியாயிருக்கக் கூடாது. உங்கள் வீட்டுப் புரோகிதர் பட்டாசாரியர் எனக்குத் தூரத்து முறையில் மைத்துனர். அவர் வீட்டில் பெண்ணின் ஜாதகத்தைப் பார்த்தேன். மிகவும் பொருத்தமாயிருக்கிறது. எத்தனையோ பெண்களின் ஜாதகத்தைப் பார்த்தாய்விட்டது. இவ்வளவு பொருத்தமானதாய் வேறொன்றுமே இல்லை. நீங்கள் வேண்டுமானால் பாருங்கள்: நான் சொல்கிறேன். இந்த சம்பந்தம் ஏற்பட்டே தீரும். பிரம்மா முடிபோட்டுவிட்டானே, ஸ்வாமீ" என்று சொல்லிக்கொண்டிருந்தான்.

சரியாய் அதே சமயம் குமுதினியின் இடது கண் துடித்தது. என்ன ஆச்சரியமான நிமித்தம்! இவர்கள் வீட்டுப் புரோகிதர் எவ்வளவோ முறை அவள் கை ரேகையைப் பார்த்துவிட்டு, "நீ ராணியாய் விளங்குவாய்"

என்று சொல்லியிருக்கிறார். கைரேகையின் பலன் இப்போது பிரத்யட்சமாய் வெளிவருகிறது. கொஞ்ச நாட்களுக்கு முன் புரோகிதர் கிராமத்திலிருந்து கல்கத்தா வந்திருந்தார். அப்போது 'இந்த ஆவணிமாதத்தி லிருந்து விருஷப ராசிக்கு ராஜசன்மானம் ஏற்படும்; பெண்ணின்மூலம் தனலாபமேற்படும்; சத்ரு நசிப் பான்; கொஞ்சம் பத்னிபீடையும் ஏற்படலாம்; பத்னி வியாதிப்பட்டு மரிக்கும்படி நேரிடலாம்' என்று சொல்லி யிருந்தார். விப்ரதாஸிற்கு விருஷபராசி. நடுவில் சரீர சம்பந்தமான பீடையும் இருக்கிறது. நேற்று முதல் நல்ல சகுனங்கள் காண்கின்றன. ஆவணி மாதமும் பிறந்துவிட்டது. பத்னியின் பீடை, அவள் மரணம் முதலியவற்றைப்பற்றிக் கவலைப்படவேண்டிய தில்லை. போகப்போக இனிமேல் நல்ல காலந்தான்.

குமுதம் தமையன் பக்கத்தில் உட்கார்ந்து, "அண்ணா! தலை வலிக்கிறதா?" என்றாள்.

"இல்லை".

"டீ ஜில்லிட்டுவிட்டது. உன் அறையில் வேறு யாரோ இருப்பதைப் பார்த்துவிட்டு நான் வராமலிருந்தேன்."

விப்ரதாஸ் குமுதத்தின் முகத்தைப் பார்த்துவிட்டு ஒரு நீண்ட பெருமூச்சுவிட்டான். ஸௌபாக்யம் ஒரு தங்கரதத்தைக் கொண்டுவருகிறது. அதன் சக்கரம் ஓடாமலிருந்தால் அந்தக் கொடுமையைச் சகிப்பது மிகவும் கஷ்டந்தான். தன் தமையன் முகத்தில் இவ்விசனத்தைக் கண்ட குமுதினி மிக வருந்தினாள். ஏதோ தெய்வம் நல்ல வழி காண்பித்திருக்கையில், அண்ணா அதுபற்றித் தயங்கு வதற்குக் காரணம் அவளுக்குத் தெரியவில்லை. விவாக விஷயத்தில் தன்னுடைய விருப்பத்தை அறிய வேண்டு

மென்ற எண்ணமே குமுதத்திற்கு உண்டாகவில்லை. சிறுவயதுமுதல் தன்னுடைய நான்கு சகோதரிகளும் ஒவ்வொருவராய் மணம்புரிந்துகொண்டதை அவள் பார்த்திருக்கிறாள். நல்ல குலத்தில் வாழ்க்கைப்படுவதைத் தவிர அவர்கள் விரும்பினது வேறு எதுவுமில்லை. 'விவாகத்தில் குலத்தின் மேன்மை தவிர வேறு ஏதாகிலும் தேவையோ? ஏதோ குழந்தை குட்டிகளைப் பெற்றுக் கொண்டு அவர்கள் சுகமாக இருக்கிறார்கள். கஷ்ட நிஷ்டூரங்கள் ஏற்பட்டால் பொறுத்துக்கொள்கிறார்கள். அவ்வண்ணம் பொறுக்காமல் வேறு என்ன செய்வது? தாயாருக்கு நல்ல பிள்ளையும் பிறக்கிறான்; கெட்ட பிள்ளையும் பிறக்கிறான். அதற்காக அவள் என்ன செய்யமுடியும்? வேண்டாத பிள்ளை யென்று ஒதுக்க முடியுமா? அவள் பிள்ளை அவளைச் சேர்ந்தவன். அதேவிதம் நம் விதிபலத்தால் எவ்விதக் கணவன் கிடைக்கப் பிராப்தியோ அவ்விதமே கிடைக்கும். நம் இஷ்டப்படி பொறுக்கி எடுத்துக்கொள்வதற்கு பிரமன் கடைகிடை ஏதாவது வைத்திருக்கிறானு என்ன! அவர் எவ்விதமிருந்தாலும் நாம் அவரை அங்கீகரிக்க வேண்டியதே' என்பது குமுதினியின் கொள்கை.

இவ்வளவு நாட்கள்கழித்துக் குமுதத்தின் துர்ப்பாக்ய மென்ற பரந்தவெளியைக் கடந்து அவளை வரிக்க அரசகுமாரன் வந்துவிட்டான். அவன் வருகிற தேர்ச் சக்கரத்தின் சப்தம் குமுதத்தின் இதயத்தில் எதிரொலித்தது. அவ்வரசபுத்திரனின் வெளித்தோற்றத்தைப்பற்றி அவளுக்குச் சிந்தனையே இல்லை.

விரைவில் தன்னறைக்குள் சென்று பஞ்சாங்கத்தை எடுத்துப் பார்த்தாள். அன்று மனோரதத்விதியை என்று

போட்டிருந்தது. வீட்டில் வேலை செய்பவர்களில் பிராமணர்களாயிருப்பவரைக் கூப்பிட்டு அன்னமிட்டுத் தன் சக்திக்குக் கூடியவரை தக்ஷிணையும் கொடுத்தாள். அவர்கள், "சம்பத்தும் சந்தானமும் நிறைந்தவளாய் ராணியாய் விளங்குவாய்!" என்று ஆசீர்வதித்தார்கள்.

விப்ரதாஸிடம் தரகன் மறுமுறை வந்தான். இம்முறை விப்ரதாஸால் அவ்வளவு தீர்மானமாய் விடை சொல்லமுடியவில்லை; 'இவ்வளவு நல்ல இடத்தை எவ்விதம் விடுவது? குமுதத்திற்கு இது பொருந்தாது என்று எவ்விதம் நிச்சயமாய்ச் சொல்ல முடியும்?' என்று நினைத்து, "இரண்டு நாளில் வா, பதில் சொல்கிறேன்" என்றான்.

---

## 11

சந்தியாகாலம். மேகத்தினுலும், மழையினுலும் இருள் சூழ்ந்திருந்தது. குமுதினியின் அறையில் அதிகப் பண்டங்கள் இல்லை. ஒருபக்கம் ஒரு சிறிய கட்டில், மற்றொருபுறம் கொடியில் இரண்டு புடவைகளும் சம்பக வர்ணச்சவுக்கம் ஒன்றும் தொங்கிக்கொண்டிருந்தன. மூலையில் ஒரு மரப்பெட்டியில் அவள் வஸ்திரங்கள் இருந்தன. கட்டிலுக்குக் கீழே ஒரு பச்சைவர்ண வெற்றிலைப் பெட்டியும், சீப்பு முதலிய சமான்களடங்கிய மற்றொரு கைப் பெட்டியு மிருந்தன. சுவரிலிருந்த ஓர் அலமாரியில் சில புத்தகங்கள், பேனு, மைக்கூடு, அம்மா தன்கையாலேயே பின்னிக்கொடுத்ததும் அப்பா உபயோகித்துவந்ததுமாகிய ஜோடு முதலியவை; கட்டிலின் தலைப்புறம் ராதாகிருஷ்ணனின் படம் ஒன்று; சுவரின் மூலையில் இவளுடைய 'எஸ்ராஜ்' வாத்தியம் சாய்த்துவைக்கப்பட்டிருந்தது.

அறையில் இன்னும் விளக்கு ஏற்றவில்லை. பெட்டியின்மேல் உட்கார்ந்து அவள் ஜன்னல்வழியாய் வெளிப் புறம் நோக்கிக்கொண்டிருந்தாள். ஏதோ கட்டிடங்களின் களேபரமான கல்கத்தா ஆதிகாலத்துக் கடினதேகம் படைத்த ஒரு பெரிய பிராணியை போல் கொட்டும் மழைத்திரை மூலமாக மங்கலாகத் தோற்றியது. நடுவே நடுவே பளிச் பளிச் என்று மின்னல். குமுதத்தின் மனம் அச்சமயம் இனி ஏற்படப்போகும் நிலைமையைப்பற்றிச் சிந்தையில் ஆழ்ந்திருந்தது. அவள் காணும் கற்பனை யுலகில் எல்லாவிஷயமும் அவளுக்குகந்தமாதிரி இருந்தன. தான் அங்கே சதியாகவும் கிருஹலக்ஷ்மியாகவும் இருப்பதைக் கண்டாள். அங்கே தான் செய்யும் பூஜை, பக்தி, சேவை, எவ்வளவோ! அவள் தாயின் புண்ய சரித்திரத்திலும் ஓரிடத்தில் பெரும் பிளவு ஏற்பட்டுவிட்டது. அது கணவன் செய்த ஓர் தவறினால் அவள் சிறிது நேரம் பொறுமையை இழந்திருந்ததே. ஆனால் குமுதினி தான் அத்தகைய பிழைக்கு ஒருகாலும் காரணமாக இருக்க நேராது என்று நிச்சயமாக எண்ணினாள்.

விப்ரதாஸின் காலடிச் சப்தம் கேட்டுக் குமுதம் திடுக்கிட்டாள். அவனைப் பார்த்துவிட்டு, "விளக்கு ஏற்றட்டுமா, அண்ணா?" என்று கேட்டாள்.

"வேண்டாம் குமுதம். அவசியமில்லை" என்று சொல்லி விப்ரதாஸ் பெட்டியின்மேல் குமுதத்தின் பக்கத்தில் உட்கார்ந்தான். குமுதம் சட்டென்றுக் கீழிறங்கி அவன் காலடியில் உட்காந்து அவன் கால்களைக் கையால் தடவின வண்ணம் இருந்தாள்.

"என்னைப் பார்ப்பதற்கு யாரோ வந்திருந்தார்கள். அதனாலேயே உனக்குச் சொல்லியனுப்பவில்லை. இவ்வளவு

நேரம் தனியாகவா உட்கார்ந்திருந்தாய்?" என்று விப்ர தாஸ் கேட்டான்.

குமுதம் வெட்கி, "இல்லை, க்ஷேமா அத்தை நிரம்ப நாழியாய் இங்கே உட்கார்ந்திருந்தாள்" என்று சொல்லி விட்டுப் பேச்சை மாற்றுவதற்காக, "யார் வந்திருந்தார் அண்ணு? என்று கேட்டாள்.

"அதை உன்னிடம் சொல்வதற்கே நான் வந்தேன். வருகிற ஆனிமாதத்தில் உனக்குப் பதினெட்டு நிரம்பிப் பத்தொன்பதாம் வயது ஆரம்பமாகவில்லையா?"

"ஆமாம் அண்ணு, அதனுல் என்ன தோஷம்?"

"தோஷம் ஒன்றுமில்லை. இன்று நீலமணி கடகன் வந்தான். அம்மா, குமு! என்னிடம் ஒன்றும் வெட்கப் படாமல் சொல்லு. அப்பா இருக்கும்போது உனக்குப் பத்துவயது. உனக்குக் கலியாணம் நிச்சயிக்கப்பட் டிருந்தது. அது நடந்திருந்தால் உன் இஷ்டத்தை ஒரு வரும் கேட்டிருக்கமாட்டார்கள். ஆனுல் என்னுல் அவ் விதம் இருக்கமுடியாது. ராஜா மதுசூதனரின் பெயரை நீ கேட்டிருப்பாய். குலமும் நல்லதே. ஆனுல் வயதில் உனக்கும் அவருக்கும் அதிக வித்யாசம் இருக்கிறது. என்னுல் இதற்குச் சம்மதிக்கமுடியவில்லை. இருந்தும் உன் வாயால் ஒருமுறை கேட்டுவிட்டுத் தீர்மானமாய்ச் சொல்லலா மென்றிருக்கிறேன். என்னிடம் வெட்கப் படாமல் சொல்லு, குமுதம்!"

"இல்லை வெட்கப்படவில்லை" என்று சொல்லிக் குமுதம் சற்று மௌனமாயிருந்தாள். பிறகு, "நீ சொல் கிறவருடன் என் பாந்தவ்யம் முன்பே தீர்மானமாய் விட்டது" என்றுள். இது அன்று தாகனின் பேச்சைக்

கேட்டபின் அவள் உள்ளத்தில் எவ்வாறோ ஏற்பட்ட ஒரு தீர்மானம்.

விப்ரதாஸ் மிக்க வியப்புடன், "என்ன, குமுதம்! எவ் விதம் நிச்சயமாயிற்று?" என்று கேட்டான்.

குமுதம் மௌனமாயிருந்தாள்.

விப்ரதாஸ் அவள் தலையை ஆதரவுடன் தடவிக் கொடுத்து, "விளையாட்டுத்தனமாகச் சொல்லாதே, குமுதம்!" என்றான்.

"உனக்குப் புரியாது, அண்ணா. நான் விளையாட்டுத் தனமாகச் சொல்லவே இல்லை."

அவளுக்குத் தமையனிடம் அளவிலா அன்பு இருந் தது. ஆனால் அண்ணாமட்டும் தெய்வ சங்கற்பங்களை நம்புவதில்லை. இந்த ஒரு விஷயத்தில்தான் அண்ணா மயங்கிய திருஷ்டி உடையவன் என்று குமுதினி அறிவாள்.

"அவரை நீ பார்த்ததில்லையே?" என்று விப்ரதாஸ் கேட்டான்.

"இல்லை. இருந்தாலும் நான் நிச்சயம் செய்து விட்டேன்."

இந்த விஷயத்தில் தனக்கும் அவளுக்கும் அதிக வித்யாசமுண்டு என்று விப்ரதாஸ் அறிவான். குமுதினியின் மனத்திலுள்ள இந்த இருண்ட பாகத்தில் பிரவேசிக்க விப்ர தாஸுக்கு ஸாத்யமில்லை. இருந்தும் அவன் மறுபடி ஒரு முறை; "இதோபார், குமுதம்! ஆயுள் முழுவதும் அநு பவிக்க வேண்டிய விஷயத்தைப்பற்றி ஏதாவது சட்டென்று விளையாட்டுத்தனமாகச் சொல்லிவிடாதே" என்றான்.

குமுதம் விசனமடைந்தவளாய், "இது விளையாட் டல்ல, அண்ணா; விளையாட்டல்ல. இதோ உன் காலைத் தொட்டுச் சொல்கிறேன். அவரைத் தவிர வேறு

எவரையும் நான் விவாகம் செய்துகொள்ளமாட்டேன்" என்று தீர்மானமாய்ச் சொல்லிவிட்டாள்.

விப்ரதாஸ் பிரமித்தான். கார்யத்திற்கும் காரணத்திற்கும் ஒற்றுமையில்லாத இடத்தில் எவ்விதம் எதைக் கொண்டு தீர்ந்து தெளிவது? அமாவாஸையுடன் போராட முடியுமா? ஏதோ ஒரு தெய்வசங்கேதம் பெற்றுத்தான் குமுதம் தன் மனத்தில் இந்த உறுதிகொண்டிருக்கிறு ளென்று உணர்ந்தான் விப்ரதாஸ். அது வாஸ்தவமே. இன்றுகாலையில் அவள் தன் மனதிற்குள், "இப்புஷ்பங்களை ஜோடி ஜோடியாகத் தொடுத்துவைக்கிறேன். கடைசியில் மிகுந்திருக்கும் ஒரு புஷ்பம் பகவானின் நீலத் திருமேனியை ஒத்த வர்ணமானதாயிருந்தால், இந்த விவாகம் பகவானுக்குச் சம்மதம் என்றே அறிவேன்" என்று சொல்லிப் புஷ்பங்களைத் தொடுத்தாள். கடைசியில் மிகுதியான புஷ்பம் ஓர் நீல அபராஜிதமே!

அருகிலிருந்த ஒரு பிராம்மணர் வீட்டிலிருந்து சந்தியாகால ஆராதனையின் மணி ஓசை கேட்டது. குமுதம் கைகளைக் கூப்பி நமஸ்கரித்தாள். விப்ரதாஸ் வெகுநேரம் வரையில் அங்கேயே உட்கார்ந்திருந்தான். நடுவில் நடுவில் மின்னலுடன் ஓயாமல் மழை கொட்டிக்கொண்டிருந்தது.

---

## 12

விப்ரதாஸ் மீளவும் இரண்டொரு முறை குமுதினிக்கு விஷயங்களைச் சரிவர உணர்த்த முயன்றான். குமுதம் ஒரு பதிலுமே சொல்லாமல் தலைகுனிந்து உட்கார்ந்திருந்தாள். விவாகம் நிச்சயிக்கப்பட்டது. ஒரே ஒரு விஷயத்தில் மட்டும் இருதிறத்தாருக்கும் கொஞ்சம் பேச்சு எற்பட்டது: விவாகம் எங்கே நடைபெறுவது? கல்கத்தாவில்

செய்யவேண்டுமென்பது விப்ரதாஸின் விருப்பம். நார் நகரத்தில் நடக்கவேண்டுமென்று மதுசூதனன் நிர்ப்பந்தித்தான். அவன் சொன்னவிதமே கடைசியில் முடிவு செய்யப்பட்டது.

விவாகத்திற்கு ஏற்பாடுகள் செய்வதற்காகக் கொஞ்ச நாள் முன்னதாகவே நார்நகரம் வரவேண்டியதாயிருந்தது. வைகாசி, ஆனி மாதங்களின் வெயிலுக்குப்பின் ஆடிமாதம் மழைபெய்ததும் பூமி பார்வைக்கு ஓர் பசுமையைப் பெறுவது போல் குமுதினியின் உள்ளும் புறமும் ஓர் புத்துயிர் பெற்று விளங்கலாயிற்று. தன் மனத்தில் வரிக்கப்பட்டவருடன்கூடப் போகும் ஆநந்தத்தால் அவள் இரவும் பகலும் புளகிதமானுள். சரத்காலத்துப் பொன்னிறமான ஒளி அவளோடு, என்றும் இயற்கையின் மனதில் திகழும் ஓர் அபூர்வ ரகஸியத்தைக் கூறுவது போலிருந்தது. தன் படுக்கை அறைக்கு வெளித் தாழ்வாரத்தில் அவள் தானியங்களை இரைத்து வைத்திருப்பாள். பறவைகள் வந்து அவற்றைப் பொறுக்கும். ரொட்டித் துண்டுகளைப் போடுவாள். அணில் வந்து சஞ்சலமான கண்களுடன் நான்குபுறமும் பார்த்துவிட்டு வேகமாய் வந்து வாலில் உட்கார்ந்து முன்னங்கால்கள் இரண்டினுலும் ரொட்டியை எடுத்துச் சாப்பிடும். குமுதினி மறைவில் உட்கார்ந்து அதை ஆநந்தத்துடன் பார்த்துக் கொண்டிருப்பாள்.

எல்லா ஜீவராசிகளிடத்தும் அவளுக்கு அநுதாபம் இன்று நிறைந்திருந்தது. மாலையில் குளிக்குங்கால் குளத்தில் கழுத்தளவு ஜலத்தில் அமர்ந்து அசைவற்று உட்கார்ந்திருப்பாள். அப்பொழுது ஜலராசிகள் அவள் சரீரத்தின்மேல் அலம்பியவண்ணம் ஒவ்வோர் அவயவத்துடன்

பேசுவது போல் இருந்தன. அஸ்தமனமடைந்த சூரியனின் சாய்ந்த கிரணங்கள் கிச்சிலிமரத்தின் கிளைகளின் இடுக்கு வழியாக வந்து கருமையான நீரின்மேல் பட்டு உரைகல்லில் வரையப்பட்ட தங்கரேகைபோல் பிரகாசிக்கும். அதை நோக்குகையில் அந்த ஒளியும் நிழலும் சேர்ந்து அவளுள்ளத்தில் வர்ணிக்க முடியாத ஓர் உணர்ச்சியை உண்டாக்கும். மத்தியானசமயம், மாடியிலிருக்கும் ஓர் சிறிய அறையில் தனியாய்ப் போய் உட்காருவாள். அருகிலிருக்கும் நாவல்மரத்திலிருந்து புறு கூவுவது காதில் பட்டுக்கொண்டிருக்கும். அவளுடைய யௌவனம் என்னும் ஆலயத்தில் கோயில் கொண்ட தெய்வவடிவம் வெறும் கற்பனை ரூபமாகவே இருந்தது. கிருஷ்ணன் ராதை இருவர் சேர்ந்த வடிவழகு அவள் உள்ளத்தில் இன்று ஒரு மாதுர்யத்தை விளைவித்தது.

மாடியில் உட்கார்ந்து 'எஸ்ராஜ்' வாத்யத்தைக் கையிலெடுத்து மீட்டிக்கொண்டு மெதுவாய்த் தன் தமையன் சொல்லிக்கொடுத்த பாட்டைப் பாடுவாள்.

"என்னுயிரன்பன் என் அகம் புகுந்தான்
என்னே புளகம் எழுந்ததடி!"

இரவில் படுக்கும்போது ஒரு நமஸ்காரம் செய்வாள். காலையில் எழுந்ததும் மறுபடி கும்பிடுவாள். யாருக்குக் கும்பிடுகிறுளென்பது தெளிவாய்த் தெரியாது. அது யாரையும் குறிக்காத, தானுகப் பொங்கி எழும் பக்தியின் ஆர்வம்.

ஆனுல் மனத்தில் அமைந்த பிரதிமையின் கோயிலை என்றும் அடைத்துவைத்திருக்க முடியாது. தன்னுள்ளேயே பெருமூச்சுவிட்டு அநுபவிக்கும் ஏக்கத்தின் தாபத்தை எத்தனைநாள்வரை இந்த மனோதெய்வம்

வெளிவராமல் சகித்துக்கொள்ளும்! அப்பொழுது அதை வழிபடும் பக்தனின் வேதனை சொல்லத்தரமன்று.

ஒருதினம் இவர்கள் வீட்டிற்கு வந்த பாட்டி ஒருத்தி குமுதத்தின் எதிரில், "நம் குமுதத்தின் அதிர்ஷ்டத்தைத்தான் பார்! ராஜாமாதிரி வரன் கிடைத்திருக்கிறான்! ரஜப்பூரிலிருந்த குமாஸ்தா ஆநந்தனை எனக்கு நன்றாய்த் தெரியும். அவன் பிள்ளைதான் இவன். தேசத்தில் பஞ்சம் வந்தபோது எங்கிருந்தோ அரிசிகொண்டுவந்து விற்றான். அந்தச் சம்பாத்தியந்தான் இவ்வளவு தூரம் கொண்டு வந்துவிட்டிருக்கிறது. அவள் தாயார் கிழவி என்னவோ சாகிறவரையில் தன் கையாலேயே சமைத்துச் சாப்பிட்டாள்" என்றாள்.

வேறு சில பெண்கள் அந்தப் பாட்டியைச் சூழ்ந்து கொண்டு, "மாப்பிள்ளையை உனக்குத் தெரியுமா?" என்று கேட்டார்கள்.

"தெரியாமலென்ன! அவன் அம்மா எங்கள் ஊர்ப் பெண். புரோகிதர் சக்கரவர்த்தி ஸ்வாமி வீட்டுப்பெண். (குரலைத் தாழ்த்திக்கொண்டு) நல்ல குடும்பத்தார் அவர் வீட்டில் சம்பந்தம் வைத்துக்கொள்ளமாட்டார்கள். ஆனால் ஸ்ரீதேவி ஜாதி குலம் பார்த்தா வருகிறாள்!" என்று மேலும் விஸ்தரித்தாள் பாட்டி.

குமுதினிக்கு இவ்விதப் புதுக்காலத்திய எண்ணங்கள் கிடையாது. ஜாதி குலத்தின் தூய்மை மிக மேன்மையானவையென்பது அவள் எண்ணம். ஆகையால் இவ்வார்த்தையைக் கேட்ட சமயம் அவள் மனம் எவ்வளவு சங்கோசமடைந்ததோ அவ்வளவுக் கவ்வளவு அவ்விதம் குற்றம் சொன்னவர்கள்மேல் கோபமும் உண்டாயிற்று. சட்டென்று அழுதவண்ணம் அவ்விடம் விட்டு எழுந்து

சென்றாள். அதைக் கண்டு மற்றவர்கள் ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்து, "அடேயப்பா! இப்போது முதல் இவ்வளவா! தக்ஷன் யாகத்தில் கோபித்த சதியைக் கூடத் தோல்வியுறச் செய்வாள் போலிருக்கிறதே!" என்று சொல்லிக்கொண்டார்கள்.

விப்ரதாஸின் மனப்பாங்கு குமுதினியைப் போன்றதல்ல; இருந்தும் அவன் தன்னால் கூடியவரை ஜாதி குலம் தாழ்மை என்ற பேச்சு வெளியே பரவாதவண்ணம் அடக்க முயன்றான். கிழிந்த தலையணையை அழுத்தினால் அதிலுள்ள பஞ்சு இன்னும் அதிகம் வெளிக் கிளம்புவது போல இந்தப் பேச்சும் பரவலாயிற்று.

---

# 13

கார்த்திகை மாதம் விவாகம். ஐப்பசி மாதம் சுக்ல பட்சத்துப் பஞ்சமியன்று லக்ஷ்மி பூஜை நடந்தது. (வங்காளிகள் ஐப்பசி மாதம் சுக்லபட்ச வியாழக்கிழமையில் லக்ஷ்மிபூஜை செய்வது வழக்கம்.) சப்தமி யன்று ஏராளமான சாமான்களை எடுத்துக்கொண்டு கோஷால கம்பெனி இன்ஜினீரிங் டிபார்ட்மெண்டிலிருந்து ஓவர்ஸியர் வந்தார். கூலிக்காரர்களும் கூடவே வந்தனர். செயா குலியில் கோஷாலகுளத்தின் கரையில் கூடாரம் அடித்துக் கொண்டு சம்பந்திகள் விவாகத்துக்குக் கொஞ்சநாள் முன்பாகவே இங்குவந்து தங்கியிருக்கப் போவதாய்த் தெரியவந்தது.

இதென்ன பேச்சு!

"அவர்கள் எவ்வளவு பேர்கள் வேண்டுமானாலும் வரட்டும். எவ்வளவு நாட்கள் தங்கியிருக்க விருப்பமிருந்தாலும் தங்கியிருக்கட்டும். நாங்களே எல்லா ஏற்பாடும்

செய்துகொடுக்கிறோம். கூடாரம் அடிப்பானேன்? எங்களுடைய மற்றொரு வீட்டைக் காலி செய்து கொடுக்கிறோம்" என்று விப்ரதாஸ் சொன்னான்.

"ராஜா பகதூரின் உத்தரவு. குளத்தைச் சுற்றின புதர்களைச் சுத்தம் செய்யவும் உத்தரவிட்டிருக்கிறார். தாங்கள் ஜமீன்தாராகையால் இதற்குத் தங்கள் அநுமதியை அளிக்க வேண்டும்" என்று ஓவர்ஸீயர் சொன்னார்.

விப்ரதாஸிற்கு முகம் சிவந்தது; "இந்தக் காரியம் தகுமா? சுத்தம் செய்ய வேண்டியதை நாங்கள் செய்கிறோமே" என்றான்.

ஓவர்ஸீயர் விநயத்துடன், "ராஜா பகதூரின் முன்னோர்கள் இங்கே வசித்தார்கள். அதனால் இதைத் தாமே சுத்தம் செய்து இங்கே வந்து தங்கியிருக்க வேண்டுமென்று அவருக்கு ஓர் அபிலாஷை" என்றார்.

இதில் ஒன்றும் தவறில்லை. ஆனால் விப்ரதாஸைச் சேர்ந்தவர்களுக்கு அது சிறிதும் பிடிக்கவில்லை. "எங்கள் எஜமானருக்குமேல் உயர்வாக இருக்கவேண்டுமென்று அல்லவா இவர்கள் பார்க்கிறார்கள். திடீரென்று கிடைத்த சொத்து. அதை டமாரம் அடித்து எல்லாருக்கும் காண்பிக்க வருகிறார்கள். முன்காலமாயிருந்தால் மாப்பிள்ளையையும் அவர் பல்லக்கையும் யமலோகத்திற்கே அனுப்பியிருப்போம். சின்ன எஜமானர் இருந்தால்கூட இதைப் பொறுத்திருக்கமாட்டார். இவரும் இவர் கூடாரமும் எந்தக்கதியை அடையுமென்று அப்போது தெரியும்" என்று பிரஜைகள் சொல்லிக்கொண்டார்கள்.

குடிகள் விப்ரதாஸிடம் வந்து, "எஜமானே! அவர்களுக்குக் குறைவாக நாம் இருக்கக் கூடாது. என்ன

செலவு ஏற்பட்டாலும் நாங்கள் வகித்துக்கொள்கிறோம்" என்றனர்.

விப்ரதாஸிற்குத் தாயாதியான நவகோபாலன் வந்து, "குடும்பத்திற்கு அவமானம் ஏற்படக்கூடாது. நம் முன்னோர் கோஷால குடும்பத்தையே ஓடச் செய்த காலம் போச்சு. இப்போது நம் ஊரில் வந்து அவர்கள் பணக்கிறுக்கைக் காண்பிக்கப் பார்க்கிறார்கள். இவர்களுக்கு நாம் பயப்படுவானேன், பெரியண்ணா! எவ்வளவு செலவு ஏற்பட்டாலும் சரி, நாங்கள் இருக்கிறோம்" என்றான்.

இவ்விதம் சொல்லி நவகோபாலன் தன்னைத் தானே எல்லாவற்றையும் மேற்பார்வை இடுபவனாய் நியமித்துக் கொண்டான்.

விப்ரதாஸ் சில தினங்களாய்க் குமுதத்துக்கு அருகில் வரவில்லை. அவளை எவ்விதம் பார்ப்பது? குமுதத்தின் எதிரில் சம்பந்திகளைப்பற்றித் தூறுதல் சொல்லக்கூடாதென்ற எண்ணமாகிலும் மரியாதையாகிலும் மற்றவர்களுக்கு இல்லை. எல்லாப் பெண்களுக்கும் குமுதினியின்மேலேயே கோபமுண்டாயிற்று. அவளாலல்லவோ இவ்வித அவமானமெல்லாம் நேரிடுகிறது என்பதே அவர்கள் எண்ணம்.

ஜாதி குலம் தாழ்மை என்ற வார்த்தையைத் தன் மனதிலிருந்த பக்தியால் குமுதம் ஒருவாறு ஒதுக்கி வைத்திருந்தாள். ஆனால் பணத்தின் பெருமையால் தன் வேட்டகத்தார்களைத் தாழ்மைப்படுத்த வேண்டுமென்ற அற்பகுணத்தைக் கண்டு அவள் மனம் வாடிக் குன்றிற்று. அவள் பிறர் எதிரில் வருவதற்கே சங்கோசப்பட்டாள். கோஷால குடும்பத்தின் அவமானம் இன்று இவளுடைய

அவமானமாயிற்று. அண்ணாவாயிலிருந்து ஒரு தைர்ய வார்த்தை பெற அவள் உள்ளம் துடித்தது. ஆனால் அவன் இப்போதெல்லாம் இவள் கண்களில் தென்படுவதே யில்லை. சாப்பிடுவதற்குக்கூட உள்ளே வருவதில்லை.

ஒரு தினம் விப்ரதாஸ் பட்சணங்கள் செய்வதற்கு இடம் ஏற்படுத்துவதற்காகப் பின்புறம் தோட்டத்திற்கு வந்தான். அங்கே குளப்படிக்கட்டில் தலைகுனிந்து தண்ணீரை நோக்கிய வண்ணம் குமுதினி உட்கார்ந்திருப்பதைப் பார்த்தான். இவனைக் கண்டதும் அவள் சட்டென்று எழுந்துவந்தாள். வரும்போதே, "அண்ணா! எனக்கு ஒன்றும் புரியவில்லையே" என்று சொல்லித் தலைப்பினால் முகத்தை மூடிக்கொண்டு ஓவென்று அழ ஆரம்பித்தாள்.

அவன் அவள் முதுகில் தடவிக்கொடுத்தவண்ணம், "ஜனங்கள் சொல்வதையெல்லாம் காதில் போட்டுக் கொள்ளாதே யம்மா!" என்றான்.

"ஆனால் அவர்கள் இம்மாதிரியெல்லாம் செய்வானேன். இவையெல்லாம் உங்களுக்குத் தலையிரக்கந்தானே?" என்று குமுதினி கேட்டாள்.

"அவர்கள் கட்சியையும் ஆலோசித்துப் பார், குமுதம். முன்னோர்களின் கிராமத்திற்கு வருகிறார்கள். கொஞ்சம் ஆடம்பரம் இருப்பது சகஜந்தானே? கலியாண விஷயத்திற்கும் இதற்கும் சம்பந்தம் இல்லை."

குமுதம் மௌனமாயிருந்தாள். விப்ரதாஸால் பொறுக்க முடியவில்லை. "உன் மனதில் இஷ்டமில்லாவிடில் சொல்லிவிடு. இப்போதே கலியாணத்தை நிறுத்தி விடுகிறேன்" என்றான்.

குமுதினி வேகமாய்த் தலையை யசைத்து ஆட்டிவிட்டு, "'சே, அதென்ன காரியம்!" என்று சொல்லிவிட்டாள்.

பகவானெதிரில் அவ்விருவருக்கும் முடி போட்டாய் விட்டது. மிகுதியெல்லாம் சத்தியத்திற்கு முக்கியமில்லாத வெளி விஷயங்களே.

இவ்வித உறுதி விப்ரதாஸின் தற்கால மனத்தைக் கூட அசக்கிவிட்டது.

"இரு திறத்தாருடைய மேன்மையும் ஒத்திருந்தாலே விவாக பந்தனம் உண்மையானதாகும். வாசிப்பவன் அப் ஸ்வரமாக வாசித்தால் சுருதி கூட்டின "எஸ்ராஜ்" என்ன பண்ணும்? புராணங்களில் பார்க்கலாம். சீதை எவ்விதமோ அவ்விதமே ராமரும் இருந்தார். மஹாதேவருக்கு தகுந்தவள் உமாதேவி. அருந்ததி எவ்விதமோ அவ்விதமே வஸிஷ்டரும். இக்காலத்தில் புருஷர்களிடம் தூய்மை இல்லை. ஆனால் பெண்களின் பதிவ்ரதாத்தன்மையைப் பற்றி மாத்திரம் பேச்சு அதிகமாயிருக்கிறது. சீலம் என்னும் எண்ணெய் இல்லாமல் வற்றின தற்கால வாழ்வென்னும் தீபத்தில் சதித்வம் என்னும் திரியை மட்டும் எரியவிட்டால் உயிர் எரிந்து எரிந்து கனிந்து கரியாகி விடுகிறது" என்று அவன் சொன்னான்.

இதைக் குமுதத்தினிடம் சொல்வது வியர்த்தம். இப்போது முதலே அவள் தன் மனத்திற்குள், "அவர் நல்லவரானாலும் சரி, கெட்டவரானாலும் சரி; அவரே என் பரமகதி" என்று ஜபிக்கலானாள்.

दुःखेष्वनुद्विग्नमना सुखेषु विगतस्पृहः ।
वीतरागभयक्रोधः—

என்ற கீதையின் மொழி யோகிகளுக்குத் தர்மவழியை காண்பிப்பது மாத்திரமல்ல. சதிகள் பின்பற்றவேண்டிய

முறையையும அது போதிக்கிறது. ஒரு சதியின் கடமை இன்பதுன்பங்களை மீறினது. அதில் குரோதத்திற்கு மிட மில்லை; பயத்திற்கும் இடமில்லை. பற்றுக்கு மாத்திரம் என்ன அவசியம்? பற்றைவிட பக்தியே மேற்பட்டது. நாம் பற்றுவைப்போரிடமிருந்து நாம் சில பிரதியுபகாரங் களை விரும்புகிறோம்; நாமும் அவர்களுக்குத் தொண் டைச் செய்கிறோம். ஆனால் பக்தி என்ற உணர்ச்சியானது தான் எல்லாவற்றையும் அளிப்பதைத் தவிர, பதிலுக்கு ஒன்றையும் எதிர்பார்ப்பதில்லை. அவ்விதமே பக்தியுடன் பணிசெய்யும் பதிவ்ரதையின் வழி பற்றற்றது. மது சூதனர் என்ற பெயர் பூண்டவரிடம் தோஷங்கள் இருக்க லாம். ஆனால் பக்திக்கு லக்ஷியமாகச் செய்யப்பட்ட "கணவன்" என்ற பொருள் எக்காலத்தும் மாற்றுக் குன்றாதது. தியான ஸ்வரூபமான ஓர் அப்பொருளுக்குக் குமுதினி ஏகாக்ரசித்தத்துடன் தன்னை அர்ப்பணம் செய்துகொண்டாள்.

---

## 14

கோஷால குளத்தைச் சுற்றியிருந்த காடு சுத்தம் செய் யப்பட்டு அடையாளம் தெரியாமல் மாறிவிட்டது. பூமி சமதளமாய்ச் செய்யப்பட்டு, நடுவில் நடுவில் கப்பிக்கற்கள் போட்ட சிவந்த பாதைகளும் அதன் இருபுறங்களில் தோரணக்கம்பங்களும் அமைக்கப்பட்டன. குளத்தின் பாசி, நாணல் எல்லாம் வெளியிலெடுத்து அப்புறப்படுத் தப்பெற்றன. கரையோரத்தில் அயல் நாட்டிலிருந்து புதிதாகத் தருவித்த 'மதுமதி' 'மதுகரி' என்று பெயர்கள் எழுதப்பட்ட இரண்டு சிறிய படகுகள் இருந்தன. ராஜா

பகதூர் தங்குவதற்காக அமைக்கப்பட்ட கூடாரத்தின் முன்னால் மஞ்சள் பட்டுத்திரையில் சிவப்புவர்ணத்தில் 'மதுசக்கரம்' என்று எழுதப்பட்டிருந்தது. ஒரு கூடாரம் அந்தப்புர ஸ்திரீகளுக் கென்று பிரத்யேகமாக அமைக்கப்பட்டு அதிலிருந்து குளத்துத்தண்ணீர்வரை பந்தல் போட்டு இருபுறமும் மறைக்கப்பட்டிருந்தது. குளத்தின் அருகிலிருந்த பெரிய வேப்பமரத்தில், 'மதுசாகரம்' என்று எழுதப்பட்ட ஒரு பலகை தொங்கிக்கொண்டிருந்தது. ஆங்காங்குப் புஷ்பத்தொட்டிகள் வைத்து அலங்கரிக்கப்பட்ட அவ்விடத்தில் இடையில் ஒரு சிறிய குளம் இருந்தது. அதன் நடுவில் ஓர் இரும்பு வார்ப்படச் சிலை வாயிலிருந்து ஒரு சங்கின் மூலமாய்த் தண்ணீர் புஷ்பதாரைகளாய் வெளிவந்து கொட்டிக்கொண்டிருந்தது. இவ்விடத்திற்கு 'மது குஞ்சம்' என்று பெயர் வைக்கப்பட்டது. இந்தக் குளத்திற்குப் பிரவேச வாசலண்டை ஓர் இரும்புக்கதவு உண்டு. இது வர்ணம் பூசப்பட்டு, அதன் மேல் 'மதுபுரி' என்று எழுதப்பட்ட ஒரு கொடி பறந்துகொண்டிருந்தது. பல வர்ணப் படுதாக்களும், தோரணங்களும், கொடிகளும், சைனுவிளக்குகளும் தொங்கவிடப்பட்டிருந்தன. திடீரென்று தோன்றின இந்த மாயாபுரியைப் பார்க்க ஜனங்கள் திரள்திரளாக வந்தார்கள்.

மதுபுரியின் ஆடம்பரம் இணையற்றதாயிருந்தது. சாயங்கால சமயம் மரியாதைப் பீரங்கிகள் சுட்டார்கள். நேரத்தைக் காட்டத் தவறுமல் பெரிய மணி அடித்தார்கள். இடையில் தொங்கும் சீமைக் கத்தியுடன் சேவகர்கள் பாராக் கொடுத்தார்கள். இந்தப் படாடோபங்களைப் பார்த்துச் சட்டர்ஜி பரிவாரங்களுக்குள் வயிற்

றெரிச்சல் அதிகம் உண்டாயிற்று. சட்டர்ஜி வீட்டுப் பாராக்காரர்கள் தங்கள் பழைய உடையுடன் வீட்டை விட்டு வெளிவருவதற்குக்கூட வெட்கப்பட்டனர். நூர் நகர வாசிகளின் மனத்தை ஆழமாக உறுத்தி வஞ்ச மென்னும் முட்கம்பத்தின் உச்சியில் இன்று கோஷாலர் களின் வெற்றிக்கொடி பறந்தது.

விவாகம் சுபமாக முடிய இது நல்ல அறிகுறிதான்!

---

## 15

விப்ரதாஸ் நவகோபாலனைக் கூப்பிட்டு, "ஆடம்பரம் செய்பவர்களுடன் போட்டியிடுவது அற்பத்தனம்" என்றான்.

"மனிதர்களில் முக்கால் வாசிப்பேர்கள் அற்பமான வர்களே. அவர்களிடம் நம் கௌரவத்தைக் காப்பாற்றிக் கொள்ள வேண்டுமானால் நாமும் அற்பமானவர்களின் வழியில்தான் செல்ல வேண்டும்" என்று அவன் பதில் சொன்னான்.

"அவர்களோடு போட்டியிட்டு உன்னால் ஜயிக்க முடியாது. அதைவிடச் சாத்விக பாவத்துடன் காரியத்தை முடிப்பது உசிதம். தக்க பிராம்மணர்களைக் கூப்பிட்டு ஸாம வேதப்படி சடங்குகளை நடத்திவை. ராஜாக்கள் அவர்களெல்லாம்; ஆடம்பரம் செய்துகொண்டு போகட் டும். நாம் பிராம்மணர்கள். பவித்திர கரரியத்தைச் செய்ய வேண்டியது நம்கடமை" என்றான்.

"பெரியண்ணா, இது சத்யயுகம் என்று நினைத்துக் கொண்டிருக்கிறீர்களா? உங்கள் கிராமம் முழுவதற்கும் நீங்களே ராஜாவல்லவா? உங்களுக்கு எவ்வளவு குடிகள்

இருக்கிறார்கள்! உங்களுடைய 'சுவாஹா, சுவாஹா' மந்திரம் எல்லாம் அவர்களுக்குப் புரியுமா? அவர்களென்ன யாஜ்ஞவல்கியருடைய சந்ததிகளா? அவர்களுக்கு ஏமாற்றம் உண்டாக்கக் கூடாது. நீங்கள் பேசாமலிருங்கள். எல்லாம் நான் பார்த்துக்கொள்கின்றேன்."

நவகோபாலன் எல்லாருடனும் கலந்து யோசித்தான். அவர்கள் மார்பைத் தட்டிக்கொண்டு "நாங்களிருக்கையில் கவலை என்ன?" என்றார்கள். வேலையாட்கள் காவற்காரர் எல்லாரும் தத்தம் செலவிலேயே புது வேஷ்டி வாங்கிக் கட்டிக்கொண்டார்கள். பந்தற்காரன் பந்தலைப் போட்டு அலங்கரித்துவிட்டான். தாயாதிக்காரர்களிடம் நான்கு யானைகள் இருந்தன. அவைகள் அம்பாரி வைத்து அலங்கரிக்கப்பட்டு, கோஷல குளத்திற்கு எதிரில் தெருவில் டிங் டிங் என்ற மணியோசையுடன் உலாவிக்கொண்டிருந்தன.

கார்த்திகை மாதம் 27-ஆம் தேதியன்று முகூர்த்த நாள். இன்னும் பத்துத் தினங்கள் பாக்கியிருந்தன. இப்போதே ராஜா பகதூர் பரிவாரத்துடன் வருகிறாரென்ற விஷயம் தெரியவந்தது. ஆனால் அவர் தாம் வருவதைப் பற்றிச் சம்பந்திவீட்டார்களுக்குத் தெரிவிக்கவில்லை. ஒரு கால் அவ்விதம் தெரிவிக்கும் மரியாதை சாதாரண ஜனங்களுக்கே பொருந்தும், ராஜாக்களுக்கு அவசியமில்லையென்று நினைத்திருக்கலாம். அவ்விதமிருக்கத் தாங்கள் வலுவில் ஸ்டேஷனுக்குச் சென்று எதிர்கொண்டழைத்து வருவதா, அல்லது பேசாமலிருப்பதா என்று இவர்களுக்குத் தெரியவில்லை.

சொல்லாமல் வருகிறவர்களுக்குத் தக்க பதில்மரியாதை அவர்களைப் பார்க்கப் போகாமல் இருந்துவிடுவது

தான். ஆனால் அந்த மாதிரி காரியத்தில் பிடிவாதமாக நிற்க முடிகிறதா? பெண்களின் மனத்தைச் சுலபமாக நோவச் செய்து விடலாம். அவர்களுடைய நொல்பமானமனம், புண்படக்கூடியதாய் நாற்றிசையிலும் திறந்து இருக்கிறது.

கொடுமை செய்பவனிடந்தான் ஸமூகமும் பலமென்னும் சவுக்கைக் கொடுத்து இருக்கிறது. சகாயமற்றவர்களின் முதுகு நோவப்போகிறதென்று அவனுக்கு என்ன கவலை? இந்தமாதிரியான ஆத்திரம் பொங்கும் நிலைமையிலும், தன்னுடைய அருமைத் தங்கையின் மனத்தில், வீண் தோஷம், கலவரம் என்னும் புயலை மூட்டிவிட்டுத் தன் கோபத்தைத் தீர்த்துக் கொள்வது பேடித்தனமென்று விப்ரதாஸ் எண்ணினான்.

அவன் ஒருவரிடமும் ஒன்றும் சொல்லாமல் குதிரை மேல் ஏறிக்கொண்டு தூரத்திலிருக்கும் ஸ்டேஷனுக்குச் சென்றான். வண்டிவந்த சமயம் மாலை சுமார் ஐந்துமணி இருக்கும். செலூன்வண்டியிலிருந்து ராஜாபகதூர் தம் பரிவாரம் சூழ இறங்கினார். விப்ரதாஸைப் பார்த்துத் தலையைச் சற்று குனிந்து நமஸ்கரித்து விட்டு, "ஓ! நீங்கள் வந்து சிரமப்படுவானேன்?" என்றார்.

விப்ர:—நன்றாயிருக்கிறதே; முதல் முதல் எங்கள் ஊருக்கு வருகிறீர்கள்! வரவேற்கக்கூட வராமலிருப்பதா?

ராஜா:—இல்லை, உங்கள் ஊருக்கு இப்போது வரவில்லை; கல்யாணத்தன்றே உங்கள் ஊருக்கு வரப்போகிறோம்.

விப்ரதாஸ் அதை ஒப்புக்கொள்ள முடியவில்லை. ஆனால் ஸ்டேஷனில் அவ்வளவு கூட்டத்திற்கு நடுவில் அதைப்பற்றித் தர்க்கிப்பானேனென்று எண்ணி, "படித்துறையில் படகு தயாராயிருக்கிறது" என்றான்.

"அது அவசியமில்லை; எங்கள் ஸ்டீம் லாஞ்சு வந்திருக்கிறது" என்றார் ராஜா பகதூர்.

சந்தர்ப்பம் சரியாக இல்லையென்று உணர்ந்தானெனினும் விப்ரதாஸ் மேலும், "சாப்பாட்டிற்கு ஏற்பாடு ஆகியிருக்கிறது" என்றான்.

"ஏன் இவ்வளவு சிரமம் வீணாக எடுத்துக் கொண்டீர்கள்! ஒன்றும் அவசியமில்லை. நான் என் பெரியோர்களின் வாசஸ்தலத்துக்கு வந்திருக்கிறேன்; கலியாண தினத்தன்றே உங்கள் அதிதியாயிருப்பேன்."

அவர் இணங்கமாட்டாரென்று விப்ரதாஸ் உணர்ந்தான். அவன் முதுகில் ஒரு பெரிய சுமையை வைத்தமாதிரியாக இருந்தது. ஸ்டேஷனில் பிரயாணிகள் தங்கும் அறைக்குப் போய் நாற்காலியில் சாய்ந்தான். குளிர்காலம். இருள் சூழ்ந்தது. மேற்கிலிருந்து வண்டிவருவதற்காக மணி அடித்தார்கள்; ஸ்டேஷனில் விளக்கேற்றினார்கள்; எழுந்து குதிரை மீதேறி அதன் கடிவாளத்தைத் தளர்த்தி அதன் இஷ்டப்படி போகுமாறு விப்ரதாஸ் விட்டான். அவன் வீடு சேரும்போது பாதி ராத்திரி. என்ன நடந்ததென்பதை ஒருவரிடமும் சொல்லவில்லை.

அன்றிரவே குளிர் ஏற்பட்டு விப்ரதாஸிற்கு இருமல் ஆரம்பித்தது. கொஞ்சம் கொஞ்சமாக அதிகரித்தது. அலட்சியம் செய்யவே வியாதி முற்றிவிட்டது. நிர்ப்பந்தத்தின் பேரில் படுக்கையில் படுத்தான். இப்போது எல்லாப் பொறுப்பும் நவகோபாலனைச் சேர்ந்ததாயிற்று.

# 16

இரண்டு தினங்கள் கழித்து நவகோபாலன் விப்ர தாஸிடம் வந்து "இதற்கு என்ன வழி சொல்லுகிறாய்" என்று கேட்டான்.

விப்ரதாஸ் வெறுப்புற்றவனாய், "என்ன நடந்தது சொல்லு?" என்றான். "நாலைந்து வெள்ளைக்காரர்கள்—கம்பெனி புரோகர்களாட்டமிருக்கிறது - சீமாட்டிகளுடன் குடித்துவிட்டு, நேற்று பீர்புரத்தோப்பில் குறைந்த பக்ஷம் இருநூறு பறவைகளைச் சுட்டிருப்பார்கள். இன்றைக்குச் சந்தனதஹ ஏரிக்குப் போகிறார்களாம். இந்த மழைக் காலத்தில் அங்கே ஏராளமாய்ப் பக்ஷிகள் வருகின்றன. அஹிராவணன், மஹிராவணன், இடும்பி, கடோத்கசன் இவர்களுக்குப் பிண்டம் கொடுக்கிற அளவில் வதை நடக்கும்" என்றான் நவகோபாலன்.

விப்ரதாஸ் திடுக்கிட்டான். அவன் பதில் ஒன்றும் சொல்லவில்லை.

நவகோபாலன்—"அந்த ஏரியில் யாரும் பக்ஷிகளைச் சுடக் கூடாதென்று நீ உத்தரவு இட்டிருக்கிறாய். அந்தத் தடவை ஜில்லா கலெக்டர் கூடக் கெஞ்சிப்பார்த்தான். மனுஷ்யன் நல்லவன் ஆனதால் சும்மா போய்விட்டான். ஆனால் இவர்கள் கோஹத்தி, பிரம்மஹத்திகளுக்குப் பயப்படாத படைகளாயிற்றே. நீ உத்தரவு கொடுத்தால் அவர்களை அடக்கி.." என்றான்.

விப்ரதாஸ் வேதனை பூண்டவனாய், "வேண்டாம், அதெல்லாம் வேண்டாம்!" என்றான்.

புலிவேட்டையாடுவதில் விப்ரதாஸிற்கு அந்தப்பிராந்தியத்தில் நல்ல பெயர். ஒரு தரம் பக்ஷிகளைச் சுடும்போது அந்த கோரக்காட்சி அவனுக்கே பிடிக்காது போய் விட்டது. அது முதற்கொண்டு தன் ஜமீனில் யாரும்

பறவைகளைச் சுடுவதை நிறுத்திவிட்டான். தலைமாட்டண்டை உட்கார்ந்துகொண்டு குமுதினி விப்ரதாஸின் தலையைப் பிடித்துக்கொண்டிருந்தாள், நவகோபாலன் சென்றதும் ஆத்திரத்துடன் அவள், "அண்ணு, கூடாது என்று அவர்களைத் தடுத்துவிடச் சொல்" என்ருள்.

"எதைத் தடுப்பது?"

"பக்ஷிகளை நாசம் செய்வதை."

"ஐயோ! அவர்கள் வேறுவிதமாக எண்ணிக் கொள்ளுவார்கள்."

"எண்ணிக் கொள்ளட்டுமே; மான அவமானம் அவர்களுக்கு மாத்திரந்தாஞ?"

விப்ரதாஸ், குமுதினியின் அறியாமையைக் கண்டு தன்க்குள்ளேயே சிரித்துக்கொண்டான்.

தெளிவுற்று, கூடவரும் நிழலை ஒத்து, அவள் ஏகாக்ர சித்தத்துடன் தர்மத்தைத் தழுவிவரும் ஸதி என்று விப்ரதாஸிற்கும் நன்ருகத் தெரியும். பக்ஷிகள் அற்பப் பிராணிகளாஞலும், ஜீவவதையே மகாபாபமென்று குமுதினி கருதியிருந்தாள். விப்ரதாஸ் ஆதரவுடன், "கோபித்துக் கொள்ளாதே, குமுதம்! நான்கூட ஒருநாள் பக்ஷிகளைக் கொன்று இருக்கிறேன். அப்போது அது அநியாயமென்று எனக்குத் தோன்றவில்லை. இன்றைக்கு இவர்களும் இப்படித்தான்" என்ருன்.

இந்தப்பக்கம் 'மதுபுரியில்' வேட்டையும், வனபோஜனமும் சலிப்பில்லாமல் நடந்துகொண்டுதான் இருந்தன. இருட்டினதும், பாண்டுவாத்தியம் முழங்க வெள்ளையர்களின் 'டான்ஸும்' நடந்துகொண்டிருந்தது. சாயங்காலங்களில் 'டென்னிஸ்' ஆட்டம். அதைத் தவிர்த்து நதியில் பாய் விரித்தபடகுகளின் பந்தயம், கரையில்

கிராமத்து ஜனங்கள் நின்று வேடிக்கை பார்த்தனர். இரவில் சாப்பாட்டுக்குப் பிறகு (For he is a jolly good fellow) என்று வாழ்த்திக் குடியர்களின் கூச்சல். விலாஸப் பிரியர்களான இந்த வெள்ளைத்துரைகள், துரைசாணிகளின் போக்கைப் பார்த்துக் கிராமவாசிகள் திடுக்கிட்டனர். தலைக்கு 'ஸோலார்' தொப்பி அணிந்து அவர்கள் தூண்டிலில் மீன்பிடிக்கும் காட்சி வேடிக்கையாய் இருந்தது. மற்றொருபுறம், கோல் விளையாட்டு, குஸ்திச் சண்டை, படகுப்பந்தயம், தெருக்கூத்து, 'தியேட்டர் பார்டி'; அதனுடன் நான்கு யானைகளின் ஆடம்பரம் அக்காட்சியைச் சம்பிரமமாக எடுத்துக்காட்டின.

விவாகத்திற்கு இரண்டுநாள்முன்பு நிச்சயதார்த்தம். விலையுயர்ந்த நகைகளிலிருந்து, விளையாட்டுப் பொம்மை வரைக்கும் வரிசைகள் வருவதைக் கண்டு எல்லோரும் அயர்ந்துபோய்விட்டனர். அவைகளைச் சுமந்துவரும் விசித்திர வாஹனங்கள்தான் எத்தனை! சட்டர்ஜிகளும், பின் வாங்காமல் இதற்குத் தக்க பதில் மரியாதை செய்தார்கள்.

ஒரு தினம் மதுபுரிக்கு வநது சாப்பிட்டுவிட்டுப் போகும்படி ஊரார் எல்லோரும் அழைக்கப்பட்டார்கள். பெரிய விருந்திற்கு ஏற்பாடு நடக்கிறதென்று தெரியவந்தது. சாயங்காலச் சாப்பாடு. இதைக் கேட்டதும் நவகோபாலனுக்கு ஆத்திரமுண்டாயிற்று. "நாங்கள் ஜமீன்தார்கள்; இங்கே உட்காந்திருக்கிறோம். திமிரைப் பார்! அவர்களுக்கு இந்த மதுபுரி ஏற்படுத்த என்ன அதிகாரம்? என்ன துணிச்சல்?" என்று சீறினான்.

மதுபுரியில், சாப்பாட்டிற்கு வேண்டிய ஏற்பாடுகள் எல்லாருக்கும் தெரியும்படி நடந்துவந்தன. அற்பசொற்மான சப்பாடா? தயிர், பால், நெய் முதலிய வகைகளுக்

குக் குறைவே இல்லை. தித்திப்புப் பக்ஷணங்களின் வகை தான் எத்தனை! மரங்களின் கீழே 'காடி' அடுப்புக்கள் 'திகுதிகு' வென்று எரிந்துகொண்டிருந்தன. சமையலுக்காக வந்த பாத்திரங்கள் எவ்வளவோ? வண்டி வண்டியாக வந்து குவிந்த காய்கறிகளின் வகையைச் சொல்ல முடியாது. பிரகாசமான தீபவெளிச்சத்தில் அன்று இரவு பலத்த சாப்பாடு.

சட்டர்ஜி வீட்டில் அன்று மத்தியானம் எல்லாருக்கும் விருந்திட்டார்கள். குடிகள் எல்லாரும் தாங்களே எல்லா ஏற்பாடுகளையும் செய்துகொண்டார்கள். ஹிந்துக்களுக் கென்றும், முகம்மதியர்களுக் கென்றும், தனித் தனிச் சமையல். சாப்பாடு அதிக பலமாக இல்லாவிட்டாலும் சட்டர்ஜி வம்சத்துக்கு வாழ்த்து ஏராளம். நவகோபாலன் சாயந்திரம்வரை பட்டினியாயிருந்து தானே எல்லாருக்கும் சாப்பாடு செய்துவைத்தான். அப்புறம் பிச்சைக்காரருக்கும் சோறுபோட்டார்கள்.

மதுபுரியில் அன்று முழுதும் சமையல் நடந்தது. விதவிதமான பதார்த்தங்கள் தயாராயின. அதன் பரிமளம் வெகுதூரம் பரவிற்று. சாயங்காலமாயிற்று. விளக்குக்கள் ஏற்றப்பட்டன. வாத்யங்கள் வாசித்தார்கள். யமுனாகல்யாணியிலிருந்து கேதாரம்வரை எல்லா ராகத்தையும் வாசித்து முடித்தாய்விட்டது. இன்னும் போஜனத்திற்கு ஒருவரும் வரவில்லையே என்று அருகிலிருப்பவர்கள் ராஜா பகதூரிடம் குறை சொல்லிக் கொண்டே இருந்தனர். அன்றைய தினம் சந்தை. அதற்காக வேறு கிராமத்திலிருந்து வந்த சிலரே இங்கே சாப்பாட்டிற்கு வந்திருந்தனர். பிச்சைக்காரர்களும் பலர் கூடியிருந்தனர். இவ்வளவே.

மதுசூதனன் காலியாயிருக்கும் கூடாரத்திற்குள் சென்று பார்த்து விட்டு "ஹூம்!" என்றான்.

தம்பி வந்து, "அண்ணா! போதும், எல்லாம் ஆயிற்று. வா, போகலாம்" என்றான்.

"எங்கே போவது?"

"கல்கத்தா திரும்பலாம். இவர்கள் மகா துஷ்டர்கள். இவர்களைவிட எவ்வளவோ பெரிய வீட்டுப் பெண்களெல்லாம் உனக்குக் கிடைக்கும்."

மதுசூதனன் கர்ஜித்துவிட்டு, "உன்னை யார் கேட்டது? போ!" என்றான்.

நூறு வருஷங்களுக்குமுன் என்ன நடந்ததோ அதுவே இன்றும் தொடங்கிற்று. இந்தத் தடவையும் ஒரு சாரார் ஆடம்பரத்தின் சிகரத்தை உயர்த்தியிருக்கிறார்கள். மறு கக்ஷியார் அதற்குப் பின்வாங்காமல் நிற்கின்றனர். ஆனால் உண்மையில் வெற்றியோ, தோல்வியோ, வெளிக்குத் தெரியாது. உலகத்தவர் கண்களுக்கு எட்டாது. அது மறைவில் நடக்கும் விஷயம். விப்ரதாஸ் படுத்த படுக்கையாகக் கிடந்தான். இதுவிஷயம் ஒரு வார்த்தை கூட அவன் காதில் விழவில்லை.

---

## 17

விவாகதினத்தன்று மாப்பிள்ளை பெண்வீடு செல்லும் சமயம் ஊர்வலத்தில் மேளதாளம், ஆடம்பரம் ஒன்றும் கூடாது என்பது ராஜாவின் உத்தரவு. இரண்டு புரோகிதர்கள் மட்டும் கூடவந்தார்கள். பல்லக்கிலிருந்து ராஜா பகதூர் நிச்சப்தமாக வந்துஇறங்கினார். இந்தமாதிரி வருவார் என்று யாரும் எதிர்பார்க்கவில்லை. இங்கே மது

புரத்தில் எங்கும் விளக்குகள் ஏற்றப்பட்டுப் பாண்டுகள் வாசிக்கப்பட்டன. தான் செய்ததற்கு இது பதில் என்று நவகோபாலன் உணர்ந்தான்.

சம்பந்திகள் வந்ததும் அதிகம் உபசரிப்பது வழக்கம். நவகோபாலன் ஒரு வார்த்தைகூடச் சொல்லவில்லை.

குமுதினி அலங்கரித்துக்கொண்டு தயாரானாள். கலியாணமண்டபம் போகுமுன் தமயனை நமஸ்கரிக்க வந்தாள். அவள் தேகம் முழுவதும் நடுங்கிக்கொண்டிருந்தது. விப்ரதாஸிற்கு அச்சமயம் நூற்றைந்து டிக்ரீ ஜுரம். மார்பிலும், கால்களின்மேலும் கடுகு அரைத்து பற்றுப் போட்டிருந்தது. அவன் காலைப் பிடித்துக் கொண்டு குமுதம் ஓவென்று அழலானாள். க்ஷேமா அத்தை அவள் வாயை மூடி, "சீ, அசடே! இப்போது அழக்கூடாது" என்று அதட்டினாள்.

விப்ரதாஸ் எழுந்து உட்கார்ந்து குமுதத்தின் கைகளைப் பிடித்து அவளைத் தன்னருகில் அமர்த்தினான். பிறகு அவள் முகத்தைப் பார்த்தவண்ணம் சற்றே இருந்தான். அவன் கண்களில் தண்ணீர் தாரை தாரையாகப் பெருகிற்று.

"இது என்ன அபசகுனம்?" என்று அத்தை கோபித்தாள்.

விப்ரதாஸ் தன் கரத்தைக் குமுதினியின் சிரஸில் வைத்துத், தழ தழத்த குரலில் "அம்மா! பகவான் உனக்குச் சர்வசுபங்களையும் அளிப்பார்" என்று ஆசீர்வதித்துவிட்டுத் தொப்பென்று சாய்ந்தான்.

விவாகச் சடங்கின் ஆரம்பமுதல் கடைசிவரை குமுதம் கண்ணும் கண்ணீருமாக இருந்தாள். மாப்பிள்ளையின் கையில் அவள் கையை வைத்த சமயம் அவள் உடல்

முழுவதும் நடுங்கிற்று. சுபதிருஷ்டி சமயத்தில் அவள் கணவனைப் பார்த்தாளோ, என்னமோ தெரியாது. அவள் இதயத்தில் பதியினிடம் சிறிது பயம் ஏற்பட்டிருந்தது.

மதுசூதனன் பார்வைக்குக் கோரமானவனல்லன். ஆனால் மிகவும் கடினமான தோற்றமுடையவன். அவன் முகத்தைப் பார்க்குங்கால் முதல்முதல் அவனுடைய கருட மூக்குத்தான் கண்களில் படும். அது உதடுகள் பரியந்தம் நீண்டு காவல் காப்பது போலிருந்தது. அடர்ந்த புருவங்களுக்குமேல் அவனுடைய அகண்ட நெற்றி தடையுற்ற நீரோட்டம் பொங்குவது போலிருந்தது. அந்தப் புருவங்களுக்குக்கீழ் உள்ளே ஆழமாய்ப் பதிந்திருந்த கூர்மையான கண்கள். முகம் முழுவதும் நன்றாய் க்ஷவரம் செய்யப்பட்டிருந்தது. அழுத்தமான உதடுகள். காபிரிகளைப் போல் சுருண்டமயிர். பளபளவென்று வாரிவிட்ட கிராப். குமுதினிக்குச் சம உயரம் இருப்பான். ரோமம் அடர்ந்த கட்டைகுட்டையான கைகள். இரண்டு காதுகளுக்கு மேல் சிறிது நரைமயிர் காண்பதனாலேயே உண்மைவயதை ஊகிக்கக்கூடும். மொத்தத்தில் 'முரடன்' என்று சொல்லும்படியாக இருந்தது அவனுடைய தோற்றம். தலையிலிருந்து கால்வரை அவனிடம் தன் திடப் பிரதிஜ்ஞையைக் காட்டும் ஒரு பாவனை; அது அதிர்ஷ்டதேவதையின் தூணியிலிருந்து இடைவிடாது பொழியும் கூரிய அம்புகளின் வீழ்ச்சிமாதிரி இருந்தது.

விவாகம் நடந்தவிதம் இருபட்சத்தாருக்கும் திருப்தியில்லை. குமுதினிக்கு எல்லாம் ஒரே குழப்பமாயிருந்தது. பகவான் தன்னை ஏமாற்றிவிட்டாரோ என்று எண்ணினாள். அச் சந்தேகத்திற்குச் சிறிதும் இடம் கொடுக்காமல் மனத்தைத் திடப்படுத்திக்கொள்ளும்பொருட்டுப் பூஜை

அறையில் தனிமையில் உட்கார்ந்து மேன்மேலும் சாஷ்டாங்கமாய்ப் பூமியைத்தொட்டு நமஸ்கரித்தாள். 'அதைரியப்படக்கூடாது' என்று தனக்குள் அடிக்கடி சொல்லிக் கொண்டாள். தன் மனத்திலிருக்கும் சந்தேகத்தைத் தமையனுக்குக் காண்பிக்காமல் ஒளிப்பதே அதிகப் பிரயாசமாயிருந்தது.

தாயார் மரித்தபின் விப்ரதாஸிற்குத் தேவையான சுச்ரூஷைகளைக் குமுதினியே செய்துவந்தாள். அவன் துணிமணிகளைச் சரிபார்த்து, புத்தகங்களை அடுக்கி வைத்து, வீட்டுச் செலவுகளின் கணக்கு எழுதி, அவன் போட்டோ பிடிக்கும் காமராவைப் பாதுகாத்து, அவன் அறைகளைச் சுத்தம் செய்து, எல்லாவற்றையும் அவளே கவனித்தாள்.

இவ்வளவு நாட்கள் இவ்விதம் பழகிவிட்டபடியால் குமுதினியைத் தவிர வேறு யாராகிலும் தன் கார்யத்தைச் செய்தால் விப்ரதாஸிற்குச் சிறிதும் திருப்தியுண்டாவதில்லை. விப்ரதாஸ் வியாதியாய்ப் படுத்திருந்த இந்த கடைசிச் சில தினங்களுக்குள் குமுதினியே அவனுக்கு மிகவும் சுச்ரூஷை செய்துவந்திருக்கிறாள். அவன் அவ்வித சுச்ரூஷை நின்றுபோய்விட்டதே யென்று ஏக்கமுறாமலிருக்கவேண்டுமென்று குமுதம் முயன்றாள். குமுதம் "எஸ்ராஜ்" வாசிக்கும் விஷயத்தில் விப்ரதாஸிற்கு அதிகம் பெருமை உண்டு. வெட்கசுபாவமுள்ள அவள் சாதாரணமாய் வாசிப்பதற்குச் சம்மதிக்கமாட்டாள். ஆனால் அவள் இப்போது இரண்டு மூன்று தினங்களாய்த் தானே வலுவில் கானடா ராகத்தை ஆலாபனம் செய்து காண்பித்துவந்தாள். தன் தெய்வத்தைக் குறித்து அவள் செய்யும் ஸ்தோத்திரங்கள், அவள் பிரார்த்தனை, அவள்

மனோவேதனை எல்லாம் இந்த ராக ஆலாபனத்தில் கட்டுண்டிருந்தன. இவ்விராகத்தில் அவள் தன்னையே இழந்திருந்தாள். விப்ரதாஸ் கண்களை மூடிக்கொண்டு மௌனமாய்க் கேட்பான். நடுவில் நடுவில் பிரிவின் துயரத்தைக் கண்டு வெளிப்படுத்துபவையான வஸிந்து, பிஹாக், பைரவி முதலிய ராகங்களைக் கேட்பான். அவற்றைப் பாடுகையில் சகோதரன், சகோதரி இருவர் துயரமும் ஒன்றாய்க் கலந்தன. வாய்விட்டு இருவரும் ஒன்றும் சொல்லவில்லை. ஒருவருக்கொருவர் சமாதானம் சொல்லவுமில்லை; தங்களுடைய துக்கத்தையும் வெளிப்படுத்தவில்லை. விப்ரதாவின் மார்புவலி, இருமல், ஜுரம் ஒன்றும் குறையாமலிருக்கவே டாக்டர் "இது இன்புளுயன்ஸா. ஒரு சமயம் நியூமோனியா ஆகலாம். ஜாக்கிரதையாயிருக்கவேண்டும்" என்றார். குமுதினியின் மனத்தில் மூண்ட துயரத்திற்கு எல்லை கிடையாது.

விவாகதினங்கள் முடிந்தபிறகே குமுதினியைக் கல்கத்தாவுக்கு அழைத்துப் போவதாகப் பிரஸ்தாபம் இருந்தது. ஆனால் திடீரென்று மதுசூதனன் விவாகத்திற்கு மறுதினமே அழைத்துச்செல்லப்போவதாக வதந்தி வந்தது. இது, வழக்கத்தை ஒட்டியோ, ஒரு பிரயோஜன நிமித்தமோ, அல்லது தன்மேல் அதிக ஆசையினாலோ செய்யப்படவில்லை; வேண்டுமென்றே தன்னை நோவச் செய்யவே இந்த முயற்சி என்று குமுதம் அறிந்துகொண்டாள். அநுகிரகத்தைக் கோரப் போய் அவள் தலையில் பேரிடி விழுந்தது. விவாகதினத்தன்று இரவு, குமு வெட்கத்தையும் விட்டு, தலைகுனிந்தபடி, நடுக்கத்துடன், பிறந்த அகத்தில் இன்னும் இரண்டுநாள் இருந்துவிட்டு அண்ணா சொஸ்தமானதும் வருவதாகக் கணவனை வேண்டிக்கொண்டாள்.

மதுசூதனன் சட்டென்று, "போவதற்கு எல்லாம் தயார் செய்துவிட்டாயிற்று" என்றான். வஜ்ரம்போலக் கடினமான இவன் மனம்கொள்ளும்படித் தன் வேதனையைச் சொல்லிக் கொள்ளக் குமுதினிக்கு எள்ளளவாகிலும் இடம் ஏது? அன்று இரவே மதுசூதனன் அவளை எப்படியாவது பேச வைக்கப் பாடுபட்டான்; ஆனால் அவள் வாயைத் திறக்க வில்லை. படுக்கையில் வேறு புறமாக முகத்தைத் திருப்பிப் படுத்துக்கொண்டாள். இருட்டு இன்னும் கலையவில்லை. வெளியே பக்ஷிகள் ஆரவாரத்தைக் கேட்டதும், குமுதினி படுக்கையை விட்டு எழுந்துபோனாள்.

விப்ரதாஸ் இரவு முழுவதும் புரண்டு புரண்டு படுத்துக் கழித்தான். முதல்தினம் சாயங்காலம் தாப ஜுரத்துடன் கலியாண மண்டபத்தில் வந்து உட்காரவேண்டுமென்று அவன் விரும்பினதை டாக்டர் மிகச் சிரமப்பட்டுத் தடுத்தார். அடிக்கடி ஆட்களை அனுப்பி நடக்கும் விஷயங்களை அறிந்துவரச் சொல்வான். இவனுக்குச் சொல்லப் பட்ட விஷயம் யுத்தகாலத்தில் கிடைக்கும் செய்தியைப் போன்றவை. அதில் அதிகமாகக் கைச்சரக்குக் கலக்கப்பட்டிருக்கும்.

"அவர்கள் எப்போது வந்தார்கள்? மேளதாள ஓசை ஒன்றுமே காதில்படவில்லையே?" என்று விப்ரதாஸ் கேட்டான்.

அவனுக்குத் தகவல் சொல்வதற்காக ஏற்பட்ட சிவு "நம் சம்பந்திகள் நல்ல விதரணை தெரிந்தவர்கள். இவ்விடத்தில் உடம்பு அசௌக்கியம் என்று தெரிந்ததும் எல்லாவற்றையும் அடக்கிவிட்டார்கள். பிள்ளை வீட்டு ஊர்வலம் வருகையில் மனிதர் காலடி சப்தம்கூடக் கேட்கவில்லை. அவ்வளவு நல்ல சுவபாவம்!" என்றான்.

"ஏய் சிவு! சாப்பாட்டிற்குச் சாமான்கள் போதுமா? எனக்கு அதுவே கவலையாயிருக்கிறது. இது கல்கத்தா வல்ல, கிராமாந்தரம்."

"போதுமா! இது என்ன கேள்வி! அட அப்பா! அதிகமாயிருந்தது; மிஞ்சிப்போய்க்கொண்டல்லவோ இருக்கிறது! இன்னும் அவர்களைப்போல் ஒரு கூட்டம் வந்தால் கூட எல்லாரும் சாப்பிட்டு மிகுதி இருக்குமே!"

"அவர்களுக்குத் திருப்திதானு?"

"ஒருவர் வாயிலிருந்தும் ஒரு புகாரும் வெளிவரவில்லை. மூச்சுக்கூட விடவில்லை. எவ்வளவோ கலியாணம் பார்த்திருக்கிறேன். சம்பந்திகளுக்கு உபசாரம் செய்வதற்குள் பெண்வீட்டார் திண்டாடிவிடுவார்கள். இவர்கள் எவ்வளவு சாத்விகர்கள்! இருக்கும் இடங்கூடத் தெரிவதில்லை. அவ்வளவு அமரிக்கையாயிருக்கிறுர்கள்."

"கல்கத்தாவில் இருப்பவர்களல்லவா! அதனுலேயே இவ்வளவு மரியாதை யுள்ளவர்களாயிருக்கிறுர்கள். எந்த வீட்டிலிருந்து பெண்ணைப் பெற்றுக்கொள்ளுகிறுேமோ அவ்வீட்டார்களுக்கு அவமானம் செய்தால் அந்த அவமானம் தம்மையும் சேரும் என்று அவர்கள் அறிவார்கள்" என்றுன் விப்ரதாஸ்.

"ஆமாம், ஆமாம். நீங்கள் சொன்னதை அவர்களுக்குத் தெரிவிக்கிறேன். கேட்டுச் சந்தோஷமடைவார்கள்."

தமையனுக்கு நோய் அதிகரித்திருக்கிறதென்று குமுதம் முதல்நாள் சாயங்காலமே தெரிந்துகொண்டிருந்தாள். அவ்வித நிலைமையில் தமையனுக்குத் தான் இனிச் சுச்ருஷை செய்ய முடியாது என்ற கவலையினுல் கூண்டில்

அடைபட்ட பக்ஷிபோல அவள் மனம் அடித்துக்கொண்டிருந்தது. குமுதத்தின் கையிலிருந்து சுச்ருஷை பெறுவதே விப்ரதாஸிற்கு மருந்தைவிட அதிக குணமுண்டாக்கும்.

விடியற்காலை ஸ்நானம் செய்து பூஜை முடித்துக் கொண்டு குமுதம் தமையன் அறைக்கு வந்த சமயம் சூர்யன்கூட உதயமாகவில்லை. கடும் பிணியோடு போராடிச் சற்று ஓயும்போது உண்டாகும் வாழ்க்கையில் வெறுப்பு அன்று விப்ரதாஸின் மனத்தை வாட்டிற்று. வாழ்க்கையின் பந்தம், சம்சாரத்தின் கவலைகள் ஆகிய எல்லாம் அறுவடையானபின் காய்ந்து உலர்ந்திருக்கும் வயல்போல் சாரமற்றதாய்த் தோன்றின. இரவு முழுவதும் கதவுகள் அடைத்திருந்தன. சற்று முன்பே டாக்டர் வந்து கிழக்குப் புறத்து ஜன்னலைத் திறந்துவிட்டுச் சென்றார். பனி தூங்கும் அரசமரத்தின் இலைகளினிடையே தென்படும் வைகறையின் வானம் வெளுத்துக்கொண்டே வந்தது. சமீபத்திலிருந்த நதியில் வியாபாரிகளின் படகுகளின் பாய்மரங்கள் சிவந்த ஆகாயத்தின் மடியில் விளையாடித் துள்ளுவனபோல் விரிந்து பெருத்தன. மனத்தை உருக்கும் ஸ்வரத்தில், மேளகாரன் ராமகேளி ராகத்தை ஊதிக்கொண்டிருந்தான்.

அருகில் சென்று குமுதம் தன்னுடைய குளிர்ந்த கைகளுக்கிடையில் தமையனது கொதிக்கும் கைகளை எடுத்து வைத்துக்கொண்டாள். விப்ரதாஸின் 'டெரியர்' நாய் கட்டிலுக்கு அடியில் மனச்சோர்வுடன் படுத்து உறங்கிக்கொண்டிருந்தது. குமுதம் கட்டிலில் உட்கார்ந்ததும் அது துள்ளி எழுந்து அவளண்டை வந்து அவள் மடியில் தன் முன்னங்கால்கள் இரண்டையும் ஊன்றி

நின்று, வாலை ஆட்டிக்கொண்டு பரிதாபமான கண்களுடன் என்னவோ பிரலாபித்தது.

விப்ரதாஸின் மனத்தில் உள்ளுக்குள் ஏதோ ஒரு கவலைமட்டும் இருந்தது. அதுகாரணமாகவே, சம்பந்தமில்லாமல் திடீரென்று அவன் வாயிலிருந்து இவ்வார்த்தைகள் வெளிவந்தன: "அம்மா! யார் பெரியவன், யார் சிறியவன்; யார் உயர்ந்தவன், யார் தாழ்ந்தவன், என்பவையெல்லாம் உண்மையில் பார்க்கப்போனால் ஒன்றுமில்லை. இவையெல்லாம் நாமாகச் செய்துகொள்ளும் விஷயங்கள். நுரையிலிருக்கும் கொப்புளங்களில் எதற்கு எங்கே ஸ்தானமிருந்தாலென்ன? நமக்குள் நாம் இயற்கைப்படி நடந்துகொள்ளவேண்டும். அதற்குமேல் பிறர் உன்னை ஒன்றும் செய்ய முடியாது."

"என்னை ஆசீர்வதி, அண்ணா! என்னை ஆசீர்வதி" என்று சொல்லிக் குமுதம் தன் இரண்டு கைகளாலும் முகத்தை மூடிக்கொண்டு பொங்கிவரும் அழுகையை அடக்க முயன்றாள்.

விப்ரதாஸ் தலையணையின் உதவியைக்கொண்டு சற்று எழுந்து உட்கார்ந்து, குமுதத்தைத் தன் அருகில் அணைத்து அவள் நெற்றியில் முத்தமிட்டான்.

டாக்டர் உள்ளே வந்தார்; "அம்மா, குமுதம்! போதும். அவரைத் தொந்தரவு பண்ணாதே" என்றார். குமுதம் நோயாளியின் படுக்கையைச் சற்றுச் சரிப்படுத்திக் கொடுத்துவிட்டு, துணியைச் சரியாய் இழுத்துப் போர்த்தாள். அருகிலிருந்த மேஜையிலிருக்கும் சாமான்களை அடுக்கிவைத்தாள். பிறகு அண்ணாவின் காதினருகில் சென்று மிருதுவான குரலில், 'உடம்பு சௌக்யமானதும்

கல்கத்தா வரவேண்டும், அண்ணு! அங்கே நிச்சயம் உன்னைப் பார்க்கிறேன்" என்ருள்.

விப்ரதாஸ் தன்னுடைய அன்பு நிறைந்த விசாலமான கண்களிரண்டையும் குமுதத்தின் முகத்தில் பதித்து "குமுதம்! கிழக்கிலிருந்த மேகம் மேற்கே செல்லுகிறது. மேற்கிலிருக்கும் மேகம் கிழக்கே செல்கிறது. இவையெல்லாம் காற்றிஞல் ஏற்படுவது. சம்சாரத்திலும் இவ்விதக் காற்றே அடிக்கிறது. மேகத்தைப்போல் இதைச் சுவபாவமாய் ஏற்றுக்கொள்ளவேண்டும், அம்மா! இன்று முதல் எங்களைப்பற்றி அதிகம் கவலைப்படாதே. போகும் இடத்தில் நீ லக்ஷ்மிதேவிபோல் விளங்கவேண்டும். மனமார நான் உன்னை ஆசீர்வதிப்பது இதுதான். இதைத் தவிர வேறெதை விரும்புகிறேன்!" என்ருன்.

தமையன் காலருகில் சிரஸை வைத்துக்கொண்டு குமுதம் விழுந்திருந்திருந்தாள்; "என்ருல் ஆகவேண்டியது இனி வேறெதுவும் இல்லை. இந்த இடத்தில் தினப்படி வாழ்க்கையில் இனி நான் சம்பந்தப்பட்டவளல்லள்." என்று சொல்லும்போது அப்பெரிய பிரிவின் துயரத்தை ஒரு க்ஷணம் அவள் நெஞ்சில் தாங்க முடியாதுபோலிருந்தது. புயல்வந்து படகைக் கரையிலிருந்து அடித்துக்கொண்டுபோகும் சமயம் நங்கூரம் மண்ணைக் கெட்டியாகப் பிடிக்க முயலுவதுபோன்ற நிலைமையில் குமுதம் இருந்தாள். டாக்டர் மறுபடி வந்து, "போதும், அம்மா!" என்ருர். அவ்விதம் சொல்லிவிட்டுக் கண்ணீர் நிறைந்த தமது கண்களைத் துடைத்துக்கொண்டார். குமுதம் அறைக்கு வெளியில் வந்து அங்கே போட்டிருந்த ஒரு ஸோபாவில் உட்கார்ந்து தலைப்பிஞல் முகத்தை மூடிக்கொண்டு நிச்சப்தமாக அழுதாள்.

சட்டென்று குமுதினிக்கு அண்ணுவின் குதிரை 'பெஸ்ஸி'யின் ஞாபகம் வந்தது. தன் கையினாலேயே தீனி கொடுக்க, அதற்காக, வெல்லம் போட்ட ஆட்டாரொட்டி இரவே தட்டிவைத்திருந்தாள். புறக்கடையில், இந்தக் காரியம் அவளை அன்று காலைமுழுவதும் இருக்கச் செய்தது. குமுதினி அங்கே போனபோது குதிரை ஒரு மரத்தின்கீழ்ப் புல் மேய்ந்துகொண்டிருந்தது. தூரத்திலேயே அவள் வருவதைக் கவனித்து அது காதுகளை நெரித்து, "ஹி ஹி ஹி" என்று கனைத்தது. அதன் பிடரியைத்தடவிக்கொடுத்து ரொட்டியை ஒவ்வொன்ருகக் கொடுத்தாள். அது தின்றுகொண்டே தன் பெரிய கரிய விழிகளினால் அவளை நோக்கிற்று. தின்று முடிந்ததும் குமுதினி அதன் நெற்றியில் ஒரு முத்தம் கொடுத்துவிட்டு ஓடிவந்துவிட்டாள்.

---

## 18

மதுசூதனன் தன்னைக் காணவருவானென்று விப்ரதாஸ் நினைத்திருந்தான். அவன் வாராதிருக்கவே, இந்த விவாகமே இருவருடைய சம்பந்தத்தையும் துண்டிக்கும் கத்தியாய் ஏற்பட்டுவிட்டது என்று உணர்ந்தான். டாக்டரைக் கூப்பிட்டு, "நான் சிறிது நேரம் 'எஸ்ராஜ்' வாசிக்கலாமா?" என்று கேட்டான்.

"இன்று வேண்டாம்" என்ருர் டாக்டர்.

"ஆனல் குமுதத்தைச் சற்றுக் கூப்பிடுங்கள். அவளாகிலும் வாசிக்கட்டும். இனி அவள் கையால் வாசிப்பதை எப்போது கேட்பேனே?" என்ருன்.

"இன்று காலை 9-மணி வண்டியில் அவர்கள் போகப் போகிறார்கள். இல்லாவிடில் சூர்யாஸ்தமனத்திற்குள் கல்கத்தா போய்ச்சேர முடியாது. குமுதத்திற்குச் சாவகாசம் எவ்விதம் கிடைக்கும்?" என்று டாக்டர் சொன்னார்.

பெருமூச்சு விட்டு விட்டு விப்ரதாஸ், "ஆமாம், அவளுக்கு இங்கே இனி அவகாசம் கிடையாது. பத்தொன்பது வருஷகாலம் இங்கே கழித்தாய்விட்டது. இனி ஒருமணிகூடக் கழிக்க முடியாது" என்றான்.

புறப்படும் சமயம் தம்பதிகள் நமஸ்கரிக்க வந்தார்கள். மதுசூதனன் விப்ரதாஸிடம் அநுதாபம் காண்பித்து, "உங்கள் உடம்பு நிரம்பக் கேவலமாயிருக்கிறதே" என்றான்.

அதற்கு ஒன்றும் பதில் சொல்லாமலேயே விப்ரதாஸ், "பகவான் உங்களுக்கு மங்கள முண்டாக்குவார்" என்று ஆசீர்வதித்தான்.

"அண்ணா! உடம்பைப் பார்த்துக்கொள்ளவேண்டும்" என்று சொல்லிக் குமுதம் மறுபடி விப்ரதாஸ் காலடியில் அழுதாள்.

ஹுலுத்வனி, சங்கத்வனி, மங்களவாத்தியங்கள் எல்லாம் சேர்ந்து ஒரு பெரிய சண்டமாருதம்போல் கோஷித்தன. தம்பதிகள் சென்றார்கள்.

அவ்விருவரும் அங்கவஸ்திரமும் தலைப்பும் முடிபிட்டவண்ணம் போகும்போது அந்தக் காட்சி எக்காரணத்தினாலோ விப்ரதாஸின் உள்ளத்தில் ஒரு நடுக்கத்தை உண்டாக்கிற்று. தைமூரும் சங்கேஜ்கானும் அநேக மனிதரின் எலும்புக்கூடுகளை வெற்றி ஸ்தம்பங்களாக நட்டுவைத்தார்களென்று புராதன சரித்திரத்தில் சொல்லி

யிருக்கிறது. ஆனால் இவ்விதம் குமுதினியையும், மது சூதனனையும் பிணைக்கும் இந்த முடி இவர்கள் இல்லற வாழ்க்கையின் ஜயதோரணத்தை எவ்வளவு தூரம் அளந்து செல்லுமோ! இல்லாவிட்டால் அது எந்த நரகத்தின் பயங்கர முடிவிற்குக் கொண்டுவிடுமோ! ஆனால், ஏனோ விப்ரதாஸின் மனத்தில் இன்று இந்தமாதிரி விபரீத எண்ணங்கள்!

பூஜை, புரஸ்காரங்களில் விப்ரதாஸிற்கு ஒருநாளும் விருப்பம் உண்டானதில்லை. இருந்தும் இன்று இரண்டு கைகளையும் கூப்பி அவன் தன் மனத்திற்குள் பிரார்த்தனை செய்யலானான்.

சட்டென்று திடுக்கிட்டு, "டாக்டர்! சற்றுத் திவானைக் கூப்பிடும்" என்றான்.

விப்ரதாஸிற்கு ஒரு விஷயம் ஞாபகம் வந்தது. விவாகத்திற்குச் சில தினம் முன்பு சுபோதிற்குப் பணம் அனுப்புவதைப்பற்றி அவன் மிகவும் சஞ்சலப்பட்டுக் கொண்டு கணக்குகளைத் திரும்பத் திரும்பப் புரட்டிக் கொண்டு பதினொருமணி யடித்தும் சாப்பிடச் செல்லாமல் உட்கார்ந்திருந்தான். அப்போது மிக அலங்கோலமான ஒரு மனிதன் அவன் எதிரில் வந்து நின்றான். பல நாட்களாய் க்ஷவரம் செய்யப்படாமல் வற்றிச் சுண்டின முகம், எலும்பும் தோலுமே தென்படும் கைகள், அழுக்கடைந்த ஓர் அங்கவஸ்திரம், இடுப்பில் மிகச் சிறியதாகிய ஒரு வேஷ்டி; இந்தக்கோலத்துடன் கைகூப்பி நமஸ்கரித்து விட்டு, "பெரிய எஜமானே! தெரிகிறதோ?" என்றான்.

விப்ரதாஸ் உற்றுப் பார்த்துவிட்டு, "வைகுண்டனல்லவா?" என்றான்.

விப்ரதாஸ் சிறிய வயதில் படித்த பள்ளிக்கூடத்திற்கு அருகில் வைகுண்டன் ஓர் கடை வைத்திருந்தான். பாடப் புத்தகங்கள், காபிநோட்டுப்புத்தகங்கள், பென்ஸில், பேனு, சாக்கட்டி பந்து முதலியவைகளும், சிறிய பொட்லங்களில் நிலக்கடலைப் பருப்பும் விற்றுவந்தான். உலகத்திலேயே மிக அதிசயமானதும் வேடிக்கையானதுமான பல சம்பவங்கள் அவனுக்குத் தெரியும். ஆகையால் அவன் வீட்டில் பிள்ளைகள் பெரிய கூட்டங்கூடிப் பேசுவது வழக்கம்.

"உனக்கு ஏன் இவ்வித நிலைமை ஏற்பட்டது?" என்று விப்ரதாஸ் அவனைக் கேட்டான்.

சில வருஷங்களுக்கு முன் வைகுண்டன் தன் பெண்ணை ஒரு பணக்கார இடத்தில் கொடுத்திருந்தான். அவனுக்கு ஸ்ரீதனம் கொடுக்க அதிக சக்தி இல்லை. ஆகையாலேயே வரதக்ஷிணை அதிகம் கேட்டார்கள். ஆயிரத்து இருநூறு ரூபாய் கொடுத்து எண்பது தோலா எடைக்குத் தங்கநகை போடுவதென்று நிச்சயிக்கப்பட்டது. ஒரே பெண் என்றதனல் அவன் ஒருவாறு சம்மதித்தான். ஆனுல் ஒரே முறையாய் ரூபாயைக் கொடுக்க முடியவில்லை. அதனுல் அவர்கள் பெண்ணின் இரத்தத்தை உறிஞ்சுகிறுர்கள். சொத்து முழுவதும் கொடுத்தாய்விட்டது. இன்னும் இருநூற்றைம்பது ரூபாய்தான் பாக்கி. பெண் மிகவும் கஷ்டப்படுகிறுள். அவளுக்கு ஏற்படும் அவமானங்களுக்கு எல்லையில்லை. கஷ்டம் சகிக்க முடியாமற் போகவே அவள் பிறந்தகம் ஓடிவந்துவிட்டாள். "சிறையிலிருந்து ஓடிவந்தால் இன்னும் அதிக தண்டனைதானே; இருநூற்று ஐம்பது ரூபாய்களை அவனுக்கு அழுதுவிட்டு, பெண்ணைக் காப்பாற்றினுல்

போதும். அப்புறம் நான் செத்துப்போனாலும் பரவா யில்லை'' என்று தன் துயரைச் சொல்லிக்கொண்டான், வைகுண்டன்.

விப்ரதாஸ் சலிப்புடன் சிரித்தான். அவனுக்குத் தக்க உதவிசெய்வதைப்பற்றி இந்தச் சமயம் எண்ணக்கூட முடியாது. சிறிது நேரம் இதையும் அதையும் புரட்டி விட்டுக் கடைசியில் பெட்டியிலிருந்து பையை எடுத்து ஒரு பத்துரூபாய் நோட்டை அவனிடம் கொடுத்து விட்டு "எனக்கு இச்சமயம் சக்தி இல்லை. இன்னும் நாலைந்து இடங்களில் சென்று பார்'' என்று சொன்னான்.

வைகுண்டனுக்கு இவன் வார்த்தையில் நம்பிக்கை யில்லை. காலை இழுத்து இழுத்து வைத்து நடந்து சென்றான். கால் செருப்பின் ஓசை மிகச் சோர்வுற்றதாக இருந்தது.

அன்று நடந்த இந்த சம்பவத்தை விப்ரதாஸ் அநேக மாய் மறந்துவிட்டான். இன்று திடீரென்று ஞாபகம் வந்தது. திவானைக் கூப்பிட்டு, "வைகுண்டனுக்கு இன்றே இருநூற்றைம்பது ரூபாய் அனுப்புங்கள்'' என்றான். திவான் மௌனமாய் நின்று தலையைச் சொறிந் தார். போட்டியிட்டுச் செய்ததில் விவாகத்திற்காக அதிகப் பணம் செலவழிந்துவிட்டது. இனி வெகுநாள்வரை செட்டாயிருந்தால்தான் பணத்தை இழுத்துப்பிடிக்க முடியும். இந்த நெருக்கடியில் இருநூற்றைம்பது ரூபாய் என்றால் லேசானதா?

திவானின் முகபாவனையைக் கண்ட விப்ரதாஸ் தன் கையிலிருந்து ஒரு பச்சை மோதிரத்தை எடுத்து, "சின்ன எஜமான் கணக்கில் பாங்கிலுள்ள தொகையிலி

ருந்து இருநூற்றைம்பது எடுத்துக்கொண்டு, அதற்கு ஈடாக இந்த மோதிரத்தை வையுங்கள். குமுதத்தின்பேரில் ரூபாயை வைகுண்டனுக்கு அனுப்புங்கள்" என்றான்.

---

# 19

விவாகத்தின் கடைசிச் சண்டை ஒன்று மிகுந்திருந்தது. சேஷஹோமத்தை முடித்துக்கொண்டு தம்பதிகள் புறப்பட்டுப் போவதாய் ஏற்பாடு.

நவகோபாலன் அதற்காக எல்லா ஏற்பாடும் செய்து வைத்திருந்தான். அச்சமயம் விப்ரதாஸ் அறையிலிருந்து விடைபெற்றுக்கொண்டு வெளிவந்த ராஜா பகதூர், "சேஷஹோமம் மதுபுரியில் எங்கள் இருப்பிடத்தில் நடக்கும்" என்றார்.

இந்த வார்த்தை நவகோபாலனால் பொறுக்கமுடியவில்லை. வேறு எவராயிருந்தாலும் சண்டை கோர்ட்டு வரை போயிருக்கும். அப்பொழுது நவகோபால் வெடுவெடுவென்று வார்த்தைகளை விட்டது அடிதடி சண்டை வரைக்கும் வந்துவிடும்போலிருந்தது.

சேஷஹோமத்தை மதுபுரியில் செய்வது என்ற இந்த அவமானம் ஸ்திரீகளை மிகவும் துன்புறுத்தியது. வீட்டுக்கு வந்தவர்களில் விரோதமுள்ளவர்கள்கூட இருந்தனர். அவர்கள் எதிரிலா இந்த அநியாயம் நடக்க வேண்டும்! க்ஷேமா அத்தை கோபித்து முகத்தைத் தூக்கி வைத்துக்கொண்டு உட்கார்ந்தாள். வதூவரர்கள் விடைபெற்றுக்கொள்ள வந்த சமயம் அவள் வாயிலிருந்து, ஆசீர்வசனம் வெளிவரவில்லை.

'இந்தக் காரியத்தைக் கல்கத்தாவில் பண்ணுவதாக இருந்தால் அது ஒருமாதிரியாகப்போய்விடும்; இவ்வளவு பேச்சுக்கு இடமில்லை' என்று சொல்லிக்கொண்டார்கள். பிறந்த வீட்டாருக்கு ஏற்பட்ட அவமானத்தால் குமுதம் அதிகம் வெட்கிச் சுண்டினாள். முன்னோர்களெல்லாருக்கும் தான் அபராதம் செய்தவள்போல் அவளுக்குத் தோன்றிற்று. தனக்குள் தன் தெய்வத்தைத் திரும்பத் திரும்ப, "என்னை நீ இவ்விதம் தண்டிக்க நான் என்ன அபராதம் செய்தேன்! உன்னை நம்பியே அல்லவோ எல்லாம் செய்து வருகிறேன்!" என்று கேட்டுக்கொண்டாள்.

தம்பதிகள் வண்டி ஏறிச் சென்றார்கள். கல்கத்தாவிலிருந்து மதுசூதனன் அழைத்து வந்திருந்த பாண்டு ஒரு நாட்டியநோட்டு வாசிக்க ஆரம்பித்தது.

மதுபுரியில் ஒரு பெரிய பந்தலின்கீழ் ஹோமத்திற்கு ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. வந்திருந்த ஆங்கில துரைமார்களும் துரைசானிகளும் சிலர் மெத்தை தைத்தசோபாவில் உட்கார்ந்தும் சிலர் சமீபத்தில் வந்தும் பார்த்துக்கொண்டிருந்தனர். அவர்களுக்காக டீயும் பிஸ்கோத்தும் வந்தன. ஒரு மேஜையின்மேல் ஓர் பெரிய கல்யாணப் பணியாரம் (*Wedding Cake*) வைத்திருந்தது. சடங்குகள் முடிந்ததும் இவர்கள் சந்தோஷம் கூற வந்தனர். குமுதம் வெட்கத்தினால் முகம் சிவக்கத் தலையைத் தொங்கவிட்டுக்கொண்டு நின்றிருந்தாள். ஒரு பருத்த வெள்ளைக்காரி அவளுடைய காசிப் பட்டுப்புடவையின் தலைப்பைக் கையிலெடுத்து உற்றுநோக்கினாள். குமுதத்தின் கனமான பாஜுபந்தை உருட்டி உருட்டிப் பார்த்து அவள் அதிசயப்பட்டாள். இங்கிலீஷில் அதைப் புகழ்ந்தாள். சடங்குகளைப்பற்றி மதுசூதனனிடம் ஒரு கூட்டத்தார் "எவ்வளவு

ஸ்வாரஸ்யம்!" ("*How interesting!*") என்றனர். உடனே மற்றொரு கூட்டத்தினர் "இல்லையா?" ("*Is it not?*") என்று ஒத்துக்கொண்டனர்.

தன் சகோதரனுடனும் மற்றுமுள்ள உறவினர் களுடனும் மாத்திரம் மதுசூதனன் பழகுவதைப் பார்த்திருக்கும் குமுதம் இன்று அவனை அவனுடைய ஆங்கில நண்பர்கள் நடுவில் பார்த்தாள். அவன் அதிக மரியாதையும் வணக்கமும் சதா சிரித்த முகமுமுடையவனாகவும் இருந்தான். சந்திரனுக்கு ஒருபுறம் வெளிச்சம்; ஒருபுறம் ஒரே இருள். மதுசூதனனுடைய நடத்தையிலும் இருபக்கங்கள் இருந்தன. ஆங்கிலேய நண்பர்களிடையே அவனுடைய இனிய நடத்தை பூர்ணநிலவை ஒத்துக் குளிர்ந்து பிரகாசமாயிருந்தது. மறுபக்கம் யாரும் நெருங்க முடியாத ஒரு ஸ்வபாவம் எதற்கும் அசையாத உறைந்த பனிக்கட்டி மாதிரி இருந்தது.

செலூன் வண்டியில் தன் நண்பர்களுடன் மதுசூதனன் இருந்தான். ரிஸர்வ் செய்யப்பட்டிருந்த வேறொரு முதல்வகுப்பு வண்டியில் குமுதம் மற்றப்பெண்களுடன் இருந்தாள். அவர்களில் சிலர் அவள் கையைத் தூக்கிப் பிசைந்துபார்த்தனர். சிலர் முகத்தை நிமிர்த்தி முகத்தில் கலை எங்கே இருக்கிறதென்று ஆராய்ந்தனர். ஒருத்தி, "உயரமாயிருக்கிறாள்" என்றாள். மற்றொருத்தி, "மெலிந்திருக்கிறாள்". என்றாள். வேறு சிலர் மிக நாஸூக்குடன், "ஏனம்மா! உடம்பில் ஏதோ வர்ணம் பூசிக்கொண்டிருக்கிறாயே! அது உன் தமையன் சீமையிலிருந்து அனுப்பினானோ?" என்று கேட்டனர். எல்லாரும் சேர்ந்து, "அப்படிக் கண் பெரிசாயில்லை. பாதங்கள் பெண்களுக்கு இருக்கும் அளவைவிடப் பெரியதாயிருக்கின்றன" என்று

விளக்கிக்காட்டினர். குமுதத்தின் தேகத்திலிருந்த ஒவ்வோர் ஆபரணத்தையும் தனித்தனியாய் எடுத்து நிதானித்துப் பார்த்து, "பழைய கால நகைகள். கனமாயிருக்கின்றன. நல்ல தங்கம்—உம், நாகரிகமாயில்லை" என்று பேசிக்கொண்டனர்.

பெண்களின் வண்டியில் பிளாட்பாரத்திற்கு எதிர்ப்புறத்திலிருந்த ஜன்னல் திறந்திருந்தது. குமுதம் அதன் வழியாய் வெளியே நோக்கிக்கொண்டிருந்தாள். இவர்கள் வார்த்தைகள் தன் காதில் படாமலிருக்கும்படி கூடியவரை முயன்றாள். ஒரு கால் நொண்டியான ஒரு நாய் மூன்று கால்களால் நொண்டிக்கொண்டு மண்ணைத் தோண்டிக் கொண்டிருந்தது. "பாவம்! ஒரு கால் நொண்டியானதால் அதற்கு என்ன செய்தாலும் மிகக் கஷ்டமாயிருக்கும்" என்ற எண்ணம் குமுதத்திற்கு உண்டாயிற்று. அச்சமயம் தன் கையில் அதற்குக் கொடுக்கும்படியான தின்பண்டம் இல்லையே என்று வருந்தினாள். அப்போது பிளாட்பாரத்தில் ஒருவர் சொல்வது குமுதத்தின் காதில்பட்டது: "இந்தக் குடியானவன் பெண்ணை யாரோ ஓர் கூலிபிடிக்கும் ஏஜண்டு அஸ்ஸாம் தேசத்தில் தேயிலைத் தோட்டத்தில் வேலைசெய்யப் பலவந்தமாய் அழைத்துக்கொண்டு போனான். இவள் தப்பித்துக்கொண்டு ஓடிவந்துவிட்டாள். இவள் கிராமம் தூரத்திலிருக்கிறது. அதற்குச் செல்ல ரயில் சார்ஜ் இவளிடம் இல்லை. யாராவது கொஞ்சம் கொடுத்து உதவுங்கள்" என்று ஒருவன் ஸலூன் வண்டி எதிரே சொல்லும்போது உள்ளிருந்து யாரோ அதட்டும் சப்தம் குமுதினியின் காதில் விழுந்தது. குமுதினிக்குத் தாளவில்லை. தன்னுடைய பின்னல் பையிலிருந்து ஒரு பத்துரூபாய் நோட்டை எடுத்துப்

பிளாட்பாரத்தின் பக்கத்து ஜன்னலைத் திறந்து அந்தப் பெண் கையில் அதை வைத்தாள். பிறகு சட்டென்று கதவை அடைத்துவிட்டுத் தன் இருப்பிடத்தில் முன்போல் உட்கார்ந்துகொண்டாள். இதைக் கண்டு பெண்களெல்லோரும், "நம் நாட்டுப்பெண் கைதாராளத்தைப் பார்த்தாயா!" என்றார்கள். பிறகு ஒருவருக்கொருவர்; "கைதாராளமா! வீட்டைவிட்டு லக்ஷ்மி வெளிப் போக வழி இதுதான்!", "ரூபாயைச் சேர்க்கத் தெரியாவிடினும் செலவு செய்யத் தெரியும்"; "புருஷர்கள் ஒன்றும் கொடுக்காமலிருக்கையில் இவள் என்ன துணிவுடன் பத்து ரூபாய் வீசியெறிந்திருக்கிறாள்!" என்றெல்லாம் பேசிக்கொண்டனர். கோஷாலர்களுக்கும் சட்டர்ஜிகளுக்கும் வெகு நாளாய் உள்ள பொறாமைப் போட்டியினுடைய ஓர் அம்சம் இது என்று அவர்கள் எண்ணினார்கள். நல்ல கட்டமைந்த கருநிறமானவளும் குமுதினியின் சமவயதினளுமான ஒருத்தி—அவளுக்குப் பெரிய கண்கள், அன்புவழியும் முகபாவம்—குமுதினியின் பக்கத்தில் வந்து உட்கார்ந்தாள். பிறகு மெதுவாய்த் தாழ்ந்த குரலில், "இவர்கள் பேச்சு மனத்தைப் உறுத்துகிறதா என்ன, அம்மா? நீ அதைக் காதில் போட்டுக்கொள்ளாதே. இரண்டு மூன்று நாள் சொன்ன பிறகு, தொண்டையிலுள்ள விஷம் தானாக இறங்கிவிடும்" என்றாள். அந்தப் பெண்மணி குமுதினியின் நடு ஓரகத்தாள் (ஓர்படி); நடு மைத்துனன் நவீனன் மனைவி. அவள் பெயர் நிஸ்தாரிணி. ஆனால் எல்லோரும் அவளை மோதியின் அம்மா என்றே அழைத்தார்கள்.

"நான் நூர் நகரம் வந்த தினம் ஸ்டேஷனில் உங்கள் தமையனைப் பார்த்தேன்" என்று மோதியின் தாயார் பேச்சை ஆரம்பித்தாள்.

குமுதத்திற்குத் தூக்கிப்போட்டது. அண்ணு எதிர் கொண்டு அழைப்பதற்காக ஸ்டேஷனுக்குச் சென்றிருந்தானென்ற சங்கதியை அப்போதே அவள் முதல் முதல் கேள்விப்பட்டாள்.

"ஆஹா! என்ன லக்ஷணமானவர்! இந்தமாதிரியானவரை நான் பார்த்ததே கிடையாது. பாட்டுக்களில் வர்ணிப்பார்களே—

"கொள்ளை கொள்ளும் கௌரின் எழில்
வெள்ளம் தன்னில் நாரியரின்
உள்ளம் யாவும் புரளுதையோ!"

என்று; அந்த மாதிரியான சுந்தரரூபம் இது என்று எனக்குத் தோன்றிற்று."

குமுதத்தின் மனம் இளகிவிட்டது. முகத்தைத் திருப்பிக்கொண்டு ஜன்னல்வழியாய்ப் பார்த்துக்கொண்டிருந்தாள். வெளியிலுள்ள நிலப்பரப்பு, காடுகள், ஆகாயம் எல்லாம் கண்ணீர்த்திவலைகள் வழியாய் மங்கலாய்த் தென்பட்டன.

குமுதத்திற்கு எந்த இடத்தில் வேதனை இருக்கிறதென்று மோதியின் தாயார் சீக்கிரம் தெரிந்துகொண்டாள். ஆகையால் சுற்றி வளைத்து மறுபடி அவள் தமையன் பேச்சையே எடுத்தாள்; "அண்ணுவிற்கு விவாகமாய்விட்டதா?" என்று கேட்டாள்.

"இல்லை" என்ருள் குமுதம்.

"என்ன ஆச்சர்யம்! அந்த மாதிரி திவ்யபுருஷனுக்கா இன்னும் கல்யாணம் ஆகவில்லை! எந்த பாக்யவதி அவரை அடையக் கொடுத்துவைத்திருக்கிருளோ?" என்ருள் ஸ்தாரிணி.

குமுதம் மனத்திற்குள், 'அண்ணா எல்லாப்பற்றுதலையும் விட்டுவிட்டு என்மேலேயே பூரண அன்பு வைத்திருக்கிறான். அவனைப் பார்ப்பதற்குக்கூட இவர்கள் வரவில்லை. பணப்பெருமையில் இந்த மாதிரியானவனுக்கும் அவமதிப்புச் செய்யப் பின்வாங்கவில்லை. இதனால்தானே அவன் உடம்புகூடக் கெட்டுப்போய்விட்டது' என்று வீண் அநுதாபப்பட்டாள். 'அண்ணா எதற்காக ஸ்டேஷன் சென்றான்? ஏன் தன்னைத் தாழ்த்திக்கொண்டான்? எல்லாம் என்னால் தானே? எனக்கு ஏனோ சாவு வரவில்லை?' என்று நினைந்து நினைந்து வருந்தினாள். நடந்த காரியம் நடந்துவிட்டது. இனி அதைத் திருப்பமுடியாது. அண்ணாவின் வியாதியால் மெலிந்த முகமும், ஆசீர்வாதமும், அன்பும் நிறைந்த அவனுடைய கண்களுமே அவளுக்கு எப்பொழுதும் ஞாபகம் வந்தன.

---

## 20

ரயில்வண்டி ஹௌராவை அடைந்தபோது, மணி நான்கு இருக்கும். அங்கவஸ்திரமும் கூறைத்தலைப்பும் முடியிட்டவண்ணம் பிள்ளையும் பெண்ணும், ப்ருஹாம் வண்டியில் போய் உட்கார்ந்தார்கள். கல்கத்தாவில் அந்தப் பகல் வேளையில், எத்தனையோ கண்கள் தன்னைக் கவனிப்பதைப் பார்த்துக் குமுதினி அதிகக் கூச்சம் கொண்டாள். இந்தப் பத்தொன்பது வருஷகாலமாய், கன்னிகைப் பருவத்தில் ஊறி வந்த ஒரு பரிசுத்தத்தன்மை கர்ணனுடைய கவசம் போல் அவளைச் சுற்றி இருந்தது. அதைத் திடீரென்று எப்படி உதறிவிட முடியும்? ஆனால் இந்தக் கவசத்தை நிமிஷத்தில் போக்கக்கூடிய ஒரேமந்திரம் இருக்கிறது. அது

இன்னும் அவள் இதயத்தைத் தொடவில்லை. இன்று அவள் பக்கத்தில் இருக்கும் அந்த மனிதன் இன்னும் அயலான் மாதிரிதானே? அவனைத் தனக்குச் சொந்தம் என்று அவள் நினைக்கும்போது அவனிடமிருந்தே தடங்கல் வந்தது. அவனுடைய நடத்தையில் ஓர் மூர்க்கத்தனம் குமுதினியைக் கிட்டவரவிடாமல் தூரமாகத் தள்ளிவைத்தது. மதுசூதனனுக்கோ, குமுதினி ஒரு புது வஸ்துவாகவே தோற்றினாள். தொழிலில் ஆழ்ந்த இவனுக்கு ஸ்திரீயுடன் பழக அவகாசம் ஏற்படவில்லை. வியாபார நெருக்கத்தில் விலைமாதரின் பரிசம் அவனுக்குச் சற்றேனும் படவில்லை. எந்த ஸ்திரீயும் அவன் மனத்தை அசைக்கவில்லையென்று சொல்லமுடியாது. பூகம்பம் அடிக்கடி உண்டான போதிலும், அவனுடைய மனக்கட்டிடம் இடிந்து விழவில்லை. ஸ்திரீகள் என்றால் வீட்டில் வேலை செய்பவர்களைத் தவிர அவன் வேறு யாரையும் பார்த்ததில்லை. அவர்கள் வீட்டுக் காரியங்களைச் செய்வது, சச்சரவிட்டுக்கொள்வது, கலகம் விளைப்பது, அதி துச்சமான விஷயங்களுக்காக அழுது ஆர்ப்பாட்டம் பண்ணுவது, ஆகிய இந்த அளவிலேயே ஸ்திரீகளின் குணங்களை மதுசூதனன் கண்டிருக்கிறான். தன்னுடைய மனைவியும் இதேமாதிரி விஷயங்களில் ஈடுபட்டு, புருஷன் மிரட்டிக் கொண்டுபோகும் ஆளுகைக்குப் பயந்து வாழ்வாள் என்று எண்ணிவந்தான். ஆனால் மனைவியுடன் பழகுவதற்கும் தனித்திறமை வேண்டும். அதில் வெற்றியோ, தோல்வியோ அடையக் கூடிய சில ஸமஸ்யைகள் இருக்கின்றனவென்று இந்தக் கணக்காளி மதுசூதனன் மூளைக்கு ஏறவில்லை. செடிக்கு வண்ணாத்திப்பூச்சி அனாவச்யமாயிருந்தாலும், அது வண்ணாத்திப்பூச்சியை ஏற்றுக்கொண்டுதானே இருக்கிறது? தனக்கு வரும் மனைவியையும் மதுசூதனன் அந்த மாதிரி எண்ணியிருந்தான்.

விவாகத்திற்குப் பிறகு குமுதினியைப் பார்த்தபோது அவளுடைய ஸௌந்தர்யம் ஒரு தெய்விகத் தோற்றத்தோடு அவனுக்குத் தென்பட்டது. உலகத்தில் சாதாரணமான ஒரு நிகழ்ச்சியைக்காட்டிலும், சற்று அதிசயமானதே; அதை யாரும் எதிர்பாராததனால் பெரிதாய் எடுத்துக்காட்டு கிறது. குமுதினியின் அழகும் இந்த மாதிரி இருந்தது. இரவிலும் தோன்றாது, காலை ஒளியிலும் சேராத வைகறை யின் சுக்ர நக்ஷத்திரமெனத் தனி எழிலுடன் அவள் விளங் கினாள். மதுசூதனனின் அசட்டையான மனத்திலும், குமுதினி தன்னிலும் உயர்ந்தவள் என்று தோன்றிற்று. "இவளுடன் எப்படிப் பழகுவது, எவ்விதமாய்ப் பேசினால் அழகாய் இருக்கும்' என்ற எண்ணங்களெல்லாம் அவனுக்கு வந்தன.

எப்படிப் பேச ஆரம்பிப்பதென்று கருதின வண்ணம் மதுசூதனன் குமுதினியைப் பார்த்து, "அந்தப்பக்கம் வெயில் அடிக்கிறதா?" என்று கேட்டான்.

குமுதினி பதில் ஒன்றும் சொல்லவில்லை. மதுசூதனன் அவள் பக்கமாயுள்ள படுதாவைத் தொங்கவிட்டான். சிறிது நேரம் இருவரும் மௌனமாயிருந்தனர். மறுபடி யும் சட்டென்று, "குளிர்கிறதா?" என்று சொல்லி, அவள் விடையை எதிர்பாராமலே எதிரே இருந்த சீமைக் கம்ப ளிப் போர்வையை இழுத்துக் குமுதினியின் கால்களையும், தன்னுடைய கால்களையும் போர்த்து அவளுடன் தனக்கு ஒரு போர்வையின் மூலமாகச் சம்பந்தம் ஏற்படுத்திக் கொண்டான். அப்போது அவன் சரீரமும் மனமும் புளகிதமாயின. குமுதினி திடுக்கிட்டுப் போர்வையை விலக்கிக்கொண்டு ஒதுங்கி உட்கார்ந்தாள்.

இந்தமாதிரி கொஞ்சநேரம் சென்றது. சட்டென்று குமுதினியின் கைகளின்மேல் மதுசூதனனுடைய பார்வை விழுந்தது. "இதோ காண்பி, பார்க்கலாம்" என்று அவளுடைய கரத்தைத் தூக்கி, "இந்த விரலில் இது என்ன மோதிரம்? நீலம் மாதிரி இருக்கிறதே" என்றான்.

குமுதினி பதிலே சொல்லவில்லை.

"இதோ பார். நீலமோதிரம் எனக்கு ஆகி வர வில்லை. நீ அதை கழற்றிவிடு" என்றான்.

எப்பொழுதோ ஒரு சமயம், மதுசூதனன் ஒரு நீலக் கல் வாங்கினான். அந்த வருஷம் அவனுக்கு நஷ்டம் வந்தது. சணல் படகு ஒன்று ஹௌரா வாராவதியில் மோதிக் கவிழ்ந்துவிட்டது. அதுமுதற்கொண்டு நீலக்கல்லின் மேல் அவனுக்குத் துவேஷம்.

குமுதினி தன் கையை மெல்ல விடுவித்துக்கொள்ளப் பிரயத்தனப்பட்டாள். ஆனால் மதுசூதனன் விடவில்லை. "நான் கழற்றிவிடுகிறேன். என்றான். குமுதினிக்குத் திக்கென்றது. "வேண்டாம். அது இருக்கட்டும்" என்றாள்.

ஒரு சமயம் சதுரங்கத்தில் அவள் ஜயித்ததற்காக அவளுடைய தமையன் தனக்குச் சொந்தமான இந்த நீல மோதிரத்தைப் பரிசாக அளித்தான்.

மதுசூதனன் தனக்குள்ளேயே சிரித்துக்கொண்டான். 'இந்த மோதிரத்தின்மேல் இவளுக்கு மோகம் போலும்.' இவ்விடத்தில் தன்னை யொத்துக் குமுதினி இருப்பதைக் கண்டு மதுசூதனன் சற்று ஆறுதல் அடைந்தான்.

இனிமேல் வளை, கண்டஹாரம், வங்கி முதலிய வைகளைக் கொடுத்து அவளைச் சரிப்படுத்திவிடலாமென்று நினைத்துக்கொண்டான். இந்த இடத்தில் தன்னுடைய

பலவந்தத்தைக் காட்டுவது பிரயோஜனமில்லை. வயது வந்த பெண்ணாயிற்றே. தன்னுடைய விரலிலிருந்து ஒரு பெரிய வைர மோதிரத்தைக் கழற்றி மதுசூதனன் சிரித்த வண்ணம், "நீ ஏன் அதைரியப்படுகிறாய். அதற்குப் பதிலாக இந்த மோதிரத்தைப் போடுகிறேன்" என்றான்.

குமுதினியினால் சும்மா இருக்க முடியவில்லை. அவன் தொடும்போது கையை வெடுக்கென்று எடுத்துக்கொண்டாள். மதுசூதனன் கலங்கிவிட்டான். தான் முனைந்த காரியத்தில் குறை ஏற்பட்டால் அவன் சகிக்கமாட்டான். அவன் தொண்டை வறண்டு, அழுத்தமாக, "இதோ பார். இந்த மோதிரத்தை நீ கழற்றித்தான் ஆகவேண்டும்" என்றான்.

குமுதினி தலை குனிந்தவண்ணம் மௌனமாக இருந்தாள். அவளுடைய முகம் சிவந்தது.

மதுசூதனன் மறுபடியும், "கேட்கிறதா. கழற்றி விட்டால் நன்றாய் இருக்கும். என்னிடம் கொடுத்துவிடு" என்று கூறி அவள் கையைப் பிடிக்கப்போனான்.

குமுதம் கையை வாங்கிக்கொண்டு, "நானே கழற்றி விடுகிறேன்" என்று கழற்றிவிட்டாள்.

"அதை என்னிடம் கொடுத்துவிடு" என்றான் மதுசூதனன்.

குமுதினி "அதை நானே வைத்துக்கொள்கிறேன்" என்றாள்.

மதுசூதனனுக்கு ஆத்திரம் வந்தது; "அதை வைத்திருப்பதில் என்ன லாபம்? அது விலையுயர்ந்த வஸ்துவென்று எண்ணுகிறாயோ? அதை இனி அணிந்துகொள்ளக்கூடாது. தெரியுமா!" என்றான்.

குமுதினி, "நான் ஏன் போட்டுக்கொள்ளப்போகி றேன்!" என்று சொல்லித் தன்னுடைய முத்துக்கோத்த பையில் அந்த மோதிரத்தை வைத்துக்கொண்டாள்.

"இந்த அல்பமான வஸ்துவின் மேலா உனக்கு இவ் வளவு ஆசை? எதற்கு இவ்வளவு பிடிவாதம் உனக்கு?" மதுசூதனனின் குரல் மிகவும் கடூரமாயிருந்தது. உப்புக் காகிதம் உராய்வதுபோல அந்தத் தொனி குமுதத்தின் சரீரத்தை என்னவோ பண்ணிவிட்டது.

"இந்த மோதிரம் உனக்கு யார் கொடுத்தது?"

குமுதினி பதில் சொல்லவில்லை.

"உன் அம்மா வா?"

பதில் சொல்லாமல் இருக்கக்கூடாதே என்று பாதி கேட்கும்படி, "அண்ணா" என்றாள்.

அண்ணாவா! அது அவனுக்குத் தெரிந்துதான் இருக் கிறது. அண்ணாவின் தசை எந்தமாதிரி என்று மதுசூதன னுக்கு நன்றாகத் தெரியும். 'அந்த அண்ணாவின் மோதிரம் வந்தாலே அவனுடைய சனியும் கூட வந்துவிடுமே. அதை இந்த வீட்டிற்குக் கொண்டுவரக்கூடாது.' இதுகூட மது சூதனனைப் பாதிக்கவில்லை. குமுதினிக்கு அவள் அண்ணாவே முக்கியமாய் இருக்கிறான் என்பதே மதுசூதனனை உறுத்தி யது. அது சுவபாவந்தானே என்றுகூட அவன் பொறுத்துக் கொள்ளவில்லை. பழைய ஜமீன்தாரின் சொத்துக்களை ஒரு பணக்கார ஸாவுகார் ஏலத்தில் எடுத்துவிட்டால், பிரஜைகள் யாவரும் முன்னே இருந்த எஜமானனின் வைபவத்தைப்பற்றிப் பேசிப் பெருமூச்சுவிட்டு வருந்தப் படும்போது புதுச் சொந்தக்காரனுக்கு எப்படி எரிச்சலாக இருக்கும்? மதுசூதனனுக்கும் அதே மாதிரி இருந்தது.

"இனிமேல் நான்தானே அவளுக்கு ஸர்வமும்? இதைச் சீக்கிரமாக அவளுக்குப் புலப்படுத்த வேண்டும்" எனத் தீர்மானித்தான்.

விவாக சமயத்தில் நவகோபால் வந்து, "நீங்கள் சாப்பாடு தயாராக வைத்துக் கூப்பிட்டும் யாரும் வராமல் இருந்ததை அவமரியாதை செய்ததாக எண்ணிக்கொள்ள வேண்டாம். அண்ணாவுக்கு அதைப்பற்றி ஒன்றும் தெரியாது. அவர் ஜுரத்தில் படுத்தபடுக்கையாகக் கிடக்கிறார்" என்று சொல்லி மன்னிப்புக் கேட்டிருந்தும், இந்த ஒரு சின்ன விஷயத்தினால், விப்ரதாஸ் வேணுமென்றே இதைச் செய்திருப்பான் என்று மதுசூதனனுக்குப் பின்னும் அவன்மேல் துவேஷம் உண்டாயிற்று.

மோதிரத்தின் சமாசாரம் அதனுடன் நின்றது; ஆனால் அது மதுசூதனனின் மனத்தைவிட்டு அகலவில்லை. அழகைத் தவிர, வேறொரு காரணத்தினால், திடீரென்று குமுதினியின்மேல் அவன் கொண்ட மதிப்பு அதிகமாய்விட்டது. நூர்நகரத்தில் கல்யாண தினத்தன்றே, ஆளிவிதை வியாபாரத்தில் தனக்கு இருபது லக்ஷ ரூபாய் கிடைத்த செய்தி தந்தி மூலமாக அவனுக்கு எட்டிற்று. அது இவள் வந்தவேளையினால்தான்! அதில் சந்தேகமே இல்லை. ஸ்திரீபாக்கியத்தினால்தான் கைமேல் பணம் வந்தது என்று பிரமாணமாக அவனுக்குத் தெரிந்தது. பிறகு வரப்போகும் அதிர்ஷ்டத்தைக் காட்டுவதும், விதியினால் கொடுக்கப்பட்டதுமாகிய ஓர் உயிருள்ள அடையாளத்தைத் தன் பக்கத்தில் வண்டியில் அழைத்துச் செல்லும்போது அவன் பரமதிருப்தியை அடைந்தான். இல்லாவிட்டால் அன்று அந்த ப்ரூஹாம் ரத யாத்திரைக்குப் பங்கம் ஏற்பட்டிருக்கும்.

---

## 21

ராஜாபகதூர் என்ற பட்டம் கிடைத்தது முதல் கல்கத்தாவில் கோஷாலர்களுடைய மாளிகைக்கு 'மது ப்ராஸாதம்' என்று பெயர் ஏற்பட்டிருந்தது. அந்த ப்ராஸாதத்தின் இரும்பு வாசலுக் கருகில் இன்று மேளமும் உள்ளே தோட்டத்தில் ஒரு கூடாரத்தில் பாண்டும் வாசித்துக்கொண்டிருந்தார்கள். கேட்டிற்குமேல் பிறைச்சந்திர வடிவத்தில் விளக்குகளினால், "பிரஜாபதயே நம:" என்று எழுதப்பட்டிருந்தது. கேட்டிலிருந்து வாசற் படிக்கட்டுக்கள்வரைச் சிவப்பு சரளைக்கற்கள் கொட்டிச் செப்பனிட்ட பாதையின் இருபுறமும் தேவதாரு இலை களினாலும், செவ்வந்திப்பூக்களினாலும் அலங்கரிக்கப்பட்ட தோரணங்கள். வாசற்படிக்கட்டுக்களில் சிவப்பு ஜமக்காளம் விரித்திருந்தார்கள். பந்து ஜனங்கள் சூழ தம்பதிகளின் வண்டி வாசலில் வந்து நின்றதும், சங்கம், ஹூலுத்வனி (மங்களத்வனி), மேளவாத்யம், பாண்டு எல்லாம் சேர்ந் தாற்போல் கோஷிக்க, ஒரு விருத்த சுமங்கலி, நெற்றியில் பெரிய குங்குமப்பொட்டு இட்டு, அகலமாய்க் கரை போட்ட சிவப்புப்புடைவைகட்டி, கனமான தங்க நகை கள் அணிந்துகொண்டவளாய், ஒரு வெள்ளிச்செம்பில் தண்ணீர் எடுத்துவந்து தம்பதிகளெதிரில் நின்றுகொண்டு பெண்ணின் கால்களில் தண்ணீர் தெளித்துத் தன் தலைப்பி னால் துடைத்தாள். பிறகு கங்கணம் பூட்டி, வாயில் கொஞ்சம் தேனை வார்த்து, "இவ்வளவு நாட்கழித்து எங்கள் நீல ஆகாயத்தில் சந்திரன் உதித்திருக்கிறது. குளத் தில் தங்கத்தாமரை பூத்திருக்கிறது" என்று சொன்னாள். அதன்மேல் தம்பதிகள் வண்டியிலிருந்து இறங்கினார்கள். வந்திருந்த இளைஞர்கள் அநேகர் பொறுமையுடன்

பார்த்து நின்றனர். "இந்த அரம்பையைப் பொன் விலங்கு இட்டு, ஸ்வர்க்கத்திலிருந்து அசுரன் கொண்டு வந்திருக்கிறான்" என்று ஒருவன் சொன்னான். "முன் காலத்தில் இம்மாதிரிப் பெண்ணின் நிமித்தமே அரசர்கள் யுத்தம் செய்வார்கள். இப்போது கையிலுள்ள பணத்தினால் அல்லவா இந்தக் காரியம் முடிந்தது? கலியுகத்தில் தேவர்கள்கூட ரசிகத் தன்மையை இழந்துவிட்டார்கள். கிரகநக்ஷத்திரங்கள்கூட வைச்யவர்ணமாகி விட்டன" என்றான் மற்றொருவன்.

அதற்குமேல் பெண்ணை அழைத்துக்கொள்ளல் முதலிய ஸ்த்ரீ ஆசாரங்கள் முடிய வெகு நேரமாயிற்று.

ஒரு தமக்கைக்கு விவாகம் நடந்ததைத்தான் குமுதம் நன்றாய்ப் பார்த்திருக்கிறாள். தன் வீட்டில் ஒரு மருமகளும் வந்ததை அவள் கண்டதில்லை. யௌவன பருவம் ஆரம்பிக்கு முன்பே கல்கத்தா வந்து தன் தமையனின் நிர்மலமான அன்பின் ஆதரவில் வசித்தாள். தன் சிறுவயதில் கற்பனையில் கண்ட உலகத்திற்கும், இப்போது தான் காணும் கடினமான உலகத்திற்கும் எவ்வளவோ வித்தியாசம் இருப்பதை உணர்ந்தாள். சிறுவயதில் நல்ல கணவன் கிடைக்கவேண்டுமென்று அவள் சிவபூஜை செய்த சமயமெல்லாம் தன் தியானத்தில் மஹா தபஸ்வியும் கைலயங்கிரிநாதருமான சிவபிரானையே கண்டுவந்தாள். பதிவிரதைக்கு ஆதர்சமாய் அவள் தன் தாயாரையே அறிவாள் அம்மாவிடம் அன்பும் சாந்தமும் விளங்கும். எவ்வளவு அழகு! அவளிடம் எவ்வளவோ பொறுமை! அவள் மனத்தில் எவ்வளவோ துக்கம்! இதன் நடுவே எவ்வளவு பக்தியுடன் பகவதாராதனத்தையும் சுபகாரியங்களையும் சலிப்பில்லாமல் செய்துவந்தாள்! ஆனால் தன் புருஷ

நடத்தையில் சினம் கொண்டு நடந்ததே அவள் குணத்தில் ஒரு குறை. ஈனம், கபடம் முதலிய குணங்கள் அணுவளவேனும் இல்லை. தந்தையின் நடத்தையில் சில குற்றங்கள் இருந்தபோதிலும், அவரிடம் பெருந்தன்மை யும், பௌருஷமும் இருந்தன. யாரும் மரியாதையுடன் போற்றக்கூடிய ஓர் உயர்ந்த ஸ்வபாவம், புராணங் களில் வரும் ஆதர்சபுருஷர்களிடம் திகழ்ந்தது போல் அவரிடம் காணப்பட்டது. 'பிராணனைவிட மானமே பெரிது', 'பணத்தைவிடத் தர்மமே உயர்ந்தது' என்பன போன்ற உண்மைகள் அவர் வாழ்க்கையில் ஒவ்வொரு தினமும் பிரத்யக்ஷமாய்த் தெரிந்தன. இவரும், இவரைப் போன்றவர்களும் அதிக தாராள ஸ்வபாவமுடையவர்கள். தங்களை நாசம் செய்துகொண்டாலும், கௌரவத்தைப் போக்கிக்கொள்ளாதிருத்தலே இவர்களுடைய குணமா யிருந்தது. தங்களுடைய பெருஞ்செல்வத்தின் அகங் காரத்தைக் காண்பிக்கவேண்டுமென்பதல்ல.

குமுதத்திற்கு என்று இடதுகண் துடித்ததோ, அன்றே அவள் தன் பூரணபக்தியுடன் ஆத்மஸமர்ப்பணை செய்யத் தயாரானாள். அதற்கு இடையூறோ தடங்கலோ வருமென்று அவள் கனவிலும் எதிர்பார்க்கவில்லை. தமயந்திக்கு, தான் நளனையே அடையப்போவது முன்பே எப்படித் தெரிந்தது? அவள் உள்ளத்தில் அதன் நிச்சயம் உதித்திருந்ததனால் அல்லவோ? ஆனால் குமுதினிக்குமட்டும் அந்நிச்சயம் ஏன் வரவில்லை? வரனைத் தேட அவளுக்கு எவ்வளவோ சௌகர்யங்கள் இருந்தன. அரசனும் கிடைத்துவிட்டான். ஆனால் தன் மனத்தினுள் நினைத்தவாறு வெளியில் அவனைக் காணமுடிய வில்லை. அழகைப்பற்றி அவள் சிந்திக்க வில்லை; வயதைப்

பற்றி அவளுக்குப் பாதகமில்லை; ஆனால் அவள் கோரின சத்யனான அரசகுமாரன் எங்கே?

இன்று, புது வாழ்வு, அவள் எண்ணியபடி, இன்பத்தைத் தெரிவிக்கக் கூடிய சத்யமான மங்களத்துவனியிடை அவளை ஏன் அழைத்துக்கொள்ளவில்லை! சப்தரிஷி தர்சனத்தின் பலனான நம்பிக்கையையாவது ஆசீர்வாதத்தையாவது அவள் இன்று ஏன் பெறவில்லை? ஸகல அநுஷ்டானங்களையும் பூர்த்திசெய்யும் "ஜகத: பிதரௌ வந்தே பார்வதீபரமேச்வரௌ" என்ற வந்தனவசனம், அவள் உள்ளத்தில் ஏன் தொனிக்கவில்லை? 'ஜகத: பிதரௌ' என்பதன் கருத்து, புருஷனும், நாரியும் சொல்லும் பொருளும் போல் (நிழலும் ஒளியும் போல்) இணைபிரியாது கலந்து இருக்கின்றனர் என்பதல்லவா?

---

## 22

மதுசூதனன் முதல் முதல் கல்கத்தாவில் வசிக்க வந்த சமயம் ஒரு பழைய வீட்டை வாங்கியிருந்தான். அதுவே இப்போது அவனுக்கு அந்தப்புரமாய் உபயோகப் பட்டுவந்தது. அதற்குப் பிறகு பழைய வீட்டிற்கு எதிரே, அதை யொட்டினாற்போல் தற்கால ரீதிப்படி ஒரு பெரிய வீட்டைக் கட்டிக்கொண்டான். அதுவே இப்போது அவனுக்குக் கார்யஸ்தலமாகவும், உல்லாஸ க்ருகமாகவும் இருந்தது. அடுத்தடுத்து இருந்தும் இவ்விரண்டும் அநேக விஷயங்களில் தனிக்குணம்பெற்று இருந்தன. வெளி (புது) வீட்டின் தரைகள் சலவைக்கற்கள் பதித்தவை. அவைகளின் மேல் சீமை இரத்தின கம்பளங்கள்; சித்திரித்த வர்ணக் காகிதங்கள் ஒட்டப்பட்ட சுவர்களில் பலவிதப் படங்கள்—

என்க்ரேவிங், ஆயில் பெயிண்டிங், ஒலியோகிராப்— மாட்டப்பட்டிருந்தன. அவைகளின் விஷயமோ, மான்களைத் துரத்தும் வேட்டைநாய்கள், டர்பி (குதிரை)ப் பந்தயத்தில் ஜயித்த பிரசித்திபெற்ற குதிரைகள், பலதேச இயற்கைக் காட்சி, ஸ்நாநம் செய்யும் பெண்மணிகள் இத்யாதி. இவற்றோடு சுவர்களில் பல சீனதேசத்துப் பீங்கான்கள், மோராதிபாத் பித்தளைத் தட்டுக்கள், ஜப்பான் விசிறி, திப்பத் சாமரம் ஆகிய பல சம்பந்தமற்ற சாமான்கள் சேர்ந்திருந்தன. இந்தச் சாமான்களெல்லாம் பொறுக்குவதோ, வாங்குவதோ அவைகளை அலங்காரமாக வைப்பதோ எல்லாம் மதுசூதனனின் ஆங்கிலக் காரியஸ்தனின் வேலை. இவற்றைத் தவிர வெல்வெட்டு அல்லது பட்டுக்களில் தைத்தமெத்தைகளையுடைய ஸோபாக்களும் நாற்காலிகளும் இருந்தன. கண்ணாடி அலமாரிகளில் பளபளப்பாய்ப் பயிண்டு செய்யப்பட்ட இங்கிலீஷ் புத்தகங்களிருந்தன. துடைத்து எடுத்து வைக்கும் வேலையாள் தவிர வேறொருவரும் அவைகளைத் தொடுவதில்லை. ஒரு மேஜையின்மேல் சில "ஆல்பம்" வைக்கப்பட்டிருந்தன. அவைகளில் வீட்டுமனிதர் படங்களும், அந்நிய நாட்டு நடிகள் படங்களுமிருந்தன.

அந்தப்புரத்தில் கீழ்அறைகளில் ஒரே இருட்டு. சூரிய வெளிச்சம் அதிகமில்லாததால் ஈரந்தங்கி அவ்வறைகள் ஒட்டடையினாலும் புகையினாலும் கறுப்பாயிருந்தன. முற்றத்தில் பல குப்பை கூளங்கள்—அதனிடையிலேயே குழாய்; பாத்திரம் துலக்குவது, துணி துவைப்பதெல்லாம் அங்கேயே நடைபெறும். வேலையில்லாத சமயங்களிலும் குழாய் திறந்தபடியே ஜலம் கொட்டிக் கொண்டிருக்கும். மாடி வராந்தாவில் உலரும் பெண்டு

களின் புடைவைகள் கீழே நீளத் தொங்கிக் கொண்டிருக்கும். தாழ்வாரத்துச் சுவர்களில் தாம்பூலக் கறையும், மற்றும் பலவித அழியாத அழுக்கும் படிந்திருந்தன. முற்றத்திற்குப் பின்புறமிருக்கும் திண்ணைக்கு அப்பால் சமையலறை. அங்கிருந்து சமையல் வாசனையும் கரிப் புகையும் கிளம்பி எல்லா இடத்தையும் வியாபிக்கும். சமையலறைக்குப் பின்புறம் இருக்கும் சிறிய தாழ்வாரத்தில் எரிந்து மிஞ்சிய கரித்துண்டுகள், கணப்புச் சாம்பல், ஓட்டை ஒடிசல் பொத்தல் கூடைகள் முதலியவை குவிந்திருக்கும். மற்றொரு பக்கம் சில பசுமாடுகளும், அவைகளின் கன்றுகளும் கட்டப்பட்டதனால் அவைகள் இடும் சாணக் குவியல்கள்; சுவர் முழுவதும் வறட்டி தட்டப்பட்டிருந்தது. ஒரு மூலையில் ஒரே ஒரு வேப்பமரம்; பசுமாடுகளைக் கட்டிக் கட்டி அதன் பட்டைகள் உரிந்து விட்டன. துறட்டினால் இலைகள் அடிக்கடி ஒடிக்கப் பட்டு மரம் மொட்டையா யிருந்தது. அந்தப்புரத்தில் இவ்வளவே திறந்த இடம். மிகுந்த தோட்டம் வெளிப் புறமாக இருந்தது. லதாமண்டபங்கள் அமைந்து, தொட்டிகளில் பல வர்ணப் புஷ்பங்கள் நிறைந்து, கத்தரித்த புல் வெளிகளுடன் சிவப்புக் கப்பிக்கற்களால் கெட்டிக்கப் பட்ட பாதைகள் சூழ்ந்து, கற்சிலைகளாலும் இரும்புப் பெஞ்சுகளாலும் அது அலங்கரிக்கப்பட்டு இருந்தது.

அந்தப்புரத்தில் மூன்றாவது மாடியில் குமுதினியின் சயன அறை. அங்கே செம்மரத்தால் செய்த ஓர் பெரிய கட்டில் இருந்தது. சட்டத்தில் பட்டுக்குஞ்சங்கள் கட்டின கொசுவலை. மார்பை இருகைகளாலும் மறைத்துக்கொண்டு, லஜ்ஜையினால் கூசி நிற்கும் பாவனையாய் ஒரு பெண் ஆடையின்றி நிற்கும் உருவப்படம் கால்மாட்டில் சுவரில்

தொங்கிற்று. தலைப்புறத்தில் மதுசூதனனுடைய வர்ணப் படம் ஒன்று இருந்தது. அதில் அவனுடைய காஷ்மீர சால்வையின் வேலைப்பாடே அதிகப்பிரகாசமாய்த் தென் பட்டது. ஒருபுறம் சுவரோரமாகத் துணிமணிகளை வைத்துக் கொள்ள நிலைக்கண்ணாடிவைத்த பீரோ. கண்ணாடியின் இருபுறமும் சைனுதேசப் பீங்கான் வத்தி ஸ்டாண்டுகள். எதிரில் பீங்கான் தட்டில் பௌடர் டப்பா, வெள்ளிப்பிடி போட்ட சீப்பு, நாலைந்துவித வாசனைகள், பன்னீர்ச்செம்பு, மற்றும் சிங்காரம் செய்துகொள்வதற்குரிய பலவித சாமான்கள் வைக்கப்பட்டிருந்தன. இவைகள் ஆங்கிலக் காரியஸ்தனால் வாங்கப்பட்டவை. பல கிளைகளையுடைய புஷ்பப்பாத்திரங்களில் புஷ்பக்கொத்துக்கள் இருந்தன. மற்றொருபுறம் எழுதுவதற்கென்ற மேஜையும், அதன்மேல் விலையுயர்ந்த மசிக்கூடும், ஒரு ராக்கில் பேனாவும், காகிதங்களும் இருந்தன. இங்குமங்கும் திண்டுகள் தைத்த சோபா, நாற்காலிகள். நடுநடுவே சின்ன டீபாய்கள் சீட்டு விளையாடுவதற்கும் டீ குடிப்பதற்கும் உபயோகப் படுபவையாயிருந்தன. புதுமகாராணிக்குத் தகுந்த சயன கிருகம் எவ்விதம் இருக்கவேண்டுமென்பதை மதுசூதனன் நன்கு ஆலோசித்துப் பார்த்து ஏற்பாடு செய்திருக்கிறான். அந்தப்புரத்தில் மற்ற அறைகளுக்கு எல்லாம் மேலிருக்கும் இந்த அறை, பிச்சைக்காரன் தலையில் ஜரிகைப்பாகை கட்டினமாதிரி இருந்தது.

கடைசியில் எல்லாம் முடிந்தபின் இரவு குமுதம் இவ் வறையை அடைந்தாள். நிஸ்தாரிணி அவளை இங்கு அழைத்து வந்தாள். அன்றிரவு அவளும் குமுதத்துடன் தூங்குவதென்று நிச்சயிக்கப்பட்டிருந்தது. வேறு சில பெண்களும் கும்பலாய்க் கூடிவந்தனர். ஆனால் அவர்களை

நிஸ்தாரிணி மெதுவாய் வெளியே அனுப்பிவிட்டாள். அறைக்குள் வந்ததும் குமுதத்தின் கழுத்தில் கையைப் போட்டு, "நான் சற்றுப் பக்கத்து அறைக்குப் போய் வருகிறேன். நீ நன்றாக மனதார அழு. கண்ணீர்விடாமல் உனக்குத் துக்கம் நெஞ்சில் வெடித்து வருகிறது" என்று சொல்லி நிஸ்தாரிணி வெளிச்சென்றாள்.

குமுதம் சோபாவில் உட்கார்ந்தாள். அழுவது பின்னால் ஆகட்டும்; இப்போது முதலில் அவள் தன்னைச் சரிப்படுத்திக்கொள்ளவேண்டும். அவள் இவ்வளவு நாட்களாய் என்ன சங்கல்பம் செய்துகொண்டிருந்தாளோ அதற்கு நேர் விரோதமாய் அவளுடைய மனம் அவளை இழுத்துச் சென்றது. இதுவே அவளுக்குப் பெரிய அவமானமாய்த் தோன்றிற்று. அந்த மனத்தை அடக்குவதற்கு அவளுக்குச் சாவகாசம் கிடைக்கவில்லை. "பகவானே! எனக்குப் பலம் கொடும். என் வாழ்க்கையைப் பாழாய்ச் செய்துவிடாதே. நான் உனது அடிமை. நான் வெற்றியடைந்தால் அந்த வெற்றி உன்னையே சேர்ந்ததாகும்" என்று பிரார்த்தித்தாள்.

அச்சமயம் நல்ல பக்குவ வயதடைந்தவளும் தேகக் கட்டுவாய்ந்தவளும் மாநிறத்தினளுமான ஒரு விதவை அறைக்குள் நுழைந்து, "மோதியின் அம்மா உனக்குச் சற்று ஓய்வுகொடுத்திருக்கிறாள். அதனாலேயே வந்தேன். ஒருவரையும் கிட்ட அண்டவிடுவதில்லை. நாங்கள் என்ன உன்னைத் திருடிக்கொண்டுபோய்விடுவோமா? நான் உன் ஓரகத்தி, சியாமசுந்தரி. உன் கணவர் எனக்கு மைத்துனர். கடைசிவரையில் வரவு செலவுப் புஸ்தகமே அவருக்கு மனைவிஸ்தானத்தில் இருக்குமென்று நாங்கள் நினைத்திருந்தோம். ஆனால் அந்தப் புஸ்தகத்திலும் ஏதோ ஒரு

மந்திரம் இருக்கவேண்டும். அடி அம்மா! அதன் சக்தியினால்தான் அவருக்கு இவ்வளவு வயதான பிறகும் இந்தமாதிரி அழகானவள் கிடைத்திருக்கிறாள். வைத்துக் கொண்டு புடைக்கத் தெரிந்தால் பரவாயில்லை. இந்த இடத்தில் அந்த மந்திரங்கள் ஒன்றும் சொல்லாதே. அம்மா! நீ வாஸ்தவமாகச் சொல்லு, உனக்கு எங்கள் கிழ மைத்துனரைக் கண்டால் பிடிக்கிறதா?" என்றாள்.

குமுதம் ஸ்தம்பித்துவிட்டாள். என்ன பதில்சொல்வதென்று அவளுக்குத் தெரியவில்லை. சியாமா மேலும், "தெரிகிறது. எப்படி இருந்து என்ன செய்வது? இரண்டு பேருக்கும் முடிபோட்டாய்விட்டது. அவரோடு ஏழு அடி எடுத்து முன்வைத்தாகிவிட்டது. இனி இருபத்தொருதரம் காலைப் பின்வைத்தால்கூட, இந்த விலங்குக்குத் தப்பி மீள முடியாது" என்றாள்.

"இது என்ன வார்த்தை மன்னி!" என்றாள் குமுதம்.

"ஏன், பகிங்கரமாய்ச் சொல்வதில் என்ன தப்பிதம்? உன் முகத்தைப் பார்க்கையிலேயே மனத்திற்குள் இருக்கும் சோர்வு தெரிகிறதே. ஆனால் உன்மேல் குற்றம் ஒன்றும் சொல்லக்கூடாது. அவர் எங்கள் வீட்டு மனிதரென்பதால் எங்கள் கண்கள் பொட்டையாய்விடுமா? முரடர் கையில் விழுந்துவிட்டாய். ஜாக்ரதையாய் அவருடன் நடந்துகொள்" என்றாள் சியாமா.

அச்சமயம் மோதியின் தாயார் உள்ளே வந்ததைப் பார்த்துவிட்டு, "பயப்படாதே! அம்மா பயப்படாதே! என் மனோரஞ்சிதமே! நான் இதோ போய்விடுகிறேன். நீ இல்லையென்று தெரிந்ததும் நமது புது நாட்டுப்பெண்ணைப் பார்த்துவிட்டுப் போகலாமென்று வந்தேன். வாஸ்தவ

மாகத்தான்—இது ஒரு லோபிக்குக் கிடைத்த தனமா யிற்றே! ஜாக்ரதையாய்க் காக்கவேண்டும்" என்றாள்.

இவ்விதம் சொல்லிச் சீக்கிரம் அவ்வறையை விட்டுப் போய், சியாமசுந்தரி மறுபடி திரும்பிவந்து, "இந்தா, வெற்றிலை எடுத்துக்கொள்" என்று வெற்றிலைப் பெட்டியை நீட்டினாள். "நீ புகையிலை போட்டுக்கொள்வது வழக்க மில்லையா?" என்றாள். "இல்லை" என்றாள் குமுதம். சியாமா புகையிலையை எடுத்துத் தன் வாயில் போட்டுக் கொண்டு மெதுவாய் வெளிச்சென்றாள். "இதோ நான் வைத்தியம் பண்ணுகிற அம்மாமிக்குச் சாதம் போட்டு அனுப்பிவிட்டு, சீக்கிரம் வந்துவிடுகிறேன்" என்று மோதியின் தாயாரும் அவ்விடத்தை விட்டுச்சென்றாள்.

சியாமசுந்தரி குமுதத்தின் உள்ளத்தில் மிக அருசியான ஓர் எண்ணத்தை உண்டாக்கிவிட்டாள். வானிலும் வையத்திலும், பல வர்ணங்களிலும், பல உருவங்களிலும் விளையாடும் இறைவனுடைய உதவியை நாடி, தன்னைச் சுற்றி யுள்ள உலகை மறந்து அவனுடைய மாயையில் ஈடுபட்டிருக்கலாமென்று நினைத்திருந்தபொழுது, சியாமா அவளுடைய கனவை வந்து கெடுத்தாள். குமுதம் தன் கண்களை மூடிக்கொண்டு தனக்குள், "கணவரின் வயது அதிகம். அதனால் அவரிடம் அன்பு செலுத்த முடியவில்லை என்ற வார்த்தையை என்னால் நினைக்கவும் முடியவில்லையே. ஐயோ! வெட்கம்! வெட்கம்! கேவலமான பெண்களல்லவோ அவ்விதம் செய்வார்கள்!" என்று எண்ணிக் குமுறினாள். சிவன் ஸதியை மணந்துகொண்ட கதையை அவள் மறக்கவில்லை. சிவனை நிந்திப்பவர்கள் அவனுடைய வயதைச் சுட்டிக்காட்டிக் குறைகூறினாலும் ஸதி அதைக் காதில் போட்டுக்கொண்டாளா!

கணவரின்வயது அல்லது ரூபத்தைப்பற்றி அதுவரையில் குமுதம் சிந்தித்ததே இல்லை. அது எவ்விதமிருந்தால் என்ன? காதல்மணத்தில் திகழும் குணம், அழகு, ஒற்றுமை, சுகம் இவைகளின் பிரயோஜனத்தைக் குமுதினி எண்ணவே இல்லை. வேண்டுமென்றே தானே இழைத்துக் கொண்ட தலைவிதியைப் பூசி மறைக்க விரும்பினாள்.

அச்சமயம் பூப்போட்ட சொக்காயும், ஜரிகைக் கரையுள்ள வேஷ்டியும் தரித்த ஓர் ஆறுவயதுப் பிள்ளை அவள் அறைக்குள் நுழைந்து சந்தோஷிக்கச் செய்யும் விரிந்த கண்களால் குமுதத்தை நோக்கிப் பயந்தவண்ணம் மிருதுவான குரலில், "பெரியம்மா!" என்றான்.

குமுதம் அவனைத் தன்மடியில் இழுத்துவைத்துக் கொண்டு, "ஏனப்பா! உன் பெயரென்ன?" என்று கேட்டாள். பையன் அதிக கௌரவத்துடன், "ஸ்ரீ மோதிலால் கோஷால்" என்று முன்னும் பின்னும் பட்டங்கள் சேர்த்துச் சொன்னான். அவனை எல்லாரும் "ஹாப்லு" என்றே கூப்பிட்டார்கள். ஆகையால் தகுந்த இடம், காலம், பாத்திரம் மூன்றும் கிடைத்தால் அவன் தன் ஆத்ம கௌரவத்தைக் காப்பாற்றிக்கொள்ளும் நிமித்தம் தகப்பனார் கொடுத்த பெயரை இவ்விதம் சம்பூர்ணமாகச் செய்து சொல்வது வழக்கம். அச்சமயம் குமுதத்தின் உள்ளம் புண்பட்டு நொந்திருந்தது. அந்தக் குழந்தையை மார்போடு அணைத்துக்கொண்டது அவளுக்குப் புத்துயிர் வந்தமாதிரியாயிற்று. இவ்வளவு தினங்கள் தான் பூஜித்து வந்த பகவான் கோபாலனே குழந்தை வடிவமாய்த் தன் மடியில் வந்து உட்கார்ந்திருப்பதுபோல் தோன்றிற்று. திக்கற்றவளாய் அவனை நாடின இச்சமயம் அவனே வந்து, "இதோ உன்னைச் சமாதானம் செய்ய நானிருக்கிறேன்"

என்று சொல்வதுமாதிரி யிருந்தது. அக்குழந்தையின் அழகிய கழுத்தைத் தடவிக்கொடுத்து, "கோபாலா! புஷ்பம் வேண்டுமா?" என்று கேட்டாள்.

குமுதத்தின் வாயிலிருந்து கோபாலன் என்ற பெயரைத் தவிர வேறு வார்த்தை வெளிவரவில்லை. தன் பெயர் இவ் விதம் திடீரென்று மாற்றப்பட்டதைப்பற்றி மோதிக்கு ஆச் சர்யமே. இருந்தும் அது சொல்லப்பட்ட குரலின் இனிமை யில் ஈடுபட்ட அவனுக்கு அதில் குற்றம் தோன்றவில்லை. இதற்குள் பக்கத்து அறையிலிருந்து மோதியின் அம்மா குழந்தையின் குரலைக் கேட்டுவிட்டு ஓடிவந்தாள். "அட குரங்கே, நீ இங்கேயும் வந்துவிட்டாயா?" என்று திட்டி னாள். ஸ்ரீ மோதிலால் கோஷாலின் கௌரவம் எல்லாம் இப்போது போய்விட்டது. பெரியம்மாவின் தலைப்பைப் பிடித்துக்கொண்டு பரிதாபமான கண்களுடன் அம்மா வைப் பார்த்தவண்ணம் நின்றிருந்தான். குமுதம் அவனைக் கட்டியணைத்துக்கொண்டு, "இருக்கட்டுமே" என்றாள்.

"இல்லை, அம்மா! அதிக நேரமாய்விட்டது. இவன் தூங்கப்போகட்டும். இவனைப் போல் இறைபடும் வஸ்து இந்த வீட்டில் ஒன்றுமில்லை" என்று சொல்லி மோதியின் தாயார் பிள்ளையைத் தூங்க அழைத்துச் சென்றாள்.

இந்தச் சிறிய விஷயத்திற்கே குமுதினியின் மனத்தி லுள்ள பாரம் லேசாகிவிட்டது. தான் கேட்ட பிரார்த்தனை பகவானுக்கு எட்டி இருக்கிறதென்றும், தன் வாழ்க்கை யின் மார்க்கத்தில் இனி அக்குழந்தையைப் போன்ற இனிய வஸ்துக்களும் கிடைக்குமென்றும் எதிர்நோக்கிச் சற்றுச் சமாதானமடைந்தாள்.

## 23

இரவு வெகு நேரம் இருக்கும். நிஸ்தாரிணி எழுந்து பார்த்தாள்; படுக்கையில் குமுதினி, தன் மடியில் இரு கரங்களையும் கூப்பிய வண்ணம், தியானத்தில் ஆழ்ந்து யாரையோ எதிரில் பார்ப்பதுபோலிருந்தாள். மதுசூதனனைத் தன் மனப்பீடத்தில் ஏற்றுக்கொள்ள, ஏதோ ஒன்று அவளைத் தடுத்தபோதிலும், புருஷனைத் தெய்வ மகிமையில் மறைத்துக்கொள்ள விரும்பினாள். அவள் பூஜையைக் கடினமாகச் செய்த பகவான் இலேசானவர் அல்லர்! இது அவள் பக்தியைச் சோதிக்கக் கடினமான பரீக்ஷை அல்லவா! சாளக்ராமம், பார்க்கப் போனால் ஒரு கல். அதன் மகிமை வெளிக்குத் தெரிகிறதா? ஆனால் அதன் மூலமாகத் தெரியும் ஸ்ரீ வைகுண்டநாதனுடைய பெருமை பக்தியினால் அல்லவா உண்டாகிறது!

"பகவான் எங்கே தன்னை மறைத்துக்கொண்டாலும், நான் அவரைத் தேடாமல் விடமாட்டேன். அவருடைய சரணங்களில் என்னை ஸமர்ப்பித்துக்கொள்வேன். என்னை அவரால் ஏமாற்ற முடியாது; "மேரேகிரிதர் கோபால் ஔர் நாஹி கோஹீ" (குன்ற மேந்திய கோபாலனே என் புகலிடம்; மற்றொருவரும் எனக்கில்லை) என்று நினைத்து நெக்குருகி, அண்ணாவிடம் கற்றுக்கொண்டதும் மீராபாய் இயற்றியதுமாகிய இந்தப் பாட்டை அடிக்கடி மனத்தினுள் பாடிக்கொண்டாள். மதுசூதனன் தன்னிடம் காட்டிய மூர்க்க நடத்தையை அவள் பொருட்படுத்தவில்லை. நீர்மேல் குமிழி என்று எண்ணித் தன் வேதனையை ஒதுக்கிவைத்தாள். நித்தியமான ஒரு மெய்ப்பொருள் அல்லவா எல்லா நிஷ்டூரங்களையும் மறைத்துச் சமரசமாகக் கொண்டுபோகிறது! வேறு எவராலும் அம்மாதிரி பாவிக்க

முடிகிறதா? "ஔர் நா ஹீ கோஹீ, ஔர் நா ஹீ கோஹீ" அவள் மனத்தில் பின்னும் ஒரு வருத்தம்: அவளுடைய சாரமற்ற சூன்யமான வாழ்க்கை—அதையும் "மாயை" என்று எண்ண விரும்பினாள். இதுவரை, எவரை நம்பி வளர்ந்து வந்தாளோ, அப்பேர்ப்பட்ட ஒரு வஸ்துவை மறந்துவிட்டால் இந்த வாழ்க்கை அர்த்தமில்லாமல் போய்விடுகிறது. அவனுடன் வேற்றுமை? "இந்த சூன்யமான வியர்த்த வாழ்வே எனக்குப் பரிபூர்ண இஷ்டமாயிருக்கிறது.

'பாபே சாடே மாயே சாடே சாடே ஸகா ஸஹீ
மீரா ப்ரபு லகன் லகீ யோ ந ஹோய ஸோயீ' *

தந்தை கைவிட்டாலும், தாயார் கவனிக்காமற் போனாலும், மற்றெல்லாரும் விட்டகன்றாலும் அந்த நித்ய புருஷன்மாத்திரம் கைவிடமாட்டான்.)

அப்படியும் கைவிட்டால் மீண்டும் மனத்திலுள்ள சூன்யத்தைப் பூரணமாக்கவே அம்மாதிரிச் செய்கிறான். நான் எதற்கும் ஆயத்தமாயிருக்கிறேன். நடப்பது நடக்கட்டும்." மனத்தில் சுழலும் அந்த இனிய கீதம் தன்னையும் மீறித் தொண்டையிலிருந்துவருவதை அவள் அறியவேயில்லை. பகவானுடைய சாந்நித்தியத்தில் ஈடுபட்டிருந்தாள். இரு விழிகளிலிருந்தும் நீர் தாரைதாரையாகக் கொட்டிக் கொண்டிருந்தன.

மோதியின் தாயார் ஒன்றுமே பேசாமல் மௌனமாக இவைகளையெல்லாம் கவனித்துவந்தாள். சிறிது நேரம் கழித்துக் குமுதினி இறைவனை நமஸ்கரித்து ஒரு பெரு

* बापे छाड़े माये छाड़े छाड़े सगा सही ।
मीरा प्रभु लगन लगी यो न होय सोयी ॥

மூச்சு விட்டுப் படுக்கையில் சாய்ந்தாள். இதற்கு முன் வராத எவ்வளவோ எண்ணங்கள் நிஸ்தாரிணியின் மனத்தில் தோன்றின:

"என்ன! எனக்குக் கலியாணம் ஆகும்போது நான் சிறிய பெண்ணாயிருந்தேன். எண்ணம் வியசனம் என்று ஒன்று உண்டா என்பது எனக்குத் தெரியாது. சிறுவர்கள் கையில் கொடுத்த பழத்தைச் சட்டென்று யோசிக்காமல் வாயில் போட்டுக்கொள்வதுபோல நானும் சம்சாரத்தில் கண்ணை மூடிக்கொண்டு நுழைந்தேன். என்னை ஒன்றும் பாதிக்கவில்லை. எங்களைப் போன்றவர்களைப்பற்றி யாரும் சிரமம் எடுத்துக்கொள்ளவில்லை. இன்றைக்குச் சாந்திக் கல்யாணம் என்றால் எங்களுக்குப் பயமாக இல்லை. அதிசயமாக இருந்தது. ஒரு விளையாட்டு என்றே எண்ணினோம். நாளைக்கு இவளுக்குச் சாந்தி முகூர்த்தம். ஏன் இப்படி இவள் வேதனைப்படுகிறாள்? பெரிய மைத்துனர் இன்னும் இவள் வரைக்கும் அசல் புருஷன்தானே? இருவரும் ஒற்றுமைப்பட நாளாகும். அவரால் இவளை எப்படித் தீண்டமுடியும்? இந்தப் பெண்மணி அந்த அந்யாயத்தைச் சகிப்பாளா? பணம் சம்பாதிக்க இத்தனை நாட்கள் பொறுத்தவர், இவள் மனத்தை அடைய இரண்டொரு நாள்தான் பொறுத்தால் என்ன? தனலக்ஷ்மியைத் தேடி அலைந்தவர் இந்த மகாலக்ஷ்மியை அடையச் சற்று நிதானமாகத்தான் வந்தால் என்ன?"

இவ்வளவு பெரிய எண்ணங்கள் நிஸ்தாரிணிக்கு என்றும் வந்ததே இல்லை. குமுதினியைப் பார்த்ததும் அவளிடம் உள்ளத்துள்ளே அன்பு பொங்கிற்று. அதுவே இதற்குக் காரணம். அந்த அன்பின் பூர்வபீடிகை, அவள் விப்ரதாஸை ஸ்டேஷனில் பார்த்தபொழுது நிகழ்ந்தது.

ஸாக்ஷாத் பீஷ்மரே மஹாபாரதத்திலிருந்து இறங்கி வருவதுபோல், வீரதேஜஸ்ஸுடன், மஹாதபஸ்வியை யொத்த சாந்தம், விநயம், வருத்தக்குறிப்பு நிறைந்த அவன் முகபாவம் இவைகளைக் கண்டு நிஸ்தாரிணியின் கண்கள் குளிர்ந்துவிட்டன. அவளுக்குமட்டும் 'யாரும் ஒன்றும் சொல்லாது இருந்தால் அவருடைய பாதங்களைத் தொட்டுக் கண்ணில் ஒற்றிக்கொள்ளலாம்' என்ற ஆசை இருந்தது.

ஸமூகத்தில் தென்படும் ஜாதிவித்யாஸத்தைத் தவிர்த்து, ரத்தத்தில் ஊறிவரும் உயர்குலம் என்னும் வேற்றுமை ஒன்று இருக்கிறது. அது கொஞ்சத்தில் மறைந்து போவதில்லை. ரத்தத்தில் ஊறின ஒரு வேற்றுமை பெண்களின் உள்ளத்தை வாட்டுவதைப் போல் புருஷர்களின் மனத்தை வாட்டுவதில்லை. சிறுவயதிலேயே விவாகம் நடந்துவிட்டதால் மோதியின் தாயாருக்கு, இதன் மர்மத்தைத் தன் விஷயத்தில் தெரிந்துகொள்ள அவகாசம் ஏற்படவில்லை. ஆனால் குமுதினியின் மூலமாக இதன் உண்மையை அறிந்துகொண்டாள். அப்பொழுது அவள் உடல் சிலிர்த்தது. ஓர் திடுக்கிடும் காட்சியை தன் கண்முன் பார்ப்பதுபோலிருந்தது. இருண்ட குகை. துஷ்ட ஜந்து ஒன்று நாக்கை நீட்டிக்கொண்டு, பாயச் சித்தமாய் இருக்கிறது. குகையின் வாயில் குமுதினி சகாயமற்றவளாய் நின்றுகொண்டு பகவானைக் கூவி அழைக்கிறாள்! மோதியின் தாயாருக்கு ஆத்திரம் மனத்தில் மூண்டது; "இந்தப் பகவானுடைய தலையில் இடிவிழ! இவளை இந்த ஆபத்திற்கு உட்படுத்திய இறைவனா இன்று காப்பாற்றப்போகிறான்? ஐயோ!"

---

## 24

மறுநாட்காலை குமுதத்திற்குத் தமையனிடமிருந்து தந்தி வந்தது. "பகவான் உன்னை ஆசீர்வதிப்பாராக!" என்று அதில் காணப்பட்டது. அவள் அந்தத் தந்திக் காகிதத்தைத் தன் இடுப்பில் பத்திரமாகச் செருகிக் கொண்டாள். அதனால் அவளுக்குச் சற்று நிம்மதி ஏற்பட்டது. எனினும் 'அண்ணா தன் உடம்பைப்பற்றி ஏன் ஒன்றும் எழுதவில்லை? வியாதி அதிகமாய்விட்டதா?' என்று நினைத்தாள். அண்ணாவைப்பற்றி ஒவ்வொரு விஷயமும் தெரிந்து இருந்தவளுக்கு இன்று எல்லாம் மறைவாக இருந்தன.

அன்று சாந்திமுஹூர்த்தம். வீட்டில் நிறைய மனிதர்கள் வந்திருந்தார்கள். வீட்டுப்பெண்கள் குமுதத்தைச் சுற்றிக்கொண்டு கொஞ்சங்கூட ஓய்வு கொடுக்காமல் பரிகாசம் செய்தார்கள். ஒரு நிமிஷங்கூடத் தனித்து இருக்கமுடியவில்லை. ஆனால் இன்று தன் இஷ்டப்படி சிந்தித்து ஆலோசிக்க அவள் தனிமையை வேண்டினாள்.

அவளுடைய படுக்கை அறைக்கு அடுத்தாற்போல் ஸ்நான அறை. அங்கே குளிப்பதற்குக் குழாயும், நன்றாக ஸ்நானம் செய்வதற்கேற்றபடி நீரைச் சிதறும் வண்ணம் த்வாரங்களையுடைய குழாயும் இருந்தன. சற்றுச் சந்தர்ப்பம் கிடைத்ததும் தன் பெட்டியிலிருந்து பகவான் ராதாகிருஷ்ணனின் படத்தை எடுத்து, குமுதம் ஸ்நான அறைக்குள் சென்று கதவைத் தாழ்ப்பாளிட்டாள். அங்கே வெண்மையான பளிங்குக்கல்மேடைமீது அப்படத்தை வைத்து அதனடியில் தரையின்மீது உட்கார்ந்து திரும்பத் திரும்ப தன் மனத்தில், "நான் உம்மைச் சேர்ந்தவள். என்னை உமது பாதகமலத்தில் இன்றே சேர்த்துக்கொள்க.

அவர் எனக்கு வேறு இல்லை. நீரே அவர். உம்முடைய இருவடிவு என் வாழ்நாளிலும் வந்து பிரகாசிக்கட்டும்" என வேண்டிக்கொண்டனள்.

விப்ரதாஸிற்கு இன்ப்ளுயன்ஸாவுடன் கபஜுரமும் கண்டிருப்பதாக டாக்டர்கள் அபிப்பிராயப்பட்டனர். ஆகையால் சாந்திமுஹூர்த்தச் சீர்வகைகளுடன் நவகோபாலன் மட்டும் கல்கத்தா வந்திருந்தான். அதிக விமர்சையுடன் சீர்வகைகளைச் சேர்ப்பித்தான். விப்ரதாஸ் இருந்திருந்தால் இவ்வளவு ஆடம்பரத்திற்குச் சம்மதித்திருக்க மாட்டான்.

கோஷால குடும்பத்தார் கொஞ்சம் தாழ்ந்த வகுப்புப் பிராமணர்கள் என்ற வதந்தி பரவியதால் குமுதத்தின் தமக்கைகளைக் கலியாணத்திற்கு அனுப்ப அவர்கள் புக்ககத்தார் சம்மதிக்கவில்லை. குமுதத்தின் கடைசித் தமக்கை மாத்திரம் தன் வீட்டில் கணவனுடன் சண்டையிட்டுப் பிடிவாதம் செய்து இந்தச் சாந்திமுர்ஹூத்தத்திற்கென்று கல்கத்தா வந்திருந்தாள். ஆனால் நவகோபாலன், "நீ போனால் நம் குடும்பத்திற்குத் தலை இறக்கம்" என்று அவளைச் சம்பந்தி வீட்டிற்குப் போகக்கூடாதென்று தடுத்துவிட்டான். அவன் தன்னைச் சேர்ந்த இரண்டு மூன்று சிறு பெண்களை மாத்திரம் ஒரு வேலைக்காரியுடன் அனுப்பிவைத்திருந்தான். இன்னும் ஒற்றுமை ஏற்படவில்லை. ஒருவேளை என்றைக்குமே ஏற்படாதோவென்று குமுதினி எண்ணினாள்.

குமுதத்தை அலங்கரித்தனர். அவளுடன் பேசிக்கொண்டிருந்தவர்களின் பரிகாசமும் முடிந்துவிட்டது. இரவில் புருஷர்கள் போஜனம் ஆயிற்று. மதுசூதனன் தனக்கு மறுநாள் அதிக வேலை இருப்பதால் அன்று

எல்லாவற்றையும் சீக்கிரம் முடிக்கவேண்டுமென்று உத்தர விட்டிருந்தான். ஒன்பதுமணிக்குள் எல்லாம் முடிந்து பந்திபோஜனமும் முடிந்தது. ஆகாயத்தில் வல்லூறைக் கண்ட புறவைப்போல் குமுதத்தின் இதயம் அடித்துக் கொண்டது. ஜில்லிட்டு அவள் உள்ளங்கைகள் வியர்த்தன. முகம் வெளுத்தது. அறையை விட்டு வெளிவருகையிலேயே மோதியின் தாயாரைக் கண்டு, "என்னைச் சற்று நேரம் எங்காகிலும் த்னிமையான இடத்திற்கு அழைத்துப் போ; எனக்குக் கொஞ்சம் நிம்மதிவேண்டும்" என்று கெஞ்சி னாள். நிஸ்தாரிணி சட்டென்று அவளைத் தன் படுக்கை பறையில் விட்டுக் கதவைச் சார்த்திவிட்டு வெளியில் நின்றுகொண்டு, "உன் விதியும் அதுவா?" என்று தன் கண்களைத் துடைத்துக்கொண்டாள்.

பத்து நிமிஷமாயிற்று. கால்மணியுமாயிற்று. மாப் பிள்ளை படுக்கை அறை போய்விட்டார். 'பெண் எங்கே? பெண் எங்கே?' என்று தேடினார்கள்.

"எதுக்கு இவ்வளவு ஆர்ப்பாட்டம்! அவள் நகை களைக் கழற்றிவிட்டுத்தானே வரவேண்டும்?" என்று நிஸ்தா ரிணி அவர்களுக்குப் பதில்சொன்னாள்; "வருவாள், இதோ வருவாள்" என்றே நிஸ்தாரிணி சொல்லிவந்தாள். குமுதத் திற்குத் தன்னை ஆச்வாஸப்படுத்திக்கொள்ளச் சாவகாசம் கொடுக்க அவள் விரும்பினாள். ஆனால் கால் மணி ஆகியும் குமுதம் வெளிவராமலிருக்கவே கதவைத் திறந் தாள். குமுதம் தரையில் மூர்ச்சையாகக் கிடந்தாள்.

வீடு அல்லோலகல்லோலப்பட்டது. எல்லாரும் ஓடிச் சூழ்ந்துகொண்டார்கள். சிலர் தண்ணீர் தெளித் தனர். சிலர் விசிறி எடுத்து விசிறினர். குமுதத்திற்குச்

சற்றுநேரம் கழித்து நினைவு வரவும், "அண்ணா" என்றாள். எங்கே இருக்கிறோமென்பதே அவளுக்கு மறந்துவிட்டது. அவர்களை விலக்கிவிட்டு நிஸ்தாரிணி குமுதத்தைத் தன் மடியில் எடுத்து விட்டுக்கொண்டு, சமாதானப் படுத்திக் காதோடு, "பயப்படாதே அம்மா! பயப் படாதே" என்று சொல்லி மற்றவர்களை, "நீங்கள் ஏன் இங்கே கூடிநிற்கிறீர்கள்? இவளை நான் அழைத்துச் செல்கிறேன்" என்று விலக்கினாள். குமுதமும் மெது வாய் எழுந்து பகவந்நாமத்தைத் தனக்குள் திருப்பித் திருப்பிச் சொல்லிக்கொண்டு அருகில் ஒரு படுக்கையில் ஆழ்ந்த நித்திரையிலிருந்த மோதியை அண்டி அவள் நெற்றியில் முத்தமிட்டாள்.

பிறகு நிஸ்தாரிணி குமுதத்தைப் படுக்கை அறை வரையில் அழைத்துச் சென்று, "இன்னும் பயமாயிருக் கிறதா?" என்று கேட்டாள். குமுதம் தன் கைமுஷ்டியை நன்றாக இறுக்கிக் கொண்டு சிரித்தவண்ணம், "எனக்கு ஒரு பயமும் இல்லை" என்று சொல்லி, "நான் போகிறேன். என்னைச் சுற்றி எல்லாம் இருட்டு. என் உள்ளம் வெளிச்ச மாயிருக்கிறது. 'மேரே கிரிதர் கோபால் அவுர்நாஹி கோயி'" என்று மனத்தில் ஜபித்துக்கொண்டாள்.

---

## 25

இதற்குள் சியாமசுந்தரி மதுசூதனனிடம் அவசர அவசரமாய்ச் சென்று, "பெண் மூர்ச்சையாய்விட்டாள்" என்று தெரிவித்தாள். மதுசூதனனுக்குச் சட்டென்று கோபமுண்டாயிற்று. "ஏன், அவளுக்கு என்னவாம்?" என்று கேட்டான்.

"அதென்னவோ எனக்குத் தெரியாது. அவள் அண்ணு அண்ணு வென்று புலம்புகிருள். நீங்கள் போய்ப் பாருங்களேன்."

"எதற்காக? நான் என்ன அவள் அண்ணுவா?"

"கோபிக்காதேயுங்கள். இவர்களெல்லாம் பெரிய வீட்டுப்பெண்கள். கொஞ்சம் மெதுவாகத்தான் வசமாவார்கள்."

"தினமும் அவள் மூர்ச்சிப்பது, நான் அவளுக்கு வைத்தியம் செய்வதா? இதற்காகவா கலியாணம் செய்து கொண்டேன்?"

"நீங்கள் இம்மாதிரி பேசுவதைக் கேட்டு எனக்குச் சிரிப்பு வருகிறது. எங்கள் நாளில் பெண்கள் பிடிவாதம் பிடித்தால், அவர்களை அடக்கி ஆள்வார்கள். இப்போதோ மூர்ச்சை அடைகிருர்கள். அதைத் தெளிய வைக்க வேண்டாமா?"

மதுசூதனன் கடுகடுத்து உட்கார்ந்திருந்தான். சியாமசுந்தரி இரக்கத்துடன் அவனருகில் சென்று அவன் கைகளைப் பிடித்துக்கொண்டு, "இந்தமாதிரி வருத்தப்படாதீர்கள். அதைப் பார்க்க எனக்குச் சகிக்கவில்லை" என்ருள்.

இதற்குமுன் சியாமா ஒருமுறையும் மதுசூதனனுக்கு இவ்வளவு அருகில் சென்றதில்லை. அதிகப்பிரஸங்கியான சியாமா எப்பொழுதும் அவன் எதிரில் மௌனியாய் விடுவாள். அவனுக்கு அதிகம் பேசினுல் பிடிக்காதென்பது தெரியும். ஆனுல் இன்று இங்கே உட்கார்ந்திருக்கும் மதுசூதனன் தினப்படி எஜமானனுய் ஆட்சி புரியும் மதுசூதனனல்லனென்பதை அவள், ஸ்திரீகளுக்கு இயற்கையாயுள்ள புத்திக்கூர்மையினுல் தெரிந்துகொண்

டாள். அவன் இன்று அசக்தனுயிருந்தான்; சுயமரியாதை யைக் காப்பாற்றிக்கொள்வதில் அவ்வளவு ஜாக்கிரதையுட னில்லை. மைத்துனன் கைகளுடன் தன் கையைச் சேர்த்தது அவனுக்கு வெறுப்பை உண்டாக்கவில்லை என்று சியாமா உணர்ந்தாள். புதிய மனைவி அவன் ஆத்மாபிமானத்திற்குக் குறைவு உண்டாக்கியதால் அவன் மனத்தில் ஏற்பட்ட புண் மற்ருேர் இடத்தில் கௌரவம் பெற்றதால் சற்று ஆறுதல் அடையலாயிற்று. சியாமாவாகிலும் அலக்ஷியம் செய்யாதிருந்தாளே என்ற திருப்தி அவனுக்கு. சியாமா என்ன? குமுதத்திலும் அழகில் குறைந்தவளா? அவள் கறுப்பு என்பது உண்மையே. ஆனுல் அவளுடைய கண்கள்! அவளுடைய அழகிய கேசம்! அன்புக்கென்று ஏற்பட்ட அவளுடைய அதரங்கள்!

"இதோ பெண் வருகிருள். நான் போகிறேன். ஆனுல், அவளுடன் கோபிக்காதேயுங்கள். பாவம்! சின்னப் பெண் தானே அவள்!" என்று சொல்லிச் சியாமா சென்ருள்.

குமுதம் அறையில் நுழைந்ததும் மதுசூதனன் "இந்த மூர்ச்சையையும் பிறந்த அகத்திலிருந்து கொண்டுவந்து விட்டாயோ? ஆனுல் அதெல்லாம் இங்கே செல்லாது. உன் நாகரகத்து ஜாலத்தையெல்லாம் விட்டுவிட வேண்டும்" என்ருன்.

குமுதினி அவன் முகத்தை ஒருமுறை பார்த்துவிட்டு மௌனமாய் நின்ருள். ஒரு வார்த்தைகூடச் சொல்ல வில்லை.

அவள் சும்மா இருப்பதைப் பார்த்து மதுசூதனன் பின்னும் அதிகம் கோபமடைந்தான். அப் பெண்ணின் மனத்தை அறிய அவனுக்கு உள்ளூர இருந்த ஆவலே அவன் கோபத்திற்குக் காரணம்.

"எனக்கு வேலை அதிகம். மயக்கம் வரும் பெண் டாட்டிக்குச் சுச்ரூஷை செய்துகொண்டிருக்க முடியாது. இதோ சொல்லி விடுகிறேன்" என்றான்.

குமுதம் மெதுவாய், "என்னை அவமானம் செய்ய வேண்டுமென்று விருப்பமா? நீங்கள் எது செய்தாலும் நான் பொறுத்துக்கொள்கிறேன்" என்று சொன்னாள்.

யாருடன் இந்த வார்த்தையைச் சொல்லுகிறாள்? சூன்யப் பார்வைகளுள்ள விரிந்த அவள் கண்கள் எதிரில் யார் தோன்றுகிறார்! மதுசூதனன் பிரமித்து, 'பதிலுக்கு என்னுடன் ஏன் வாயாடவில்லை? இவள் எண்ணந்தான் என்ன?' என்று வியப்புற்றான்.

பிறகு குரூட்டு யோசனையுடன், "நீ உன் அண்ணாவின் சிஷ்யை. ஆனால் நான் அவனைவிட மேலானவனென்பது ஞாபக மிருக்கட்டும். அவனை இந்தக் கையால் வாங்கி இந்தக் கையால் விற்றுவிட என்னால் முடியும்" என்றான்.

அவள் தமையனைவிடத் தான் உயர்ந்தவனென்பதைக் காண்பிப்பதாய் அவன் எண்ணம்.

"கடூரமாய் இருக்க வேண்டுமென்றால் இருங்கள். ஆனால் சின்னத்தனமாகப் பேசி உங்களைக் குறைத்துக் கொள்ளவேண்டாம்" என்று சொல்லிக் குமுதம் சோபாவில் உட்கார்ந்தாள்.

"என்ன! எனக்கா சின்ன புத்தி? என்னைவிட உன் தமையன் பெரியவனா?"

"நீங்கள் பெரியவரென்று அறிந்துதானே உங்கள் வீடு வந்திருக்கிறேன்?"

"பெரியவனென்று வந்தாயா? அல்லது பணத்தைப் பார்த்தா?"

உடனே குமுதினி சோபாவிலிருந்து எழுந்தாள். அறைக்கு வெளியில் இருந்த திறந்த மாடிக்குச் சென்று அங்கே தரையில் உட்கார்ந்தாள்.

கல்கத்தாவில் குளிர்காலத்து இரவு. வானம் சினந்து இருந்தது. நக்ஷத்திரங்களின் ஒளியில் நடுக்கம் தென்பட்டது. ஒரு சிந்தையும் இல்லை, வேதனையுமில்லை. பனித்திரையால் சூழப்பட்டவள் போலானாள்.

அவள் இவ்விதம் பேசாமல் வெளிச்செல்வாளென்று மதுசூதனன் எதிர்பார்க்கவே இல்லை. தான் இவ்வாறு அவளிடம் தோல்வியுற்றதனாலுண்டான கோபம் முழுதும் அவள் தமையன்மேல் பாய்ந்தது. சிறிது நேரம் கட்டிலில் உட்கார்ந்து மேலே பார்த்தவண்ணமாயிருந்தான். பிறகு பொறுமையை இழந்தவனாக எழுந்து வெளிமாடிக்குச் சென்று, "இந்தக் குளிரிலும் பனியிலும் இங்கே என்ன செய்கிறாய்? எழுந்து வா உள்ளே" என்றான். குமுதம் ஒருவித சங்கோசமும் இல்லாமல், உண்மையில் ஒருவித உணர்ச்சியுமில்லாமல், எழுந்து நின்றாள். அவன் அவள் கையைப் பிடித்து, "வா உள்ளே" என்று அழைத்துச் சென்றான். அவள் மதுசூதனனையே பார்த்தாள். அவளுக்கு இருந்த சிறிதளவு அகந்தையும் பறந்துபோய்விட்டது. அண்ணாவின் தந்திக்காகிதத்தைத் தன் வலது கையினால் மார்பில் அழுத்திக்கொண்டாள். புருஷனுடைய பிடியிலிருந்து அவள் தன் கையை விடுத்துக்கொள்ளவில்லை. மௌனமாகச் சயன அறையை அடைந்தாள்.

---

## 26

மறுதினம் விடியற்காலையிற் குமுதம் எழுந்திருந்த சமயம் அவள் கணவன் தூங்கிக்கொண்டிருந்தான். அவள்

மிகவும் ஜாக்கிரதையுடன் ஓசைப்படுத்தாமல் எழுந்து அவனுடைய காலடியில் வணங்கினாள். பிறகு ஸ்நான அறைக்குள் சென்று ஸ்நானம் செய்ததும், பின்புறமாய் உள்ள மாடி வெளியில் வந்து உட்கார்ந்தாள். அப்பொழுது கீழ்வானத்தில் பனிப்படலத்தின் மூலமாக, மங்கலான பொன்னிறக் கீறல் தென்பட்டது.

நேரமாகி வெயில் வந்த பிறகே அவள் மெதுவாய்க் கீழே இறங்கி வந்தாள். அறையில் அவள் கணவன் இல்லை. மேஜைமேலிருந்த தன்னுடைய முத்துக் கோத்த பட்டுப் பையைத் திறந்து அண்ணுவின் தந்தியை வைக்கப்போன சமயம் பையில் நீல மோதிரத்தைக் காணவில்லை. அதி காலையில் செய்த மானஸபூஜையினால் அவள் முகத்தில் ஒளிர்ந்த ஓர் அமைதியான தோற்றம் மறைந்துபோய், அவள் கண்களில் கோபம் பொங்கியது. ஏதாவது ஆகாரம் பண்ண அவளைக் கூப்பிட மோதியின் தாயார் வந்தாள். குமுதினி விடை பேசாமல் கற்சிலைபோல் நின்றிருந்தாள்.

மோதியின் தாயாருக்குப் பயமுண்டாகிவிட்டது. அவளருகில் உட்கார்ந்து அன்புடன், "என்ன அம்மா? என்ன சமாசாரம்?" என்று கேட்டாள்.

குமுதத்தினால் பேசமுடியவில்லை. உதடுகள் துடித்தன.

"சொல்லுங்கள், மன்னி. என்னிடம் சொல்லுங்கள். உங்களுக்கு எதனால் வருத்தம்?"

நெஞ்சம் அடைத்துக் கொள்ள, கம்மின குரலில் குமுதம் "திருடிக்கொண்டு போய்விட்டார்" என்றாள்.

"எதை?"

"அண்ணு ஆசீர்வாதத்துடன் கொடுத்த என் மோதிரத்தை."

"அவசரப்படாதே. விளையாட்டாக எடுத்திருப்பார். மறுபடியும் தாஞகவே திருப்பிக் கொடுத்துவிடுவார்."

"திரும்பியா வாங்கிக்கொள்வேன்? இன்னும் என்ன அக்கிரமம் பண்ணுகிருரோ பார்க்கலாமே?"

"அது அப்புறம் இருக்கட்டும்; ஏதாகிலும் கொஞ்சம் சாப்பிட வா."

"வேண்டாம். இந்த வீட்டுச் சாப்பாடு எனக்குத் தொண்டையில் இறங்கவேயில்லை."

"நான் வேண்டிக்கொள்கிறேன், என் அம்மா! எனக்காகக் கொஞ்சம் சாப்பிடு."

"இனி என்னுடையது என்று சொல்வதற்கு ஒன்றும் கிடையாதா?"

"கிடையாது. எல்லாம் கணவரைச் சேர்ந்தது; இது உனக்குத் தெரியாதா? கடிதத்தில் அடியாள் என்று கையெழுத்துப்போட்டு எழுதுவதில்லையா?"

"அடிமை! ரகுவம்சத்தில் அஜன் இந்துமதியைப் பற்றிக் கூறும் வார்த்தை அவளுக்கு ஞாபகம் வந்தது:—

*"க்ருஹிணீ ஸசிவ: ஸகீ மித:
ப்ரியசிஷ்யா லலிதே கலாவிதௌ"

இதில் எந்த இடத்திலும் அடிமை, தாஸி என்ற பதம் காணவில்லையே! சாவித்ரி சத்யவானுக்குத் தாதியா? உத்தராராம சரித்திரத்தில் வரும் சீதை ராமருக்கு

---

* "गृहिणी सचिवः सखी मिथः
प्रियशिष्या ललिते कलाविधौ"

அடிமையா! ஸ்திரீகளை அடிமையாகச் செய்பவர் எந்த ஜாதி மனுஷ்யர்?"

"உன் கணவரை உனக்கு நன்ருகத் தெரியாதா? மற்றவர்களை மட்டிலுமல்ல, தம்மையும் அடிமையாகவே செய்து கொள்கிருர். ஆபீஸ் போகாத தினம் தமது கைப்பணத்திலிருந்து தம் ஆபீஸிற்குத் தாமே அபராதம் செலுத்துகிருர். ஒரு சமயம் ஜுரத்தினுல் ஒரு மாதம் ஆபீஸிற்குப் போகவில்லை. அதன் பிறகு மூன்றுமாதம் வீட்டில் சாப்பாட்டுச் செலவு முதல் எல்லாவற்றையும் குறைத்து அந்த ஒரு மாதநஷ்டத்தை ஈடுசெய்தார். தம்மைச் சேர்ந்தவர்களென்று ஒருவரையும் கௌரவிப்பதில்லை. இவ்வீட்டில் எஜமானர்முதல் வேலையாள்வரை எல்லாரும் அடிமைகளே.

குமுதம் சற்று மௌனமாயிருந்துவிட்டு, "நானும் அவ்வித அடிமையாகவே வேலைசெய்கிறேன். நான் இங்கே சாப்பிடும் செலவை ஏதாகிலும் வேலை செய்து தீர்த்துக் கழிக்கிறேன். எனக்கும் ஏதாவது வேலை கொடு. வீட்டுப் பொறுப்பு முழுவதும் நீதானே வகிக்கிருய். என்னையும் உன் ஆளுகைக்குக்கீழ் ஒருத்தியாகப் பாவித்து ஏதாகிலும் வேலை இடு. ராணி என்று சொல்லி என்னை ஒருவரும் அவமானம் செய்யவேண்டாம். ராணியின் அதிகாரம் எனக்கு இல்லை" என்ருள்.

மோதியின் தாயார் சற்றே சிரித்துவிட்டு, "ஆனுல் சரி. நான் சொல்கிறபடி நடக்கவேண்டும். நான் உத்தரவிடுகிறேன். சாப்பிடப் போங்கள்" என்ருள்.

அறையை விட்டு வெளியே செல்லுகையில் குமுதம், "நான் என்னையே அர்ப்பணம் செய்யத் தயாராக வந்தேன். ஆனுல் அதற்கு அவர் ஒருவித ஈடும் கொடுக்கவில்லை. இனி வீட்டில் வேலைசெய்து என் சாப்பாட்டுக் கடனைத்

தீர்க்கிறேன். என் உள்ளத்தை அவர் இனிப் பெறமாட்டார்" என்றனள்.

"விறகு வெட்டுபவன், விறகை வேண்டுவானா? மரத்தை வேண்டுவானா? தோட்டக்காரன் மரத்தை வளர்க்கிறான். அவனுக்கு அது பூவும், பழமும் தருகிறது. நீ விறகு வெட்டுபவரின் கையில் அகப்பட்டிருக்கிறாய். அவர் வியாபாரி ஆயிற்றே. அவர் மனத்தில் எள்ளளவு அநுதாபமாவது கிடையாது" என்றாள் நிஸ்தாரிணி.

நிற்க; குமுதினி ஒருசமயம் தன் அறைக்குள் வந்து பார்க்கையில் டீபாயின்மேல் ஒரு பெப்பர்மிண்டுப் புட்டி இருந்தது. மோதிக்கு அது வேண்டுமென்ற ஆசை. அவன் அங்கேயே வட்டமிட்டுக்கொண்டிருந்தான். நேராக வந்து கேட்கவோ பயம். அவனுக்கு வெட்கம். இங்கே அவளுக்குப் பாறையின் நடுவேகூடப் பூப்பூத்ததுபோலிருந்தது. சாரமற்ற இந்த இல்வாழ்க்கையிலும், ஓர் ஆறுதல் இருந்தது. பெப்பர்மிண்டை அடையவேண்டுமென்று சிறுவன் செய்யும் இந்த ஜாடைகளைப் பார்த்துக் குமுதினிக்குத் துக்கமும் சந்தோஷமும் ஒருங்கே வந்தன. அவனைத் தேடப் புறப்பட்டபொழுது அவன் கதவு மறைவில் பேசாமலிருப்பதைப் பார்த்தாள். அவனுடைய தாயார், அவனை இந்த அறைக்குப் போகக்கூடாதென்று திட்டம் செய்திருந்தாள். அவன் ஏதாவது விஷமம் செய்தால் பெரிய மைத்துனருக்கு எரிச்சல் வந்துவிடப் போகிறதே என்ற பயம் அவளுக்கு. மதுசூதனனுக்கு அவன் விஷயத்தைத் தவிர வேறு எது குறுக்கிட்டாலும் பிடிப்பதில்லை என்று வீட்டில் உள்ளவர்களுக்குத் தெரியும்.

குமுதினி மோதியை அழைத்துச் சென்று அவனை வாரித் தன்மடியில் அமர்த்திக்கொண்டாள். அவளிடம்

இருந்த விளையாட்டுச் சாமான்களை இருவரும் ஒவ்வொன்ருகப் புரட்டிப் பார்த்தனர். கடைசியில், மோதிக்குக் காகிதத்தின்மேல் வைக்கும் கண்ணுடிக்குண்டு ஒன்றின்மேல் இஷ்டம் என்று அறிந்துகொண்டாள். கண்ணுடியின் மூலமாகக் கீழே உள்ள பூவின் சித்திரம் எப்படித் தெரிகிறது என்ற கவனத்தில் மோதி ஆழ்ந்திருந்தான்.

குமுதினி, "அது உனக்கு வேண்டுமா?" என்ருள்.

இவ்வளவு தாராளமாக அந்த வஸ்துவைத் தனக்குக் கொடுத்துவிடுவாள் என்று குழந்தை எதிர்பார்க்கவே இல்லை. அந்த மாதிரி ஒருவர் சொல்வதை இதுவரை அவன் கேட்டதேயில்லை. மோதி வியப்புற்று, சந்தோஷத்துடன் குமுதினியின் முகத்தைக் கவனித்தான்.

குமுதம், "நீ இதை எடுத்துக்கொண்டு போ" என்ருள்.

மோதிக்குத் தன் ஆசையை அடக்கிக்கொள்ள முடியவில்லை. அதை வாங்கிக்கொண்டு குதித்துக்கொண்டே போய்விட்டான்.

அன்று சாயங்காலம் மோதியின் தாயார் வந்து, "என்ன செய்து விட்டீர்கள், மன்னி! மோதியின் கையில் பேபர்வெயிட்டைப் பார்த்துவிட்டு மைத்துனர் அமர்க்களம் செய்துவிட்டார். அதைப் பிடுங்கிக்கொண்டது மாத்திரமில்லாமல், திருடன் என்று திட்டிக் குழந்தையை அடித்தார். பிள்ளை என்னவோ உங்கள் பெயரைக் கூடச் சொல்லவில்லை. பின்ஞல் நானே பிள்ளைக்குத் திருடக் கற்றுக்கொடுத்திருக்கிறேனென்று கூடப் பேச்சுக் கிளம்பும்" என்ருள்.

குமுதம் அசைவற்று மரப்பொம்மைமாதிரி உடகார்ந்திருந்தாள். அவள் மனம் கல்லாய்விட்டது.

அச்சமயம் வெளியில் மதுசூதனனின் செருப்பு ஓசை கேட்கவே நிஸ்தாரிணி சட்டென்று வெளிச்சென்றாள். மதுசூதனன் கையில் கண்ணாடிப்பேபர்வெயிட்டை எடுத்துவந்தான். அதை வைக்கவேண்டிய இடத்தில் வைத்துவிட்டு, நிச்சய மென்று நம்பினவனாய் நிதானமான குரலில், "மோதி இதைத் திருடிக்கொண்டுவந்துவிட்டான். இனி, சாமான்களை ஜாக்கிரதையாகப் பார்த்துக்கொள்ளக் கற்றுக்கொள்" என்றான்.

குமுதம் வெட்டின குரலில், "அவன் திருடவில்லையே" என்றாள்.

"இருக்கட்டுமே, எடுத்துக்கொண்டு வந்திருப்பான்."

"இல்லை, நான்தான அதை அவனுக்குக் கொடுத்தேன்."

"இப்படி எல்லாம் அவனை ஏன் கெடுக்கிறாய்? பத்திரம். என் உத்தரவு இல்லாமல் எந்தச் சாமானையும் யாருக்காவது கொடுக்கப்போகிறாய். இந்தமாதிரி ஏனோ தானோ வென்று இருந்தால் எனக்குச் சுத்தமாகப் பிடிக்காது."

குமுதினி எழுந்து, "என்னுடைய நீலமோதிரத்தை நீங்கள் எடுக்கவில்லையா?" என்றாள்.

"ஆமாம் எடுத்துக்கொண்டேன்."

"கண்ணாடிக் காகிதவெயிட்டிற்கு அது சரியாகப் போய்விடவில்லையா?"

"நீ அதைப் போட்டுக்கொள்ளக்கூடாதென்று நான் தான் உனக்குச் சொன்னேனே."

'உங்களுடைய சாமானைமாத்திரம் நீங்கள் ஜாக்ரதையாக வைத்துக்கொள்ளலாம்; என்னுடையதை நான் ஏன் வைத்துக்கொள்ளக்கூடாது?"

"இந்த வீட்டில் உனக்கென்று சொந்தமான வஸ்து ஒன்றும் இல்லை."

"இல்லையா? அப்படியானால் இந்த அறையும் உங்களுடையதே. வைத்துக்கொள்ளுங்கள்" என்று சொல்லிக் குமுதம் அறையைவிட்டு வெளிச்சென்றாள்.

அவள் சென்றதும் சியாமா வந்து "குமுதம் எங்கே?" என்று கேட்டாள்.

"எதற்கு?"

"காலை முதல் சாப்பிடவேயில்லை."

"அப்படியா! நூர் நகரத்து ராஜகுமாரி சாப்பிடாவிடில் போகட்டுமே! நீங்கள் அவளுக்குத் தாதிகளா? ஏன் கவலைப்படுகிறீர்கள்?"

"சே, பாவம்! சின்னக்குழந்தை. அவள் பட்டினியிருந்தால் எங்களால் பார்த்துப் பொறுத்திருக்க முடியாது."

மதுசூதனன் உறுமிவிட்டு, "போ, போ! ஒன்றும் செய்ய வேண்டாம். பசித்தால் தானே வருகிறாள்" என்றான்.

சியாமா வருத்தப்படுகிறவள்போல் முகத்தை வைத்துக்கொண்டு வெளியே சென்றாள். மதுசூதனனுக்குக் கோபத்தால் ரத்தம் தலைக்கேறிற்று. சட்டென்று ஸ்நான அறைக்குள் சென்று குழாயைத் திறந்துவிட்டு அதன் கீழே தன் தலையை நீட்டினான்.

---

## 27

சாயங்காலமாயிற்று. அன்று எங்கும் தேடியும் குமுதத்தைக் காணவில்லை. கடைசியில் சமயலறைக்கு

அடுத்திருக்கும் விளக்குகள், மண்ணெண்ணெய்த் தகரம் முதலியவைகளைச் சேர்த்துவைக்கும் ஒரு சிறிய அறையில் தரையில் பாயை விரித்து அதில் உட்கார்ந்திருக்கிறாளென்று தெரியவந்தது.

மோதியின் தாய் வந்து, "இது என்ன, மன்னி?" என்று கேட்டாள்.

"இந்த அறையிலிருந்துகொண்டு விளக்குத் துடைக்கிறேன். இதுதான் இந்த வீட்டில் என் இடம்."

"பொருத்தமான வேலையே. இந்த வீட்டைப் பிரகாசமாய்ச் செய்வதற்கு வந்தவர்களல்லவோ நீங்கள்? இருந்தாலும் விளக்குகளை நீங்கள் நேரே கவனிக்க வேண்டுமென்ற அவசியமில்லை. வாருங்கள், போகலாம்" என்றாள் நிஸ்தாரிணி.

குமுதம் அதற்குச் சம்மதிக்கவில்லை.

"ஆனால் நானும் உங்களுடன் இங்கேயே படுத்துக் கொள்கிறேன்."

குமுதம் தீர்மானமாய்க் கூடாதென்று சொல்லி விட்டாள். மிக்க அடக்கத்துடன் நடந்துகொள்ளும் இப்பெண்மணிக்கு அதிகாரம் செலுத்தும் சக்தியும் இருப்பதை நிஸ்தாரிணி உணரலானாள். அவள் பேசாமல் திரும்பிப்போக வேண்டியதாயிற்று.

மதுசூதனன் இரவு படுக்க வந்த சமயம் குமுதத்தின் செய்தியைக் கேட்டான். அவள் விளக்கு அறையில் இருக்கிறாள் என்றதைக் கேட்டதும், "நல்லது, அங்கேயே இருக்கட்டும். எவ்வளவு நாட்கள் இருக்கிறாளோ பார்க்கலாம். தடுத்தால் பிடிவாதம் அதிகமாகும்" என்று எண்ணினான்.

இவ்விதம் எண்ணி அவன் விளக்கை அணைத்துவிட்டுத் தூங்கலாமென்று படுத்தான். ஆனால் தூக்கம் வரவேயில்லை. ஒவ்வொரு சிறிய சப்தம் கேட்கும்பொழுதும் அவள் வருகிறமாதிரி இருக்கும். ஒருமுறை அவள் கதவிற்கு வெளியில் நிற்கிறாற் போலிருந்தது; படுக்கையிலிருந்து எழுந்து வெளியே சென்று பார்த்தபோது அங்கே ஒருவரு மில்லை. இரவு நேரமாக ஆக அவன் மனத்தில் படபடப்பு அதிகரித்தது. குமுதத்தைப்பற்றி நினைக்காமலிருக்க விரும்பினான். ஆனால் அவ்விதம் செய்ய அவனால் இயல வில்லை. இருந்தும் தானாக வலுவில் சென்று அவளிடம் தோல்வியுறுவது அவனுடைய கொள்கைக்கு விரோத மானது. குளிர்ந்தநீரால் தன் முகத்தைக் கழுவிக்கொண்டு திரும்பப்படுத்தான். தூக்கம் வரவில்லை. இங்குமங்குமாய்ப் புரண்டு புரண்டு படுத்துவிட்டுக் கடைசியில் எழுந்து உட்கார்ந்தான். தன் ஆவலை அவனால் அடக்கவே முடிய வில்லை. கையில் ஒரு விளக்கை எடுத்துக்கொண்டு தூங்கு பவர் அறைகளையெல்லாம் மெதுவாய்த் தாண்டிச் சென்று பின்புறமிருக்கும் அந்த விளக்கு அறையண்டை போய்ச் சேர்ந்தான்; கதவில் காதுவைத்துக் கேட்டும் உள்ளிருந்து ஒருவித சப்தமும் கேட்கவில்லை. ஜாக்கிரதையாகக் கதவைத் திறந்து பார்த்தான். குமுதம் தரையில் பாயை விரித்துப் படுத்துத் தூங்கிக்கொண்டிருந்தாள். அந்தப் பாயே ஒருபுறம் சுருட்டப்பட்டு அவளுக்குத் தலையணை யாய் உதவிற்று. மதுசூதனனுக்கு நித்திரை இல்லாம லிருந்த மாதிரியே குமுதத்திற்கும் நித்திரை இல்லாம லிருந்திருக்கவேண்டும். ஆனால் அவள் சுகமாய்த் தூங்கிக் கொண்டிருந்தாள். விளக்கு வெளிச்சம் முகத்தில் பட்ட சமயங்கூட அவள் விழித்துக்கொள்ளவில்லை. அச்சமயம்

குமுதம் தூக்கத்தில் 'உஸ்' என்று திரும்பிப் படுத்தாள். வீட்டுக்காரன் விழித்துக் கொள்வான் போலிருப்பதைக் கண்டால் திருடன் எவ்விதம் ஓடுவானோ அதேவிதம் மதுசூதனன் அங்கிருந்து வேகமாய் வெளியே வந்தான். தன்னுடைய தோல்வியைக் கண்டு குமுதம் உள்ளத்துள் சிரிக்கப்போகிறாளே யென்று அவனுக்குப் பயமா யிருந்தது.

விளக்கு அறையிலிருந்து வெளிவந்து மதுசூதனன் தாழ்வாரத்தில் போய்க்கொண்டிருக்கையில் சியாமாவை எதிரில் கண்டான். அவள் கையில் ஓர் அகல் விளக்கு இருந்தது.

"நீங்கள் இங்கு எங்கு வந்தீர்கள்?"

மதுசூதனன் அவள் கேட்டதற்கு விடை கூறாமல், "நீ எங்கே போகிறாய்?" என்று கேட்டான்.

"நாளைக்கு நான் ஒரு விரதம் செய்கிறேன். அதற்குப் பிராம்மண போஜனத்திற்கு ஏற்பாடு செய்யப் போகிறேன். உங்களைக்கூடக் கூப்பிடப்போகிறேன். ஆனால் உங்களுக்குத் தக்ஷிணை கொடுக்கும் சக்தி எனக்கு இல்லை."

மதுசூதனன் ஏதோ சொல்ல வாயெடுத்தான்; ஆனால் அதை அடக்கிக்கொண்டான்.

பின்னிரவின் அந்த அந்தகார வேளையில் விளக்கு வெளிச்சத்தில் சியாமா மிக அழகுள்ளவளாய்த் தென்பட்டாள். சற்றுச் சிரித்தவண்ணம் அவள், "இன்று படுக்கையை விட்டு எழுந்ததும் உங்களைப்போன்ற பாக்கியசாலியின் முகத்தில் விழித்திருக்கிறேன். இன்று எனக்கு மிக நல்ல நாளாகவே இருக்கும். என்னுடைய விரதம் பலிக்கும்" என்றாள்.

பாக்கியசாலி என்ற வார்த்தையை அவள் சற்று அழுத்தமாகச் சொன்னாள். மதுசூதனன் காதில் அது பரிகாசமாய்ச் சொல்வதுபோல் பட்டது. குமுதத்தைப் பற்றித் தெளிவாகக் கேட்கச் சியாமாவிற்குத் தைரியம் இல்லை; "நாளைக்குக் கட்டாயம் விருந்து சாப்பிட வரவேண்டும். வராமற்போனால் பாருங்கள்" என்று சொல்லிவிட்டுச் சென்றாள்.

தன் அறைக்கு வந்ததும் மதுசூதனன் படுக்கையில் படுத்தான். ஒருகால் குமுதம் வருவாளோ வென்று விளக்கை வெளியிலேயே வைத்திருந்தான். குமுதத்தின் நித்திரையிலாழ்ந்த அந்த வதனம் அவன் மனத்தைவிட்டு நீங்க மாட்டேனென்றது. போர்வையிலிருந்து வெளியே நீட்டிக் கொண்டிருந்த குமுதத்தின் ஒப்பற்ற கரங்களின் அழகே அடிக்கடி அவன் மனத்தில் தோன்றியது. விவாகத்தின்போது அக்கரத்தை அவன் கையில் பற்றிக்கொண்ட சமயம் அதை நன்றாய்ப் பார்க்கவில்லை. இன்று பார்க்கப் பார்க்க அதன் ஆசை தீரவில்லை. இந்தக் கையைத் தனதென்று சொல்லக்கூடிய அதிகாரம் அவனுக்கு என்று கிடைக்கும்? படுக்கையில் அவனால் படுத்திருக்க முடியவில்லை. எழுந்து உட்கார்ந்தான். விளக்கை ஏற்றிக் குமுதத்தின் மேஜை அறையைத் திறந்து அதிலிருந்து அவளுடைய முத்துப்பையை எடுத்துப் பிரித்துப் பார்த்தான். முதல் முதல் விப்ரதாஸின் தந்தி வெளியே வந்தது: "பகவான் உன்னை ஆசீர்வதிப்பாராக!". அதற்குப் பின் ஒரு புகைப்படம். அது குமுதத்தின் இரண்டு சகோதரர்களுடையது. பிறகு ஒரு கடிதத்துண்டு. அதில் விப்ரதாஸ் கைப்படக் கீதையிலுள்ள ஒரு சுலோகம் எழுதியிருந்தது:

"यत् करोषि यदश्नासि यज्जुहोषि ददासि यत् ।
यत्तपस्यसि कौन्तेय तत् कुरुष्व मदर्पणम् ॥"

பொறுமையால் மதுசூதனன் மனம் புண்பட்டது. பறகளாக கடித்து மனத்திற்குள் விப்ரதாஸைச் சபித்தான். விப்ரதாஸைத் தொலைப்பதற்குச் சந்தர்ப்பம் கிடைக்கு மென்று அவன் நன்கு அறிவான். கொஞ்சங்கொஞ்சமாய் ஆணியை முடுக்கவேண்டியதுதான். இருந்தும் குமுதத்தின் பத்தொன்பது வருஷவாழ்க்கை மதுசூதனனின் ஆளு கைக்கு வெளியில் கழிக்கப்பட்டிருக்கிறது. அதை விப்ரதாஸ் கையிலிருந்து சட்டென்று பிடுங்கிக்கொள்ளக் கூடுமானால்தான் மதுசூதனனுக்கு நிம்மதி உண்டாகும். ஆனால் குமுதத்தைத் தன் ஆளுகைக்குக் கீழ்ப்படியச் செய் வதற்குப் பலவந்தம் என்பதைத் தவிர அவனுக்கு வேறு வழி தெரியவில்லை. அந்த முத்துப்பையைத் தைரியமாய்த் தூரத்தில் எறிவதுகூட இன்று அவனால் இயலவில்லை. மோதிரத்தைத் திருடின சமயம் அவனுக்கு அதிக தைர்ய மிருந்தது. அச்சமயம் மற்றப் பெண்களைப் போலக் குமுதமும் தன் ஆளுகைக்குக் கீழ்ப்படிந்து நடப்பா ளென்றும், அந்த ஆளுகையே அவளுக்குப் பிடித்ததாக இருக்குமென்றும் அவன் எண்ணியிருந்தான். ஆனால் இன்று குமுதம் என்ன செய்வாள், என்ன செய்யமாட் டாள் என்பதைச் சொல்ல அவனால் முடியவில்லை.

குமுதினியைத் தன்னுடைய வாழ்க்கையுடன் சேர்த்துப் பிணைப்பதற்கு ஓர் உபாயமே அவனுக்குத் தென்பட்டது. சந்தான மார்க்கமே அதற்கு வழி. அதைப்பற்றி எண்ணி அவன் சிறிது சாந்த மடைந்தான்.

இவ்விதம் சிந்தித்திருக்கையில் மணி ஐந்தடித்தது. குளிர்காலமாகையால் இன்னும் இருள் அகலவில்லை. சிறிது

நேரத்தில் வெளிச்சம் ஏற்பட்டுவிடும். இன்றிரவு வீணை தாகுமே! மதுசூதனன் சட்டென்று எழுந்து அவ்வறையை விட்டுச் சென்றான். விளக்கு அறையின் அருகிலே செல்கையில் வேண்டுமென்றே காலடிச் சத்தம் நன்றாய்க் கேட்கும்வண்ணம் நடந்து சென்றான். கதவையும் பலமாய் இடித்துத் திறந்தான். ஆனால் அங்கே அறையில் குமுதம் இல்லை! எங்கே போய்விட்டாள்?

முற்றத்துக் குழாயிலிருந்து தண்ணீர் கொட்டும் சப்தம் கேட்டது. மாடி வராந்தாவில் நின்றுகொண்டு எட்டிப்பார்த்தான். உலகத்திலேயே மிகப் புராதனமானவைகளும், சற்றும் உபயோகமே இல்லாதவைகளுமான சில குத்துவிளக்குகளைக் குமுதம் புளியினால் துலக்கிக் கொண்டிருந்தாள். இது வேண்டுமென்றே காரியத்தை வளரச் செய்யும் முயற்சி; குளிர்காலத்தில் விடியற் காலத்தில் நித்திரையில்லாமல் எழுந்து வந்த கஷ்டத்தை இன்னும் அதிகமாக்கிக்கொள்வது!

மதுசூதனன் மேல்வராந்தாவிலிருந்து ஸ்தம்பித்த வண்ணம் இதைப் பார்த்துக்கொண்டிருந்தான். இந்த அபலையின் பலத்தை எவ்விதம் வெல்வது! பொழுது விடிந்ததும் வீட்டிலிருப்பவர்கள் எழுந்து குமுதம் இவ்விதம் குத்துவிளக்கைத் துலக்குவதைப் பார்த்தால் என்ன நினைப்பார்கள்? பாத்திரங்கள் துலக்கும் வேலையாள் என்ன எண்ணுவான்? வீட்டிலிருப்பவர் எல்லார் எதிரிலும் அவனைக் கேவலமாகச் செய்வதற்கு இதைவிட எளியவழி இருக்குமா?

முதலில் மதுசூதனன் அவளை உடனேயே கண்டிக்கலாமென்று எண்ணினான். பிறகு காலைவேளையில் முற்றத்தில் இருவருக்கும் வாக்குவாதம் ஏற்பட்டால் வீட்டில்

இருப்பவர்கள் எல்லாரும் படுக்கையை விட்டு வேடிக்கை பார்க்க வந்துவிடுவார்களே யென்பதை எண்ணிப்பார்த்துப் பின்வாங்கினான். தன் தம்பி நவீனனைக் கூப்பிட்டு, "வீட்டில் என்ன என்னவோ நடக்கிறது! நீ அவைகளை யெல்லாம் கவனிப்பதில்லையா?" என்று கேட்டான்.

நவீனன் வீட்டிற்கு மானேஜர். அவன் பயந்துபோய், "ஏன்? என்ன நடந்தது அண்ணா?" என்று வினவினான்.

அண்ணா கோபங்கொள்வதற்கு ஏதாகிலும் காரண மிருந்தால் அதை யார்மேலாவது காட்டுவது வழக்கம் என்று நவீனனுக்குத் தெரியும். குற்றவாளி கைக்கு அகப்படாவிட்டால் குற்றமற்றவனையாவது தண்டித்தே ஆகவேண்டும்; இல்லாவிடில் ஒழுங்கு இருக்காது. குடும்பத்தில் அவன் ஹத்து போய்விடும்.

"உன் மன்னி இந்த மாதிரி பைத்தியக்காரத்தனமாய்க் காரியம் செய்கிறாளே; அதற்குக்காரணம் எனக்குத் தெரியாதென்று நினைக்கிறாயா?" என்று மதுசூதனன் கேட்டான்.

மன்னி என்ன பைத்தியக்காரக்காரியம் செய்தாளென்று கேட்க நவீனனுக்குத் தைரியம் இல்லை. அவ்விதம் கேட்டால் தப்பிதமாகிவிடுமே!

"உன் மனைவியே அவளைக் கெடுக்கிறாள். இதில் சந்தேக மில்லை" என்றான் மதுசூதனன்.

மிக வெட்கத்துடன் நவீனன், "இல்லையே—அவள்——" என்றான்.

"என் கண்ணாலேயே பார்த்தேன்" என்று மதுசூதனன் சொன்னான். அதற்குமேல் சொல்வதற்கு ஒன்றுமில்லை. என் கண்ணால் பார்த்தேனென்ற அந்த வார்த்தையில் கண்ணாடிப் பேபர்வெயிட்டின் விஷயமும் உள்ளடங்கி இருந்தது.

## 28

உண்மையான பிரியத்தினால் மோதியின் தாய் குமுதத்தைத் தன் ஆதரவின்கீழ்ச் சேர்த்துக்கொண்டதைக் கண்டு அதனால் பலவிதக் குழப்பம் ஏற்படுமென்று நவீனன் உணர்ந்தான். வீட்டிலிருக்கும் மற்றப்பெண்கள் ஏதாகிலும் புகார் கிளப்பாமலிருக்கமாட்டார்கள். இவ்விதமே இப்போது ஏதாகிலும் ஏற்பட்டிருக்குமென்று நவீனன் எண்ணிக் கொண்டான். ஆனால் அதை மதுசூதனனிடம் சொல்வதில் பயனில்லை. அதனால் அவன் கோபமே அதிகரிக்கும்.

என்ன நடந்ததென்பதை மதுசூதனன் தெளிவாய்ச் சொல்லவில்லை. சொல்ல வெட்கமாயிருந்திருக்கலாம். என்ன செய்யவேண்டும் என்பதும் தெளிவாய் இல்லை. தெளிவாய்த் தெரிந்தது என்னவெனில்: எல்லாவற்றிற்கும் காரணம் நவீனனின் மனைவி என்பதே. கணவனென்ற முறையில் எல்லாவற்றிற்கும் உத்தரவாதம் நவீனன்.

நவீனன் தன் மனைவியிடம் சென்று, "ஒரு புகார் வந்திருக்கிறது" என்றான்.

"ஏன்? என்ன?"

"என்ன என்பது அந்தர்யாமிக்கும், அண்ணாவுக்கும், உனக்கும் தெரிந்திருக்கலாம். ஆனால் தண்டனையை அநுபவிக்கவேண்டியவன் நான்தான்."

"ஏன்? ஏன் அவ்விதம்?"

"என்மூலமாய் உன்னைத் திருத்தி உன் மூலமாய் அவர் சம்பாதித்திருக்கும் புதுச்சரக்கைச் சரிப்படுத்தலாமென்றுதான்."

"அப்படியானால் என்னைத் திருத்த ஆரம்பியுங்களேன். அண்ணாவைவிட உங்களுக்குக் கைராசி இருக்கிறதாவென்று பார்க்கலாம்."

நவீனன், "அண்ணாவினுடைய விலையுயர்ந்த, டின்னர் ஸெட்டில் ஒன்றை அவனுடைய ஓரியா வேலையாள் உடைத்துவிட்ட சமயம் அந்த வேலையாளின் அபராதத்தில் அதிக பாகம் நான் கொடுக்கவேண்டியிருந்த தென்பதை மறந்துவிட்டாயா? எல்லாச் சாமான்களும் என் பொறுப்பின்கீழ் இருப்பதால் நான் அவ்விதம் செய்ய வேண்டிவந்தது. ஆனால் இப்போது வீட்டிற்குப் புதிதாய் வந்திருக்கும் இந்த வஸ்துவும் என்பொறுப்பா! இருந்தும் இதற்கும் அபராதம் நீயும் நானுமே செலுத்தவேண்டியிருக்கிறது. என்ன செய்யவேண்டுமோ அதைச் சரியாய்ச் சொல், தேவி! என்னை நடுத்தெருவில் இழுத்துவிடாதே" என்று கெஞ்சும் பாவனையாய்ச் சொன்னான்.

"தண்டனை என்றால் என்ன?"

"ரஜபபுரத்திற்கு அனுப்பிவிடுவார். இடையிடையே இதைச் சொல்லியே பயமுறுத்துகிறார்."

"பயப்பட்டால் பயமுறுத்துகிறார். முன்பு ஒரு தடவை அனுப்பிவிட்டுப் பிறகு தந்தி மூலமாய் ரயில் சார்ஜு அனுப்பி வரவழைக்கவில்லையா? உங்கள் அண்ணா கோபத்திலும் கணக்கில் பிசகுவதில்லை. நான் வீட்டு வேலையை மேல்பார்த்துக்கொள்வதால் எவ்வளவு லாபம் இருக்கிறதென்று அவருக்குத் தெரியும். ஒரு பைசா நஷ்டம் ஏற்பட்டாலும் அவரால் பொறுக்கமுடியாது."

"தெரிகிறது. ஆனால் இப்போது என்ன செய்ய வேண்டும் என்பதைச் சொல்."

"அவர் எவ்வளவு பெரிய ராஜாவாயிருந்தாலும் ராணியின் பிடிவாதத்தை அடக்க முடியாது. இந்த மாதிரி விஷயங்களில் கௌரவத்தைப் பார்த்தால் முடியாது. அவரே அந்தப் பொறுப்பைத் தலையில் சுமந்து

திரவேண்டும். படுக்கையறை விஷயங்களுக்குக் கூலிக்காரனைக் கூப்பிடுவது உதவாது. இதை உங்கள் அண்ணாவிடம் போய்ச் சொல்லுங்கள்.''

''அம்மா பரதேவதே! அவருக்கு நான் உபதேசம் செய்யவேண்டிய அவசியமில்லை. கொஞ்சநாள் போனால் தாமே தெரிந்துகொள்வார். அதுவரை இவ்விருவர்களுக்கும் நடுவில் தூதியாகக் காரியம் செய்துவா. பலன் இருந்தாலும் சரி, இல்லாவிட்டாலும் சரி. அவர் உப்பைச் சாப்பிட்டுவிட்டுச் சும்மா உட்கார்ந்திருக்க முடியுமா?''

குமுதத்தைத் தேடிக்கொண்டு நிஸ்தாரிணி சென்றாள். காலைவேளையில் அவள் மேல்மாடியில் இருப்பாளென்று அறிவாள். மேல்மாடியில் நான்குபுறமும் உயரமான சுவர்கள். அவைகளில் இடையே இடையே கண்ணறைகள். இங்குமங்கும் சில தொட்டிகள் வைக்கப்பட்டிருந்தும் அவைகளில் செடி ஒன்றும் இல்லை. ஒரு மூலையில் இருப்புவலை அடித்த ஒரு பெரிய கூண்டு ஒடிந்து கிடந்தது. அதனுடைய மரப்பாகம் முழுதும் உளுத்துப்போய்விட்டது. முன்பு எப்போதோ ஒரு சமயம் இதில் முயல்களோ புறாக்களோ வைத்து வளர்க்கப்பட்டன; இப்போது இது வற்றல் வடாம் முதலியவைகளைக் காக்கைகள் தின்றுவிடாமல் உலர்த்துவதற்கு உபயோகப்படுகிறது. இந்த மாடியிலிருந்து மேலே இருக்கும் வானம்மாத்திரம் கண்களுக்குத் தெரியுமே யன்றிச் சுற்றுமுற்றும் உள்ளவற்றில் ஒன்றும் தெரியாது. மேற்குப்புறத்தில் ஓர் ஆலையின் புகைபோக்கி இருந்தது. இரண்டு தினங்களாய்க் குமுதம் மாடியில் உட்கார்ந்திருந்தபோது அந்தப் புகைபோக்கியினின்று வெளிவரும் புகை ஒன்றே அவள் கண்களில் தென்படும் வஸ்துவாயிருந்தது. சூனிய

மான அவ்வானத்தில் அது ஒன்றே உயிருடன் விளங்கி ஏதோ ஓர் மனக்கலக்கத்தினுல் சுழன்று சுழன்று செல்வது போலிருந்தது.

விளக்குகளைத் தேய்த்துவிட்டு இருட்டாயிருக்கையிலேயே குமுதம் ஸ்நானம் செய்து மேல்மாடிக்குச் சென்று கிழக்குப்புறம் நோக்கி உட்கார்ந்தாள். நனைந்த கூந்தல் பின்னுல் தொங்கிக்கொண்டிருந்தது. அலங்காரம் ஒன்றும் இல்லை; அவள் அணிந்திருந்தது ஒரு மட்டமான கறுப்புக்கரைபோட்ட வெளுப்புப்புடைவை; குளிருக்காக ஒரு பட்டுச்சால்வை.

சிலநாட்களாய் இப்பெண்மணி தன் மனோபாவத்தால் சிருஷ்டிக்கப்பட்ட காதலன் உருவைத் தன் அந்தக்கரணத்தில் வைத்துத் தன் இதயத்தில் மூண்ட தீரா ஆவலைத் தணித்துவந்தாள். அவளுடைய பூஜை, விரதம், புராணக்கதைகளைக் கேட்ட ஞானம் எல்லாம் சேர்ந்து இந்த உருவத்தை ஓர் உயிருள்ள வஸ்துவாக அவள் மனத்தில் தோன்றும்படிச் செய்துவிட்டன. அவளுடைய மானஸ பிருந்தாவனத்தில், மறைவில் மணாளனுடன் கூடும் அபிஸாரிகை என்று தன்னை நினைத்துக்கொண்டு காலையில் கண்விழித்ததும் ராமகேளி ராகத்தில்,

ஹமாரே துமாரே ஸங்க ப்ரீதி லகீ ஹை
ஸுன மனமோஹன ப்யாரே*
(மையல் கொண்டோம் நாமிருவரும்
உள்ளம் கவர்அழகா———)

என்ற பாட்டைப் பாடுவாள்.

---

* हमारे तुम्हारे संग प्रीति लगी है
सुन मनमोहन प्यारे—"

தன் மனமோஹனனை உத்தேசித்து அவள் செய்யும் ஆத்மநிவேதனத்தைக் கேட்டு அவன் வருவதற்குள், அவளே தன் ஆந்தரமான அர்க்யத்தை அடிக்கடி அனுப்பிக் கொண்டிருந்தாள். மழைக்கால இரவுகளில் பின்புறத் தோட்டத்திலிருக்கும் மரங்களின் தளிர்களில் படும் மழைத்தாரையின் இனிய ஓசையைக் கேட்டு, கானடா ராகத்திலுள்ள பின்வரும்பாட்டு அவளுக்கு ஞாபகம் வரும்:—

பாஜே ஜநநந மேரே பயரியா
கைஸே கரோ ஜாஊம் கரோயாரே*

[நூபுரத்தின் ஓசை ஜனன் ஜனன் என்று என் மனத்திடை ஒலிக்கிறது. மனம் போன வழியே என் கால்கள் செல்கின்றன. வீட்டிற்குத் திரும்பி எப்படிப் போவது நான்?]

நேரில் உருவமூலமாய்க் காணலாமென்று எவனை நம்பியிருந்தாளோ அவனை இசையின் மூலமாகக் கண்டுகொண்டாள். ஆழ்ந்த இன்பமோ வேதனையோ அவள் அநுபவிக்கும்போது மனத்தில் தோன்றியவண்ணம் ஒருவனை அடையக் கொடுத்துவைத்தால், அவள் உள்ளத்தில் ஒலிக்கும் பாட்டுக்கள் உயிர்பெற்று உருவுடன் விளங்கியிருக்கும். ஆனால் அம்மாதிரி ஒருவரும் அவள் அகத்தில் புகவில்லை. வெறும் கற்பனையின் நிழலில் அவள் தனியாக இருந்துவந்தாள். அவளுக்குத் தன் வயதோடொத்த ஒரு கூட்டாளியும் இல்லை. அதனாலேயே சியாமசுந்தரனின் பாதங்களைத் தேடி, அவளுடைய மாசற்ற காதலின் பூஜைமலர்கள் சென்றன. அன்று கடகன் விவாகத்தைப் பற்றி முதல் முதல் பிரஸ்தாபிக்க வந்தபோது இதே

---

* बाजे जननन मेरे पयरिया
कैसे करो जाऊँ घरोयारे

உள்ளக்கிளர்ச்சி அவளைப்பகவானுடைய சம்மதத்தைநாட ஒரு பூவை ஏவிற்று. அவள், "இப்பொழுதும் உன்னை நான் அடைவேனா?" என்று வினவும்போது நீல அபராஜிதம், "இதோ உனக்கு நான் கிடைத்திருக்கிறேன்" என்றது.

அந்தரங்கத்தில் அவள் கொண்ட முயற்சி யாவும் வியர்த்தமாய் முடிந்தது—ஒரு பாறையில் மோதுண்டு ஒரே க்ஷணத்தில் மூழ்கிவிட்டது. நெக்குண்ட யௌவனம் இன்று மறுபடியும் பூவை யாருக்குச் சமர்ப்பிக்கலா மென்று தேடியலைகிறது. மனத்தட்டில் அர்ப்பணமாய் வைத் திருந்த மலர்கள், இன்று பிரயோஜனமற்றுப் போயின. அதனால் அல்லவோ அவள் மனம் துடித்தது? "மேரே கிரிதர கோபால அவுர் நாஹி கோஈ" என்று அழைக் கிறது. ஆனால் அதன் இசை சூனியத்தில் வியர்த்தமாகிச் செல்கிறதே ஒழிய, ஓர் இடத்தையும் அடையவில்லை. இந்தச் சூன்யம் குமுதினியின் மனத்தில் திகிலை விளைவித்து விட்டது. அவளுடைய வாழ்நாட்கள் கடைசிவரை இதோ தெரியும் புகைச்சுருளைப்போல் தனிமையாக வெய்துயிர்த் துப் போகுமோ?

நிஸ்தாரிணி குமுதத்தின் பின்னால் சற்றுத் தூரத்தில் உட்கார்ந்திருந்தாள். காலை நேரத்து நிர்மலமான பிரகாசத் தில் அந்த மாடியில் அலங்காரமில்லாமலேயே விளங்கும் அவளுடைய சௌந்தர்யத்தைக் கண்டு அவள் ஆச்சரியப் பட்டாள்; "இந்த வீட்டில் இவள் எவ்விதம் சோபிப் பாள்? இங்கிருக்கும் பெண்களுடன் இவளை எவ்விதம் ஒப்பிட முடியும்? இவளுடைய அருமையை அறியாமல் அவர்கள் இவளைக் கோபித்துக்கொள்கிறார்களே தவிர இவளுடைய சினேகத்தை அடைய விரும்பவில்லையே!" என்று எண்ணலானாள்.

இவ்விதம் உட்கார்ந்திருக்கையில் குமுதம் தன் இரண்டு கைகளாலும் முன்றானையை எடுத்து முகத்தை மூடிக் கொண்டு அழுவதை அவள் பார்த்தாள். நிஸ்தாரிணியால் பொறுக்க முடியவில்லை. சட்டென்று அருகில் சென்று கழுத்தைக் கட்டிக்கொண்டு, "அம்மா, அழாதேயம்மா, என் செல்வமே! என்ன நடந்தது? எனக்குச் சொல்" என்று கேட்டாள்.

குமுதினியால் சிறிது நேரம் பேசவே முடியவில்லை. தன்னைச் சற்றுச் சமாளித்துக்கொண்டு, "இன்றைக்கும் கூட அண்ணாவிடமிருந்து கடிதம் வரவில்லை. அவருக்கு என்ன நேர்ந்ததோ ஒன்றும் தெரியவில்லை" என்றாள்.

"கடிதம் வருவதற்கு நாளாய்விட்டதோ?"

"ஆய்விட்டதே! அவர் ஜுரமாய்ப் படுத்திருப்பதைப் பார்த்துவிட்டு நான் வந்தேன். செய்தி பெறுவதற்கு என் மனம் எப்படித் துடிக்கிறதென்று அவருக்குத் தெரியும்."

தந்தி அடிக்கலாமென்று குமுதம் பலமுறை நினைத்த துண்டு. ஆனால் யாரிடம் அதைக் கொடுத்து அனுப்பு வது? அன்று மதுசூதனன் விப்ரதாஸ் தனக்குக் கடன் பட்டவனென்று சொல்லித் தன் பெருமையைச் சொன் னது முதற்கொண்டு மதுசூதனன் எதிரில் தன் தமையன் வார்த்தையை எடுக்கக் குமுதினிக்கு நாவெழவில்லை. இன்று நிஸ்தாரிணியிடம், "அண்ணாவிற்கு என்பேரால் தந்தி அனுப்ப முடியுமானால் நான் பிழைப்பேன்" என்றாள்.

"அப்படியே செய்கிறேன். யாருக்குப் பயப்பட வேண்டும்?"

"என்னிடம் ஒரு ரூபாய்கூட இல்லை என்பது உனக்குத் தெரியுமல்லவா?"

"இது என்ன? மன்னி, நன்றாயிருக்கிறது! வீட்டுச் செலவிற்காக என்னிடம் கொடுத்திருக்கும் ரூபாய் முழுவதும் உங்களுடையதுதானே? நான் உங்கள் உப்பைத் தானே சாப்பிட்டுவருகிறேன்!"

"இல்லை, இல்லை; இந்த வீட்டில் ஒன்றும் என்னுடையதல்ல. ஒரு செப்புக்காசுகூட என்னுடையதல்ல" என்று குமுதம் ஆக்ஷேபித்தாள்.

"நல்லது அம்மா! உங்களுக்காக நான் என் சொந்த ரூபாயிலிருந்து எடுத்துச் செலவு செய்கிறேன். ஏன் பேசாமலிருக்கிறீர்கள்? இதில் என்ன குற்றம்? நான் கர்வத்துடன் கொடுத்தால் நீங்கள் ரோஷப்பட்டு வாங்கிக் கொள்ளவேண்டாம். பிரியத்துடன் கொடுத்தால் இஷ்டத்துடன் வாங்கிக்கொள்ள மாட்டீர்களா?"

"வாங்கிக் கொள்கிறேன்."

"மன்னி! உங்கள் படுக்கையறை இன்றைக்குக்கூடக் காலியாயிருக்குமா?" என்று நிஸ்தாரிணி கேட்டாள்.

"எனக்கு அங்கே இடமில்லை."

நிஸ்தாரிணி நிர்ப்பந்தம் செய்யவில்லை. அவ்விதம் செய்வது தன் வேலையல்ல, அதைச் செய்துகொள்ள வேண்டியவர் செய்துகொள்ளட்டும் என்பது அவள் எண்ணம். "கொஞ்சம் பால் கொண்டுவரட்டுமா?" என்று மாத்திரம் மெதுவாய்க் கேட்டாள்.

"இப்பொழுது வேண்டாம். சற்றுப் பொறுத்து ஆகட்டும்" என்று குமுதம் சொன்னாள். அவள் தன் தெய்வத்தை இன்னும் தியானத்தில் வரப்பெறவில்லை. தன் மனத்திலுண்டாகும் கேள்விக்குத் தெய்வவாக்காய் ஒரு விடையைப் பெற்ற பிறகே அவளுக்கு அமைதி ஏற்படும்.

மோதியின் தாய் தன் அறைக்குச் சென்று நவீனனைக் கூப்பிட்டு, "கேளுங்கள்: ஒரு வார்த்தை; உங்களைத்தான். மைத்துனரின் ஆபீஸ் அறையில் அவர் மேஜையில் மன்னிக்கு ஏதாவது கடிதம் வந்து வைக்கப்பட்டிருக்கிறதா வென்று பாருங்கள். மேஜையின் அறையைக் கூடத் திறந்து பாருங்கள்" என்றாள்.

"நாசமாய்ப் போச்சு!"

"நீங்கள் போகமாட்டேனென்றால் நானே போய்ப் பார்க்கிறேன்."

"குகைக்குள்ளிருந்து கரடிக் குட்டியைப் பிடிக்கப் ··ார்ப்பதுபோலல்லவோ இருக்கிறது இந்த வேலை!"

"அவர் ஆபீஸிற்குப் போயிருக்கிறார். ஒரு மணிக்குத்தானே திரும்பி வருவார்? அதற்குள்—"

"இதோ பார்; பகலில் இந்த வேலையைச் செய்ய முடியாது. நாலுபக்கமும் யாராவது பார்த்துக்கொண்டே யிருப்பார்கள். இன்று ராத்திரி உனக்குச் சமாசாரம் சொல்கிறேன்."

"சரி, அப்படியே ஆகட்டும். ஆனால் விப்ரதாஸ் பாபு எவ்விதமிருக்கிறாரென்று விசாரித்து நூர்நகரத்திற்கு ஒரு தந்தி அனுப்புங்கள்."

"அது நல்ல காரியம். அண்ணாவிடம் சொல்லிவிட்டு அனுப்பட்டுமா?"

"வேண்டாம்."

"ஏன், நீ வேண்டுமென்றே தொல்லையை வரவழைத்துக்கொள்ளப்போகிறாயா? இந்த வீட்டில் எஜமான் உத்தரவில்லாமல் ஈயைக்கூட ஓட்டக்கூடாதே! நான்—

"மன்னியின் பெயரில் தந்தி போகும். உங்களுக்கு அதைப்பற்றி என்ன?"

"நான்தானே அதை அடிக்க வேண்டும்?"

"அண்ணாவின் ஆபீஸ் தந்திகள் தினமும் கத்தை கத்தையாய்ப் போகின்றன. அவைகளில் இதையும் ஒன்றாகச் சேர்த்து அனுப்புங்கள். இந்தாருங்கள் ரூபாய்; மன்னி கொடுத்தார்."

குமுதினி விஷயத்தில் நவீனனுக்கும் பரிதாப மில்லாமலிருந்தால் இவ்வளவு சாகஸச் செய்கையைச் செய்ய அவன் ஒப்புக்கொண்டிருக்கமாட்டான்.

---

## 29

வழக்கப்படி மதுசூதனன் மத்தியான்னம் சாப்பிடுவதற்காக ஒருமணிக்கு அந்தப்புரம் வந்தான். தத்தம் நியமம்போல் வீட்டுப் பெண்கள் உபசாரம் செய்தார்கள்; ஒருத்தி விசிறி எடுத்து ஈக்களை ஓட்டிக்கொண்டிருந்தாள்; ஒருத்தி பரிமாறினாள். முன்பு கூறியபடி மதுசூதனனின் அந்தப்புரத்தில் ஐச்வர்யத்தின் ஆடம்பரம் அதிகம் இல்லை. பழையநாள் போலவே அவன் உண்டு வந்தான். அரிசி மாத்திரம் அவ்வளவு மட்டமாக இராது. அதற்குக் காரணம் அந்தமாதிரி அரிசி அவனுக்குப் பிடிக்காது என்பதே. ஆனால் சாப்பாடு வாய்க்கு ருசியில்லாது போனாலும் வயிற்றுக்கு நிறைய இருக்கவேண்டும். உபயோகிக்கும் பாத்திரங்களோ மிக உயர்ந்தவை: வெள்ளித்தட்டு, வெள்ளிச்செம்பு, வெள்ளி லோட்டா முதலியவைகள். பருப்பு, குழம்பு, புளியங்காய்த் தொக்கு, பலாக்காய்க்கூட்டு இவைகளே அவன் சாதாரணமாய்ச் சாப்பிடுபவை. சாப்பாடு முடிந்த பின் ஒரு டம்ளர்

நிறையச் சர்க்கரை போட்ட பாலை அதன் கடைசித் துளி வரையிற் பருகிவிட்டு, ஒரு வெற்றிலையில் மொத்தைச் சுண்ணும்பு எடுத்துத் தனது வாயில் ஒரு வெற்றிலையும் பெட்டியில் இரண்டும் வைத்துக்கொண்டு சென்று பதினைந்து நிமிஷம் ஹுக்காக் குடித்து இளைப்பாறுவான். பிறகு உடனே எழுந்து ஆபீஸிற்குச் சென்றுவிடுவான். மிக்க ஏழ்மை நிலைமையிலிருந்ததுமுதல் இன்றுவரை இவ்வளவு நாட்களில் இந்த நியமத்தில் அவன் ஒருவிதத்திலும் மாறி நடந்தது இல்லை. ஆகார விஷயத்தில் அவனுக்குப் பசி மாத்திரம் உண்டே தவிரச் சபலம் கிடையாது.

சியாமசுந்தரி பாலில் சர்க்கரை சேர்த்துக்கொண்டிருந்தாள். அவளுடைய மாணிறமான வர்ணமும், பருமனாக இல்லாமல் புஷ்டியாயிருக்கும் தேகமும் தங்களை விளம்பரப்படுத்திக்கொண்டே இருப்பவைபோலிருக்கும். ஒரு வெளுப்புப் புடைவை தவிர அவள் வேறொன்றும் தரிக்கவில்லை. இருந்தும், பார்க்குங்கால் அவள் எப்போதும் சுத்தமாய்க் காணப்படுவாள். அவள் வயது யௌவன தசையின் எல்லையை அடைந்துவிட்டதென்றாலும் ஆனி மாதத்தின் பிற்பகல்போல் அது நீண்டு இன்னும் மங்கல் தசையை அடையவில்லை. தடித்த புருவங்களுக்குக் கீழே கூர்மையான கறுப்புக் கண்கள், எதிரிலிருப்பதைப் பாராதனபோலத் தோற்றும்; ஆனால் கொஞ்சம் பார்க்கையிலேயே எல்லாவற்றையும் கிரகித்துக்கொள்ளும். அவளுடைய கனியைப்போன்ற அதரங்கள் பல விஷயங்களை ஒளித்துவைத்திருப்பன போலத் தோன்றின. இல்லற வாழ்க்கை அவளுக்கு ஒரு சுவையையும் கொடுக்காமற் போனாலும் அவள் நிறைந்த மனுஷியாயிருந்தாள். அவள் தன்னை மிக மேன்மையாக மதிப்பிட்டிருந்தாள்; தன்

மேன்மையை வெளிப்படுத்தாமல் கருமித்தனமாய்க் காப்பாற்றவேண்டும் என்ற விருப்பமும் அவளுக்கு இல்லை. ஆனால் வேலையில் அவள் மேன்மை வெளிப்படுவதில்லை. அதனால் அவளுக்குத் தன்னைச் சுற்றி இருப்பவர்கள்மேல் சற்று இறுமாப்புடன் கூடின அலட்சியம் தோற்றும். மதுசூதனனுக்கு ஐச்வர்யத்தின் வெள்ளப்பெருக்கு ஏற்பட்ட சமயம் சியாமாவும் இந்தக் குடும்பத்தில் வந்து சேர்ந்தாள். தனது யௌவனமென்னும் மந்திரத்தைக் கொண்டு அந்தக் குடும்பத்தின் சிகரத்தில் தனக்கு ஸ்தானம் ஏற்படுத்திக் கொள்ளவேண்டும் என்று அவள் நிச்சயித்திருந்தாள். மதுசூதனன் மனத்தை அவள் ஒரு தினமாகிலும் அசைத்தது இல்லை என்று சொல்லமுடியாது. ஆனால் மதுசூதனன் அதை ஒருநாளும் ஒப்புக்கொண்டதில்லை. மதுசூதனனுக்கு வேலையில் இருக்கும் சாமர்த்தியம் சாதாரண புத்திசாலித்தனம் மாத்திரமன்று. அது பிரதிபை என்னும் அபார ஊகசக்தியுடன் கூடின புத்தி. இந்தப் புத்தியைக்கொண்டே அவன் தனக்குச் சம்பத்தை உண்டாக்கிக்கொண்டிருந்தான். அவ்விதம் தானே தேடிக்கொண்ட செல்வத்தினால் விளைந்த இன்பத்தில் அவன் ஆழ்ந்து மூழ்கி இருந்தான். அதே ஊகஞானத்துடன் பொருளின் சிருஷ்டிக்காகத் தான் செய்யும் தவத்தைக் கெடுக்க இந்திரன் எவ்வளவோ இடையூறுகளை அனுப்புவானென்று அவன் உணர்ந்துகொண்டான். ஒவ்வொரு க்ஷணமும் தவத்தைப் பங்கம் செய்ய விக்கினங்கள் வந்தபோதிலும், அவன் ஒவ்வொரு தடவையும் தன்னைச் சமாளித்துக்கொண்டான். மத்தியான்ன வேளையில் இந்தச் சொற்பநேரம் தவிரத் தனக்கு வேறு அவகாசமே அமைத்துக்கொள்வதில்லை. இவ்வளவு கடினவேலை செய்யும் அவன் எப்போதாகிலும் நடுவில் நடுவில் சியாமாவைப் பார்ப்பதாலும், அவள்

பேச்சினாலும் தன் சிரமத்தை மறந்திருப்பான். பண்டிகை பர்வநாட்களில் மற்றவர்களுக்குச் சம்மானம் அளிப்பதை விடச் சியாமசுந்தரி விஷயத்தில் அவன் சிறிது பக்ஷபாதம் காண்பித்திருக்கலாம். ஆனால் அந்தப்புரத்தில் அவள் அதிகாரம் செலுத்தும்படி அவன் ஒருநாளும் இடம் கொடுத்தது இல்லை. சியாமா மதுசூதனனுடைய மனப் போக்கை அறிந்து கொண்டாலும், அவனிடமுள்ள பயம் அவளைவிட்டு நீங்கவில்லை.

மதுசூதனன் உண்ணும் சமயம் சியாமா தினமும் அருகிலிருப்பது வழக்கம்; இன்றும் இருந்தாள். அப்போதே ஸ்நானம் செய்துவிட்டு வந்தாள். கறுத்துச் சுருண்டு அடர்ந்த அவளது கேசம் பின்னால் விரிந்து தொங்கிக்கொண்டிருந்தது; அதன்மேல் வெளுப்புப் புடைவையை இழுத்துப் போர்த்தியிருந்தாள்; நனைந்த கூந்தலிலிருந்து தைலவாசனை மிருதுவாய் வந்தது.

பாற் செம்பிலிருந்து கண்களை எடுக்காமலேயே மெதுவாய்ச் சியாமா, "குமுதத்தைக் கூப்பிடட்டுமா?" என்று கேட்டாள்.

மதுசூதனன் வாய்திறந்து ஒன்றும் பதில சொல்ல வில்லை. தன் தமையன் மனைவியை உற்று நோக்கினான். சியாமசுந்தரி மிகப் பயந்துவிட்டாள். தான் சொன்னதை மேலும் விளக்கிக் காட்ட எண்ணி, "சாப்பிடும் சமயம் உங்கள் அருகில் வந்து உட்கார்ந்திருந்தால் நல்லது.. ஏதாவது உங்களுக்குச் சுச்ரூஷை——" என்று சொல்ல ஆரம்பித்தாள்.

மதுசூதனன் முகத்திலிருந்து அவன் தன் மனத்தில் என்ன எண்ணியிருக்கிறா னென்பதை அறியமுடியவில்லை யாகையால் வார்த்தையை முடிக்காமலே சியாமா நிறுத்தி

விட்டாள். மதுசூதனன் மறுபடி தலைகுனிந்து சாப்பிடத் தொடங்கினன்.

சிறிதுநேரம் கழித்துச் சாப்பாட்டுத் தட்டிலிருந்து கண்களை அகற்றுமல், தலை குனிந்த வண்ணம், "அவள் இப்போது எங்கே இருக்கிருள்?" என்று கேட்டான்.

சியாமசுந்தரி பரபரப்புடன், "இதோ பார்த்து வரு கிறேன்" என்றனள்.

மதுசூதனன் புருவத்தை நெரித்து விரல்களை ஆட்டி வேண்டாமென்று தடுத்தான். கேள்விக்கு விடைபெற ஆவலிருந்தும் அதைக் கேட்க அவனுல் இயலவில்லை. மனத்திற்குள் மாத்திரம் அவா இருந்தது. சாப்பாடு முடிந்த பின் மாடியிலுள்ள தன் படுக்கையறைக்குச் சென்ற சமயம் அவன் மனத்தில் ஒரு புறம் ஓர் ஆசை இருந்தது. ஒரு முறை மேல்மாடியைச் சுற்றிவந்தான். பக்கத்திலிருந்த ஸ்நான அறையிலே சென்று சற்றுநேரம் அசைவற்று நின் றிருந்தான். அதற்குமேல் படுக்கையில் படுத்து ஹுக் காவை எடுத்துக் குடிக்கலானுன். அதற்கென்று ஏற்பட்ட பதினைந்து நிமிஷங்கள் கழிந்தன; இருபது நிமிஷமும் கழிந்து, அரைமணி ஆனதும் தன் ஜேபியிலிருந்த கடியா ரத்தை எடுத்துப் பார்த்தான். இவ்வளவு வருஷங்களாய் ஒரு முறையேனும் ஆபீஸ்செல்வதில் அவன் ஐந்து நிமிஷங் கள்கூடத் தாமதித்தது இல்லை. ஆபீஸில் ஒரு கணக்குப் புத்தகம் இருந்தது. அதில் யார் யார் எந்த எந்த நேரத்தில் ஆபீஸிற்கு வருகிருர்களென்பது பதிவு செய்யப்படும். அந்தக் கணக்கின்படிச் சம்பளமும் ஏற்றத்தாழ்வுடன் இருக்கும். ஆபீஸில் வேலைசெய்பவர்கள் எல்லாரினும் மதுசூதனன் ஒருவனுடைய கணக்கிலேயே அபராதத் திற்குக் கழிக்கப்பட்ட தொகை மிகக் குறைவாயிருக்கும்.

இதுபற்றி அவனுக்குத் தன் விஷயத்தில் பக்ஷபாதம் என்பதில்லை. உண்மையில் மற்ற வேலையாட்களைவிடத் தான் மிகக் கண்டிப்புடன் நடந்துகொண்டு இரட்டிப்பு அபராதம் செலுத்துவது அவன் வழக்கம். அன்று தன் மனத்திற்குள் இவ்விதம் தாமதித்துச் செல்வதற்காக, ஆபீஸ் மூடினபிறகும், அங்கேயே அதிகநேரம் தங்கியிருந்து வேலைசெய்வதாய்த் தீர்மானித்துக்கொண்டான். ஆனால் நேரம் ஆக ஆக அவனுக்கு வேலையில் மனம் பதியவில்லை. ஆகையால் வழக்கத்தைவிட அரைமணி முன்பே வேலையை முடித்துக்கொண்டு ஆபீஸிலிருந்து திரும்பி வந்துவிட்டான். 'படுக்கையறைக்கு வழக்கத்துக்கு விரோதமான சமயத்தில் போய்ப் பார்க்கலாம்; ஒருவேளை யாரையாகிலும் சந்திக்கக் கூடும்' என்ற எண்ணம் அடிக்கடி அவன் மனத்தில் உண்டாயிற்று. சாதாரணமாய் அவன் பகலில் அந்த அறைக்குள் செல்வதேயில்லை. அன்று ஆபீஸ் உடுப்புக்களுடனேயே அவன் அந்தப்புரத்தில் பிரவேசித்தான்.

அச்சமயம் மோதியின் தாய் வெளிமாடியில் உலர்ந்த மாங்கொட்டைகளைத் திரட்டிக் கூடைக்குள் போட்டுக்கொண்டிருந்தாள். மதுசூதனன் இவ்விதம் வழக்கத்துக்கு விரோதமாய் அந்தப்புரத்திற்கு வந்ததைப் பார்த்துவிட்டு மேல்துணியை இழுத்துப் போர்த்துக்கொண்டு அதன் மறைவில் சிரித்துக்கொண்டாள். தன் செய்கையை அவள் பார்த்துவிட்டதுபற்றி மதுசூதனனுக்கு வெட்கமும் கோபமும் உண்டாயின. மிகவும் மெதுவாய்ச் சத்தம் செய்யாமல் அறைக்குள் பிரவேசிப்பதென்று முதலில் எண்ணியிருந்தான். ஒருகால் மான் பயந்து ஓடிவிடப்போகிறதே என்ற எண்ணமோ

அவனுக்கு! அது இப்போது இயலவில்லை. வேடிக்கை பார்க்கிறவளுக்கு எதிரிலிருந்து தப்பவேண்டு மென்ற எண்ணத்துடன் வேகமாய் அறைக்குள் நுழைந்தான். அவன் ஆபீஸிலிருந்து அவசரப்பட்டு வந்தது வீண் என்று தெரியவந்தது. அறையில் ஒருவரும் இல்லை. அவன் காலையில் சென்றபிறகு அதில் யாரும் வந்திருந்ததற்குரிய அடையாளம் ஒன்றும் இல்லை. அவன் க்ஷணநேரம் பொறுமை இழந்தான். இதுவரை அவன் பெரிய மைத்துனனாயிருக்கும் காரணம்பற்றி நிஸ்தாரிணியுடன் பேசினதில்லை. இருந்தும் இப்போது அவளைக் கூப்பிட்டுக் குமுதத்தைப்பற்றி ஏதாகிலும் கேட்கலாமென்று அவனுக்கு அதிக விருப்பமுண்டாயிற்று. இவ்வெண்ணத்துடன் அறையை விட்டு வெளியில் வந்தான். ஆனால் நிஸ்தாரிணி கீழே சென்றுவிட்டாள்.

புது மனைவியின் நிமித்தமாய் அவளால் திரஸ்கரிக்கப்பட்ட சயன அறைக்குள் அகாலத்தில் காரணமில்லாமல் பிரவேசித்த அவமானத்திலிருந்து தன்னை மீட்டுக்கொள்ளும்பொருட்டு அவன் மிக வேகமாய் வெளிப்பக்கத்து அறைக்குச் சென்றான். ஏதோ முக்கியகாரியம் இருப்பது போல் தன் மேஜைக்கெதிரில் உட்கார்ந்தான். அங்கே ஒரு சிறிய கணக்குப் புத்தகம் இருந்தது. அதைச் சாதாரணமாய் அவன் திறந்து பார்ப்பதே இல்லை. ஆபீஸ் தலைமைக் குமாஸ்தாதான் பார்ப்பார். அன்று மற்றவர்களை ஏமாற்றுவதற்காக அவன் அதை எடுத்துத் திறந்தான். அந்தப் புத்தகத்தில் அவன் வீட்டிலிருந்து அனுப்பப்படும் கடிதங்கள், தந்திகள் முதலியவை பதிவுசெய்யப்படும். அதைத் திறந்தவுடனேயே அன்றைத் தேதியில் அனுப்பப்பட்ட தந்திகளின் ஜாப்தாவில் விப்ரதாஸின்

பெயர் அவன் கண்ணில் பட்டது. அனுப்பியது எஜமானி யம்மாள் குமுதினி.

"வாசற்காப்போனைக் கூப்பிடு."

வாசற்காப்போன் வந்து நின்றான்.

"இந்தத் தந்தியை யார் அனுப்பும்படி உன்னிடம் கொடுத்தார்?"

"சின்ன எஜமான்."

"கூப்பிடு, சின்ன எஜமானை."

சின்ன எஜமான் சுண்டின முகத்துடன் வந்து நின்றான்.

"என் அநுமதி இல்லாமல் இந்தத் தந்தியை அனுப்பும்படி யார் சொன்னார்கள்?"

சொன்னவள் பெயரை அவன் எதிரில் உரைப்பதற்கு நாவெழவில்லை. என்ன செய்வதென்று தெரியாமல் நவீனன் தவித்தான். அந்தக் குளிர்காலத்திலுங்கூட அவன் நெற்றியில் வியர்வை துளித்தது.

நவீனன் மௌனமாயிருப்பதைப் பார்த்து மதுசூதனன் தானே வலுவில், "உன் மனைவியா?" என்று கேட்டான். முகத்தைத் தொங்கவிட்டுக்கொண்டு மௌனமாய் நின்றதிலிருந்தே அக்கேள்விக்கு விடை தெளிவாய் விளங்கிற்று. மதுசூதனனுக்கு உண்டான கோபத்தில் வார்த்தை ஒன்றுமே வெளிவரவில்லை. இரத்தம் தலைக்கேறி முகம் சிவந்தது. வேகமாய்க் கையை ஆட்டி நவீனனை அறையை விட்டு வெளியே போகுமாறு சொல்லிவிட்டு, இங்குமங்குமாய் அறைக்குள் உலாவினான்.

# 30

நவீனன் உள்ளே தன்மனைவியிடம் சென்று சுண்டின முகத்துடன், "இனி என்ன செய்வது?" என்றான்.

"என்ன நடந்தது?"

"இனி மூட்டையைக் கட்டு."

"உங்கள் பேச்சைக் கேட்டுக்கொண்டு கட்டினால், நாளைக்கே திரும்பிப் பிரிக்கவேண்டியிருக்கும். ஏன்? உங்கள் அண்ணா பிரசன்னமாயில்லையோ?"

"எனக்கு அவரை நன்றாய்த் தெரியும். இந்த முறை நாம் வீட்டை விட்டுக் கிளம்ப வேண்டியதுதான்."

"அப்படியானால் போவோமே! ஏன் இவ்வளவு தயக்கம்? அங்கே போனால் ஒன்றும் முழுகிப்போய் விடாது."

"என்னை எதற்காகப் போகச் சொல்கிறாய்? உன்னைத் தான் ஊருக்கு அனுப்பும்படி உத்தரவு வரும்."

"அந்த உத்தரவை நீங்கள் கேட்கமாட்டீர்கள்; எனக்குத் தெரியும்."

"எவ்விதம் தெரியும்?"

"என் ஒருத்திக்குத்தான் தெரியுமென்று நினைக்கிறீர்களா? இந்த வீடுமுழுவதற்கும் நீங்கள் பெண்டாட்டியின் வசப்பட்டவரென்பது தெரியும். ஒரு புருஷன் எவ்வளவு தூரம் மனைவியின் வசமாகக் கூடுமென்பதை உங்கள் அண்ணா இன்னும் உணரவில்லை. இனிமேல் அவர் தாமே தெரிந்துகொள்வார்."

"அப்படியா?"

"நான்தான் பார்த்துக்கொண்டே இருக்கிறேனே. உங்கள் வம்சம் முழுவதற்கும் இந்த வியாதி உண்டு. இதுவரையில் அண்ணாவிற்கு வந்ததில்லை. வெகுநாளாய்ச்

சேர்ந்து திரண்டு இருப்பதால் அவரை மிகப் பலமாய்ப் பிடித்துக்கொள்ளப் போகிறது. நான் சொல்கிறேன்: நீங்கள் வேணுமானால் பாருங்கள். உலகம் முழுவதையும் மறந்து ரூபாய் சம்பாதிப்பதில் எவ்வளவு மும்முரமாய்க் கவனம் செலுத்தினரோ அவ்வளவும் இப்போது மனைவி மேல் செலுத்தப்போகிறார்."

"அப்படியே செலுத்தட்டும். நான் என்னை எவ்விதம் காப்பாற்றிக்கொள்வது? சொல்லு."

"அந்தப் பொறுப்பு என்னைச் சேர்ந்தது. இப்போது நான் உங்களிடம் சொல்வதைச் செய்யுங்கள்: அவருடைய மேஜையைத் திறந்து தேடிப்பாருங்கள்."

நவீனன் கைகளைக் கூப்பிக்கொண்டு, "என்மேல் இரக்கமில்லையா உனக்கு? பாம்பின் புற்றுக்குள் கைவிடச் சொன்னால் விடுகிறேன்; ஆனால் அந்த மேஜை அறைக்குள் கைவிடமாட்டேன்" என்றான்.

"பாம்புப் புற்றுக்குள் கைவிடவேண்டு மென்றால் நானே விட்டுவிடுவேன். ஆனால் மேஜையைத் திறப்பது உங்களாலேயே முடியும். இந்த வீட்டிற்கு வரும் கடிதங்களையெல்லாம் முதலில் அவரே பார்க்கிறாரென்பது உங்களுக்குத் தெரியும். அவர் உத்தரவில்லாமல் ஒன்றும் கொடுக்கப்படுவதில்லை. வந்திருக்கும் கடிதத்தை அவர் நிறுத்திவைத்திருக்கிறாரென்று எனக்குத் தோன்றுகிறது."

"எனக்கும் அவ்விதந்தான் தோன்றுகிறது. அதே சமயம் அந்தக் கடிதத்தின்மேல் கைவைத்தாயோ, பிறகு உனக்குச் சரியான தண்டனை எது என்றுகூட அண்ணாவிற்கு விளங்காது என்பதும் எனக்குத் தோன்றுகிறது. ஒருகால் ஏழு வருஷம் கடுங்காவலில் வைக்கலாம்."

"நீங்கள் ஒன்றும் செய்யவேண்டாம். கடிதத்தைத் தொடக்கூட வேண்டாம். மன்னிபேருக்கு ஏதாகிலும் கடிதம் வந்திருக்கிறதா என்பதை மாத்திரம் பார்த்து வாருங்கள்."

தன் மனைவியிடம் நவீனனுக்கு அளவில்லாத பக்தி. தான் அவளுக்குக் கணவனாகவிருக்க அருகனல்லன் என்பது அவன் எண்ணம். ஆகையால் அவள்நிமித்தமாகத் தான் ஏதாகிலும் கடினமான வேலை செய்ய நேரிட்டாலும், பயத்தைப் பொருட்படுத்தாது, அதை அதிக சந்தோஷத்துடன் செய்தே தீருவான்.

அன்றிரவே குமுதத்திற்கு வந்த ஒரு தபாலும் தந்தியும் மேஜைக்குள் இருக்கின்றனவென்று நவீனன் மூலமாய் நிஸ்தாரிணிக்குத் தெரியவந்தது.

தன் வாழ்க்கையில் முதல்முதல் ஏற்பட்ட இந்தப் பெரிய ஏமாற்றத்தினால் குமுதம் எவ்வித ஆத்திரத்துடன் படுக்கையறையை விட்டுச் சென்று வேலைக்காரியின் தொண்டில் ஈடுபட்டாளோ அதன் வேகம் இப்போது அடங்கிவிட்டது. அவமானத்தினால் மூண்ட வெறுப்புத் தணிந்து, வருத்தத்தினால் உண்டாகும் மலினம் அவள் மனத்தில் படிய ஆரம்பித்தது. இவ்விதமே எப்போதும் இருக்கமுடியாதென்று அறியலானாள். இருந்தும் இவ்விதம் ஏதாவது ஒன்றில் ஈடுபடாமல் எவ்விதம் காலத்தைக் கழிப்பது? இரவும் பகலும் நிர்ப்பந்தமாய் எதன்மேலும் பற்றுதல் அற்று இருப்பது நடக்கிற காரியமா?

அந்த விளக்கு அறையின் கதவைத் தாளிட்டுவிட்டுக் குமுதம் இதைப்பற்றியே சிந்தித்துக்கொண்டு உட்கார்ந்திருந்தாள். அறை வராந்தாவின் ஒரு மூலை மரப்பலகையால் தடுக்கப்பட்டிருந்தது. நுழையும் வாயிலைத் தவிர வேறு

எல்லாப் புறங்களும் அடைபட்டிருந்தன. சுவரின்மீது மரப் பலகையால் செய்த தட்டுக்கள் பதிக்கப்பட்டு, அவைகளில் விளக்கு ஏற்றுவதற்கு வேண்டிய பலவித சாமான்கள் வைக்கப்பட்டிருந்தன. எண்ணெயினுலும் புழுதியினு லும் அறை முழுவதும் கேவலமாயிருந்தது. யாரோ ஒரு வேலையாள் மெழுகுவர்த்திக்கட்டின் மேலிருக்கும் படத்தைக் கத்தரித்துத் தான் அழகு பார்த்துத் திருப்தி யடைவதற்காகக் கதவு இருக்கும் புறத்துச்சுவரில் ஒட்டி யிருந்தான். ஒரு மூலையில் தகர டப்பாவில் பொடி செய்த சீமைச் சுண்ணும்பும், அதனருகில் கூடையில் புளியும், ஓர் அழுக்கடைந்த துவாலையும் இருந்தன. வரிசை வரிசையாய் மண்ணெண்ணெய்த் தகரங்கள். அவைகளில் அநேகம் காலி யாயிருந்த போதிலும், சிலவற்றில் எண்ணெய் இருந்தது.

அன்று காலைமுதல் குமுதம் பழக்கமில்லாத தன் கை களைக் கொண்டு அவைகளைத் துடைப்பதில் முனைந்திருந் தாள். உக்கிராணவேலையை முடித்துக்கொண்டு மோதியின் தாய் அங்கே வந்து, குமுதம் தானே பிடிவாதத்தினுல் ஏற்றுக்கொண்ட இந்தக் காரியங்களைச் சரிவரச் செய்ய முடியாமல் தவிப்பதைப் பார்த்து நின்றுள். சுலபமாய் உடைந்துபோகக்கூடிய சில வஸ்துக்களுக்குக் கேடுகாலம் கிட்டி விட்டதென்று அறிந்துகொண்டாள். இந்த வீட்டில் அற்பமான சாமான்கள் விஷயத்திலும் உஷாராய் இருக்கவேண்டுமே! கணக்கில் தவறக்கூடாது.

குமுதம் இவ்வாறு செய்வதைக் கண்டு நிஸ்தாரிணி யால் பொறுத்திருக்க முடியவில்லை; "எனக்கு வேலை ஒன்றும் இல்லை. ஆகையால் இங்கே வந்தேன். மன்னிக்கு ஏதாவது உதவி செய்தால் புண்ணியமாவது கிடைக்கும் என்று எண்ணினேன்" என்று சொல்லிக் கண்ணுடிச்

சிம்னி முதலியவைகளைத் தன்புறம் இழுத்துக்கொண்டு அவைகளைத் துடைக்கலானாள்.

குமுதத்திற்கு அப்போது எதிர்த்துச் சொல்ல முடியவில்லை. இதற்குள் அவள் தன் அசக்தியை நன்கு உணர்ந்திருந்தாள். நிஸ்தாரிணியின் சகாயம் பெற்றதாலேயே இந்தச் சங்கடத்திலிருந்து தப்பினாள். இவ்வித வேலையில் பழக்கமில்லாத நிஸ்தாரிணியின் சாமர்த்தியத்திற்கும் எல்லை இருந்தது. மண்ணெண்ணெய் விளக்குக்களின் திரிகளைக் கணக்காய்க் கத்தரிப்பதற்கு அவளால் இயலவில்லை. அவ் வேலைகளை அவளே மேற்பார்வையிட்டு, அவசியமான சாமான்களைக் கொடுத்துவந்தாள் எனினும், இன்றுவரை அவள் ஒருநாளும் அவைகளைத் தன் கையால் செய்தது இல்லை. ஆகையால் அவைகளை வழக்கமாய்ச் செய்கிறவனாகிய பங்குவைக் கூப்பிடலாமென்று இப்போது சொன்னாள்.

இவர்கள் தம் தோல்வியை ஒப்புக்கொள்ள வேண்டிய தாயிற்று. பங்கு வந்தான். விரைவாகச் சிறிது நேரத்தில் வேலையைச் செய்து முடித்தான். சாயங்காலமாவதற்கு முன்பே எல்லா விளக்குக்களும் அந்த அந்த அறைகளுக்குப் போய்ச் சேர்ந்துவிடுவது வழக்கம். அந்த வேலையைச் செய்யத் தினம்போல் தான் வரவேண்டுமா, அல்லது வேண்டாமா என்று பங்கு கேட்டான். பங்கு மிகக் கபடமற்றவன். இருந்தும் அவன் கேள்வியில் சிலேடை (இரண்டுவித அர்த்தம்) இருந்த மாதிரி குமுதத்திற்குத் தோன்றிற்று. குமுதத்தின் காதுநுனி சிவந்தது.

அவள் பதில் சொல்வதற்குள் நிஸ்தாரிணி, "வராமலென்ன?" என்று அதட்டினாள். வேலைசெய்வதற்குப் பதிலாக வேலைக்கு இடையூறே செய்கிறோமென்பது குமுதத்திற்குச் சந்தேகமறத் தெரிந்தது.

# 31

மத்தியான்னம் ஆகாரம் செய்த பிறகு குமுதம் கதவைத் தாளிட்டுவிட்டு உட்கார்ந்து தன் மனத்தில் இனி ஒருகாலும் கோபத்தீ எரிய இடம் கொடுக்ககூடாதென்று பிரதிஜ்ஞை செய்துகொண்டாள்; "இன்று முழுவதும் சிரமப்பட்டு மனத்தை ஸ்திரப்படுத்திக்கொள்வேன். நாளை முதல் பகவான் ஆசிர்வாதத்தைப் பெற்று என்னுடைய கிருகதர்மத்தைச் சத்திய வழியில் பின்பற்ற முயலவேண்டும்" என்று அவள் தன் மனத்திற்குள் சொல்லிக்கொண்டாள். பகற் போஜனத்திற்குப் பிறகு விளக்கு அறையில் வந்து கதவைத் தாளிட்டுவிட்டு அவள் தன்னை ஸ்திரப் படுத்திக்கொள்ள உட்கார்ந்தாள். இவ்விதம் தன் கடமையைச் செய்யவேண்டுமென்று அவள் தீர்மானிப்பதற்கு முக்கியத் துணையாயிருந்து உதவியது அவள் தமையனின் ஞாபகமே. தமையனிடமிருக்கும் ஆச்சரியகரமான ஆழ்ந்த பொறுமையை அவள் கண்டிருக்கிறாள். அவன் உள்ளத்திலிருக்கும் மஹத்வத்தின் சாயை அவன் முகத்துத் துயரத்தில் தெரியவரும். அந்தக்காலத்தில் படித்தவர்கள் இடையில் பரவியிருக்கும், "பாஸிடிவிஸம்" அவளுடைய தமையனின் கொள்கையாய் இருந்தது. வெளியில் தெய்வவழிபாடு செய்வதில் அவனுக்கு விருப்பமே இல்லாமலிருந்தும், ஒரு தெய்விக அம்சம் அவனுடைய வாழ்வில் பூரணமாகத் தோன்றியிருந்தது.

பிற்பகலில் பங்கு வந்து கதவைத் தட்டினசமயம் அதைத் திறந்துகொண்டு குமுதினி வெளியே வந்தாள். நிஸ்தாரிணியிடம் சென்று, "இன்று இரவு நான் சாப்பிடப் போகிறதில்லை" என்றுரைத்தாள். மனத்தைப் பரிசுத்தமாய்ச் செய்துகொள்வதற்காகவே அவள் இவ்விதம் உப

வாசம் இருக்க விரும்பினாள். நிஸ்தாரிணி சூர். இன்ற முகத்தைக் கண்டு மிகவும் வியந்தாள். அப்பொல் லும் அதில் மனக்கொதிப்பினால் உண்டாகும் ரத்தம் டோன். கும் பாவனை இல்லை. நெற்றியிலும் கண்களிலும் மஜூம் மான சாந்தமே பிரகாசித்தது. அப்போதுதான் பூஜையை முடித்துத் தீர்த்தஸ்நாநம் செய்துவந்தவள் போலிருந்தாள் குமுதம். அந்தர்யாமியான பகவான் அவள் ரோஷத்தை யெல்லாம் அகற்றிவிட்டதுபோலவும், இதயத்தில் அவனைப் பூஜித்த மலர்களை ஏந்தி அதன்மணத்தால் சூழப்பட்டவள் போலவும் தோன்றியது. ஆகையாலேயே குமுதம் உபவாஸ மிருக்கவேண்டுமென்ற சமயம் 'இது கோபத்தினால் செய்து கொள்ளும் ஆத்மஹிம்ஸையல்ல' என்று உணர்ந்த நிஸ்தா ரிணி அதை ஆக்ஷேபிக்கவில்லை.

குமுதினி தன் தெய்வத்தின் திருவுருவத்தை மனத்தில் தியானித்துக்கொண்டு மேல்மாடியில் சென்று ஒரு மூலை யில் உட்கார்ந்தாள். துக்கம் மாத்திரம் தன்னை இவ்வளவு வாட்டாமல் இருந்தால் பகவானை இவ்வளவு அருகில் அண்டமுடியாது என்று குமுதம் அன்று நன்கு உணரலா னாள். அஸ்தமிக்கும் சூரியனின் ஒளியைப் பார்த்துக் குமுதம் கைகளைக் கூப்பி, "பிரபோ! உங்களிடமிருந்து என்னைப் பிரிக்காதீர்கள். துக்கத்தின் மூலமாகவே என்னை உங்களுடன் சேர்த்துக்கொள்ளுங்கள்" என்று பிரார்த் தித்தாள்.

பனிக்காலம். பார்க்கையிலேயே பொழுது குன்றி விட்டது. புழுதி, பனி, ஆலையிலிருந்து வரும் புகை எல் லாம் கலந்த ஓர் திரை சந்தியாகாலத்து இயற்கையான இருளின் மகிமையை மறைத்தது. இவ்வாறு பரவியிருக் கும் அசுத்தத்தின் பாரத்தினால் வானம் பூமியின் பக்கம்

இழுக்கப்பட்டிருந்ததோ அவ்வாறே தமை பற்றிய கவலையின் பாரத்தினுல் குமுதினியின் கதஹம் சோர்வென்னும் குழியில் இழுக்கப்பட்டிருந்தது.

ஒருபுறம் ரோஷத்தினின்று விடுபட்ட ஆனந்தத்தினுலும், மறுபுறம் தமையனைப்பற்றிய கவலையினுலும் தாக்கப்பட்ட உள்ளத்துடன் குமுதினி மறுபடி அந்த இருட்டு விளக்கறையில் பிரவேசித்தாள். பகவான்மேல் நம்பிக்கை வைத்துத் தமையனைப்பற்றின கவலையைக்கூடத் தன்மனத்தை விட்டு அகற்றவேண்டும் என்று அவள் முயன்முள். ஆனுல் அவளால் இயலவில்லை. 'தந்தி போய்ச் சேர்ந்திருக்குமே; அதற்கு ஏன் பதில் கிடைக்கவில்லை' என்ற கேள்வியே அவள் மனத்தில் எழும்பிக் கொண்டிருந்தது.

ஒரு பெண்ணின் உள்ளத்தில் திகழும் ஆத்ம சமர்ப்பணத்தைச் சூக்ஷ்மமாகத் தடை செய்ய மதுசூதனனுல் எந்த விதத்திலும் முடியவில்லை. மணந்துகொண்ட பெண்ணின் சரீரமும் மனமும் அவனுடைய வசத்திலிருந்தாலும் இப்போது அவனுக்கு அவள் சிறிதும் எட்டாதவளாக ஆய்விட்டாள். எதிர்பாராமல் விதியினுல் ஏற்பட்ட இந்தச் சூழ்ச்சியை எந்தப் பக்கமாய் எதிர்த்து எவ்விதம் கடப்பது என்பது அவனுக்குச் சிறிதும் புரியவில்லை. ஒருநாளும் ஒருவித நிமித்தம் கொண்டும் மதுசூதனது மனம் அவனுடைய வியாபாரத்திலிருந்து அகன்றதில்லை. இப்போதோவென்முல் அந்தக் கெட்ட குறிகூடத் தென்படுகிறது. அவன் தாயார் நோய்வாய்ப் பட்டிருந்த சமயமும், மரித்த சமயமுங்கூட அவன் வேலைக்கு ஒருவிதத் தடையும் ஏற்படவில்லை. எல்லாரும் அறிந்தவிஷயம் இது. அச்சமயம் அவனுடைய கலங்காத

நெஞ்சின் திடத்தைப்பற்றிப் பலர் புகழ்ந்தனர். இன்று திடீரென்று தனக்கு அடங்காமலே மனம் செல்லும் புதுப்போக்கைக் கண்டு மதுசூதனன் திடுக்கிட்டான். கிரமமாய்ச் செல்லும் வழியை விட்டுத் தன்னை இழுக்கும் இந்தச் சக்தியானது முடிவில் எங்கே கொண்டுவிடுமோ என்பது அவனுக்குப் புரியவில்லை.

இரவு சாப்பிட்டான பிறகு மதுசூதனன் படுத்துக் கொள்வதற்காக மாடிக்கு வந்தான். குமுதம் அங்கே இருப்பாளென்ற நம்பிக்கை இல்லாவிட்டாலும், ஒருகால் இருக்கலாம் என்ற ஆசை இருந்தது. ஆசையாலேயே வழக்கத்தைவிடச் சிறிது தாமதித்து வந்தான். வெகு கால அப்பியாசத்தினால் அவன் குறிப்பிட்டநேரம் வந்ததும் தூங்கிவிடுவான். ஒரு நிமிஷங்கூடத் தாமதிப்பதில்லை. இன்றும் அவ்விதம் தூங்கிவிட்டால் குமுதம் ஒருகால் வந்துவிட்டுத் திரும்பிப் போய்விடப் போகிறாளே யென்ற சிந்தையினால் அவன் படுக்கவில்லை. சிறிது நேரம் சோபாவில் உட்கார்ந்திருந்தான். பிறகு வெளிமாடியில் உலாவினான். ஒன்பது மணிக்கு அவன் தூங்கப்போவது வழக்கம். இன்று ரேழிக்கடியாரத்தில் பதினொன்று அடிப்பதைக் கேட்டுத் திடுக்கிட்டான். வெட்கமுண்டாயிற்று. இருந்தும் படுக்கையருகில் போய்த் திரும்பத்திரும்ப நின்றுகொண்டிருந்தானே ஒழிய, அதில் படுக்கவேண்டுமென்று சிறிதும் அவனுக்கு இச்சை யுண்டாக வில்லை. ஆகவே வெளிப்பக்கத்து ஆபீஸ் அறைக்குச் சென்று அன்றிரவே நவீனனுடன் சில விஷயங்களைப் பற்றித் தெரிந்து தீர்த்துக்கொள்வதென்று நிச்சயித்தான்.

வெளிக்கட்டிடத்திற்கு எதிரிலிருக்கும் வராந்தாவில் செல்லும் சமயம் உள்ளே விளக்கு எரிவது தெரிந்தது.

உள்ளே நுழைய இருக்கையில் உள்ளிருந்து கைவிளக்கை எடுத்துக்கொண்டு நவீனன் வெளியே வந்தான். பகல் வெளிச்சமாயிருந்தால் அவனைக் கண்டதும் நவீனன் முகம் எவ்விதக் கலவரமடைந்ததென்பது தெரிந்திருக்கும்.

"இவ்வளவு நேரம் கழித்து நீ இங்கே என்ன செய்கிறாய்?" என்று மதுசூதனன் கேட்டான்.

நவீனனுக்கு ஒரு யுக்தி தோன்றிற்று. "தூங்குவதற்கு முன் நான் தினந்தோறும் கடியாரத்திற்குச் சாவி கொடுத்து, தேதியை மாற்றிவிட்டுப் படுத்துக்கொள்வது வழக்கம்" என்று சொன்னான்.

"நல்லது, உள்ளே வா. நான் சொல்வதைக் கேள்."

நவீனன் உள்ளே சென்று திகிலுடன் சிலையாய் நின்று கொண்டிருந்தான்.

"மன்னியின் காதில் மந்திரம் ஓதுபவர்கள் யாராயிருந்தாலும் சரி, அவர்களை எனக்குப் பிடிக்காது. என் மனைவி என் இஷ்டப்படி நடக்கவேண்டியவள்; பிறர் உபதேசப்படியல்ல" என்றான் மதுசூதனன்.

"மிகச் சரி" என்று நவீனன் ஒத்துக்கொண்டான்.

"ஆகையால் உன் மனைவியை ஊருக்கு அனுப்பிவிடு."

நவீனன் ஓர் பெரிய கவலை நீங்கினவனைப்போல, "ரொம்ப நல்லதாய்ப்போய்விட்டது, அண்ணா. நான்கூட உங்களைக் கேட்க வேண்டுமென்றிருந்தேன். ஆனால் இஷ்டமிருக்காதோ என்னவோ என்று தயங்கினேன்" என்றான்.

மதுசூதனன் ஆச்சரியத்துடன், "என்ன?" என்று கேட்டான்.

"சில தினங்களாய் அவள் ஊருக்குப் போகவேண்டு மென்று பிடிவாதம் செய்கிருள். மூட்டையெல்லாம் கட்டி விட்டாள். நாள் பார்க்கவேண்டியதே பாக்கி" என்ருன் நவீனன்.

இந்த வார்த்தை முழுவதும் நவீனன் தாளுகக் கற்பனை செய்ததென்று சொல்லவேண்டிய அவசியமில்லை. மதுசூதனன் தனக்கு இஷ்டமானவர்களைத் தன் வீட்டி லிருந்து வெளியே அனுப்பக்கூடும். ஆனல் அதற்காக யார் வேண்டுமானுலும் தத்தம் இஷ்டப்படி வெளியே போவ தென்பது கூடுமா? அது கூடாது. அவன் கோபமான குரலில், "போவதற்கு ஏன் இவ்வளவு அவசரம்?" என்ருன்.

"வீட்டு எஜமானி வீட்டிற்கு வந்துவிட்டாள். இனி வீட்டுப்பொறுப்பு முழுவதும் அவள் ஏற்றுக்கொள்ள வேண்டியது. தான் இருந்தால் பேச்சு ஏதாவது உண்டாகுமோ என்னவோ என்று அவள் சொல்கிருள்" என்ருன் நவீனன்.

"இதைப்பற்றி அவளுக்கு என்ன கவலை?" என்று கேட்டான் மதுசூதனன்.

நவீனன் மிகவும் சாதுப்போல, "என்ன சொல்வது! பெண்கள் பிடித்தால் ஒரே பிடிவாதந்தானே? ஒருகால் என்றைக்காவது ஏதாவது காரணம் கொண்டு நீங்கள் அவளை வெளியே தள்ளிஞல் அந்த அவமானத்தைப் பொறுக்கமுடியாது என்று அவள் எண்ணியிருக்கலாம். ஆகையால் இப்போதே போய்விடுவதென்று நிச்சயித்திருக் கிருள். வருகிற திரயோதசி அன்று நாள் நன்ருயிருக் கிறது. அதற்குள் காரியங்களை முடித்துக்கொண்டு

கணக்குக்களைத் தீர்த்துவிட்டுப் போக விரும்புகிறாள்" என்று சொன்னான்.

"இதோ பார், நவீனா, உன் மனைவிக்கு நீ நிரம்ப இடம் கொடுத்துவிட்டாய். அவள் போக முடியாதென்று கண்டிப்பாய்ச் சொல்லிவிடு. நீ புருஷன். நீ சொல்வது வீட்டில் நடக்காமலிருப்பதை என்னால் பார்க்கமுடியாது" என்றான் மதுசூதனன்.

நவீனன் தலையைச் சொறிந்துகொண்டு, "முயன்று பார்க்கிறேன், அண்ணா. ஆனால்—" என்றான்.

"நல்லது, இப்போது போகக்கூடாதென்று நான் சொன்னதாய்ச் சொல். எப்போது சமயம் ஏற்படுமோ அப்போது போகவேண்டிய தினத்தை நானே சொல்கிறேன்."

"நீங்களே 'அவளை ஊருக்கு அனுப்பிவிடு' என்று சொன்னீர்களே. ஆகையாலேயே, நான்—" என்று ஆரம்பித்தான் நவீனன்.

மதுசூதனன் ஆத்திரத்துடன், "நான் என்ன சொன்னேன்? இப்போதே, இந்த க்ஷணமே போகவேண்டும் என்றேனா?" என்று கேட்டான்.

நவீனன் மெதுவாய் அங்கிருந்து அகன்றான். மதுசூதனன் ஒரு காஸ் லைட்டை ஏற்றிக்கொண்டு நீண்ட சாய்வு நாற்காலியில் படுத்தான். வீட்டுக் காவற்காரன் இடையிடையே எல்லா அறைகளுக்கும் வெளியில் சுற்றிப் பார்ப்பது வழக்கம். மதுசூதனன் சிறிது கண்ணயர்ந்து தூங்கும் சமயம் ஏதோ திடுக்கிட்டு விழித்துப் பார்த்த போது காவற்காரன் அறைக்குள் நுழைந்து கைவிளக்கைத் தூக்கிக்கொண்டு தன் முகத்தை உற்றுப்பார்ப்பதை அறிந்தான். ஒருகால் அவன் மகாராஜா மூர்ச்சையாய்

விட்டாரென்று எண்ணினுளே, அல்லது மரித்துவிட்டார் என்றுதான் எண்ணினுளே என்னவோ!

மதுசூதனன் வெட்கமடைந்து நாற்காலியில் எழுந்து உட்கார்ந்தான். புதிதாய் விவாகமான ராஜாபகதூர் இவ் விதம் வெளிப்புறத்து அறையில் உட்கார்ந்து இரவைக் கழிப்பதைக் காவற்காரன் பார்ப்பது மதுசூதனனுக்குப் பெரிய அவமானத்தை உண்டாக்கிற்று. அதை எண்ணு கையிலேயே அவனுக்குப் பிராணன் போய்விடும்போ லிருந்தது. எழுந்திருக்கையிலேயே சிறிது கோபத்துடன், "அறையைச் சார்த்திப் பூட்டு" என்று அதட்டினுன். அவ்விதம் அறை பூட்டப்படாமல் இருப்பது காவற்காரன் பிசகுபோலும்! கடியாரத்தில் மணி இரண்டடித்தது.

மதுசூதனன் அறையைவிட்டு வெளியே வருவதற்கு முன் ஒருமுறை தன் மேஜையைத் திறந்தான். இதையும் அதையும் புரட்டிவிட்டுக் குமுதத்திற்கு வந்திருக்கும் தந்தியை எடுத்துத் தன் பையில் போட்டுக்கொண்டு அந்தப்புரம் சென்றுன். மாடிப்படியண்டை வந்ததும் அங்கேயே சற்று நேரம் நின்றிருந்தான்.

நள்ளிரவில் முதல் தூக்கத்திலிருந்து விழித்துக்கொண் டவன் தன்னுடைய முழு உணர்வையும் பூரணமாக அடைவ தில்லை. அதனுல் அவனுடைய பகல் நடத்தைக்கும் இரவில் தோன்றும் நடத்தைக்கும் வித்தியாசம் ஏற்படு கிறது. இந்த அர்த்தராத்திரியில் சுற்றுமுள்ளவர்களுள் யார் தன்னைக் கவனிக்கப்போகிறுர்கள்? தன்னிஷ்டப்படி நடந்துகொள்ள இதுவே சமயம். குமுதினியிடம் சென்று, அவள் எதிரில் தோல்வி அடைவது இப்போது அவன் மனத்திற்குக் குறைவாகப் படவில்லை.

# 32

மாடிப்படியிலிருந்து மதுசூதனன் திரும்பி வந்தான். அவன் இதயத்தில் இரத்தம் வேகமாகச் சுழன்றுகொண்டிருந்தது. ஏதோ ஒரு மூடின அறைக்கு வெளியில் எரிந்துகொண்டிருந்த லாந்தலைக் கையில் எடுத்துக்கொண்டு அவன் மெதுவாய் விளக்கு அறைக்கு வெளியில் நின்றான். சத்தம் செய்யாமல் கதவைத் தள்ளினான். அது தாழிடப் படாமல் இருந்ததால் திறந்துகொண்டது. குமுதம் அதே பாயின்மேல் ஒரு போர்வையைப் போர்த்துக்கொண்டு படுத்திருந்தாள். இடதுகை மார்பின் மேல் இருந்தது. மதுசூதனன் விளக்கை ஒரு மூலையில் வைத்துவிட்டுக் குமுதத்திற்கு எதிரில் இடது பக்கமாய் உட்கார்ந்தான். அந்த வதனம் அவ்வளவு பலமாய் அவன் மனத்தைக் கொள்ளை கொண்டதற்குக்காரணம் அம் முகத்திலிருக்கும் சொல்லிற் கடங்காத ஒரு பரிபூரணமே. குமுதத்திற்கு ஒரு நாளும் தான் நடந்துகொள்ளும்விதத்திற்கும் தன் மனத்தில் உண்டாகும் சுவபாவமான எண்ணங்களுக்கும் முரண்பாடு ஏற்பட்டது இல்லை. அண்ணாவின் குடும்பத்திலிருந்து கொண்டு அவள் ஏழ்மைத் துயரத்தால் மிகப் பீடிக்கப் பட்டிருக்கிறாள். ஆனால் அது வெளியிலிருக்கும் நிலைமையால் ஏற்பட்டது. அதனால் அவளுடைய இயற்கைக்கு ஒன்றும் கேடுண்டாகவில்லை. அவள் வசித்துவந்த இடம் எல்லா அம்சத்திலும் அவள் இயல்பிற்கு ஒத்ததாயிருந்தது. அதனாலேயே அவள் முகத்தில் ஸரள பாவமும், அவள் நடத்தையிலும் காரியங்களிலும் குன்றாத மரியாதையும் காணப்பட்டன.

தனக்கு நினைவு தெரிந்த நாள்முதல் மதுசூதனன் தன் பிழைப்பிற்காகப் பிராணனைக் கொடுத்துப் போராட வேண்டி யிருந்தது; பிரதிதினமும் உண்டாகும் கலவரங்

களுக்கு இடையே எப்போதும் ஜாக்ரதையாகவே இருக்க வேண்டி யிருந்தது. அப்பேர்ப்பட்டவனுக்குக் குமுதத்தி னிடமிருக்கும் சுவபாவமான மேலான நடத்தை அதிக ஆச்சரியமுண்டாக்கிற்று. அவன் ஒரு விஷயத்திலும் சுவபாவமாய்க் கபடமற்று நடந்துகொள்பவனல்லன். குமுதினியோ தேவதையைப்போல் கள்ளமற்று இருந்தாள். அவனுக்கும் குமுதினிக்கும் இருக்கும் வித்யாசமே அவனைக் குமுதத்தினிடம் அவ்வளவு பலமாய் இழுத்துக்கொண்டி ருக்கிறது. விவாகத்திற்குப் பிறகு மனைவியைத் தன் வீட்டிற்கு அழைத்துவந்தபோது நடந்தவை யாவும் அவன் மனத்தில் தோன்றின. தன்னிடம் வீண் கௌரவமும் அகந்தையினால் உண்டான குணக்குறைவும் இருப்பதை யும், குமுதினியிடம் எதற்கும் வணங்காத ஆத்ம மரியாதை இயல்பாகவே ஒளிர்வதையும் மதுசூதனன் அறிந்தான். சாதாரணப் பெண்களுக்கு இருப்பதுபோல் அவள் நடத் தையில் சிறிதாகிலும் பெரியதனம் தெரியவில்லை. அவ்வித மில்லாவிட்டால் அவள் மேலுள்ள தன் அதிகாரத்தை ஸ்தாபித்து அவளை அவமானம் செய்ய மதுசூதனன் சிறிதும் தயங்கி இருக்கமாட்டான். ஆனால் இப்போது ஏற்பட்டிருக்கும் நிலைமை என்னவோ அவனுக்கு ஒன்றும் புரியவில்லை. ஏதோ ஓர் அதிசயமான காரணத்தினால் குமுதம் அவன் கைப்பிடிக்கு அகப்படமாட்டேனென் கிறாள்!

குமுதினியை எழுப்பாமலேயே இரவுமுழுவதும் அவளருகில் இவ்விதமே விழித்து உட்கார்ந்து கழிப்ப தென்று மதுசூதனன் நிச்சயித்தான். சிறிது நேரம் ஆகவே அவனால் உட்கார்ந்திருக்க முடியவில்லை. தயக்கத் -ன்று குமுதத்தின் மார்பிலிருந்து அவள் கையை எடு -ப்தானம்

கையின்மேல் வைத்துக்கொண்டான். குமுதம் தூக்கத்தில் புரண்டு "உஸ்" என்று மதுசூதனன் கையிலிருந்து தன் கையை இழுத்துக்கொண்டு மறுபுறம் திரும்பிப் படுத்தாள்.

மதுசூதனனால் மேலும் இருக்க முடியவில்லை. குமுதத்தின் காதண்டை சென்று, "உன் அண்ணாவிடமிருந்து தந்தி வந்திருக்கிறது" என்றான்.

உடனே தூக்கம் கலைந்து குமுதம் சட்டென்று எழுந்து உட்கார்ந்து ஆச்சர்யத்தினால் திறந்த கண்களுடன் மதுசூதனனைப் பார்த்திருந்தாள். மதுசூதனன் தந்தியை அவள் எதிரே வைத்து, "பயோபஹ, உன் அண்ணா அனுப்பியிருக்கிறான்" என்று சொல்லி விளக்கை எடுத்துக் காண்பித்தான்.

குமுதினி தந்தியைப் படித்தாள். ஆங்கிலத்தில், "எனக்காகப் பயப்பட வேண்டாம். உடம்பு மெதுவாய்ச் சொஸ்தமாகிக்கொண்டுவருகிறது. உனக்கு என் ஆசீர்வாதங்கள்" என்று எழுதியிருந்தது. மிகுந்த கவலையால் பீடிக்கப்பட்டிருந்த அவளுக்கு இந்த ஆறுதலான செய்தியைப் பெற்றதனால் ஒரு க்ஷணம் கண்களில் நீர் நிறைந்தது. கண்களைத் துடைத்துக்கொண்டு மிக்க ஜாக்கிரதையுடன் தந்தியைத் தலைப்பில் முடிந்துகொண்டாள். அதைக் கண்டு மதுசூதனனது இதயம் பொறாமையால் துள்ளிற்று. அதற்குமேல் என்ன செய்வதென்று அவனுக்குத் தெரியவில்லை. குமுதமே, "அண்ணாவிடமிருந்து கடிதம் வரவில்லையா?" என்று கேட்டாள்.

இச்சமயம் கடிதம் வந்திருக்கிறதென்ற வார்த்தையை தன் மதுசூதனனால் சொல்லமுடியவில்லை. சட்டென்று, "இல்லை, வேண்டி வரவில்லை" என்று சொல்லிவிட்டான்.

அவ்வறையில் நடு இரவில் அவ்விருவருமாய் இவ்விதம் உட்கார்ந்திருப்பது குமுதினிக்குச் சங்கோசமுண்டாக்கிற்று. அவள் எழுந்திருக்க முயன்ற சமயம் மதுசூதனன் சட்டென்று, "படோபஹு, என்மேல் கோபித்துக் கொள்ளாதே" என்றான்.

இது எஜமானனின் கட்டளை அல்லவே! இது ஒரு காதலனின் வேண்டுகோளல்லவோ! அதில் தான் செய்த தவறைக் காட்டும் ஆத்மநிந்தை நிறைந்திருந்தது. குமுதம் ஆச்சரியமடைந்தாள். இது என்ன! தெய்வத்தின் லீலை போலல்லவோ இருக்கிறது! ஏனென்றால் இன்றுமுழுவதும் அவளும் தனக்குள் அடிக்கடி, "கோபிக்காதே" என்பதையே வேண்டிக்கொண்டிருந்தாள். அதே வார்த்தை இன்று நடுஇரவு வேளையில் மதுசூதனன் வாய்மூலமாய் எதிர்பாராதவிதம் சொல்லப்படுகிறது.

மதுசூதனன் மறுபடி, "படோபஹு, நீ என்ன இன்னும் என்னுடன் கோபமாயிருக்கிறாயா?" என்று கேட்டான்.

"இல்லை, எனக்குக் கோபமில்லை; கொஞ்சங்கூட இல்லை" என்று குமுதம் சொன்னாள்.

மதுசூதனன் அவள் முகத்தைப் பார்த்து வியந்தான். அவள் சொல்லும் இந்த வார்த்தை தனக்குத் தானே சொல்லிக்கொள்வது போலிருந்தது; கண்களுக்கு விளங்காத யாரையோ உத்தேசித்துச் சொல்வதுபோலிருந்தது.

"ஆனால் இந்த அறையை விட்டு வா. உன் அறைக்குப் போகலாம்" என்று மதுசூதனன் சொன்னான்.

குமுதம் அன்று இரவே அவ்விதம் செய்யத் தயாராக இல்லை. தூக்கத்திலிருந்து விழித்துச் சட்டென்று மனத்தைக் கட்டுவது கஷ்டம். மறுதினம் எழுந்து ஸ்நானம்

செய்துவிட்டுத் தான் வழக்கப்படி ஜபிக்கும் மந்திரத்தைப் பகவத் சந்நிதியில் ஜபித்துவிட்டு அன்றுமுதல் தன் சம்சார வாழ்க்கையில் ஈடுபடுவதென்று அவள் நிச்சயம் செய்திருந்தாள். "தெய்வம் எனக்கு அவகாசம் கொடுக்கவில்லை. இன்று நடு இரவிலேயே என்னைக் கூப்பிடுகிறது! மாட்டேனென்று எவ்விதம் சொல்வேன்!" என்று அவள் வருந்தினாள். இவ்விதம் செய்ய மனம் விரும்பாததை ஒரு பெரிய அபராதமாய்க் கருதி அவள் சட்டென்று எழுந்து நின்று, "போவோம்" என்றாள். மாடியில் தன்னுடைய படுக்கையறைக்கு எதிரில் வந்ததும் அவள் தயங்கி நின்று, "இதோ சற்று நேரத்தில் வருகிறேன். தாமதிக்கவில்லை" என்று சொன்னாள்.

இவ்விதம் சொல்லி அவள் வெளிமாடியில் போய் உட்கார்ந்துகொண்டாள். கிருஷ்ண பக்ஷத்துப் பிறைச் சந்திரன் நடு ஆகாயத்திலிருந்தது.

"பிரபோ, நீரே என்னைக் கூப்பிடுகிறீர். என்னை மறக்கக்கூடாது என்பதனாலேயே என்னைக் கூப்பிடுகிறீர்கள். என்னை முட்பாதை வழியாய் அழைத்துச் செல்பவர் நீரே! நீரே! நீரே! உம்மைத்தவிர வேறெவருமிலர்" என்று திரும்பத் திரும்பக் குமுதம் தன் மனத்திற்குள் சொல்லிக்கொண்டாள்.

மற்றெல்லாவற்றையும் குமுதம் மறக்க விரும்பினாள். மற்றவை யாவும் மாயை! மற்றவை யாவும் முட்கள்போல் அவளைத் தைத்தன. ஆனால் அவைகள் வழியிலிருக்கும் முட்கள், அவள் செல்லவேண்டிய வழியிலிருக்கும் முட்கள்—அந்த முள் நிறைந்த மார்க்கத்தில் செல்வதற்கு அவளுக்குத் துணை அவளுடைய தலைவனின் ஆசீர்வாதமே. அந்த ஆசீர்வாதத்தை அவள் தன் தலைப்பில் முடிந்து

கொண்டிருந்தாள். அவ்விதம் முடியப்பட்ட ஆசீர்வாதத்தை எடுத்துத் திரும்பத் திரும்ப நெற்றியில் ஒற்றிக்கொண்டாள். அதன் பிறகு நெற்றியால் பூமியைத் தொட்டு வெகுநேரம் நமஸ்கரித்தவண்ண மிருந்தாள். இவ்வித மிருக்கையில் திடீரென்று பின்னுலிருந்து மதுசூதனன் சொல்வதைக் கேட்டுத் திடுக்கிட்டாள்: "குளிரும், உள்ளே வா" என்றான் அவன். தனது உள்ளத்தில் குமுதம் எந்த வார்த்தையைக் கேட்க விரும்பினாளோ அதனுடன் இது சேரவில்லை. இதுவே அவளைப் பரீக்ஷிப்பதற்காகச் செய்யப்படுவது. தெய்வம் இன்று அவளைக் குழல் ஓசை கொண்டு கூப்பிடவில்லை; இன்று மாறு வேஷத்தில் மறைந்திருக்கிறது.

---

## 33

இது வரைக்கும் எவ்வளவோ ஏமாற்றத்தையும், அருவருப்பையும், விரக்தியையும் அநுபவித்தாலும் இல்லற வாழ்க்கையின் கொடூரமான ஆதிக்யம் தன்னை வருத்த வருத்த, எதையும் பொருட்படுத்தாமல் குமுதினி தன்னைச் சுற்றி ஓர் மறைவைச் சிருஷ்டித்துக்கொண்டாள். அந்த மறைவினால் அவளுக்குப் பிடித்தனவும் பிடிக்காதனவுமான விஷயங்களை மறந்து அவள் சுய உணர்ச்சியற்று இருக்க வசதியாயிருந்தது. இது குளோரொபாரத்தின் முறை. ஆனால் அம்முறை இரண்டு மூன்று மணிநேரம் இருந்துவிட்டு மறையும். அவள் இரவும் பகலும் படும் துன்பத்தையும் வெறுப்பையும் ஒதுக்கிவைக்கவேண்டுமே! இந்தமாதிரி நிலைமையில் பெண்களுக்கு ஒரு குரு வாய்த்தால், அவர்கள் எளிதில் துன்பத்தை மறந்து ஆறுதல் அடையக் கூடும். அதுவும் அவளுக்கு இல்லை. அதனால் அவள் எக்காலும்

ஜபிக்கும் மந்திரத்தையே தன் மனத்தில் உருவேற்ற முயன்றுவந்தாள். அல்லும் பகலும் அவள் சொல்லும் மந்திரமிதுவே:

*தஸ்மாத் ப்ரணம்ய ப்ரணிதாய காயம்
ப்ரஸாதயே த்வாம் அஹமீசமீட்யம்।
பிதேவ புத்ரஸ்ய ஸ்கேவ ஸக்யு:
ப்ரிய: ப்ரியாயார்ஹஸி தேவ ஸோடும்॥

"என் பூஜைக்கு உகந்தவரே, உம் எதிரில் சாஷ்டாங்கமாய் நமஸ்கரித்து இந்த வரத்தை விரும்புகிறேன்: தகப்பனார் தம் புதல்வனையும், தோழன் தன் நண்பனையும், அன்பன் தன் காதலியையும் எவ்விதம் பொறுத்துக்கொள்கிறானோ அவ்விதமே, என் தேவரே, நீங்களும் என்னைப் பொறுத்துக்கொள்ளவேண்டும். என்மேல் அன்பு கொண்டு என்னைப் பொறுத்துக்கொள்ளுகிறீரென்பதற்குப் பிரமாணம் உங்கள் அன்பின் விசேஷத்தால் நானும் எல்லாவற்றையும் பொறுத்துக்கொள்ள முடியும் என்பதே." குமுதினி கண்களை மூடிக்கொண்டு மனத்திற்குள் அவரை அழைத்து, "நீங்களே, 'முன்பு எவன் என்னை எல்லா இடத்திலும் காண்கிறானோ, என்னிடம் எல்லாவற்றையும் காண்கிறானோ அவன் என்னைவிட்டு அகலமாட்டான்; நானும் அவனைக் கைவிடமாட்டேன்' என்று சொல்லியிருக்கிறீர்கள். நான் இந்தத் தவத்திலிருந்து

---

*" तस्मात् प्रणम्य प्रणिधाय कायं
प्रसादये त्वाम् अहमीशमीड्यम् ।
पितेव पुत्रस्य सखेव सख्युः
प्रियः प्रियायार्हसि देव सोढुम् ॥

சிறிதும் பின் வாங்காமலிருக்க அருளவேண்டும்" என்று முறையிட்டுக்கொண்டாள்.

அன்று விடியற்காலையிலேயே எழுந்திருந்து குமுதினி சந்தன ஜலத்தினால் தன் தேகத்தை வெகுநேரம் அபிஷேகம் செய்துகொண்டாள். சரீரத்தைச் சுத்தம் செய்து, பரிமளமுள்ளதாய்ச் செய்து அவருக்கு அர்ப்பணம் செய்தாள். மனத்தில் ஏகாக்ரசித்தத்துடன் ஒவ்வொரு விநாடியும் அவர் கையில் தன் கை இருப்பதாகவும், தன் சரீரத்தில் சர்வவியாபியான அவர் ஸ்பர்சமிருப்பதாகவும் தியானிக்க முயன்றாள்; "இந்தச் சரீரம் உண்மையில் அவரையே அடைந்திருக்கிறது. வெளியில் வேறு எந்த உடலின் சம்பந்தம் ஏற்படுகிறதோ அது பொய், மாயை. இது மண்ணோடு சேரப்போகும் மண்ணேயாகும். அவரைச் சேர்வதாக நான் எண்ணும் வரையில் என் சரீரம் ஒரு விதத்திலும் அசுத்தமடையாது." இவ்விதம் எண்ணி ஆனந்தத்தினால் அவள் கண் இமைகள் நனைந்தன. இந்த மாம்ச பந்தனத்திலிருந்து அவள் சரீரம் முக்தி பெற்றதுபோல் இருந்தது. புண்ணியம் பெறுவதற்கு ஒரு கருவியாகக் கருதவே தன் சரீரத்தினிடம்கூட அவளுக்குப் பக்தி ஏற்படலாயிற்று. மல்லிகை மாலை மாத்திரம் அவள் கையில் இருக்கும்பக்ஷத்தில் அதை உடனே தன் கழுத்தில் அணிந்துகொண்டிருப்பாள்; தன் கூந்தலில் அதைச் சூட்டிக்கொண்டிருப்பாள்.

ஸ்நானம் செய்துவிட்டு அவள் அகலமான சிவப்புக் கரை போட்ட ஒரு வெளுப்புப் புடைவையைத் தரித்தாள். மேல் மாடியில் சென்று ஜபத்திற்கு உட்கார்ந்த சமயம் ஆகாய முழுதும் வியாபித்திருக்கும் ஒரு பவித்திர ஸ்பர்ச

மானது சூர்யகிரணங்களின் மூலமாய் அவளுடைய சரீரத்தை வரவேற்பதுபோல் இருந்தது.

மோதியின் தாயிடம் சென்று குமுதினி, "எனக்கு வேலை சொல்லிக்கொடு" என்றாள்.

அவள் சிரித்துவிட்டு, "ஆனல் சரி, வா, காய்கறி நறுக்கலாம்" என்று அழைத்துச் சென்றாள்.

பெரிய பெரிய மரத்தட்டுக்கள், பித்தளைக் கூடைகள், குவியல் குவியலாய்க் காய்கறிகள், பத்துப் பன்னிரண்டு அரிவாண்மணைகள்—இந்தக் குடும்பத்தை ஆச்ரயித்திருக்கும் பல பெண்கள் பேசிக்கொண்டே கைகளை வேகமாய்ச் செலுத்திக் காய்கறி நறுக்கிக்கொண்டிருந்தனர்; நாலுபுறமும் நறுக்கின கறிகாய்க்குவியல்கள் இருந்தன. இவர்களுக்கு இடையே ஓரிடத்தில் குமுதமும் உட்கார்ந்துகொண்டாள். எதிரிலிருக்கும் ஜன்னலின் வழியாய்க் குமுதத்தின் கண் பார்வை அண்டை வீட்டிலிருக்கும் ஒரு புராதனமான புளியமரத்தின்மேல் விழுந்தது. எப்போதும் அசைந்து கொண்டே யிருந்த அதன் தளிர்களின்மேற் பட்டுச் சூரிய கிரணங்கள் சிதறிக்கொண்டிருந்தன.

மோதியின் தாய் நடுவில் நடுவில் குமுதத்தின் முகத்தை நோக்கி, "மன்னி வேலை செய்கிறாரா அல்லது அவருடைய கை செல்லும் போக்குடன் அவர் மனமும் எங்கேயோ யாத்திரை செய்துகொண்டிருக்கிறதா? அவரைப் பார்க்கையில் பாயில் புகும் காற்றின் ஆகர்ஷணையில் ஆழ்ந்து, இருபுறமும் ஜலராசிகள் மோதி வழிந்தும், அதைக் கவனியாது செல்லும் பாய்மரக் கப்பலைப்போல அல்லவோ காண்கிறார்!" என்று எண்ணினாள். மற்றப் பெண்கள் குமுதத்துடன் பேச விரும்பினார்கள். ஆனல் சகஜமான வழி எதுவும் கிடைக்கவில்லை. சியாமசுந்தரி

ஒருமுறை, "ஏனம்மா, காலையிலேயே குளிக்கவேண்டு மானால் வெந்நீர் போடச் சொல்வதற் கென்ன? குளி ராதோ?" என்றாள்.

"எனக்கு வழக்கம்" என்றுரைத்தாள் குமுதம்.

பேச்சு மேல் செல்லவில்லை. குமுதத்தின் மனத்தில் அச்சமயம் நிச்சப்தமான ஜபம் நடந்துகொண்டே இருந்தது:

ப்ரியேவ புத்ரஸ்ய ஸகேவ ஸக்யு:
ப்ரிய: ப்ரியாயார்ஹஸி தேவ ஸோடும்.

காய்கறி நறுக்குவதும் சாமான்கள் எடுத்துக் கொடுப் பதும் முடிந்தன. பெண்கள் குளிப்பதற்காக உள்ளே முற்றத்திலுள்ள குழாயின்கீழே போய்ச் சூழ்ந்துகொண் டார்கள்.

மோதியின் தாயைத் தனியே சந்தித்துக் குமுதம், "அண்ணாவின் தந்தி கிடைத்தது" என்று சொன்னாள்.

அவள் சிறிது ஆச்சர்யமடைந்து, "எப்போது கிடைத்தது?" என்று கேட்டாள்.

"நேற்று இராத்திரி."

"இராத்திரியா?"

"ஆமாம். இராத்திரி அதிக நேரம் கழித்து அவரே நேரில் வந்து என் கையில் கொடுத்தார்."

"அப்படியானால் கடிதமும் கிடைத்திருக்கும்" என்று நிஸ்தாரிணி சொன்னாள்.

"எந்தக் கடிதம்?"

"உங்கள் அண்ணாவின் கடிதம்."

"இல்லையே! எனக்கு ஒன்றும் கிடைக்கவில்லையே. அண்ணாவிடமிருந்து கடிதம் வந்திருக்கிறதா?" என்று பரபரப்புடன் குமுதம் கேட்டாள்.

நிஸ்தாரிணி மௌனமா யிருந்தாள்.

குமுதம் தன் கையைப் பிசைந்துகொண்டு கவலையுடன், "அண்ணாவின் கடிதம் எங்கே இருக்கிறது? எனக்குக் கொண்டுவந்து கொடுக்கமாட்டாயா?" என்று கேட்டாள்.

மோதியின் தாய் இரகசியமாய், "அதை நான் கொண்டு வந்து கொடுக்கமுடியாது. அது எஜமானருடைய ஆபீஸ் அறையில் மேஜைக்குள் இருக்கிறது" என்றாள்.

"என் கடிதத்தை என்னிடம் கொடுப்பதற்கென்ன?"

"அவர் மேஜையை வேறு யாராவது திறந்தார்களென்று அவருக்குத் தெரிந்தால் பிறகு பிரளயந்தான் உண்டாகும்."

"என் அண்ணாவின் கடிதத்தை நான் படிக்கக் கூடாதா?" என்று குமுதம் ஆத்திரத்துடன் கேட்டாள்.

"அவர் ஆபீஸிற்குப் போயிருக்கும் சமயம் மேஜையைத் திறந்து அதை எடுத்துப் படித்துவிட்டுத் திரும்பவும் வைத்துவிடு."

குமுதத்தால் கோபத்தை அடக்க முடியவில்லை. மனம் கொதிப்படைந்தது; "என் கடிதத்தைக்கூட நான் திருடிப் படிக்கவேண்டுமா?" என்று கேட்டாள்.

"எது உன்னுடையது, எது உன்னுடையதல்ல என்பதை இந்த வீட்டு எஜமானர்தான் தீர்மானிக்கவேண்டும்."

குமுதம் தன் பிரதிஜ்ஞையை மறந்துவிடும் தருவாயிலிருந்தாள். அச்சமயம் அவள் மனம் அவளைக் கண்டித்து, "கோபிக்கக் கூடாது" என்றுரைத்தது. ஒரு க்ஷணம் அவள் தன் கண்களை மூடிக்கொண்டாள். "ப்ரிய: ப்ரியாயார்ஹஸி தேவ ஸோடும்" என்று அவள் உதடுகள் துடித்தன.

"என் கடிதத்தைத் திருடவேண்டுமென்றால் திருடிக் கொள்ளட்டும். அதற்காகப் பதிலுக்கு நான் அதைத் திருடமாட்டேன்" என்று குமுதம் சொன்னாள்.

இதைச் சொன்ன பிறகே தன் வாயிலிருந்து வந்த சொற்கள் கடுமையானவையென்று அவள் மனத்திற்பட்டது. உள்ளே இருக்கும் கோபம் அவளையறியாமல் வெளி வருகிறது. அதை வேருடன் அகற்றவேண்டும். அதனுடன் போராட விரும்பும்போது அது எல்லாச் சமயமும் கைக்கு எட்டுவதில்லை. அது குகைக்குள் கோட்டை கட்டிக் கொண்டிருக்கிறதே! வெளிப்புறமாக அதை அணுக வழி ஏது? ஆகையாலேயே அன்பென்னும் ஒரு வெள்ளத்தைக் கொண்டுவந்து, அக்கோபத்தை அகற்றிவிட்டு அதற்குப் பதில் பாசத்தை உண்டுபண்ணவேண்டும். மனத்திலுண்டாகும் வேதனையை அகற்றுவதற்கு அவள் கையில் ஒரு மருந்துண்டு. அது அவளுடைய சங்கீதமே! ஆனால் அவ் வீட்டில் எஸ்ராஜ் வாசிப்பது அவளுக்கு வெட்கமா யிருந்தது. அதை அவள் அங்கே வரும்போது கொண்டுவரக்கூட இல்லை. அவளுக்குப் பாடத் தெரியும்; ஆனால் சாரீரத்தில் பலம் கிடையாது. இசையின் மூலமாய் ஆகாயத்தில் பறக்க விரும்பினாள். ஊடலைக் காட்டும் இசைகளினால், "நீங்கள் கூப்பிட்டே நான் வந்திருக்கிறேன். பின் ஏன் ஒளிந்துகொண்டிருக்கிறீர்கள்? ஒரு க்ஷணங்கூட நான் தடங்கல் செய்யவில்லையே! பின் ஏன் இவ்விதம் என்னைச் சம்சயத்திற்குள்ளாக்கி யிருக்கிறீர்?" என்று வாய்விட்டுப் பாடிக் கேட்க விரும்பினாள். அப்படிச் செய்தால் அதற்குரிய பதில் அதே இசையின் மூலமாக வரும் என்று அவளுக்குத் தோன்றிற்று.

---

# 34

குமுதம் ஓடி ஒளிந்துகொள்வதற்கு ஓர் இடமே இருந்தது. அது மேல் மாடி. அங்கே சென்ருள். நேரமாயினமையின் மாடி முழுவதும் வெயில் ஏறிவிட்டது; மாடிப்படிக்கட்டினருகில் மாத்திரம் சற்றே நிழல் இருந்தது. அங்கே சென்று உட்கார்ந்தாள். அஸாவேரி ராகத்தில் ஒரு பாட்டு அவளுக்கு ஞாபகம் வந்தது. அதன் ஆரம்பம் "बांसरी हमारी रे" (பான்ஸரீ ஹமாரீ ரே) என்பது. ஆனால் மிகுந்த பாட்டின் அடி, அவள் கேட்டிருக்கும் சங்கீத வித்வானின் வாயினின்று குழறி மாறிவிட்டது. அதனுடைய அர்த்தம் தெரியவில்லை. குமுதினி பூர்த்தியாகாத அந்தச் சிறிய பாட்டிற்குத் தன் இஷ்டப்படி புதுப் புது சங்கதி சேர்த்துத் திருப்பித் திருப்பிப் பாடலானுள். அந்தச் சிறிய வார்த்தை அர்த்தம் நிறைந்ததாயிற்று. அந்த வாக்கியத்திற்கு, "என் குழலே, நீ ஏன் இன்னிசை நிறைந்து விளங்கவில்லை? இந்த அந்தகாரத்தைக் கடந்து, அடைக்கப்பட்டிருக்கும் கதவைத் தாண்டி, நீ என் அங்கே போய்த் தொனிக்கவில்லை? நித்திரையை ஏன் கலைக்கவில்லை? என் குழலே, என் இனிய குழலே!" என்னும் பொருள் உண்டாயிற்று.

மோதியின் தாய் வந்து குமுதத்தைச் சாப்பிடக் கூப்பிட்ட சமயம் அந்தச் சொற்ப நிழல்கூட மறைந்துவிட்டது. ஆனால் குமுதத்தின் மனத்தில் சங்கீதம் நிறைந்திருந்தது. வாழ்க்கையில் அவளுக்கு யார் எந்த எந்தத் தீங்கு செய்தாலும் அது மிகத் துச்சமாய்த் தோன்றிற்று. அவளுடைய கடிதவிஷயத்தில் மதுசூதனன் காண்பித்த அற்பத்தனத்தைப்பற்றி அவள் மனத்தில் ஓர் தீவிர அலட்சியம் உண்டாயிற்று. கானல் நிறைந்த ஆகாயத்தில்

ஒரு வண்டைப்போல எங்கேயோ மறைந்துவிட்டது. அவளுக்கு இருந்த கோபம் அதன் தொனியைப்போலவே தூரத்தில் எங்கேயோ அந்தர்த்தானமாய்விட்டது. ஆனால் கடிதத்தில் எழுதப்பட்டிருக்கும் அண்ணாவின் பிரியமான வார்த்தையைப் பெறுவதற்காக அவள் மனத்திலுண்டான ஆசை அகலவில்லை.

இந்த ஆவலே அவள் மனத்தில் நன்றாய்ப் பதிந்து இருந்தது. சாப்பாடான பிறகு அவளால் இருக்க முடிய வில்லை. மோதியின் தாயிடம் சென்று, "நான் கடிதத்தைப் படிப்பதற்காக வெளியறைக்குப் போகப்போகிறேன்" என்றாள்.

"இன்னும் சற்றுப் பொறுத்திருங்கள். வேலையாட்கள் சாப்பிடப் போய்விடுவார்கள். அப்போது போகலாம்" என்றாள் நிஸ்தாரிணி.

"கூடாது, கூடாது. அது திருட்டுத்தனமான செய்கையாகும். நான் எல்லோருக்கும் எதிரிலேயே போகப்போகிறேன். யார் என்னவேண்டுமானாலும் நினைத் துக் கொள்ளட்டும்" என்று குமுதம் சொன்னாள்.

"ஆனால் சரி, போகலாம். நானும் கூட வருகிறேன்."

"வேண்டாம். அது முடியாது. எந்த வழியாய்ப் போகிறதென்பதை மாத்திரம் நீ சொல்."

நிஸ்தாரிணி அந்தப்புரத்தின் தாழ்வாரத்தில் நின்று கொண்டு ஜன்னல் வழியாய் ஆபீஸ் அறையைக் காண்பித் தாள். குமுதம் வெளிப்புறம் சென்றாள். வேலையாட்கள் பயந்து எழுந்து நின்று அவளை வணங்கினர். குமுதம் அறைக்குள் நுழைந்து மேஜையைத் திறந்து பார்த்த சமயம் அதில் கடிதம் இருந்தது. கையில் எடுத்தாள்.

மேல் உறை திறக்கப்பட்டிருந்தது. மார்பு படபட வென்று அடித்துக்கொண்டது. அவளால் சற்றும் தாங்கமுடியவில்லை. அவள் வளர்ந்த வீட்டில் இவ்விதமான அவமானம் உண்டாக்கும் காரியத்தைச் செய்ய எண்ணவும் மாட்டார்கள். இவ்வித ஏமாற்றத்தினால் அடைந்த ஆழ்ந்த துயரமே அவளுக்கு ஓர் அதிர்ச்சியை உண் டாக்கி அவளை ஜாக்கிரதையுடன் இருக்குமாறு செய்தது. "ப்ரிய: ப்ரியாயார்ஹஸி தேவ ஸோடும்" என்று சொல்லிக்கொண்டாள். இருந்தும் மனத்தில் மூண்ட புயல் அடங்கவில்லை. ஆகையால் திரும்பத் திரும்பச் சொல்லிக்கொண்டாள். வெளியில் நின்றிருந்த சேவகன் எஜமானியம்மாள் இவ்விதம் ஏதோ மந்திரத்தைத் தனக் குள் சொல்லிக்கொள்வதைக் கேட்டுப் பிரமிப்படைந் தான். வெகுநேரம் ஜபித்தபின் குமுதினியின் மனம் சற்றுச் சாந்தியடைந்தது. கடிதத்தை எதிரில் வைத்து விட்டுக் கைகளைக் கூப்பிக்கொண்டு மௌனமாய் நாற்காலி யில் உட்கார்ந்திருந்தாள். கடிதத்தைத் திருடிப்படிக்கக் கூடாது என்பதே அவளுடைய தீர்மானம்.

அதற்குள் மதுசூதனன் அறைக்குள் நுழைந்து திடுக் கிட்டு நின்றான்; குமுதம் திரும்பிக்கூடப் பார்க்கவில்லை. அவன் அருகில் வந்து மேஜையின்மேல் விப்ரதாஸின் கடிதம் இருப்பதைக் கண்டான். "இங்கு ஏன் வந்தாய்?" என்று கேட்டான்.

குமுதம் மௌனமாய்ச் சாந்தமான பார்வையுடன் அவனை நோக்கினாள். அவள் முகத்தில் கையுங்களவு மாய்ப் பிடிக்கப்பட்டவளைப் போன்ற குறியே இல்லை. மதுசூதனன் மறுபடி, "இந்த அறைக்கு ஏன் வந்தாய்?" என்று கேட்டான்.

இந்த அநாவச்யமான கேள்விக்குக் குமுதம் சலிப்புடன், "அண்ணுவிடமிருந்து என் பெயருக்குக் கடிதம் வந்திருக்கிறதா வென்று பார்த்துவிட்டுப் போக வந்தேன்" என்ருள்.

"அதைப்பற்றி என்னைக் கேட்பதற்கென்ன?" என்பது போன்ற கேள்வியைக் கேட்க வகையில்லாமல் போய் விட்டது. முந்தின நாள் இரவு மதுசூதனன் தானுகவே இதற்குத் தடை ஏற்படுத்திக்கொண்டிருந்தான். ஆகையால், "இந்தக் கடிதத்தை நானே உன்னிடம் கொண்டுவந்து கொடுப்பதாயிருந்தேன். இதற்காக நீ இங்கே வரவேண்டிய அவசியமேயில்லை" என்று சொல்லவேண்டியதாயிற்று.

குமுதம் சற்றுநேரம் மௌனமாய் உட்கார்ந்திருந்தாள். பிறகு மனத்தைச் சாந்தப்படுத்திக்கொண்டு, "இந்தக் கடிதத்தை நான் படிப்பது உங்களுக்கு இஷ்டமில்லை. இந்தாருங்கள். நான் இதைக் கிழித்துவிட்டேன். ஆனல் இவ்விதக் கஷ்டம் இனி எனக்குக் கொடுக்கவேண்டாம். இதைவிடப் பெரிய துக்கம் எனக்கு வேறு இல்லை" என்று சொல்லி அவள் தன் முகத்தைத் துணியால் மூடிக் கொண்டு வேகமாய் அந்தப்புரம் சென்றுவிட்டாள்.

இதற்கு முன்பே மத்தியான்னம் சாப்பாடானதும் மதுசூதனன் மனம் அலைபட்டுக்கொண்டிருந்தது. குமுதம் சாப்பிட்டதும் அவளைக் கூப்பிட்டனுப்ப விரும்பினுன். இன்று அவன் தலைமயிரைக் கத்தரித்துக்கொள்வதில் விசேஷ கவனம் செலுத்தி யிருந்தான். காலையிலேயே ஒரு இங்கிலீஷ் க்ஷவரகன் கடைக்குச் சென்று ஸ்பிரிட் கலந்த வாசனைத் தைலமும் விலையுயர்ந்த எஸன்ஸ்களும் வாங்கிக் கொண்டுவந்திருந்தான். அவனுடைய வாழ்க்கையில் இவ்வித சாமான்களை இப்போதே அவன் முதல் முதல்

உபயோகித்திருக்கிறான். இவ்விதம் அலங்கரித்துக் கொண்டு பரிமளம் சூழ அவன் தயாராய் உட்கார்ந்திருந்தான். ஆபீஸ் செல்லும் நேரம் இன்று முக்கால் மணி தாமதமாய்விட்டது.

மாடிப்படியில் காலடிச்சத்தம் கேட்டு மதுசூதனன் நிமிர்ந்து உட்கார்ந்தான். கைக்கு வேறொன்றும் அகப்படாததால் ஒரு பழைய பத்திரிகையை எடுத்துக்கொண்டு அதிலிருக்கும் விளம்பரங்களை ஏதோ முக்கிய ஆபீஸ் விஷயம்போலப் படிக்கலானான். தன் பையிலிருந்து நீலப் பென்ஸிலை எடுத்து அதில் இரண்டொரு குறிப்புக்கள் கூட எழுதினான்.

இதற்குள் சியாமசுந்தரி அறைக்குள் வந்தாள். புருவத்தை நெரித்துக்கொண்டு மதுசூதனன் அவளை நோக்கினான். "நீங்கள் இங்கேயா உட்கார்ந்திருக்கிறீர்கள்! குமுதம் உங்களைத் தேடுகிறாளே!" என்றாள் சியாமா.

"தேடுகிறாளா? எங்கே?"

"இப்போதுதான் பார்த்துவிட்டு வருகிறேன். உங்கள் ஆபீஸ் அறைக்குச் சென்றிருக்கிறாள். ஏன் இவ்வளவு ஆச்சரியப்படுகிறீர்கள்! ஒருவேளை நீங்கள் அங்கே இருப்பீர்களென்று அவள் நினைத்திருக்கலாம்...."

சட்டென்று மதுசூதனன் அங்கிருந்து வெளியே சென்றான். அதற்குப் பிறகே கடிதத்தைப்பற்றின சம்பவம் நடந்தது.

பாய்மரக்கப்பலில் திடீரென்று சீலை கிழிந்துவிட்டால் என்ன நிலைமை ஏற்படுமோ அவ்விதமாயிற்று மதுசூதனன் கதி. அச்சமயம் அதற்குமேல் தாமதிக்க அவகாசமில்லை. ஆபீஸிற்குச் சென்றான். ஆனால் எல்லாக் காரியங்களின்

நடுவிலும் ஒரு முடிவிற்கும் வராத சிதறின சிந்தையின் கூரிய நுனி அவனைத் துளைத்துகொண்டே இருந்தது. இந்தப் பூகம்பத்திற்கிடையில் அவனால் வேலை செய்ய இயலவில்லை. தனக்குத் தாங்கொணாத் தலைவலியா யிருக்கிறதென்று சொல்லிவிட்டு வேலை முடிவதற்கு வெகுநேரம் முன்பே ஆபீஸிலிருந்து திரும்பி வீட்டிற்கு வந்தான்.

---

## 35

இங்கு நவீனனும் அவன் மனைவியும் இம்முறை தங்களை மறைத்திருந்த சுவர் இடிந்துவிட்டதென்றும் இனி ஓடி ஒளிய இடமில்லையென்றும் அறியலானார்கள். நிஸ்தாரிணி, "இங்கே நான் உழைத்து வயிறு நிரப்பிக் கொள்வதுபோல உழைத்துக் காலந்தள்ள எனக்கு வேறு இடம் அகப்படாமற்போகாது. நான் போன பிறகு மன்னியைச் சரியாய்க் கவனிப்பவர் ஒருவரும் இருக்க மாட்டார்களே என்ற ஒரு விஷயமே எனக்கு வருத்தமா யிருக்கிறது" என்றாள்.

"நான் இங்கே எவ்வளவோ விஷயங்களைப் பொறுத்துக் கொண்டிருக்கிறேன். இந்த வீட்டுச் சோறுந் தண்ணீருமே எனக்கு மிக வெறுப்பாயிருந்தன. ஆனால் இம்முறை எனக்கும் பொறுக்க முடியவில்லை. இவ்வித மனைவியைப் பெற்றும் அவளை ஆதரவாய் வைத்துக்கொள்ள அண்ணா விற்குத் தெரியவில்லை. எல்லாவற்றையும் கெடுத்துக்கொள் கிறார். எந்த இடத்தில் நல்ல வஸ்துக்களுக்குக் கேடு வருகிறதோ அங்கே தரித்திரமே ஏற்படும்" என்றான் நவீனன்.

"அதை உங்கள் அண்ணா சீக்கிரம் தெரிந்துகொள் வார். ஆனால் உடைந்துபோனது எங்கேயாவது ஒன்று சேருமா?"

"லக்ஷ்மணன்போல் மைத்துனனா யிருந்து சேவை செய்யும் அதிர்ஷ்டம் எனக்குக் கிடைக்கவில்லை. அதுவே எனக்கு வருத்தம். இருக்கட்டும். நீ உன் சாமான்களை மூட்டை கட்டு. இவ்வீட்டிலிருந்து யாராவது போக வேண்டுமென்று ஏற்பட்டுவிட்டால் பிறகு காலதாமதம் செய்யமுடியாது."

நிஸ்தாரிணி சென்றாள். நவீனனால் இருக்கமுடிய வில்லை. தன் மதனியின் அறைக்கு மெதுவாய்ச் சென்றான். அங்கே குமுதம் தரையின்மேல் பாயை விரித்துப் படுத் திருந்தாள். அந்தக் கடிதத்தைக் கிழித்து எறிந்த வேதனை அவள் மனத்தைவிட்டு அகலவே யில்லை.

நவீனனைப் பார்த்துவிட்டுச் சட்டென்று எழுந்து உட்கார்ந்தாள். "மன்னி பாதங்களைத் தொட்டு நமஸ் கரித்துவிட்டுப் போக வந்தேன். பாத தூளி தரவேண்டும்" என்று நவீனன் சொன்னான்.

குமுதத்துடன் அவன் பேசுவது இதுவே முதல் தடவை.

"வாருங்கள், வாருங்கள், உட்காருங்கள்" என்று குமுதம் சொன்னாள்.

நவீனன் தரையில் உட்கார்ந்து, "உங்களுக்குச் சேவை செய்யலாமென்று எண்ணினேன். அந்தச் சந்தோஷத் தால் என் உள்ளம் நிறைந்திருந்தது. ஆனால் அந்த மாதிரி செய்ய நவீனன் கொடுத்துவைத்திருந்தால்தானே! சில தினங்களே உங்கள் சேவை கிடைத்தது. அப்போதும்

ஒன்றும் செய்ய முடியவில்லை. இந்த ஒரு குறையே என் மனத்தில் நிலைத்துவிட்டது.

"நீங்கள் எங்கே போகிறீர்கள்?"

"அண்ணா எங்களை ஊருக்கு அனுப்பிவிடுவார். பிறகு உங்களைக் காணச் சந்தர்ப்பம் கிடைக்குமோ என்னவோ! ஆகையால் நமஸ்கரித்து விடைபெற்றுக் கொள்ளவந்தேன்" என்று சொல்லி அவன் நமஸ்கரித்தான். அதற்குள் நிஸ்தாரிணி ஓடிவந்து, "சீக்கிரம் வாருங்கள்; அண்ணா உங்களைத் தேடுகிறார்" என்றாள்.

நவீனன் வேகமாய் எழுந்து சென்றான். நிஸ்தாரிணியும் அவனுடன் போய்விட்டாள்.

அண்ணா வெளியறையில் மேஜைக்கெதிரில் உட்கார்ந்திருந்தார். நவீனன் வந்து எதிரே நின்றான். மற்றத் தினங்களில் இவ்விதம் நிற்கும் சமயம் அவன் முகத்திலிருக்கும் கலக்கம் இன்று சிறிதும் இல்லை.

"மேஜைக்குள் கடிதம் இருக்கிறதென்று மன்னிக்குச் சொன்னது யார்?" என்று மதுசூதனன் கேட்டான்.

"நான்தான் சொன்னேன்."

"திடீரென்று உனக்கேன் இவ்வளவு துணிச்சல் வந்துவிட்டது?"

"தம்முடைய அண்ணாவிடமிருந்து கடிதம் வந்ததா இல்லையா என்று மன்னி என்னைக் கேட்டார். எல்லாக் கடிதங்களும் முதல் முதல் உங்களிடம் வந்து இந்த மேஜையில் சேருகின்றன. ஆகையால் அதைப் பார்க்க வந்தேன்."

"என்னைக் கேட்கும்வரையில் தாங்கவில்லையோ!"

"அவர் கவலைப்பட்டுக்கொண்டிருந்தார். ஆகையால்—"

"ஆகையால் என் உத்தரவை மீறினாய்?"

அவர் இந்த வீட்டிற்கு எஜமானி. அவர் உத்தரவு இங்கே செல்லாது என்று எவ்விதம் அறிவார். அவர் சொல்வதைக் கேளாமலிருக்க எனக்கு அதிகாரம் இல்லை. இன்னொரு வார்த்தை உங்களிடம் சொல்கிறேன். அவர் எனக்கு எஜமானி மாத்திரமல்லர். நான் பூஜிக்க வேண்டியவர். அவர் உப்பைச் சாப்பிடுகிறோம் என்ற ஒரு காரணத்திற்காகமாத்திரம் நான் அவர் உத்தரவின்படி நடக்கிறேன் என்பது இல்லை. அவர்மேல் எனக்கு அதிக பக்தியும் இருக்கிறது."

"நவீன, உன்னைச் சின்ன வயது முதல் எனக்குத் தெரியும். இந்தயோசனை யெல்லாம் உன்னுடையன வல்ல. இந்த மாதிரி புத்தி உனக்கு யார் ஓதுகிறார் என்பதும் எனக்குத் தெரியும். இன்று இனிமேல் நாழிகை யில்லை. எப்படியும் நாளைக்கு விடியற்காலை வண்டியில் நீங்கள் ஊருக்குப் போகவேண்டியதுதான்."

உத்தரவு" என்று வேறு ஒன்றும் சொல்லாமல் நவீனன் சட்டென்று போய்விட்டான்.

"இவ்வளவு விரைவாய் 'உத்தரவு' என்று சொன்னது மதுசூதனனுக்குப் பிடிக்கவில்லை. நவீனன் அழுது கெஞ்சி யிருக்கவேண்டும். அதனால் மதுசூதனன் தான் கொண்ட சங்கற்பத்தை என்னவோ மாற்றப்போவதில்லை. நவீனனை மறுபடி கூப்பிட்டு அவன் "இப்போது சம்பளத்தை எடுத் துக்கொண்டு போ. ஆனால் இனிமேல் ஒரு பொழுதும் உங்களுக்குச் செலவிற்கு என்னால் கொடுக்கமுடியாது" என்றான்.

"கிராமத்தில் என் பங்கில் இருக்கும் நிலத்தை உழுது பயிர்செய்து காலங்கழிக்கலாமென்று நினைக்கிறேன்" என்றான் நவீனன். இதைச் சொல்லிவிட்டு மேல்வார்த் தையை எதிர்பாராமலேயே போய்விட்டான்.

மனிதனின் இயற்கை பலவித குணங்களைக்கொண்டு செய்யப்பட்டிருக்கிறதென்பதற்கு ஓர் உதாரணம் மதுசூதனன் நவீனன்மேல் ஆழ்ந்த பிரியம் வைத்திருந்ததே. அவனுடைய மற்ற இரண்டு சகோதரர்கள் ரஜபபுரத்தில் நிலத்தைப் பார்த்துக்கொண்டு கிராமத்திலேயே விழுந்து கிடக்கிறார்கள். அவர்களைப்பற்றி மதுசூதனன் விசாரிப்பதே இல்லை. தகப்பனார் இறந்த பிறகு மதுசூதனன் நவீனனைக் கல்கத்தா அழைத்துவந்து படிக்கவைத்து, எப்போதும் தன்னுடன் வைத்திருந்தான். வீட்டு வேலைகளில் நவீனனுக்கு இயற்கையாய்ச் சாமர்த்தியமுண்டு. அவன் மிக்க நேர்மையுள்ளவன் என்பதே அதற்குக் காரணம். மேலும், பேச்சிலும் காரியத்திலும் எல்லாருக்கும் பிரியமாய் நடந்துகொள்வான். யாராவது ஒருவருக்கொருவர் சண்டையிட்டுக் கொண்டால் நவீனன் அதை வெகு சுலபமாய்த் தீர்த்துவைப்பான். அவனுக்கு எல்லா விஷயத்திலும் சிரிப்புடனிருக்கத் தெரியும். தன்னைச் சேர்ந்தவர்களிடம் நியாயத்துடன் மாத்திரமல்லாமல், அவன் நடந்துகொள்ளும் விதத்தில், ஒவ்வொருவரும் தம்தம்மேலேயே அவனுக்கு அதிக பக்ஷபாதம் என்று எண்ணும்படிச் செய்வான்.

மதுசூதனனுக்கு நிஸ்தாரிணியைக் காணக்கூடப் பிடிக்கிறதில்லை என்பதே அவன் நவீனன்மேல் உண்மையான பிரியம் கொண்டிருக்கிறான் என்பதற்கு ஓர் அத்தாட்சியாகும். யார்மேல் அவனுக்கு இஷ்டம் ஏற்படுகிறதோ அவர்கள்மேல் அவனுக்கு ஏகாதிபத்தியம்வேண்டும். அதனாலேயே நிஸ்தாரிணி நவீனன் மனத்தைக் கெடுக்கிறாள் என்று மதுசூதனன் தன் உள்ளத்தில் கற்பனை செய்து கொண்டிருந்தான். தம்பிமேலிருக்கும் தன் அதிகாரத்தை

வெளியிலிருந்து ஒரு பெண் வந்து கெடுப்பதா? நவீனன் மேல் அவனுக்கு அதிகப்பிரியம் இல்லாமலிருந்தால் வெகுகாலம் முன்பே நிஸ்தாரிணியைத் தள்ளி வைத்திருப்பான்.

இவ்வளவும் நடந்தபின் மறுபடி ஒருமுறை ஆபீஸிற்குப் போய்வரலாமென்று மதுசூதனன் எண்ணினான். ஆனால் அவ்வளவு திடம் அவன் மனத்தில் இல்லை. குமுதம் கடிதத்தைக் கிழித்துப்போட்ட காட்சி அவன் மனத்தில் ஆழ்ந்து பதிந்துவிட்டது. அது மிக்க ஆச்சரியமான காட்சி. அவ்விதம் நடக்குமென்று இவன் எண்ணவேயில்லை. எப்போதும் அவனுக்குள்ள சந்தேகசுவபாவத்தினால் குமுதம் அந்தக் கடிதத்தை நிச்சயம் படித்திருப்பாள் என்று எண்ணினான். ஆனால் குமுதத்தின் முகத்தில் விளங்கின ஒரு நிர்மலமான சத்தியத்தின் தோற்றத்தினால் மதுசூதனனால் கூட அவளிடம் அவநம்பிக்கை கொள்ள முடியவில்லை.

குமுதத்தைக் கடுமையுடன் அதிகாரம்செய்யக்கூடிய சக்தியை மதுசூதனன் வெகு சீக்கிரமாய் இழந்து வருகிறான். இச்சமயம் அவனுக்குத் தன்னிடமுள்ள குறைகளே மிக்க வருத்தத்தையுண்டாக்கின. அவனுக்கு வயது அதிகமாய்விட்டதென்பதை அவன் மறக்க விரும்பினாலும் அவனால் மறக்க முடியவில்லை. தலை வழுக்கையாகிவருகிறதைக்கூட ஒளிக்க முடியவில்லை. அவன் நிறமோ கறுப்பு. பிரம்மாவினால் செய்யப்பட்ட இந்த அநீதி இவ்வளவு நாட்கள் கழித்து இப்போதே அவனை வாட்டிற்று. தனக்கு யௌவனமும் அழகும் இல்லாததனாலேயே குமுதத்தின் மனம் தன்கையில் அகப்படாமல் திரும்பத் திரும்பத் தப்பி விடுகிறதென்று அவன் எண்ணினான். இந்த அம்சத்திலேயே அவன் உபாயமற்றவனாய் இருந்தான். பலமற்றவனாய்

இருந்தான். சட்டர்ஜிவம்சத்துப்பெண்ணை விவாகம் செய்துகொள்ள இச்சித்தான். ஆனால் அங்கிருந்துவரும் பெண்ணுக்கெதிரில் தான் தோல்வியுறப் பிரம்மா முன்பே ஏற்பாடு செய்துவிட்டாரென்று அவன் கனவிலும் கருதினதில்லை. இவ்விதமிருந்தும் குமுதத்தைவிடத் தன் அதிகாரத்திற்கு உட்பட்டு நடக்கும் ஒரு சாதாரணப் பெண்ணே தனக்குக் கிடைத்திருந்தால் நலம் என்று எண்ணவும் அவனால் இயலவில்லை.

ஒரே ஒரு விஷயத்தில் மதுசூதனன் தன் மேன்மையைக் காண்பிக்கமுடியும்; அது தன் பணத்தின் உதவியால். இன்று காலையில் வீட்டிற்கு நகைவியாபாரி வந்திருந்தான். அவனிடமிருந்து மூன்று மோதிரங்கள் எடுத்து வைத் திருந்தான். அவைகளில் எது குமுதத்திற்குப் பிடிக்கும் என்று பார்க்க விரும்பினான். அந்த மோதிரத்தின் டப்பி களை ஜேபியில் வைத்துக்கொண்டு மாடியிற் படுக்கை யறைக்குச் சென்றான். ஒன்று சிவப்பு மோதிரம்; மற்றொன்று பச்சை மோதிரம்; வேறொன்று கமல மோதிரம். மது சூதனன் கற்பனைசக்தியைக்கொண்டு மனத்தில் ஒரு காட்சி யைக் காண்கிறான்: முதலில் சிவப்பு மோதிரப் பெட்டியை மெல்லத் திறக்கும்போது குமுதத்தின் ஆவலையுடைய கண்கள் ஒளிர்கின்றன. அதற்குப் பிறகு வெளியேவரு கிறது பச்சை மோதிரம்; அவளுடைய கண்கள் பின்னும் மலர்கின்றன. அதற்குமேல் சீமைக்கமலமோதிரம்; விலை யுயர்ந்த அந்த மோதிரத்தின் பிரகாசத்தால் குமுதினியின் கண்கள் பூரிக்க, அவள் படும் ஆச்சரியத்திற்கு எல்லையே இல்லை. மதுசூதனன் அப்போது ராஜகாம்பீர்யத்துடன் சட்டென்று, "உனக்கு எது இஷ்டமோ அதை எடுத்துக் கொள்" என்று சொல்லும்போது, அவள் வைரத்தின்

மேலுள்ள அவாவினுல் கேட்கத் தைரியமில்லாமல் இருப்பதைக் கண்டு, சிரித்துவிட்டு மூன்று மோதிரங்களையும் அவள் விரலில் போடுகிருன். அதற்குப் பிறகு இரவில் சயனமஞ்சத்தின் திரை விழுகிறது.

இந்த விஷயங்களெல்லாம் இரவிலே சாப்பிட்டான பிறகு ஏற்படலாமென்று மதுசூதனன் நினைத்திருந்தான். ஆனுல் அன்று மத்தியான்னம் நடந்த நிகழ்ச்சியினுல் அது வரை அவனுல் பொறுத்திருக்க முடியவில்லை. இரவு நடக்கப் போகும் சம்பவங்களுக்குப் பீடிகையை இப்போதே தயாரித்துக்கொள்ள விரும்பி அவன் உள்ளே சென்ருன்.

அங்கே சென்று பார்த்தசமயம் குமுதம் ஒரு டிரங்குப் பெட்டியில் தன்னுடைய துணி மணி சாமான்களை வைத்துக்கொண்டிருந்தாள். சுற்றிலும் சாமான்கள் இறைக்கப்பட்டிருந்தன.

"இது என்ன? எங்கேயாகிலும் போகப்போகிருயா?"

"ஆமாம்."

"எங்கே?"

"ரஜபபுரம்."

"எதற்காக?"

"உங்கள் மேஜையைத் திறந்ததற்காக மைத்துனருக்குத் தண்டனை விதித்திருக்கிறீர்கள். அத்தண்டனை உண்மையில் என்னைச் சேரவேண்டியது."

போகாதே என்று சொல்லித் தடுப்பது மதுசூதனனின் இயற்கைக்கு விரோதமானது. "போகட்டும், அங்கே எவ்வளவு நாட்கள் இருக்கிருள் பார்க்கலாம்" என்றே அவன் மனத்தில் முதலில் தோன்றிற்று. அதற்கு மேல் ஒருக்ஷணங்கூட அங்கே நில்லாமல் மிக வேகமாய் வெளியே சென்ருன்.

—

# 36

மதுசூதனன் வெளி அறைக்குச் சென்று நவீனனுக்குச் சொல்லியனுப்பி, "குமுதத்தை ஏன் இப்படிப் பைத்தியக்காரி யாக்குகிறீர்கள்?" என்றான்.

"அண்ணா, நாளைக்கு நாங்கள் போகப்போகிறோம். இன்று உங்கள் எதிரில் பயந்து விழுங்கி வார்த்தை சொல்ல வரவில்லை. நான் தெளிவாய்ச் சொல்லிவிடுகிறேன். மன்னியை வெளியே அனுப்புவதற்கு இந்த வீட்டில் வேறொருவர் வேண்டியதில்லை. நீங்கள் ஒருவரே போதும். நாங்கள் இருந்தால் சிறிது சமாதானமாய் வைத்துக் கொண்டிருப்போம். ஆனால் அது உங்களுக்குப் பொறுக்கவில்லை."

மதுசூதனன் கர்ஜித்துவிட்டு, "போதும்; எதிர்த்துச் சொல்லாதே. ரஜபபுரம் போகும்படி நீங்கள்தானே அவளுக்குச் சொல்லிக்கொடுத்தீர்கள்!"

"சொல்லிக் கொடுப்பதாவது! அந்தமாதிரி நாங்கள் நினைக்கக்கூட மாட்டோமே!"

"இதோ பார்! இந்த விஷயமாய் அவளை ஆட்டிவைக்காதீர்கள். உங்களுக்குத்தான் கேடுகாலம்; தெரிந்ததா!"

"அண்ணா, இந்த வார்த்தைகளையெல்லாம் யாரிடம் சொல்கிறீர்கள்! எங்கே சொன்னால் பிரயோஜனமுண்டோ அங்கே சொல்லுங்கள்."

"நீங்கள் அவளுக்கு ஒன்றும் சொல்லிக் கொடுக்கவில்லையா?"

"ஆணையிட்டுச் சொல்கிறேன்! அந்தமாதிரி கற்பனையாய்க்கூட நினைத்தது கிடையாது."

"அவள் பிடிவாதம் செய்தால் நீங்கள் என்ன செய்வீர்கள்?"

"உங்களைக் கூப்பிடுவோம். உங்களிடம் துப்பாக்கியும் காவற்காரர்களும் இருக்கிறார்கள். நீங்கள் அவரைத் தடுக்கக் கூடும். பிறகு உங்கள் விரோதிகள் இந்த விஷயத்தைப் பத்திரிகையில் பிரசுரித்தால் என் மனைவி மேல் சந்தேகப்படாதீர்கள்."

மதுசூதனன் அவனை மறுபடி அதட்டி, "பேசாமலிரு; அவள் ரஜபபுரம் போகவேண்டுமென்றால் போகட்டும். நான் தடுக்கப்போகிறதில்லை" என்றான்.

"அவளுக்கு எங்களால் எப்படிச் சாப்பாடு போட முடியும்?"

"உன் மனைவி நகைகளை விற்றுப்போடு போ, போ, உடனே வெளியே."

நவீனன் வெளிச்சென்றான். மதுசூதனன் ஓ-டி-கோலோனில் நனைத்த பட்டியை நெற்றியில் கட்டிக்கொண்டு ஆபீஸ் செல்வதென்று மறுபடி தன் மனத்தில் திடப்படுத்திக்கொண்டான்.

நவீனன் மூலமாய் எல்லா விவரத்தையும் அறிந்துகொண்டதும் நிஸ்தாரிணி குமுதத்தின் அறைக்கு ஓடினாள். அங்கே இன்னும் துணிமணிகளைக் கட்டிக்கொண்டிருந்த குமுதத்தைப் பார்த்து, "என்ன செய்கிறீர்கள்? மன்னி!" என்று வினவினாள்.

"உங்களோடுகூட வரப்போகிறேன்."

"உங்களை அழைத்துப் போவது எங்களால் சாத்தியமா?"

"ஏன்?"

"மைத்துனர் அப்புறம் எங்கள் முகத்திலும் விழிக்கமாட்டாரே."

"அப்படியானால் என்னையும் பார்க்கமாட்டார்."

"அது மாத்திரமல்ல. நாங்கள் மிகவும் ஏழையாயிற்றே."

"நானும் ஏழையே. நானும் உழைக்கிறேன்."

"மைத்துனரைப் பார்த்து ஜனங்கள் சிரிப்பார்களே!"

"அதற்கு என்ன செய்வது? எனக்காக நீங்கள் தண்டிக்கப்படுவதை என்னால் ஒப்புக்கொள்ள முடியாது."

"ஏன்? மன்னி, உங்களுக்காக அல்லவே இது? நாங்கள் செய்த தவறுக்காக இந்தத் தண்டனை."

"நீங்கள் என்ன செய்தீர்கள்?"

"நாங்கள் தானே உங்களுக்குச் செய்தி சொன்னோம்?"

"நான் கேட்டேன்; நீங்கள் சொன்னீர்கள். அது தவறா?"

"எஜமானருக்குச் சொல்லாமல் செய்தது அபராதம்."

"சரி, அப்படியே இருக்கட்டும். நீங்களும் தவறு செய்திருக்கிறீர்கள்; நானும் செய்திருக்கிறேன். அதன் பலனை எல்லாருமாக அநுபவிப்போம்."

"ஆனால் சரி. உங்களுக்காகப் பல்லக்கிற்குச் சொல்லுகிறேன். உங்களைத் தடுக்கவேண்டாமென்று மைத்துனர் சொல்லியிருக்கிறார். இங்கே கொடுங்கள்; உங்கள் சாமானை நான் சரிப்படுத்திக் கொடுக்கிறேன். உங்களுக்கு வேர்வை கொட்டுகிறதே."

இருவருமாகச் சாமானைக் கட்டலானார்கள். அச்சமயம் வெளியே செருப்பின் ஓசை கேட்கவே நிஸ்தாரிணி அவ்விடம் விட்டு வேகமாய்ச் சென்றாள்.

ஸ்ரீ துருதனன் அறைக்குள் நுழைந்ததும் குமுதத்தைப் பார்த்து, "நீ போகக் கூடாது" என்று சொன்னான்.

"ஏன் போகக் கூடாது?"

"ஏனென்றால் என் உத்தரவு."

"நல்லது; போகவில்லை. அதற்குமேல் இன்னும் என்ன உத்தரவு? சொல்லுங்கள்."

"உன் சாமானைக் கட்டுவதை நிறுத்து."

"இதோ நிறுத்திவிட்டேன்" என்று சொல்லிக் குமுதம் அறைக்கு வெளியே சென்றாள். மதுசூதனன், "இதைக் கேள்" என்று அழைத்தான்.

குமுதம் உடனே திரும்பி வந்து, "என்ன? சொல்லுங்கள்" என்றாள்.

சொல்வதற்கு ஒன்றும் விசேஷ சமாசாரம் இல்லை. இருந்தும் மதுசூதனன் சற்று யோசித்து, "உனக்காக மோதிரம் கொண்டுவந்திருக்கிறேன்" என்றான்.

"எனக்கு இஷ்டமான மோதிரத்தைப் போட்டுக் கொள்ளக் கூடாதென்று சொல்லிவிட்டீர்கள். எனக்கு இப்போது மோதிரம் வேண்டாம்."

"ஒரு தடவை கண்களாலாவது பாரேன்!"

மதுசூதனன் ஒவ்வொரு பெட்டியாய்த் திறந்து காண்பித்தான். குமுதம் ஒன்றும் சொல்லவில்லை.

"இவைகளில் உனக்கு எது பிடிக்கிறதோ அதைப் போட்டுக்கொள்ளலாம்."

"நீங்கள் எதைப் போட்டுக்கொள்ளும்படி உத்தரவிடுகிறீர்களோ அதைப் போட்டுக்கொள்கிறேன்."

"மூன்றையும் மூன்று விரல்களில் போட்டுக்கொண்டால் நன்றாயிருக்குமென்று எனக்குத் தோன்றுகிறது."

"உத்தரவிடுங்கள்; மூன்றையும் போட்டுக்கொள்கிறேன்."

"நான் போட்டுவிடுகிறேன்."

"ஆஹா, போட்டுவிடுங்கள்."

மதுசூதனன் அவைகளைக் குமுதத்தின் மூன்று விரல்களிலும் அணிந்தான்; "இன்னும் ஏதாகிலும் உத்தரவு உண்டோ?" என்று அவள் கேட்டாள்.

"நீ ஏன் கோபித்துக்கொள்கிறாய்?"

"இல்லையே; நான் கோபிக்கவில்லையே" என்று சொல்லிக் குமுதம் மறுபடி வெளியே சென்றாள்.

மதுசூதனன் சஞ்சலத்துடன், "அட! எங்கேபோகிறாய்! இதைச் சற்றுக் கேள்" என்றான்.

குமுதம் உடனே திரும்பி வந்து, "என்ன? சொல்லுங்கள்?" என்று கேட்டாள்.

என்ன சொல்வது என்று அவனுக்குத் தோன்றவில்லை. முகம் சிவந்தது. தன்னை நொந்துகொண்டு, "நல்லது; போ" என்று சொல்லிக் கோபத்துடன், "கொடு; மோதிரங்களைக் கழற்றிக் கொடு" என்று கேட்டான்.

குமுதம் மூன்று மோதிரங்களையும் கழற்றி மேஜையின் மேல் வைத்தாள்.

மதுசூதனன் கடுகடுத்து, "போ, போ" என்று சீறினன். குமுதம் உடனே போய்விட்டாள்.

இம்முறை கட்டாயம் ஆபீஸிற்குச் செல்வதென்று மதுசூதனன் உறுதி செய்துகொண்டான். ஆபீஸில் வேலை முடிந்து அது மூடப்பெறும் தருணம். ஆங்கில உத்தியோகஸ்தர்களெல்லாரும் டென்னிஸ் விளையாடப் போய்விட்டார்கள். மேலதிகாரிகள் புறப்பட்டுப்போகச் சித்தமாயிருந்தனர். அச்சமயம் மதுசூதனன் ஆபீஸிற்குச் சென்று உடனே வேலையில் முனைந்தான். ஆறு

அடித்தது; ஏழு அடித்தது; அதற்கப்புறம் எட்டுமணி அடிக்கும் சமயமே அவன் தன் கணக்குப் புத்தகங்களை மூடிவைத்துவிட்டு எழுந்து நின்றான்.

---

## 37

இதுவரை மதுசூதனனுடைய வாழ்க்கையில் அவன் செய்ய உத்தேசித்த காரியங்களுக்கு ஒருவிதத் தடையும் ஏற்படவில்லை. ஒவ்வொரு தினமும், ஒவ்வொரு க்ஷணமும் நிச்சயித்தபடி வேலைகளைச் செய்து முடிப்பான். இப்பொழுதோ திடீரென்று எதிர்பாராத வஸ்து ஒன்று வந்து எல்லாவற்றையும் கெடுத்துவிட்டது. இன்று ஆபீஸிலிருந்து திரும்பிவரும் சமயம் இவ்விரவு இன்னவிதம் நடந்துகொள்வதென்று அவனால் நிச்சயிக்க முடியவில்லை. பயந்த வண்ணம் வீடு வந்தான். மெதுவாய்ச் சாப்பாடும் ஆயிற்று. உடனே படுக்கையறைக்குச் செல்லத் துணிவு உண்டாகவில்லை. முதலில் கொஞ்சநேரம் தெற்கு வராந்தாவில் உலாவினான். வழக்கமாய்ப் படுக்கும் சமயமாகிய ஒன்பது மணி அடித்ததும் உள்ளே சென்றான். வீணாகக் காலம் கழிக்காமல் வேளையில் படுத்துக்கொள்ளவேண்டும் என்று அவன் அன்று உறுதி செய்துகொண்டு, சூன்யமான அறையில் நுழைந்து, கொசுவலையைத் தூக்கிச் சட்டென்று படுக்கையில் படுத்துக்கொண்டான். ஆனால் தூக்கம் வரவில்லை. இரவு நேரமாக ஆக அவனிடத்தில் மறைந்து ஏக்கமுறும் மனம், இருட்டில் மெல்ல மெல்ல வெளிக்குத் தோன்ற ஆரம்பித்தது. அந்தச் சமயம் அவனைத் தடுப்பவர் யார்? பாராக்காரர் யாவரும் கண்ணயர்ந்திருந்தனர்.

கடியாரத்தில் மணி ஒன்றடித்தது. ஆனால் கண்களில் சிறிதும் தூக்கமேயில்லை. அவனால் படுத்திருக்கமுடியவில்லை.

படுக்கையிலிருந்து எழுந்து குமுதம் எங்கிருப்பாளென்று சிந்திக்கலானான். விளக்கு அறையை இனி எப்போதும் பூட்டிவைக்கவேண்டுமென்று பங்குவிற்குக் கண்டிப்பான உத்தரவு இட்டிருந்தான். வெளிமாடி முழுவதும் ஒரு முறை சுற்றிப்பார்த்தான். அங்கே ஒருவரும் இல்லை. கால்களிலிருந்து செருப்பைக் கழற்றிவிட்டுக் கீழே தாழ்வாரத்தில் சத்தம் செய்யாமல் நடந்து சென்றான். நிஸ்தாரிணியின் அறைக்கு எதிரே வந்தபோது அவன் காதில் யாரோ பேசுவது கேட்டது. ஒருகால் நாளைக்கு ஊருக்குப் போகிறவர்களாகையால் கணவனும் மனைவியும் பேசிக்கொண்டிருக்கலாமென்றெண்ணி மௌனமாய்க் காதுகொடுத்துக் கேட்டு நின்றான். அறைக்குள் இருவர் பேசிக்கொண்டிருந்தனர். வார்த்தை புரியவில்லை. ஆனால் இரண்டும் பெண்களின் குரல் என்பதுமாத்திரம் தெளிவாய் விளங்கிற்று. பிரிவதன்முன் இரவில் நிஸ்தாரிணியுடன் குமுதமே அந்தரங்கமாய்ப் பேசுகிறாள்போலும். மதுசூதனனுக்குக் கோபத்தினால் கதவை உடைத்துப் பெரிய அமர்க்களம் செய்துவிடலாமென்று ஆத்திரம் வந்தது. ஆனால் நவீனன் எங்கே போய்விட்டான்? வெளியில்தான் இருப்பான். நவீனனைத் தேடிக்கொண்டு மதுசூதனன் சென்றான்.

அந்தப்புரத்திலிருந்து வெளிப்பக்கம் போகும்பாதையின் இருபுறமும் மரச்சட்டங்களால் தடுக்கப்பட்டிருந்தன. அங்கே ஒரு சிறிய விளக்கு எரிந்துகொண்டிருக்கும். மதுசூதனன் அதனருகில் வந்த சமயம் சியாமா ஒரு சிவப்புப் போர்வையைப் போர்த்துக்கொண்டு அங்கே நிற்பதைக் கண்டான். அவளைப் பார்க்கவே, வெட்கமடைந்தவனாய் அவன் மிக்க கோபத்துடன், "இந்த ராத்திரியில் நீ என்ன பண்ணுகிறாய் இங்கே?" என்று கேட்டான்.

"படுத்துக்கொண்டிருந்தேன். காலடிச் சத்தம் கேட்கவே பயமாய்ப்போய்விட்டது. யாராவது—" என்று சியாமா சொன்னாள்.

மதுசூதனன் உறுமிவிட்டு, "நானும் பார்க்கிறேன். நீ அதிகமாகத் தலைக்குமேல் ஏறுகிறாய். இந்த ஜாலமெல்லாம் என்னிடம் செய்யவேண்டாம். போய்த் தூங்கு" என்றான்.

சியாமசுந்தரியின் ஸாகஸம் சிலதினங்களாய்க் கொஞ்சங் கொஞ்சமாய் அதிகரித்துக்கொண்டு வந்தது. ஆனால் இன்றுதான் அசந்தர்ப்பமான சமயத்தில் தவறான இடத்தில் கால் வைத்துவிட்டோமென்று உணர்ந்து கொண்டாள். தன் முகத்தைப் பரிதாபகரமாய் வைத்துக் கொண்டு ஒருமுறை மதுசூதனனை நோக்கினாள். பிறகு முகத்தைத் திருப்பிக்கொண்டு தலைப்பினால் கண்களைத் துடைத்துக்கொண்டாள். போவதற்குப் புறப்பட்டவள் மறுபடிப் பின்வாங்கி, "ஜாலம் ஒன்றும் செய்யவில்லை. ஏதோ என் கண்களைக்கொண்டு நான் பார்க்கும் விஷயம் என்னை வருத்தித் தூக்கமில்லாமல் செய்கிறது. நான் என்ன இன்று நூதனமாய் வந்திருக்கிறேனா? எவ்வளவோ நாளைய பழக்கம். இவையெல்லாம் எவ்விதம் சகிப்பது?" என்று சொல்லி வேகமாய்ச் சென்றுவிட்டாள்.

மதுசூதனன் சிறிதுநேரம் மௌனமாக நின்றிருந்தான். பிறகு வெளிப்பக்கத்து அறையை நோக்கிச் செல்லும் போது எதிரே ரோந்து சுற்றும் காவலாள் வந்தான். மதுசூதனன் தன் வீட்டில் இவ்வளவு கடுமையான சட்ட திட்டங்கள் ஏற்படுத்திக்கொண்டிருப்பதன் பலன் சொந்த வீட்டில் தன்னிஷ்டப்படி ஒருவருக்கும் தெரியாமல் சுற்றுவதுகூட அவனால் இயலாததாயிற்று. நாலுபுறமும் எத்தனையோ கண்கள் அவனைக் கவனித்தன. ராஜாபகதூர் நடு

இரவில் படுக்கையை விட்டு எழுந்து தாழ்வாரத்தில் சந்தடி செய்யாமல் ஒரு பூதம் போல் நடந்து செல்வது இது வரை ஒருநாளும் நடவாத நிகழ்ச்சி. முதலில் அவனை அடையாளம் தெரிந்துகொள்ளாமல் காவலாள் தூரத்திலிருந்து, "யாரது?" என்று கேட்டான். பிறகு அருகில் வந்து பார்த்துவிட்டு நாக்கைக் கடித்துக்கொண்டு ஸலாம் செய்து, "பசுதூர், உத்தரவு என்ன?" என்றான்.

"எல்லாம் சரியாயிருக்கிறதா வென்று பார்க்க வந்தேன்" என்று மதுசூதனன் சொன்னான். இவ்விதம் சந்தேகித்து வந்து பார்ப்பது மதுசூதனன் இயற்கைக்குப் பொருந்தியதுதானே!

அதற்குமேல் மதுசூதனன் கொலு அறைக்குச் சென்று பார்த்த சமயம் அவன் எதிர்பார்த்தவிதமே நவீனன் அங்கே சோபாவில் படுத்துத் தூங்கிக்கொண்டிருந்தான். மதுசூதனன் ஒரு காஸ் வத்தியை ஏற்றினான். அப்போதுகூட நவீனனது நித்திரை கெடவில்லை. பிறகு கைகளால் அவனைப் பிடித்து உலுக்கவே அவன் பரபரப்புடன் எழுந்து உட்கார்ந்தான். மதுசூதனன் வேறே விவரிக்காமல், "போ, மன்னியிடம்போய் நான் மாடிக்குக் கூப்பிட்டதாய்ச் சொல்" என்றுரைத்துத் திரும்பிச் சென்றுவிட்டான்.

சிறிது நேரத்தில் குமுதினி சயன அறைக்குள் பிரவேசித்தாள். மதுசூதனன் அவளை நோக்கினான். ஒரு மட்டமான சிவப்புக்கரை போட்ட புடைவையை அவள் தரித்திருந்தாள். புடைவையின் தலைப்பு நெற்றிவரை இழுக்கப்பட்டிருந்தது. இந்த அறையின் மங்கலான வெளிச்சத்தில் இது என்ன அபூர்வத் தோற்றம்! ஒருபுறம் இருக்கும் சோபாவில் அவள் உட்கார்ந்தாள்.

மதுசூதனன் சட்டென்று அவள் கால்களண்டை வந்து உட்கார்ந்துகொண்டான். குமுதினி வெட்கி எழுந்திருக்க முயன்ற சமயம் அவன் அவளுடைய கைகளைப் பிடித்துக்கொண்டு அமர்த்தி, "எழுந்திருக்காதே; கேள்; நான் சொல்வதைக் கேள்: என்னை மன்னித்துவிடு. நான் அபராதம் செய்தேன், படோபஹூ" என்றான்.

எதிர்பாராத விதம் இவன் இவ்வளவு விநயம் காண்பித்ததைக் கண்டு குமுதினி பிரமித்துவிட்டாள். அவன் மறுபடி, "நவீனனும் அவன் மனைவியும் ரஜபுரம் போக வேண்டாமென்று நான் தடுத்துவிடுகிறேன். அவர்கள் இங்கேயே உனக்கு உதவியாக இருக்கட்டும்" என்றான்.

குமுதத்திற்கு என்ன செய்வதென்று தெரியவில்லை. தன்னைத் தாழ்த்திக்கொண்டாவது அவளுடைய பிடிவாதத்தை அசைக்கவேண்டும் என்பது மதுசூதனனது அபிப்பிராயம். குமுதத்தின் கைகளைப் பிடித்துக்கொண்டு கெஞ்சியவண்ணம், "நான் இதோ வந்துவிடுகிறேன். அதற்குள் எழுந்து போய்விடமாட்டாயே? சொல்" என்றான்.

"இல்லை, போகவில்லை" என்று குமுதம் சொன்னாள்.

மதுசூதனன் கீழே சென்றான். அவன் அற்பத்தனமாகவும் நிஷ்டூரமாகவும் நடந்துகொள்ளும்போது குமுதத்திற்கு அவ்வளவு கஷ்டமாயில்லை. ஆனால் இன்று அவன் தன்னையும் குறைத்துக்கொள்வதைப் பார்த்துக் குமுதத்திற்கு என்ன சொல்வதென்று தோன்றவில்லை. அவள் உள்ளத்தில் தானம் கொடுக்க எடுத்துவந்த பொருள் நழுவிக் கீழே விழுந்துவிட்டது. இனி அதைத் திரட்டி எடுத்து ,, மறுபடி உபயோகிக்க முடியுமோ! தன் தெய்வத்தின் உதவியையே நாடலானாள். "ப்ரிய: ப்ரியாயார்ஹஸி தேவ ஸோடும்."

இதற்குள் நவீனனையும் நிஸ்தாரிணியையும் அழைத்துக்கொண்டு மதுசூதனன் வந்தான். அவ்விருவர்களையும் குமுதத்தின் எதிரில் நிறுத்தி, "நாளைக்கு நீங்கள் இருவரும் ரஜபபுரம் போகவேண்டாம். நாளைமுதல் நீங்கள் மன்னிக்குச் சுச்ரூஷை செய்வதற்கென்று நியமிக்கப்பட்டிருக்கிறீர்கள்" என்று அவர்களை நோக்கிச் சொன்னான்.

இதைக் கேட்டு அவ்விருவரும் வாயடைத்துப்போய் நின்றனர். முதலாவது, இவ்விதக் கட்டளையை அவர்கள் எதிர்பார்க்கவேயில்லை. அதைத் தவிர இதைச் சொல்வதற்காக இந்நடுநிசியில் தானே நேரில்வந்து அவர்களை அழைத்து வருவதற்கு, அப்படி என்ன அவசரமோ!

மதுசூதனனால் பொறுமையாக இருக்க முடியவில்லை. அன்றிரவே குமுதத்தின் மனத்தைத் திருப்ப விரும்பினான். ஆகையால் அப்போது கருமித்தனத்தையாகிலும் வெட்கத்தையாகிலும் காண்பிக்கக் கூடாதென்பது அவன் எண்ணம். அவன் வாழ்க்கையில் அதுவரை தன் கௌரவத்திற்கு அவ்விதக்கேடு ஒருநாளும் செய்து கொண்டதேயில்லை. தான் விரும்புவதைப் பெறுவதற்கு ஈடாகத் தான் அருமையாகப் பாராட்டும் விஷயத்தைப் பறிகொடுத்தான். குமுதத்தினிடம், "உன் எதிரில் நான் சிறிதும் சங்கோசமில்லாமல் என் தோல்வியை ஒப்புக்கொள்கிறேன்" என்பதே அவன் தன் பாஷையில் சொல்ல விரும்பியது.

அவன் இவ்விதம் அளிப்பதை எவ்விதம் ஏற்றுக் கொள்வதென்று குமுதத்தின் மனத்தில் சங்கோசமுண்டாயிற்று. இதற்குக் கைம்மாறு அவளால் என்ன கொடுக்க முடியும்? வெளியிலிருந்து வாழ்வில் ஓர் தடங்கல் வரும்போது, அதனுடன் போர் புரியச் சக்தி தானாகவே

வருகிறது; பகவானே சகாயமாய் நிற்கிறார். வெளியி லிருந்து வரும் இடையூறு சக்திஹீனமாய்விட்டால் யுத்தம் நின்று விடுகிறதே யொழிய மனம் சமாதானமடைய விரும்ப வில்லையே. அப்போது தன் மனமே தனக்கு விரோத மாக வெளிக்கிளம்புகிறது.

மதுசூதனன் அவளை அவமதித்துத் துன்புறுத்திய சமயம் அவளுக்குப் பிரியமில்லாவிடினும் அவனுடன் பழகு வது சகஜமாய் இருந்தது. ஆனால் மதுசூதனன் தன்னைத் தாழ்த்திக்கொண்டு நடந்துகொள்ளும்போது அவனுடன் உறவாடுவது குமுதினிக்குக் கஷ்டமாயிருந்தது. அவளைக் காப்பாற்றின மானுபிமானத்தின் மறைவை இப்போது அவள் நாடமுடியாது. இனி விளக்கு அறையில் பதுங்கிக் கொள்வதும் முடியாது. இப்போது தெய்வத்தினிடம் வேண்டிக்கொள்வதில் அர்த்தமே யில்லை. மதுசூதனன் அளிப்பதை அங்கீகரிக்க வேண்டும். ஆனால் அதைப் பிரீதியுடன் எவ்விதம் பெறுவது?

நிஸ்தாரிணியைத் தன்னுடன் நிறுத்திக்கொண்டால் தான் தப்பலாமென்று அவள் எண்ணினாள். ஆனால் நவீனன் செல்லவே அவன் பின்னால் நிஸ்தாரிணியும் பிரமிப்படைந்தவளாய்ச் சென்றுவிட்டாள். கதவை யடைந்ததும் அவள் ஒருமுறை திரும்பித் துயரத்துடன் குமுதத்தை நோக்கிவிட்டுச் சென்றாள். கணவனது அன் பென்னும் கட்டினின்று அப் பெண்மணியை யார் விடு விப்பார்கள்?

மதுசூதனன், "உடுப்பை மாற்றிக்கொண்டு படுக்க வரவில்லையா?" என்று கேட்டான்.

குமுதினி மெதுவாய் எழுந்து அடுத்திருக்கும் ஸ்நான அறைக்குள் சென்று கதவை உட்புறம் தாளிட்டுக் கொண்டாள். அவள் கூடுமானவரை தன் விடுதலைக்

காலத்தை விருத்தி செய்துகொள்ள விரும்பினாள். அவ்வறையில் சுவரோரமாய் ஒரு நாற்காலி இருந்தது. அதன் மேல் உட்கார்ந்தாள். வியாகுலம் அடைந்த அவள் உள்ளம் தனக்குள்ளேயே ஒரு துணையை நாடிற்று. மதுசூதனன் அடிக்கடி சுவரின்மேலிருந்த கடியாரத்தைப் பார்த்துக் கொண்டு, உடையை மாற்றுவதற்கு எவ்வளவு நிமிஷங்கள் வேண்டுமென்பதைக் கணக்கிட்டுக்கொண்டிருந்தான். கண்ணாடியில் தன் முகத்தைப் பார்த்துத் தன் தலையின் நடுவில் ஓர் இடத்தில் மயிர் கோணலாகத் தூக்கி நின்றதைப் பிரஷ்ஷினால் சீர்திருத்த வீணாக முயன்று, தன் வஸ்திரத்தில் ஏராளமாக லாவெண்டரைத் தெளித்துக் கொண்டான்.

பதினைந்து நிமிஷங்கள் கழிந்தன. உடுப்பு மாற்ற இது போதும். மதுசூதனன் மெதுவாய்க் கதவண்டை சென்று காதுகொடுத்துக் கேட்டான். உள்ளிருந்து எதுவும் அசையும் சப்தம் கேட்கவில்லை. ஒருகால் தலையைக் கோதிக் கொண்டிருக்கிறாளோ வென்றெண்ணினான். பெண்களுக்கு அலங்காரம் செய்துகொள்வதில் மிகப் பிரியம் என்பதை மதுசூதனனும் அறிவான். ஆகையால் பொறுத்திருக்க வேண்டியதாயிற்று. அரைமணி கழிந்தது. மதுசூதனன் மறுபடி கதவருகில் சென்று செவிகொடுத்துக் கேட்டான். ஒரு சப்தமுமில்லை. திரும்பி வந்து நாற்காலியில் உட்கார்ந்து கட்டிலினருகில் தொங்கும் சீமைச் சித்திரம் ஒன்றை நோக்கலானான். சிறிது நேரம் கழியவே சட்டென்று எழுந்து மூடின கதவண்டை சென்று, “இன்னும் முடியவில்லையா?” என்று கேட்டான்.

சில விநாடிகளில் கதவு திறக்கப்பட்டது. ஏதோ கனவில் நடப்பவள் போலக் குமுதினி வெளியே வந்தாள்.

முன்பு உடுத்தியிருந்த புடைவையையே அப்போதும் உடுத்தியிருந்தாள். அது ராத்திரியில் உடுக்கும் ஆடையன்று. நீண்ட கைவைத்த பிரௌன் வர்ணக் கம்பளிச் சட்டையைத் தரித்து, ஓர் சிவப்புப்பேட்டுப் போட்ட பாதாமிநிறச் சால்வையின் தலைப்பை நெற்றிக்கு மேல் இழுத்து மூடியிருந்தாள். கதவின் ஒரு பக்கத்தைப் பிடித்துக்கொண்டு தயக்கத்துடன் அவள் நிற்பது ஓர் அற்புதச் சித்திரமெனத் தோற்றமளித்தது. திரண்டிருக்கும் வெளுப்பான கரங்களில் மகரமீனுருவ முகப்புவைத்த பழைய காலத்திய தங்கக் கடகங்கள்; ஒருகால் அவளுடைய தாயாருடையனவாய் இருக்கலாம். இந்தக் கனமான தடித்த கடகங்கள் அவள் கரங்களுக்குக் கொடுக்கும் ஐச்வர்யத்தின் சோபையானது மிகப் பொருந்தியதாய் இருந்தது. அதில் சிறிதாகிலும் ஆடம்பரத்தின் அறிகுறி இல்லை. மதுசூதனனுக்கு அவளை அப்போதே புதிதாய்ப் பார்க்கிறமாதிரி இருந்தது. அவள் மகிமையைக் கண்டு மீண்டும் வியந்தான். அவனுக்குத் தான் இவ்வளவு காலமாய்ச் சம்பாதித்துத் திரட்டின பொருள்களெல்லாம் அப்போதே அழகு பெற்றிருக்கின்றனவென்று தோன்றிற்று. தன்னுடன் பழகுபவர்களையெல்லாம் பார்த்துவிட்டு மதுசூதனன் அவர்கள் எல்லாரிலும் தானே சிறந்தவன் என்று பணக்கர்வத்தினால் நினைப்பது வழக்கம். இன்று காஸ் வத்தி வெளிச்சத்தில் கதவினருகில் மௌனமாய் நிற்கும் அந்நங்கையை நோக்குங்கால் அவனுக்குத் தன்னிடமிருக்கும் செல்வம் போதாது, ஓர் சக்ரவர்த்தியாய் உலகமாள்பவனாய் இருந்தாலே அவளைத் தகுந்தவிதம் கௌரவிக்க முடியும் என்ற எண்ணம் உண்டாயிற்று. ஜன்மம் முழுவதும் ஓர் உயர்ந்த வம்சமரியாதையில் ஊறி வரும் சுவபாவத்தை அவளிடம் பிரத்யக்ஷமாகக் கண்டான். அது

இன்றல்ல—நீண்ட காலமாக—அவள் பிறப்பதற்கு முன்பே பரம்பரையாக வரும் சுவபாவம். அதனாலேயே அவளு டைய இதயத்தை அடைய மதுசூதனனால் முடியவில்லை. அவ்விடத்தில் பூர்ண உரிமையுடன் நடமாடக் கூடியவன் விப்ரதாஸ் ஒருவனே. குமுதினியைப் போல் அவனிடத் திலும் அந்த வம்சகௌரவம் குடிகொண்டிருந்தது.

இந்த விஷயந்தான் மதுசூதனனால் பொறுக்க முடிய வில்லை. விப்ரதாஸின் உள்ளத்தில் கர்வமென்பது சிறிதும் இல்லை. அங்கே இருப்பது பிறருடன் ஒட்டாத தன் னடக்கமே. அவனுக்கு மிக நெருங்கிய பந்துவும் அவ னிடம் வந்து சட்டென்று முதுகில் ஒரு தட்டுத் தட்டி, "என்ன, சௌக்கியமா?" என்று உறவாடுவது இயலாது போலிருக்கும். அவ்வித காம்பீர்யம் விப்ரதாஸிடம் இருந்தது. மதுசூதனன் ஒருவனுக்குத்தான் விப்ர தாஸ் ஏதோ ஓர் அற்பமானவனைப் போல மனத்திற்குள் தோன்றுகிறான். அதுவே அவனுக்கு ஆத்திர முண் டாக்கிற்று. சூக்ஷ்ம காரணத்தினால் குமுதத்தின்மேல் அவன் அதிகாரம் செலுத்த முடியவில்லை. தன் வீட்டில் யார்பேரில் அதிகாரம் செலுத்த அவனுக்கு அதிக பாத் தியதை உண்டோ அவளிடமிருந்தே அவன் அதிகம் பின் வாங்கவேண்டியிருக்கிறது. ஆனால் அவள் விஷயத்தில் அவனுக்குக் கோபம் உண்டாகவில்லை. குமுதத்தினிடம் அவனுக்குள்ள மோகமானது அடக்கமுடியாத வேகத் துடன் அதிகரித்துவந்தது. அன்று குமுதத்தைக்கண்டதும் அவள் வசித்தமாய் வரவில்லையென்று மதுசூதனன் நன்றாய்த் தெரிந்துகொண்டான். கண்களுக்குப் புலப் படாத ஓர் திரைக்குப்பின் அவள் மறைந்து நிற்கிறமாதிரி இருந்தது. ஆனால் என்ன அற்புதமான அழகு! அவளிடம்

ஒளிரும் தூய்மை என்ன! மலையின் நிர்மானுஷ்யமான பனிமுடியில் தோன்றும் அருணோதயம் போலிருந்தது அந்தக் காட்சி.

மதுசூதனன் குமுதத்தினருகில் சென்று, "படுக்க வரவில்லையா? படோபஹு" என்று மிக்க பொறுமையுடன் கேட்டான்.

குமுதத்திற்கு ஆச்சரியமுண்டாயிற்று. மதுசூதனன் நிச்சயம் கோபித்துக்கொள்வான், தன்னை ஏசுவான் என்று குமுதம் நினைத்திருந்தாள். ஆனால் அவன் இவ்விதம் செய்ததால் அவளுக்குத் திடீரென்று வெகுநாட் பழக்கமுள்ள வேறொரு குரல் ஞாபகம் வந்தது. அவளுடைய தந்தை எவ்விதம் அன்புடன் தன் தாயை படோபஹு என்று கூப்பிடுவார் என்பது நினைவுக்கு வந்தது. தந்தையினிடம் வராமல் அம்மா எவ்விதம் போனாள் என்பதும் நினைவுக்கு வந்தது. ஒருக்ஷணத்தில் அவள் கண்களில் நீர் நிறைந்தன. தரையில், மதுசூதனன் காலடியில் வந்து உட்கார்ந்து, "என்னை க்ஷமிக்கவேண்டும்" என்று வேண்டினாள்.

மதுசூதனன் சட்டென்று அவளைக் கைகொடுத்துத் தூக்கிச் சோபாவில் உட்காரவைத்து, "நீ என்ன தப்புச் செய்தாய்? உன்னை எதற்காக மன்னிக்கவேண்டும்?" என்று கேட்டான்.

"என் மனம் இன்னும் தயாராகவில்லை. எனக்குச் சற்றுச் சாவகாசம் கொடுங்கள்" என்றாள் குமுதம்.

இதைக் கேட்டதும் மதுசூதனன் மனம் இறுகிற்று. "எதற்காகச் சாவகாசம் கொடுக்கவேண்டும்? தெளிவாய்ச் சொல்" என்றான்.

"சரியாய்ச் சொல்ல வரவில்லை. பிறருக்குச் சொல்லுவது பிரயாசமாயிருக்கிறது—"

மதுசூதனன் குரலில் இப்போது சிறிதும் மிருதுத் தன்மையே இல்லை; "ஒன்றும் பிரயாசமில்லை. என்னைக் கண்டால் பிடிக்கவில்லை. அதைத்தானே சொல்லவேண்டும்?" என்று கேட்டான்.

குமுதினியின் நிலை சங்கடமாய்விட்டது. அவன் சொன்னதில் ஓர் அம்சம் உண்மை, ஓர் அம்சம் உண்மையல்ல. தனதுள்ளம் நிறைந்த நைவேத்யத்தைச் சமர்ப்பிக்க வேண்டுமென்று அவள் தீர்மானித்திருக்கிறாள். ஆனால் அந்த நைவேத்யம் வரமாட்டேனென்கிறது. சற்றுப் பொறுமையாயிருந்து, நிர்ப்பந்தம் செய்யாவிட்டால் அது தானே வரும் என்று அவள் மனம் சொல்லிற்று. அவ்விதம் வருவதற்கு அதிகக் காலதாமதமும் ஆகாது. இருந்தும் இச்சமயம் நைவேத்தியத்தட்டு காலியாகவே இருந்தது.

"உங்களை ஏமாற்ற விரும்பவில்லை. ஆகையாலேயே சற்று அவகாசம் கேட்கிறேன்" என்றாள் குமுதம்.

மதுசூதனன் வரவரப் பொறுமை இழந்தான். கடுமையாக, "அவகாசம் கொடுப்பதால் என்ன சாதகம்? உன் அண்ணாவோடு கலந்து யோசித்துக்கொண்டு, பிறகே கணவனோடு சம்சாரம் நடத்தப்போகிறாயா?" என்று கேட்டான்.

விப்ரதாஸை எதிர்பார்த்தே குமுதம் எல்லாவற்றையும் நிறுத்தி வைத்திருக்கிறாளென்று மதுசூதனன் நினைத்தான். அண்ணா ஏவுகிறபடி தங்கை நடப்பாள். "உன் அண்ணாவே உனக்குக் குரு" என்று ஏசினான்.

குமுதினி உடனே எழுந்து "ஆமாம், என் அண்ணாவே எனக்குக் குரு" என்றாள்.

"அவன் உத்தரவில்லாமல் இன்று வேறு உடை தரிக்க மாட்டாயா? படுக்க வரமாட்டாயா? அதுதானே?"

குமுதம் தன் கை முஷ்டிகளை இறுக்கிக்கொண்டு கற்சிலைபோல் நின்றாள்.

"ஆனால் தந்திகொடுத்து உத்தரவு தருவிக்கிறேன். இரவு நேரமாகிவிட்டதே!"

குமுதினி பதில் சொல்லாமல் வெளிமாடிக்குச் செல்வதற்காக வாயிலை அணுகினாள்.

"போகாதே" என்று மதுசூதனன் கடுமையுடன் உத்தரவிட்டான்.

குமுதம் அக்கணமே திரும்பிவந்து, "என்ன செய்ய வேண்டும்?" என்றாள்.

"சீக்கிரம் ஆடையை மாற்றிக்கொண்டு வா. ஐந்து நிமிஷம் சாவகாசம் கொடுக்கிறேன்" என்று கடியாரத்தை எடுத்துக் காண்பித்தான்.

குமுதம் உடனே ஸ்நான அறைக்குள் சென்று ஆடைகளை மாற்றிக்கொண்டு, புடைவையின்மேல் ஓர் தடித்த போர்வையைப் போர்த்து வந்து அதற்குமேல் என்ன உத்தரவு என்று எதிர்பார்த்து நின்றாள். அவள் நிற்கும் தோரணையிலிருந்து மதுசூதனன் இன்னும் போர் முடியவில்லை யென்று அறிந்தான். கோபம் அதிகரித்தது. ஆனால் என்ன செய்வதென்று தெரியவில்லை. மிகுந்த கோபத்திலும் அவன் மனம் வேலை செய்துகொண்டிருந்தது. ஆகையால் தன்னை அடக்கிக்கொண்டு, "நீ இப்போது என்ன செய்ய விரும்புகிறாய்? சொல்" என்றான்.

"நீங்கள் என்ன சொல்கிறீர்களோ அதைச் செய்கிறேன்."

மதுசூதனன் ஆசையிழந்தவனாய்ச் சோபாவில் உட்கார்ந்தான். அவள் அவ்விதம் போர்த்துக்கொண்டு நிற்பது அவனுக்கும் அவள் கணவனுக்கும் இடையில் சமனைப்போல் பயங்கரமான ஓர் ஆழி இருப்பதாகத் தோற்றுவித்தது. அதட்டிக் கோபிப்பதால் இச்சமுத்திரத்தைக் கடக்கமுடியாது. 'எவ்விதக் காற்றானது பாய்மரத்தில் பட்டால் கப்பல் செல்லும்? என்றைக்காகிலும் அது செல்லுமோ?'

மதுசூதனன் மௌனமாய் உட்கார்ந்திருந்தான். கடியாரத்தின் டிக்டிக் சப்தத்தைத் தவிர அறையில் நிச்சப்தம் குடிகொண்டிருந்தது. குமுதினி வெளிப்புறத்து இருளின் பக்கமாய் ஒரு சித்திரம் போல் நின்றிருந்தாள். ரஸ்தாவில் குடிமயக்கங்கொண்ட ஒருவன் பாடுவது காதில் பட்டது. அடுத்த வீட்டு லாயத்தில் கட்டப்பட்டிருந்த ஓர் நாய்க்குட்டி ஓயாமல் குரைப்பது அவ்விரவின் அமைதியைக் கெடுத்தது.

ஆழங்காணமுடியாத குழிபோலக் காலம் வரம்பை இழந்து சூன்யமாயிற்று. மதுசூதனனின் குடும்பவாழ்க்கையாகிய இயந்திரத்தின் சக்கரங்கள் நின்றுவிட்டன. நாளைக்கு ஆபீஸில் அவனுக்கு அதிகவேலை இருக்கிறது. டைரக்டர்களின் கூட்டங் கூடி அதில் அநேகர் விரோதித்து வரும் ஒரு விஷயத்தை ஏற்றுக்கொள்ளும்படி செய்தாக வேண்டும். அந்த முக்கியமான காரியங்களெல்லாம் அவனுக்கு அப்போது ஒரு நிழல்போல் மாறின. முன்பெல்லாம் முந்தின இரவே உட்கார்ந்து மறுநாளுக்குரிய காரிய விவரங்களை ஒரு குறிப்புப் புத்தகத்தில் எழுதி

வைத்துக்கொள்வான். இன்று அதைப்பற்றின சிந்தைக ளெல்லாம் அவனை விட்டு அகன்றது. வாழ்க்கையில் மிக உண்மையானதும், முக்கியமானதுமாகிய வஸ்து அவன் எதிரில் அறையிலிருந்து வெளியே செல்லும் வழியில் போர்த்தி நிற்கும் அந்த யுவதி ஒருத்தியே. சிறிது நேரம் கழித்து மதுசூதனன் ஓர் ஆழ்ந்த பெருமூச்சுவிட்டான். அவ்வறையின் மௌனம் கலைந்தது. சட்டென்று எழுந்து குமுதத்தினருகில் சென்று, "படோபஹூ, உன் நெஞ்சம் கல்லா என்ன?" என்று கேட்டான்.

இந்த படோபஹூ என்ற சப்தம் குமுதத்தின் மனத்தில் ஒரு மந்திரம்போல் வேலைசெய்தது. அவளுடைய தாயாரின் வாழ்க்கை சட்டென்று அவள் மனத்தில் பிரகாசித்தது. அவ்விதம் கூப்பிடப்பட்ட அவள் தாயார் எண்ணிறந்த முறை அதற்கு அன்புடன் விடையளித்திருப்பதன் வழக்கம் குமுதத்தின் இரத்தத்திலும் ஊறியிருந்தது. ஆகையாலேயே அவள் தேகத்தில் ஒரு கலவரமுண்டாகி அவள் முகத்தைத் திருப்பிக்கொண்டு நின்றாள். மதுசூதனன் துயரத்துடன், "நான் உனக்குத் தகுதி யற்றவன். இருந்தும் என்மேல் தயை கொள்ளமாட்டாயா?" என்று கேட்டான்.

குமுதினி அதிகம் பீடிக்கப்பட்டவளாய், "ஐயோ, இந்தமாதிரி வார்த்தையைச் சொல்லாதீர்கள்" என்றுரைத்து மதுசூதனன் கால்களில் வீழ்ந்து நமஸ்கரித்து, "நான் உங்கள் அடிமை. உங்கள் உத்தரவு என்ன என்பதைச் சொல்லுங்கள்" என்றாள்.

மதுசூதனன் அவள் கையைப் பிடித்துத் தூக்கி அவளை மார்போடு அணைத்து, "இல்லை, உனக்கு நான்

உத்தரவு கொடுக்கமாட்டேன். நீயே உன் இஷ்டத்துடன் என்னிடம் வா" என்று சொன்னான்.

குமுதினிக்கு அவன் ஆலிங்கனத்திறைல் மூச்சுத் திணறிற்று. ஆனல் வலுவில் அதிலிருந்து தன்னை மீட்க முயலவில்லை. மதுசூதனனுக்கு நெஞ்சை அடைத்துக் கொண்டது. கம்மிய குரலில், "நான் உனக்கு உத்தரவு அளிக்கவில்லை. இருந்தும் நீயாக என்னிடம் வா" என்று சொல்லி அவளை விட்டுவிட்டான்.

குமுதத்தின் வெளுத்த வதனம் சிவந்தது. அவள் கீழ்நோக்கிய வண்ணம், "நீங்கள் உத்தரவிட்டால் அதைச் செய்வது எனக்குச் சுலபமாயிருக்கிறது. நானுக வலுவில் ஒன்றும் செய்ய முடியவில்லை" என்முள்.

"நல்லது நீ போர்த்துக்கொண்டிருக்கும் இந்தப் போர்வையைத் தூர எறி. அதை என்னுல் பார்க்க முடிய வில்லை."

மிகச்சங்கோசத்துடன் குமுதினி போர்வையை நீக்கினுள். மெல்லிய கரைபோட்ட ஒரு டோரியாப்புடைவை உடுத்தியிருந்தாள். அதில் போட்டிருந்த கறுப்புக் கோடுகள் குமுதினியின் தேகத்தைச் சுற்றிச் சுற்றி வந்தன. தான் போகும் பாதையில் குறி செய்துகொண்டே போகும் கறுப்புத் திருஷ்டி ஒன்று குமுதத்தின் அங்கங்களை ஓயாமல் பிரதக்ஷிணம் செய்து வருவது போலிருந்தது. மதுசூதனன் மயங்கி விட்டான். இருந்தும் அவன் பார்வை அந்தப் புடைவையின்மேல் ஒரு க்ஷணம் விழுந்தது. அது அவன் வீட்டில் கொடுத்ததல்ல. குமுதத்தின்மேல் அது எவ்வளவு அழகாயிருந்த போதிலும் அது அவள் பிறந்தகத்தைச் சேர்ந்ததாகையால் அதற்கு ஒருவித மதிப்பும் இல்லை. ஸ்நான அறையை

அடுத்திருக்கும் உடையணிந்துகொள்ளும் அறையில் கண்ணாடி பதித்த கருங்காலிமரப் பீரோவில் விவாகத்திற்கு முன்பே அவளுக்காகப் பற்பல விலையுயர்ந்த ஆடைகள் சேகரித்து வைக்கப்பட்டிருந்தன. அவைகளில் அவளுக்குச் சிறிதும் ஆசை இல்லையா? அவ்வளவு கர்வமா? மதுசூதனனுக்குத் தன்னுடைய மூன்று மோதிரங்களைப் பற்றிய ஞாபகம் வந்தது. தாங்கொணு அலட்சியத்துடன் குமுதம் அவைகளை நிராகரித்தாள். ஆனால் ஒரு பாழாய்ப் போன நீலமோதிரத்தின்மேல் எவ்வளவு மோகம்!

விப்ரதாவின்மேல் குமுதம் வைத்திருக்கும் அன்பிற்கும் மதுசூதனனிடம் இருக்கும் அன்பிற்கும் எவ்வளவு வித்தியாசம்! அவள் தன்போர்வையை நீக்கினதும் இந்த விஷயமே மதுசூதனனுக்குச் சரீரென்று பட்டுப் பெரிய ஏமாற்றத்தை அளித்தது. ஆனால், ஐயோ, என்ன சௌந்தர்யம்! என்ன அற்புதமான சௌந்தர்யம் அவளுக்கு! என்ன கர்வம் நிறைந்த அலட்சியம்! அதுகூட அவளுக்கு ஓர் அலங்காரமாயல்லவோ விளங்கிற்று! அந்தப் பெண் மணி ஐச்வர்யத்தையே அலட்சியம் செய்யக்கூடியவள்! இயற்கையால் அளிக்கப்பட்ட அழகினால் மேன்மை பெற்றிருக்கும் அவளுக்குச் செல்வத்தின் மகிமையைச் சேர்த்துக்கொள்ளவேண்டுமென்ற அவசியமே இல்லை. மதுசூதனன் என்ன பொருளைக் காட்டி அவளுக்கு ஆசை உண்டாக்குவது!

“போ, நீ படுத்துக்கொள்ளப் போ” என்றான் அவன்.

குமுதினி கணவனின் முகத்தைப் பார்த்தவண்ணம் நின்றாள். அவள் கேட்கும் மௌனமான கேள்வி, “நீங்கள் முதலில் கட்டிலுக்குப் போகமாட்டீர்களா?” என்பதே.

மதுசூதனன் திடமான குரலில், "போ, நாழிகை யாக்காதே" என்றான்.

குமுதம் கட்டிலண்டை சென்றதும் அவன் சோபா வில் உட்கார்ந்து, "நான் இங்கேயே உட்கார்ந்திருக்கப் போகிறேன். என்னை எப்போது கூப்பிடுகிறாயோ அப்போதே வரப்போகிறேன். இவ்விதம் எதிர்பார்த்துக் கொண்டே எவ்வளவு வருஷங்கள் வேண்டுமானாலும் காத் திருக்கத் தயார்" என்றனன்.

குமுதத்தின் தேகம் முழுவதும் ஓர் நடுக்கமுண்டா யிற்று. இது என்ன அவனுக்கு இவ்விதச் சோதனை? எங்கே போய்த் தலையை முட்டிக்கொள்வது? தெய்வம் அவள் சொல்வதை இன்று காதில் வாங்கிக்கொள்ளவே யில்லை. அவள் வந்தவழி தவறான மார்க்கமாய்விட்டது. படுக்கை யின்மேல் உட்கார்ந்து, "பகவானே! என்னை மறந்துவிடா தீர். உம்மையே நம்பி இருக்கிறேன். துருவனைக் காட்டுக்கு அழைத்துச் சென்றது நீங்களல்லவோ! கடுங்காட்டிலே அவனுக்குத் தரிசனம் அளித்தீர்களே!" என்று மனத்திற் குள் சொல்லிக்கொண்டாள்.

அறைக்குள் இப்போது நிச்சப்தமாயிருந்தது. ரஸ்தாவிலிருந்த குடிகாரன் பாட்டும் நின்றுவிட்டது. கட்டுண்டிருக்கும் நாய்க்குட்டி மாத்திரம் சோர்வுற்றிருந்த போதிலும் இடையிடையே முறையிட்டுக்கொண்டே யிருந்தது.

சொற்பநாழிகைகூட அதிகநேரம் போல் தோன் றிற்று. நிச்சப்தமென்ற சுமையைத் தாங்கி யிருக்கும் காலமானது சற்றேனும் நகர்ந்து செல்லாது போலிருந் தது. இதுவோ இவர்கள் தாம்பத்ய வாழ்க்கையில் எப் போதும் இருக்கப்போகும் நிலைமையின் சித்திரம்! இரண்டு

இடத்தில் இரண்டுபேரும் மௌனமாய் உட்கார்ந்திருந தனர். இரவு தீரவே தீராதா! கடைசியில்—எப்போது என்பது அவளுக்கே தெரியாது—குமுதினி தன் சக்தி முழுவதையும் திரட்டிக்கொண்டு கட்டிலிலிருந்து கீழே இறங்கிவந்து, "என்னை அபராதம் செய்தவளாய்ச் செய்யாதீர்கள்" என்றனள்.

மதுசூதனன் ஆழ்ந்த குரலில், "என்ன வேண்டும்? என்ன செய்ய வேண்டும்? சொல்" என்று கேட்டான். கடைசி அக்ஷரம்வரை அவள் வாயிலிருந்து வெளிக் கொண்டுவர விரும்பினான்.

'படுக்க வாருங்கள்" என்றாள் குமுதம்.

ஆனால் இதையோ வெற்றி என்பது?

---

## 38

மறுதினம் மோதியின் தாய் குமுதத்திற்காகச் செம்பில் பாலை எடுத்துக்கொண்டு வந்த சமயம் குமுதத்தின் கண்கள் சிவந்து, இடுங்கி, முகம் சாம்பலைப் போல் வெளுத்திருப்பதைப் பார்த்தாள். காலை வேளையில் வெளி மாடியில் வழக்கமாய்க் கிழக்குப்புறம் நோக்கி ஆஸனத்திலமர்ந்து ஜபம் செய்யும் இடத்திலேயே அவள் இன்றும் இருப்பாளென்று நிஸ்தாரிணி நினைத்திருந்தாள். ஆனால் அன்று அவள் அங்கே இல்லை. மாடிப்படியருகிலிருக்கும் சிறிய வெளிமாடியிலேயே சோர்வுடன் சுவரில் சாய்ந்து உட்கார்ந்திருந்தாள். ஒருகால் தன் தெய்வத்தினிடம் அவளுக்குக் கோபமாயிருக்கலாம். நிரபராதியான குழந்தையைக் காரணமில்லாமல் தகப்பனார் நிஷ்டூரமாய் அடித்தால் அது ஒன்றும் புரிந்து கொள்ள இயலாமல் ரோஷங் கொண்டு, பதில்கூடச் சொல்லாமல் எவ்விதம்

பொறுத்துக்கொள்ளுமோ அது போலக் குமுதினி அன்று தன் தெய்வத்தினிடம் நடந்துகொண்டாள். அவள் எதைத் தெய்வமென்று கொண்டாடுகிறாளோ அது இந்த அசுசியிலா இருக்கிறது! பதிவ்ரதா தர்மத்திற்கு விரோதமாக நிற்கும் இம்மனப்பான்மையிலா வந்து ஆவாஹனமாகி இருக்கிறது! பகவான் பெண்பலி வாங்க இச்சித்து அதற்காக அவளை ஏமாற்றி அழைத்துச் செல்ல இச்சிக்கிறார! மனமிறந்த இந்த மாம்சபிண்டத்தையா அவருக்கு அர்ப்பணம் செய்வது? அன்று அவள் மனத்தில் சிறிதும் பக்தியே உண்டாக மாட்டேனென்றது. இவ்வளவு தினங்களாய்க் குமுதம் திரும்பத் திரும்ப, “என்னைப் பொறுத்துக்கொள்ளும்” என்று பகவானைப் பிரார்த்தித்துவந்தாள். அன்று கட்டுக்கு மீறின அவள் மனம், “உமது செய்கையை நான் எப்படிப் பொறுப்பேன்!” என்றே கேட்கிறது. “அடியாளை நேரில் ஆட்கொள்ளாமல், தேகத்தை விரும்பிக் காமமே விலைக்குவாங்கும் அடிமைகளின் சந்தையிலா விற்றுவிட்டீர்! பக்தியுடன் உம்முடைய திவ்ய நிர்மால்யத்தைப் பெற அங்கு யாரும் சித்தமாயில்லையே! இந்தப் புஷ்பவனத்தை வெட்டி ஆட்டுக்கா பலியிட வேண்டும்? பகவானே” என்று அவள் துடித்தாள்.

நிஸ்தாரிணி பால்குடிக்கும் வண்ணம் நிர்ப்பந்தம் செய்த சமயம் குமுதம், “இருக்கட்டும், விடு” என்று வெறுத்தாள்.

“ஏன்? எதற்காக இருக்கவிடவேண்டும்? என் பால் செம்பு என்ன செய்தது?” என்று அவள் கேட்டாள்.

“நான் இன்னும் ஸ்நாநம் செய்யவில்லை. பூஜை செய்யவில்லை.”

“போய்க் குளித்துவிட்டு வாருங்கள். நான் உட்கார்ந்து காத்திருக்கிறேன்.”

குமுதம் போய்க் குளித்துவிட்டு வந்தாள். அவள் மேல்மாடிக்குச் சென்று ஜபத்திற்கு உட்காருவாள் என்று நிஸ்தாரிணி நினைத்தாள். குமுதமும் வழக்கத்தினால் கட்டுண்டு மேல்மாடிப்பக்கம் காலை எடுத்து வைத்தாள். ஆனால் போகாமல் திரும்பிவந்து தரையில் உட்கார்ந்து விட்டாள். அவள் மனம் அச்சமயம் ஜபம் செய்யச் சித்த மாயில்லை.

"அண்ணாவிடமிருந்து கடிதம் வரவில்லையா?" என்று குமுதம் கேட்டாள்.

கடிதம் வந்திருக்குமென்று எண்ணியே நிஸ்தாரிணி அன்று அதிகாலை ரகசியமாய்த் தானே ஆபீஸ் அறைக்குச் சென்று மேஜையைத் திறக்கப் பார்த்தாள். ஆனால் அது பூட்டியிருந்தது. திருடினதை மீண்டும் திருடுவதற்கு இயலாமல் போய்விட்டது.

"நிச்சயமாய்ச் சொல்லமுடியாது. விசாரித்துப் பார்க்கிறேன்" என்று அவள் சொன்னாள்.

அதே சமயம் சியாமா வந்தாள். குமுதத்தைப் பார்த்து, "ஏன் இவ்வளவு வாட்டமாய் உட்கார்ந்திருக்கிறாய்? உடம்பு சரியில்லையா?" என்று கேட்டாள்.

"இல்லை. ஒன்றுமில்லை" என்றாள் குமுதம்.

"பிறந்தகம் போக வேண்டுமென்று ஆசையாயிருக்கலாம். உங்கள் அண்ணாகூட வரப்போகிறார்; பார்க்கலாம்."

குமுதம் திடுக்குற்று உட்கார்ந்து ஆவலோடு சியாமாவின் முகத்தை நோக்கினாள்.

மோதியின் தாய், "உனக்கு யார் இந்தச் செய்தி சொன்னார்கள், என் மனோரஞ்சிதமே?*" என்று கேட்டாள்.

---

*வங்காளத்தில் பெண்கள், முக்கியமாய் இளம்பெண்கள்

"இவள் வார்த்தையைக் கேள்! இதுதான் எல்லாருக்கும் தெரியுமே! ராணியம்மா பிறந்த வீட்டிலிருந்து குமாஸ்தா வந்து, அம்மா சௌக்கியமா என்று கேட்க எஜமானரைக் கண்டாராம் என்று சமையற்காரி பார்வதி சொன்ளுளே. அந்தக் குமாஸ்தாதான் அம்மாவின் அண்ணுவைத்தியத்திற்காக இன்னும் ஒன்றிரண்டு நாளில் கல்கத்தா வருவாரென்று சொன்னுராம்."

"அவருக்கு வியாதி அதிகமாய்விட்டதா?" என்று கவலையுடன் குமுதம் கேட்டாள்.

"அதைச் சொல்ல முடியாது. ஆனல் கவலைப்படும்படி ஒன்றுமில்லை. இருந்தால் தெரிந்திருக்கும்" என்ருள் சியாமா.

மனைவியின் மனம் தன் வசமாகாமல் இருக்கையில், அவளுக்கு அவள் பிறந்த வீட்டுச் செய்தியைச் சொல்லி மனத்தை இன்னும் விலகச்செய்ய மதுசூதனன் விரும்பமாட்டான்; ஆகையால் குமுதத்திற்கு அவள் தமையனைப் பற்றிய செய்தியைச் சொல்லியிருக்கமாட்டான் என்று சியாமா ஊகித்துக்கொண்டாள். அவள் குமுதினியைத் தன் வசமாக்கிக்கொள்ள விரும்பி, "உங்கள் அண்ணுவைப்போன்ற மனிதரைக் காண்பது கஷ்டம். எல்லாரும் இதையே சொல்கிருர்கள். மனோரஞ்சிதமே, வா, நேரமாச்சு. உக்கிராணத்திலிருந்து சாமான் எடுத்துக் கொடுக்க வேண்டும். ஆபீஸ் போவதற்குள் சமையலாகாவிடில் குடிகெட்டுவிடும்" என்ருள்.

நிஸ்தாரிணி பால்செம்பை மறுபடி குமுதத்தின் எதிரில் வைத்து, "மன்னி, பால் ஜில்லிட்டுப்போகிறது. குடித்துவிடு அம்மா" என்று கெஞ்சினுள்.

---

ஒருவரை யொருவர் கங்காஜலம், மகிழம்பூ, மனோரஞ்சிதம் என்று பெயரிட்டு அழைத்துக்கொள்வது வழக்கம்.

இம்முறை பால்குடிக்கக் குமுதம் ஆக்ஷேபிக்கவில்லை.

நிஸ்தாரிணி அவள் காதோடு, "உக்கிராணத்திற்கு வருகிறாயா?" என்று கேட்டாள்.

"இன்று வேண்டாம். கோபாலனை என்னிடம் அனுப்பு" என்றாள் குமுதம்.

அகாத பசியுடன் நீஷ்ரேமான கிழத்தனம் ஒன்று ராகுவைப் போலக் குமுதினியை விழுங்கிக்கொண்டிருந்தது. அவளைத் தழுவவருவது சாந்தமும், தூய்மையும், அன்பும், கம்பீரமுங்கொண்ட யௌவனமல்ல. பேராசை கொண்டதும், தன்னை அடக்கிக்கொள்ளும் சக்தியை யிழந்ததும், விஷய சுகத்தையே விரும்பும் இனத்தைச் சேர்ந்ததுமான காமத்தின் வேர்வை தட்டின ஸ்பர்சத்தினாலேயே குமுதத்திற்கு இவ்வளவு அருசி.

கணவனின் வயது அதிகமென்பதைப்பற்றி குமுதத்திற்கு வருத்தமில்லை. ஆனால் அந்த வயதிற்குரிய மரியாதையை அது ஏன் இவ்விதம் மறந்துவிட்டிருக்கிறது! சம்பூர்ண ஆத்ம நிவேதனம் ஓர் பழத்தை யொத்தது. வெளிச்சத்திலும் காற்றிலும் யதேச்சையாகப் பழுக்கிறது. காயைப் பறித்து இயந்திரத்தில் வைத்து அரைத்தால் அது பழுக்காது. போதுமான அவகாசம் கொடுக்காததனாலேயே அன்று மதுசூதனனின் சம்பந்தம் குமுதத்தை அவ்விதம் பதைக்கச் செய்தது; அவ்வளவு வெட்கமுறச் செய்தது. எங்கு ஓடுவது! மோதியின் தாயிடம் அவள் பிள்ளையை அனுப்பச் சொன்னது இவ்விதம் தப்பியோட வழிதேடுவதற்கே; அசுசியாகிய கிழத்தனத்திலிருந்து தப்பித் தூய்மையாகிய இளமையின் அருகில் செல்வதற்கே. நிச்வாசத்தின் கெட்ட ஆவியிலிருந்து வெளிவந்து காவின் நறுங்காற்றை அநுபவிப்பதற்கே.

மெல்லிய சிட்டிச்சட்டை ஒன்று தரித்து மோதி மாடிப்படியண்டை வந்து பயந்து நின்றுகொண்டிருந்தான். அவன் தாயாரைப் போலவே அவனுக்கும் அகன்ற கரு விழிகள்; அதேவிதம் நீர்நிறைந்த மேகில் போன்ற பசப் புள்ள நிறம்; கனிகளெனத் திரண்ட கன்னங்கள். தலை மயிர் ஒட்டக் கிராப்பு செய்யப்பட்டிருந்தது.

குமுதம் வந்து கூச்சத்துடன் நிற்கும் மோதியைப் பிடித்து மார்புடன் அணைத்துக்கொண்டு, "துஷ்டீ, ஏன் இரண்டு நாளாக வரவில்லை?" என்று கேட்டாள்.

மோதி குமுதத்தின் கழுத்தைக் கட்டிக்கொண்டு காதில் ரகசியமாய், "பெரியம்மா, நோக்கு என்ன கொண்டு வந்திருக்கேன், சொல்லு பாப்போம்" என்றான்.

குமுதம் அவள் கன்னங்களை முத்தமிட்டுவிட்டு, "மாணிக்கம் கொண்டுவந்திருக்கிறாயா, கோபாலா?" என்று கேட்டாள்.

"என் ஜேபிக்குள் இருக்கு."

"நல்லது, எடுத்துக் காண்பி."

"உன்னாலே சொல்லமுடியாதா?"

"எனக்குப் புத்தி கிடையாதே! கண்ணால் பார்ப் பதைக்கூடத் தெரிந்துகொள்ள முடிவதில்லை. கண்ணுக் குத் தெரியாததை இன்னும் தப்பாய் நினைப்பேன்."

உடனே மோதி மிக ஜாக்ரதையுடன் தன் ஜேபி யிலிருந்து கடிதத்தில் சுற்றப்பட்டிருக்கும் ஓர் பொட்ட லத்தை எடுத்துக் குமுதத்தின் மடியில் வைத்துவிட்டு ஓடமுயன்றான்.

"கூடாது. நீ ஓடக் கூடாது."

பொட்டலத்தை இரண்டு கைகளாலும் மூடிக் கொண்டு மோதி சஞ்சலத்துடன், "ஆனால் இப்போது அதைப் பிரிக்காதே" என்றான்.

"இல்லை. பயப்படாதே. நீ போனபிறகே பார்க்கிறேன்."

"பெரியம்மா, நீ ஜடாயிக் கிழவியைப் பார்த்திருக்கிறாயோ!"

"ஒருகால் பார்த்திருக்கலாம். தெரியாது."

பொட்டலத்தை இரண்டு கைகளாலும் மூடிக் கொண்டு மோதி சஞ்சலத்துடன், "ஆனால் இப்போது அதைப் பிரிக்காதே" என்றான்.

"இல்லை. பயப்படாதே. நீ போன பிறகே பார்க்கிறேன்."

"கீழே முத்தத்துக்கு அப்பாலே கரிகொட்டியிருக்கிற உள்ளு இருக்கு; பார், அதிலிருந்துதான் அவள் வருவா! சாயங்காலமா வெளவால் மேலே உட்கார்ந்து வருவா."

"வெளவால் மேலா வருவாள்?"

"அவளுக்கு இஷ்டமானா ரொம்பச் சின்னவளாய்க் கண்ணுக்குத் தெரியாமல் போய்டுவா."

"அந்த மந்திரத்தை நாம்கூடக் கற்றுக் கொள்ள வேணும்."

"என்னத்துக்கு, பெரியம்மா?"

"ஒளிந்துகொள்வதற்கு நான் கரி உள்ளுக்குப் போனால்கூட என்னைக் கண்டுபிடித்துவிடுகிறார்களே!"

மோதிக்கு அது விளங்கவில்லை.

"கரி உள்ளுக்குள்ளே அவள் குங்குமபரணியை வச்சிருக்கா. அவள் எங்கேருந்து குங்குமம் கொண்டு வராள் தெரியுமோ?"

"தெரியும்."

"சொல்லு, பார்ப்போம்."

"காலை மேகத்திலிருந்து."

மோதி மௌனமானான். இந்த வார்த்தை அவனைச் சங்கடத்தில் மாட்டிவிட்டது. அவனுக்குப் பல விஷயங்களைப்பற்றிச் சொல்லும் ஒருவர் சமுத்திரத்திற்கு அப்பாலிருக்கும் வேதாள பட்டணத்திலேருந்து குங்குமம் வருமென்று சொல்லியிருந்தார். ஆனால் இப்போது பெரியம்மா சொல்வதும் நம்பத்தகுந்ததாயிருந்தது. ஆகையால் அதை ஆக்ஷேபித்து வாக்குவாதம் செய்யாமல், "அந்தப் பெட்டியைத் தேடிப்பிடிச்சு அதிலேந்து குங்குமம் எடுத்து யாராவது பொண்ணு நெத்திலே இட்டுண்டா, அவள் ராணியாப் போவாளாம்" என்றான்.

"அட கஷ்டமே! இது வேறு யாருக்காவது தெரியுமா?"

"சின்னத்தை பெண் ஊர்மிதிக்குத் தெரியும். கூடையை எடுத்துண்டு காலம்பர சன்னு கரி எடுக்கப் போரபோது அவளும் தினம் கூடப்போவா. அவளுக்குப் பயமே கிடையாது."

"சின்னவள்தானே! அதனால்தான் ராணியாய்ப் போவதற்குக்கூட அவள் பயப்படவில்லை."

வெளியே ஜில்லென்று வாடைக்காற்று அடித்துக் கொண்டிருந்தது. ஆகையால் குழந்தையை அழைத்துக் கொண்டு குமுதம் தன்னறைக்குள் சென்று சோபாவில் உட்கார்ந்து அவனைத் தன் மடியில் வைத்துக்கொண்டாள்.

அருகிலிருந்த முக்காலியில் வெள்ளித்தட்டில், செவ்வந்தி, ஜாதி, காசித்தும்பை, செம்பருத்திப்பூ முதலிய பனிக் காலத்துப் புஷ்பங்கள் வைக்கப்பட்டிருந்தன. தினம்போல் தோட்டக்காரன் அவைகளைப் பறித்துக்கொண்டு வந்து வைத்திருந்தான். தட்டிலிருந்தவண்ணம் அவைகள் குமுதம் எப்போது மேல்மாடிக்குச் சென்று ஞாயிறு முளைக்கும் திக்கை நோக்கித் தம்மைக்கொண்டு தெய்வத்திற்குப் பூஜை செய்வாளென்று எதிர்பார்த்திருந்தன. அவள் அன்று தான் அர்ச்சனை செய்யாத அந்தப் புஷ்பங்களைத் தட்டுடன் எடுத்து மோதியினெதிரில் வைத்து, "பூ வேணுமா?" என்று கேட்டாள்.

"உம். வேணும்."

"என்ன செய்வாய்? சொல்லு."

"பூஜை விளையாட்டு விளையாடுவேன்."

குமுதத்தின் இடுப்பில் ஒரு பட்டுக் கைக்குட்டை இருந்தது. அதில் புஷ்பத்தை வைத்துக் கட்டி, குழந்தையை முத்தமிட்டுவிட்டு, "இந்தா, எடுத்துக்கொள்" என்று கொடுத்தாள். தனக்குள், "என் பூஜை விளையாட்டும் முடிந்தது" என்று சொல்லிக்கொண்டாள். பிறகு குழந்தையிடம், "கோபாலா, இதில் எந்தப் புஷ்பம் உனக்கு ரொம்பப் பிடிக்கிறது? சொல்லு" என்றாள்.

"சிவப்புப் பூ."

"ஏன் சிவப்புப் பூ ரொம்பப் பிடிக்கிறது, சொல்லட்டுமா?"

"சொல்லு."

"அது பொழுதுவிடிவதற்கு முன்னாலேயே ஜடாயிக் கிழவியின் குங்குமபரணியிலிருந்து வர்ணத்தைத் திருடிக் கொண்டு வந்துவிடுகிறது."

மோதி சிறிதுநேரம் ஆழ்ந்து யோசனை செய்தான். சட்டென்று, "பெரியம்மா, சிவப்புப் பூவின் வர்ணம் உன் புடவைக்கரை வர்ணமாதிரியே இருக்கு" என்றான். இந்தக் கொஞ்சத்திலேயே அவன் மனத்தில் பட்டதை யெல்லாம் சொல்லியாய்விட்டது.

அச்சமயம் திடீரென்று திரும்பவே பின்னால் மதுசூதனன் நிற்பதைக் கண்டான். காலடிச் சத்தங் கேட்காமல் அவன் வந்திருக்கிறான். அந்தப்புரம் வரும் சமயமுமல்ல அது. அச்சமயம் வெளி ஆபீஸ் அறையில் வியாபார சம்பந்தமான காரியத்திற்காக மிக முக்கியமானவர்கள் வந்து கூடியிருப்பார்கள்; தரகர்கள் வருவார்கள்; வேலை விரும்புவோர் வருவார்கள்; பலவிதக் குறிப்புக்கள் காகிதங்கள் எடுத்துக்கொண்டு ஸெக்ரெடரி வருவான்; அசல் வியாபாரத்தைவிட இந்த வெளிக் காரியங்களின் நெருக்கமே அதிகமாயிருக்கும்.

---

## 39

தானியத்திற்குப் பதில் பதரையே பெற்ற யாசகனைப் போல மதுசூதனன் அன்று காலை சிறிதும் திருப்தியடையாத உள்ளத்துடன் போயிருந்தான். அதிருப்தியின் ஆகர்ஷண சக்தி மிக்க பலமுள்ளது. தடங்கலுக்கு மேல் தடங்கல் ஏற்பட்டும் வந்துகொண்டேயிருக்கும்.

மதுசூதனனைப் பார்த்ததும் மோதியின் முகம் சோர்வுற்றது. நெஞ்சம் படபடவென்றது. ஓடுவதற்குச் சித்தமானான். குமுதம் அவனைப் பலவந்தமாய்ப் பிடித்துக் கொண்டு எழுந்திருக்க விடவில்லை.

ஆனால் மதுசூதனன் அதைத் தெரிந்துகொள்ள வில்லை. மோதியை மிரட்டிவிட்டு, "இங்கே என்ன செய்கிறாய்? படிக்கப்போகவில்லையா?" என்று கேட்டான்.

உபாத்தியாயர் வரும் வேளை இதுவல்ல வென்று சொல்ல மோதிக்குத் தைர்யம் கிடையாது; மிரட்டினதை மௌனமாகப் பொறுத்துக்கொண்டு மெதுவாய் வெளிச் சென்றான்.

குமுதம் அவனை நிறுத்திக்கொள்ளப் போனவள் மறுபடி சட்டென்று தன்னை அடக்கிக்கொண்டாள். "பூவை வைத்துவிட்டுப் போகிறாயே; எடுத்துக்கொண்டு போ" என்று சொல்லிச் சவுக்கத்தில் கட்டப்பட்டிருக்கும் முடிச்சை அவனிடம் நீட்டினாள். மோதி அதை எடுத்துக் கொள்ளாமல் பயத்துடன் தன் பெரியப்பா முகத்தை நோக்கினான்.

மதுசூதனன் வெடுக்கென்று குமுதத்தின் கைகளிலிருந்து அம்முடிச்சைப் பிடுங்கிக்கொண்டு, "இந்தப் பட்டுச் சவுக்கம் யாருடையது?" என்று கேட்டான்.

சட்டென்று குமுதத்தின் முகம் சிவந்துவிட்டது; "என்னுடையது" என்றாள்.

அது அவளுடையதே என்பதில் சந்தேகமில்லை. அதாவது விவாகத்திற்கு முன்பே அவளுக்குச் சொந்தமானது. அதில் செய்யப்பட்டிருக்கும் நூல் வேலைப்பாடும் குமுதம் தன் கையால் செய்ததே.

மதுசூதனன் புஷ்பத்தை எடுத்துக் கீழே உதறிவிட்டு குட்டையைத் தன் ஜேபிக்குள்போட்டுக்கொண்டு, "இதை நானே வைத்துக்கொள்கிறேன். சின்னப் பையன் இந்தை வைத்துக்கொண்டு என்ன செய்வான்?" என்று சொல்லி, "போ" என்று மோதியைத் துரத்தினான்.

மதுசூதனனின் இந்தக் கடூரச் செய்கையைப்பார்த்துக் குமுதம் ஸ்தம்பித்து உட்கார்ந்திருந்தாள். வருத்தத்துடன் மோதி சென்றுவிட்டான். குமுதம் ஒன்றும் சொல்ல வில்லை.

அவள் முகத்தின் பாவனையைப் பார்த்து மதுசூதனன், "மற்றவர்களுக்கென்று ஒரு தான சத்திரம் வைத்துக் கொண்டிருக்கிறாய். எனக்குமாத்திரம் ஒன்றும் இல்லையா? உன்னிடமிருந்து ஏதோ சொற்பம் கிடைத்ததென்ற ஞாபகத்திற்கு இந்தப் பட்டுச் சவுக்கம் எனக்கே இருக் கட்டும்" என்றான்.

மதுசூதனன் சொல்ல விரும்புவதைக்கூடச் சரியானபடி சொல்ல முடியாதவண்ணம் அவன் இயற்கை தடுக்கிறது.

குமுதினி கீழ்நோக்கியவண்ணம் சோபாவில் ஒரு மூலையில் உட்கார்ந்திருந்தாள். புடைவையின் சிவப்புக் கரை அவள் தலையைச் சுற்றிக்கொண்டு கீழே தொங்கிற்று. அதனுடன்கூட ஸ்நானம் செய்து ஈரமாயிருக்கும் அவள் கேசமும் தொங்கிற்று. உருண்ட வனப்புடைய கண்டத் தைச் சுற்றி ஒரு தங்கஹாரம். ஹாரம் அவளுடைய தாயாருடையது. அதை அவள் எப்போதும் அணிந்து கொண்டிருந்தாள். மேற்சட்டையை இன்னும் அணிய வில்லை. உள் அங்கியுடன் இருந்தாள். இரண்டு கைகளும் திறந்திருந்தன. கரத்தின்மேல் கரம்வைத்து உட்கார்ந் திருந்தாள். அதிக அழகு பெற்ற பொற்கரங்கள் தேக சௌந்தர்யத்தை அறிவிப்பனபோல் திகழ்ந்தன. மது சூதனன் குனிந்தவண்ணம் அந்த மானினியை உற்றுநோக் கினான். கனமான பொற்காப்புக்கள் தரித்த அவள் கரங்களி லிருந்து அவன் பார்வையை அகற்றவே முடியவில்லை. சோபாவில் அவளருகில் உட்கார்ந்து அவள் கையை

எடுத்துக்கொள்ள முயன்றான்; ஏதோ தடங்கலிருந்தது. குமுதினி கையை எடுக்க விரும்பவில்லை; அவள் கைகளுக்கு அடியில் ஒரு காகிதப் பொட்டலம் ஒளிக்கப்பட்டிருந்தது.

"அந்தக் காகிதத்தில் என்ன இருக்கிறது?" என்று மதுசூதனன் கேட்டான்.

"தெரியாது."

"தெரியாது என்றால்?"

"தெரியாது என்றால் எனக்குத் தெரியாது என்று அர்த்தம்."

மதுசூதனனுக்கு அந்த வார்த்தையில் நம்பிக்கை இல்லை; "என்னிடம் கொடு; நான் பார்க்கிறேன்" என்றான்.

"அது என்னுடைய ரகஸ்ய வஸ்து; அதைக் காண்பிக்கக் கூடாது" என்றாள் குமுதம்.

கோபம் கூரிய அம்புபோல் ஒருக்ஷணத்தில் மதுசூதனன் தலைக்கேறிற்று; "என்ன சொன்னாய்? இவ்வளவு அலக்ஷியமா?" என்று சொல்லிப் பலவந்தமாய் அவள் கைகளிலிருந்து பொட்டலத்தை வாங்கிப் பிரித்தான். அதில் சில சர்க்கரை மிட்டாய்கள் இருந்தன! நிஸ்தாரிணி சிக்கனமாய்ச் செய்துவரும் சம்சாரத்தில் மோதிக்காகச் செய்து கொடுக்கும் தின்பண்டங்களில் ஒருகால் அவனுக்கு இதுவே அதிகமாகப் பிடித்ததாய் இருக்கலாம்; அதனாலேயே அவன் இதை மிக ஜாக்ரதையாய்ப் பொட்டலம் கட்டிக்கொண்டு வந்திருக்கிறான்.

மதுசூதனன் வியந்து நின்றான். 'இது என்ன! ஒருகால் பிறந்த வீட்டில் இவ்வித மிட்டாய்கள் தின்பது வழக்கமாய் இருந்திருக்கலாம். ஆகையால் இரகசியமாய்

வாங்கி வைத்திருக்கிறாள். வெட்கத்தினால் வெளிப்படையாகச் சொல்ல விரும்பவில்லை' என்று எண்ணினான். தனக்குள் சிரித்துக்கொண்டான். லக்ஷ்மியிடமிருந்து வரதானம் பெறுவது சுலபமல்ல. அதற்குத் தகுந்த சமயம் இப்போது கிடைத்திருக்கிறது என்று நினைத்துக்கொண்டான். அவனுக்குச் சட்டென்று ஒரு யோசனைதோன்றவே, வேகமாய் எழுந்து வெளியே சென்றான்.

குமுதினி மேஜையின் அறையைத் திறந்து அதிலிருந்து தன்னுடைய சிறிய சந்தனப் பெட்டி ஒன்றை எடுத்து அதற்குள் அந்த மிட்டாய்களை வைத்துவிட்டுத் தன் தமையனுக்குக் கடிதம் எழுத உட்கார்ந்தாள். இரண்டு மூன்று வரிகள் எழுதுவதற்குள் மதுசூதனன் வந்துசேர்ந்தான். சட்டென்று கடிதத்தை ஒளித்து வைத்துவிட்டுக் குமுதம் அசைவற்று உட்கார்ந்திருந்தாள். மதுசூதனன் கையில் தங்கமுலாம் பூசிய ஒரு வெள்ளிக் கிண்ணம் இருந்தது. அதன்மேல் அத்தர் வாசனைவீசும் ஒரு பட்டுச் சவுக்கம் மூடியிருந்தது. புன்சிரிப்புடன் அவன் கிண்ணத்தைக் குமுதத்தின் மேஜைமேல் வைத்து, "திறந்து பார்" என்றான்.

குமுதினி பட்டைத் தூக்கிப் பார்த்தாள். கிண்ணம் நிறைய மிட்டாய்கள் இருந்தன! தனியாய் இருந்திருந்தால் சிரித்திருப்பாள். இப்போது ஒன்றும் சொல்லாமல் மௌனமாய் இருந்தாள். அதைவிடச் சிரித்திருந்தால் உத்தமமாயிருந்திருக்கும்.

"மிட்டாய்களை ஒளித்துவைத்துச் சாப்பிடுவானேன்? இதிலென்ன வெட்கம்? தினமும் வாங்கித் தருகிறேன். எவ்வளவு வேணும்? முன்னடியே என்னிடம் ஏன் சொல்லவில்லை?" என்று மதுசூதனன் கேட்டான்.

"உங்களால் வாங்க முடியாது" என்றாள் குமுதம்.

"வாங்க முடியாதா? உன் வார்த்தையைக் கேட்க எனக்கு ஆச்சரியமாயிருக்கிறதே!"

"இல்லை; உங்களால் வாங்க முடியாது."

"இதன் விலை நிரம்ப அதிகமா?"

"ஆமாம். ரூபாய் கொடுத்து வாங்க முடியாது."

இதைக் கேட்டதும் மதுசூதனனுக்குச் சந்தேகம் உண்டாயிற்று; "உங்களண்ணா இதைப் பார்சல் மூலம் அனுப்பினாரோ?" என்று கேட்டான்.

இந்தக் கேள்விக்கு விடை சொல்லக் குமுதத்திற்கு விருப்பமில்லை. கிண்ணத்தை அப்பால் நகர்த்திவிட்டுப் போவதற்காக எழுந்து நின்றாள். மதுசூதனன் அவள் கையைப் பற்றி மறுபடி உட்காரவைத்தான்.

மதுசூதனன் ஏதோ வார்த்தை சொல்ல ஆரம்பிப்பதற்கு முன்பே குமுதம், "அண்ணா வீட்டிலிருந்து யாராவது வந்தார்களா? அவரைப் பற்றின செய்தி சொன்னார்களா?" என்று கேட்டாள்.

இந்த விஷயம் முன்னாடியே குமுதத்திற்குத் தெரிந்திருப்பது பற்றி மதுசூதனனுக்கு மனத்தில் அதிக வெறுப்புத் தோன்றிற்று. "அதைச் சொல்வதற்காகத் தான் நான் இப்போது காலை வேளையில் உன்னிடம் வந்திருக்கிறேன்" என்றான். இவ்வார்த்தை பொய்யென்று சொல்லவேண்டிய அவசியமில்லை.

"அண்ணா எப்போது வருவார்?"

"ஒரு வாரத்திற்குள்."

மறுதினமே விப்ரதாஸ் வரப்போகிறானென்பதை மதுசூதனன் அறிவான். இருந்தும் ஒரு வாரத்திற்குள்

என்று சொல்லி நாளைக் குறிப்பிட்டுச் சொல்லாமல் விட்டுவிட்டான் அவன்.

"அண்ணாவிற்குத் தேக அசௌக்கியம் இன்னும் அதிக மாய்ப் போய்விட்டதா?"

"இல்லை. அப்படி ஒன்றும் கேள்விப்படவில்லை."

இந்த வார்த்தையில் அவன் ஏதோ ஒன்றை மழுப்பு வது போலிருந்தது. விப்ரதாஸ் சிகித்ஸைக்காகக் கல்கத்தா வருகிறான். அதிலிருந்து அவனுக்கு உடம்பு சரியாயில்லை என்பது ஏற்படவில்லையா?

"அண்ணாவிடமிருந்து கடிதம் வந்திருக்கிறதா?"

"தபால் பெட்டியை இன்னும் திறக்கவில்லை. இருந் தால் உனக்கு அனுப்புகிறேன்."

குமுதினி இன்னும் மதுசூதனன் வார்த்தையைச் சந்தேகிக்க ஆரம்பிக்கவில்லை; ஆகையால் அவன் இவ்விதம் சொன்னதை நம்பினாள்.

"அண்ணாவிடமிருந்து கடிதம் வந்திருக்கிறதா வென்று ஒருமுறை சற்றுப் பார்க்கிறீர்களா?"

"வந்திருந்தால் சாப்பாடு ஆனபிறகு மத்தியான்னம் நானே கொண்டுவந்து கொடுக்கிறேன்."

தன் ஆவலை அடக்கிக்கொண்டு குமுதம் அதற்கு மௌனமாய் உடன்பட்டாள். மறுபடி மதுசூதனன் குமுதத்தின் கையைத் தன்பக்கம் பிடித்து இழுத்துக் கொள்ள விரும்பினான். அச்சமயம் சியாமா அவ்வறைக் குள் திடீரென்று பிரவேசித்து, "அட! இங்கே மைத்துனர் இருக்கிறாரே!" என்று சொல்லித் திரும்பினாள்.

"ஏன்? உனக்கு என்ன வேண்டும்?" என்று மது சூதனன் கேட்டான்.

"குமுதத்தைச் சாமான் எடுத்துக் கொடுப்பதற்காகக் கூப்பிட வந்தேன். ராணியாயிருந்தாலும் வீட்டுக் காரி பத்தைக் கவனிக்க வேண்டாமா? இருந்தாலும் இன்று வேண்டாம்" என்ருள் சியாமா.

மதுசூதனன் ஒன்றும் சொல்லாமல் சோபாவிலிருந்து எழுந்து வேகமாய் வெளியே சென்ருன்.

சாப்பாடான பிறகு வழக்கப்படி மாடியறைக்குச் சென்று கட்டிலில் திண்டின்மேல் சாய்ந்து வெற்றிலை மென்றுகொண்டு மதுசூதனன் குமுதினிக்குச் சொல்லி யனுப்பினுன். அவள் சீக்கிரமாய் வந்தாள். அவளுக்கு அண்ணுவிடமிருந்து கடிதம் வந்திருக்குமென்ற ஆவல் இருந்தது. உள்ளே சென்று கட்டிலினருகில் நின்ருள்.

மதுசூதனன் ஹூக்காவின் குழாயை வைத்துவிட்டுப் பக்கத்தில் உட்காரும்படிக் கையால் காண்பித்து, "உட்கார்" என்றுரைத்தான்.

குமுதம் உட்கார்ந்தாள். மதுசூதனன் அவளிடம் கொடுத்த கடிதத்தில் கொஞ்சமே எழுதியிருந்தது.

"அருமைக் குமுவிற்கு அநேக ஆசீர்வாதங்கள். சிகித்ஸைக்காக நான் கல்கத்தா வருவேன். உடம்பு சௌக்யமானதும் உன்னை வந்து பார்க்கிறேன். வீட்டு வேலையில் அவகாசம் பெற்ற சமயம் அவ்வப்போது சௌக்கியத்தைப்பற்றி எழுதினல் நான் கவலையற்று இருப்பேன்."

இந்தச் சிறிய கடிதத்தைப் பெற்றுக் குமுதம் முதலில் மிக்க ஏமாற்றத்தை அடைந்தாள். தனக்குள், "நான் அந்நியளாய்விட்டேன்" என்று சொல்லிக்கொண்டாள். அந்த ஏமாற்றம் அதிகரிக்குமுன், "ஒருகால் அண்ணுவிற்கு உடம்பு சரியாயில்லைபோலும். என் மனம் எவ்வளவு

அல்பமானது! எப்போதும் என்னைப்பற்றியே நினைக்கிறேன்" என்ற எண்ணமுண்டாயிற்று.

அவள் எழுந்திருக்க விரும்புகிறாளென்பதை அறிந்து மதுசூதனன், "எங்கே போகிறாய்? சற்று உட்கார்" என்றான்.

குமுதத்தை உட்காரச் சொல்லிவிட்டான்; ஆனால் அவளிடம் என்ன சொல்வதென்று அவனுக்குத் தோன்றவில்லை. அதிகம் தாமதிக்கக் கூடாது. காலையிலிருந்து எந்த விஷயம் அவன் மனத்தில் உறுத்திக்கொண்டிருந்ததோ அதுவே அவன் வாயிலிருந்து வெளிவந்தது. "மிட்டாய்கள் விஷயத்தில் ஏன் இவ்வளவு தடபுடல் செய்தாய்? அதில் என்ன வெட்கம்?" என்று கேட்டான்.

"அது என் இரகசியம்."

"இரகசியமா? என்னிடம் சொல்லக்கூடாதா?"

"கூடாது."

மதுசூதனன் குரல் கடூரமாயிற்று; "இது உன்னுடைய நூர்நகரத்து ஜாலம். அண்ணாவின் பள்ளிக்கூடத்தில் கற்றது" என்றான்.

குமுதம் ஒன்றும் பதில் சொல்லவில்லை. மதுசூதனன் தலையணையைத் தள்ளிவிட்டு எழுந்து உட்கார்ந்து, "உன் போக்கை மாற்றாவிட்டால் என் பெயர் மதுசூதனனல்ல" என்றான்.

"உங்கள் உத்தரவு என்ன?"

"அந்தப் பொட்டலத்தை உனக்கு யார் கொடுத்தார்? சொல்?"

"மோதி."

"மோதியா? அப்படியானால் இதுவரை மூடிவைப்பானேன்?"

"சரியாய்ச் சொல்ல வராது."

"வேறு யாராவது அவன்மூலமாய் அனுப்பினார்களா?"

"இல்லை."

"பின்?"

"அவ்வளவுதான். வேறொன்றுமில்லை."

"அப்படியானால் அதை மறைப்பானேன்?"

"உங்களுக்குப் புரியாது."

குமுதத்தின் கையை அழுத்தி உலுக்கிவிட்டு ஆத்திரத்துடன் எழுந்து, "நீ வரம்பு மீறிப் போகிறாய். என்னால் பொறுக்கமுடியவில்லை" என்றான்.

குமுதத்தின் முகம் சிவந்தது. சாந்தமான குரலில், "உங்களுக்கு என்ன வேண்டும்? சொல்லுங்கள். உங்கள் மனப்போக்கை என்னால் அநுசரிக்க முடியவில்லை என்று ஒப்புக்கொள்கிறேன்" என்றாள்.

மதுசூதனன் நெற்றி நரம்புகள் தடித்தன. பதில் ஒன்றும் சொல்லவில்லை. குமுதத்தை அடிக்க வேண்டுவது போன்ற வெறி உண்டாயிற்று. அச்சமயம் வெளியில் யாரோ தொண்டையைக் கனைக்கும் சப்தம் கேட்டது. அடுத்தாற்போல், "ஆபீஸ் துரை வந்திருக்கிறார்" என்ற வார்த்தைகள் காதில் பட்டன. அன்று டைரக்டர்களின் மீட்டிங் என்பது அவனுக்கு ஞாபகம் வந்தது. அதற்குத் தான் தயாராயில்லையே யென்று வெட்கினான். காலைப் பொழுது முழுவதும் வீணாய்விட்டது. அவன் சுபாவத்திற்கும் வழக்கத்திற்கும் எதிரிடையான இவ்வித ஒழுங்கீனம் தன்னிடம் ஏற்பட்டது கண்டு அவன் மிகப் பிரமித்தான்.

# 40

மதுசூதனன் சென்றதும் குமுதம் கட்டிலைவிட்டுக் கீழே இறங்கித் தரையில் உட்கார்ந்தாள். வாழ்க்கை முழுவதும் இந்தச் சமுத்திரத்திலேதான் அவள் நீந்திக் கொண்டிருக்க வேண்டுமா? இதற்குக் கரை கிடையாதா? மதுசூதனன் சொன்னது சரியே. இவர்களுடன் அவள் போக்கு ஒத்துக்கொள்ளவேயில்லை. மற்ற எல்லாவற்றை யும் விட இதுவே அவளுக்கு அதிக துக்கமாயிருந்தது. இதற்கு வழி எங்கிருக்கிறது?

ஏதோ ஓர் எண்ணம் உண்டாகவே அவள் சட்டென்று எழுந்து கீழே நிஸ்தாரிணியின் அறையை நோக்கிச் சென்றாள். மாடிப்படி இறங்கும் சமயம் சியாமசுந்தரி மேலே ஏறி வருவதைப் பார்த்தாள்.

"என்ன? எங்கே போகிறாய்? உன்னைப் பார்ப்பதற் காகத்தானே நான் வருகிறேன்" என்றாள் சியாமா.

"ஏதாவது காரியமிருக்கிறதா?"

"அப்படி ஒன்றுமில்லை. மைத்துனர் கோபமாய்ப் போனதைப் பார்த்தேன். புதுக் குலாவுதலில் எங்கே சிக்கல் ஏற்பட்டதென்று உன்னைக் கேட்கலாமென்று வந்தேன். அவருடன் எவ்விதம் நடந்துகொள்ள வேண்டு மென்று தெரியவேண்டுமானால் என்னைக் கேட்டுத் தெரிந்துகொள். மனோரஞ்சிதத்தைப் பார்க்கப் போ கிறாயா? போ, போ; மனக்குறையைச் சொல்லி ஆற்றிக் கொண்டு வா."

இன்று திடீரென்று குமுதத்திற்குச் சியாமசுந்தரியும் மதுசூதனனும் ஒரே மண்ணில் செய்யப்பட்டவர்கள், ஒரே அச்சில் வார்க்கப்பட்டவர்கள் என்று மனத்திற்பட்டது. இவ்விதம் தோன்றுவதற்குக் காரணம் தெரியவில்லை.

நடத்தையிலும் ரூபத்திலும் இருவரும் சிறிதும் சம்பந்த மற்றவர்களே. இருந்தாலும் இருவர் இயற்கையிலும் ஒரேவிதமான குணம் தென்பட்டது. சியாமசுந்தரி அவளு டன் சினேகம் செய்துகொள்ள வரும் சமயமெல்லாம் குமுதத்திற்கு அது அருவருப்பையே உண்டாக்கிற்று.

நிஸ்தாரிணியின் அறையில் நுழைந்ததும் குமுதம், நவீனனும் அவன் மனைவியும் ஏதோ ஒன்றைப்பற்றித் தர்க்கித்துக்கொண்டிருப்பதைப் பார்த்துத் திரும்பி வெளிச் செல்ல விரும்பினாள். அதற்குள் நவீனன், "மன்னி, போகாதீர்கள், போகாதீர்கள். உங்களிடமே வரலாமென்றிருந்தேன். ஒரு பிராது இருக்கிறது" என்றான்.

"என்ன பிராது?"

"சற்று உட்காருங்கள். என் துக்கத்தைச் சொல்லு கிறேன்."

மரப்பெஞ்சியில் குமுதம் உட்கார்ந்தாள்.

"பெரிய அநியாயம்; மன்னி, இந்தச் சாது அம்மாள் என் புஸ்தகத்தை எடுத்து ஒளித்து வைத்திருக்கிறாள்" என்றான் நவீனன்.

"இவ்வளவு கொடுமை என்?"

'பொறாமை; தனக்கு இங்கிலீஷ் தெரியாதென்ற பொறாமை. நான் பெண்கல்வியின் கட்சியைச் சேர்ந்த வன். ஆனால் அவர்கள் கணவன்மார்களுக்கு 'எடுகேஷன்" கூடாது என்பவர். என் புத்தி மேன்மை யடைவதில் அவளும் கலந்துகொள்ள முடிவதில்லையே என்ற அசூயை. எவ்வளவோ முறை சொல்லிப் பார்த்தேன். 'சீதை எவ்வளவு மேன்மையானவள்; அவள்கூட ராமரிடம் பணிந்துகொண்டு, அவர் பின்னாலல்லவோ காடுசென்றாள்!

கல்வி புத்தி இவைகளில் நான் உனக்கு முன்னால் போகிறேன். தடங்கல் செய்யாதே' என்கிறேன்.''

"உங்கள் கல்வியைப்பற்றி அன்னை சரஸ்வதியே அறிவாள். ஆனால் புத்தியைப்பற்றி அதிகமாய் இங்கே பேசவேண்டாம்.''

ஏதோ பெரிய திடுக்கிடும் செய்தியைக் கேட்பவன் போல நவீனன் முகத்தை வைத்துக்கொள்வதைப் பார்த்துக் குமுதம் கலகல வென்று சிரித்தாள். இவ்வீட்டிற்கு வந்தபிறகு அவள் மனமாரச் சிரிப்பது இதுவே முதல் தடவை. அந்தச் சிரிப்பு நவீனனுக்கு மிக இனிமையாயிருந்தது. அவன் தனக்குள், "இதுவே என் காரியம். நான் எஜமானி அம்மாளைச் சிரிக்கச் செய்கிறேன்'' என்று சொல்லிக்கொண்டான்.

குமுதம் சிரித்த வண்ணம், "ஏனம்மா? மைத்துனர் புஸ்தகத்தை ஏன் ஒளித்து வைத்திருக்கிறாய்?'' என்று கேட்டாள்.

"இதோ பாருங்கள்: மன்னி, படுக்கையறையில் அவர் பள்ளிக்கூடத்து வாத்தியார் உட்கார்ந்திருக்கிறாரா? நாள் முழுவதும் வேலை செய்துவிட்டு ராத்திரி உள்ளே வந்து பார்த்தால் ஒரு விளக்கு எரிவது போதாமல் இன்னொரு விளக்கையும் ஏற்றி வைத்துக்கொண்டு மகாபண்டிதர் படித்துக்கொண்டிருக்கிறார். சாப்பாடு ஜில்லிட்டுப் போகிறது. எவ்வளவு முறையிட்டாலும் காதில் ஏறுவதில்லை.''

"நிஜந்தானா?'' என்று குமுதம் நவீனனைக் கேட்டாள்.

"மன்னி, சாப்பாட்டில்கூடப் பிரியமில்லாத பெரிய தபஸ்வியல்லன் நான். ஆனால் அதைவிட இவள் முறையீடு எனக்கும் இன்னும் அதிக இனிமையாயிருக்கிறது.

ஆகையாலேயே வேண்டுமென்றே தாமதம் செய்கிறேன். புஸ்தகம் படிப்பது வெறும் சாக்கு."

"அவருடன் பேச என்னால் இயலாது. நான் தோற்றேன் என்று ஒப்புக்கொள்கிறேன்" என்றாள் நிஸ்தாரிணி.

"என்னைப் பேசமுடியாமல் செய்யும் சந்தர்ப்பங்களில் தான் நான் தோல்வியை ஒப்புக்கொள்வது."

"அந்த மாதிரிச் சந்தர்ப்பங்கூட எப்போதாவது நேரிடுமோ?" என்று குமுதம் கேட்டாள்.

"ஒன்றிரண்டு திருஷ்டாந்தம் சொல்லட்டுமா? என் கண்ணீரைக் கொண்டு மிகப்பிரகாசமான அக்ஷரங்களில் அவைகள் என் உள்ளத்தில் எழுதப்பட்டிருக்கின்றன."

"சரி, சரி, உங்கள் திருஷ்டாந்தமெல்லாம் சொல்ல வேண்டாம். என் சாவி எங்கே? சொல்லுங்கள். இதோ பாருங்கள்: மன்னி, என் சாவியை ஒளித்து வைத்திருக்கிறார்."

"வீட்டு மனிதர்மேல் போலீஸ்கேஸ் நடத்த முடியாது. ஆகையால் திருடனைத் திருட்டின் மூலமாகவே அடக்கவேண்டும். முன்னால் என் பஸ்தகத்தைக் கொடு."

"உங்களிடம் கொடுக்கமாட்டேன்; மன்னியிடம் கொடுக்கிறேன்."

அவ்வறையின் மூலையில் ஒரு கூடை இருந்தது. அதில் பட்டு, கம்பளித்துண்டுகள், கிழிந்த உடைகள் முதலியவை சேர்ந்திருக்கும். அதன் அடியிலிருந்து ஓர் ஆங்கில 'என்ஸைக்ளோபீடியா'வின் இரண்டாம் பாகத்தை எடுத்து நிஸ்தாரிணி குமுதத்தின் மடியில் வைத்து, "இதை உங்கள் அறைக்கு எடுத்துக்கொண்டு போங்கள்;

மன்னி, அவரிடம் கொடுக்காதீர்கள். உங்களிடம் எப்படிச் சண்டைபோடுவார், பார்க்கலாம்'' என்ருள்.

நவீனன் கொசுவலைச் சட்டத்தின் மேலிருந்து சாவிக்கொத்தை எடுத்துக் குமுதத்தின் கையில்கொடுத்து, ''வேறு ஒருவரிடமும் கொடுக்காதீர்கள்; மன்னி, ஒரு ஆசாமி மிரட்டல் உங்களிடம் எப்படிச் செல்கிறது பார்க்கலாம்'' என்ருன்.

குமுதம் புத்தகத்தின் ஏடுகளைப் புரட்டினவண்ணம், ''இந்தப் புஸ்தகத்தைப் படிப்பது உங்களுக்குப் பிடிக்கிறதா?'' என்று கேட்டாள்.

''அவருக்குப் பிடிக்காத புஸ்தகமே இல்லை. அன்று எங்கிருந்தோ பசுசம்ரக்ஷணை என்ற புஸ்தகத்தை எடுத்து வந்து படிக்க உட்கார்ந்துவிட்டார்.''

''என் சரீரரக்ஷணைக்காக நான் அதைப் படிக்கவில்லையே. அப்படியிருக்க அதில் வெட்கமென்ன?''

''மன்னி, நீங்கள் ஏதோ விஷயம் சொல்லவந்தீர்கள். வீண்வம்பு பேசுகிறவரை வெளியில் அனுப்பிவிடட்டுமா?''

''வேண்டாம். அதற்கு அவசியமில்லை. எங்கள் அண்ணு இன்னும் இரண்டொருநாளில் வருவாரென்று கேள்விப்பட்டேன்.''

''ஆமாம். நாளைக்குக் காலையில் வரப்போகிருர்'' என்று நவீனன் சொன்னுன்.

''நாளைக்கா?'' என்று ஆச்சரியப்பட்டுக் குமுதம் சற்றுநேரம் மௌனமாயிருந்தாள்; பிறகு பெருமூச்சு விட்டு, ''அவரை எப்படிப் பார்ப்பது?'' என்ருள்.

''மைத்துனரிடம் நீங்கள் ஒன்றும் சொல்லவில்லையோ?'' என்று நிஸ்தாரிணி கேட்டாள்.

"இல்லை" என்று குமுதம் தலையையாட்டினுள்.

"ஒருமுறை சொல்லிப் பாருங்கள்" என்று நவீனன் சொன்னுன்.

குமுதம் மௌனமாயிருந்தாள். மதுசூதனன் எதிரில் அண்ணுவைப்பற்றிப் பேச்செடுப்பது கஷ்டமாயிருந்தது. இந்த வீட்டில் அண்ணுவிற்கு அவமானமே காத்திருக்கிறது. அதை வலுவில் கிளப்புவதில் அவளுக்கு இஷ்டமில்லை.

குமுதத்தின் சோர்வுற்ற முகத்தைக் கண்டு நவீனன் வருத்தமடைந்தான்.

"கவலைப்படாதீர்கள், மன்னி. நான் எல்லா ஏற்பாடும் செய்கிறேன். நீங்கள் ஒன்றும் சொல்லவேண்டாம்" என்முன்.

தமையனிடம் நவீனனுக்கு இளம் வயது முதல் அசாத்திய பயம். மன்னி வந்தபிறகு அந்தப் பயம் போய் விட்டது போலும்!

குமுதம் சென்ற பிறகு நிஸ்தாரிணி நவீனனைப் பார்த்து, "என்ன ஏற்பாடு செய்வீர்கள்? சொல்லுங்கள், பார்க்கலாம். அன்றையதினம் இரவில் நம்மிருவரையும் மன்னியிடம் அழைத்துக்கொண்டுபோய் நம் எதிரில் தம்மைத் தாழ்த்திக்கொண்டபோதே, ஏதோ அநர்த்தம் ஏற்படப்போகிறதென்று நான் நினைத்தேன். அன்றுமுதல் மைத்துனர் உங்களைப் பார்க்கும்போதெல்லாம் முகத்தைத் திருப்பிக்கொண்டு போகிருர்" என்முள்.

"தாம் ஏமாந்துவிட்டோமென்று அண்ணுவிற்குத் தெரிகிறது. முதலில் ஏதோ பெரிய வெகுமானம் கிடைக்குமென்று எதிர்பார்த்துத் தம்மைத் தாழ்த்திக்கொண்டு மன்னிப்புக் கேட்டார். ஆனல் பிறகு எதிர்பார்த்த அளவு

வெகுமதி கிடைக்கவில்லை. அவர் இவ்விதம் ஏமாந்து போயிருக்கிறார் என்பது நமக்குத் தெரிந்திருக்கிறது. அதனாலேயே அவருக்கு நம்மேல் ஆத்திரமுண்டாயிற்று" என்றான் நவீனன்.

"அதுமட்டுமல்ல. விப்ரதாஸ் பாபுவின்மேல் அவருக்கு அசாத்தியக் கோபம் உண்டாயிருக்கிறதே; அது ஏன்?"

"அண்ணாவைப் போன்றவர்களின் இயற்கை இதுவே. தம்மைவிட மேலானவர் என்று அவர் மனத்தில் யார் தோன்றுகிறார்களோ அவர்களை வெளிப்படத் திட்டுவது சுவபாவம். இவர்கள் பக்தியைக் காண்பிக்கும் முறை இது. ஸ்ரீராமபிரானிடம் ராவணனுக்கு அசாத்திய பக்தி. அதனால்தான் இருபது கைகளாலும் நைவேத்தியம் செலுத்தினான் என்று சிலர் சொல்வதைக் கேட்டதில்லையா? மன்னி தம் தலையைப் பார்ப்பது சுலபமாய்க் கூடுமென்று எனக்குத் தோன்றவில்லை."

"அந்தமார்திரி சொல்லி என்ன பிரயோஜனம்? காரியம் நடக்க ஏதாகிலும் ஓர் உபாயம் கண்டுபிடிக்கவேண்டும்."

"உபாயம் தோன்றியிருக்கிறது."

"என்ன? சொல்லுங்கள்."

"சொல்ல முடியாது."

"ஏன்?"

"வெட்கமாயிருக்கிறது."

"என்னிடங்கூட வெட்கமா?"

"ஆமாம். உன்னிடந்தான் வெட்கம்."

"எதனால் என்னிடம் வெட்கம்?"

"அண்ணாவை ஏமாற்றவேண்டும். அதைப்பற்றி நீ கேட்டு என்ன செய்யப்போகிறாய்?"

"எனக்குப் பிரியமானவர்களுக்காக ஏமாற்றுவதில் எனக்குக் கொஞ்சங்கூட வெட்கம் கிடையாது."

"அந்தமாதிரி ஏமாற்றும் வித்தையைத்தான் நீ என் மேலேயே செலுத்திக் கைதேர்ந்திருக்கிறுயே!"

"அந்தமாதிரி ஏமாறுவதற்கு உங்களைப்போல் தகுந்த ஆசாமி வேறு யார் கிடைப்பார்கள்?"

"தேவி, திவ்யமாய் உனக்கு எப்போது இஷ்டமோ அப்போதெல்லாம் ஏமாற்றிக்கொள்."

"ஏமாந்துபோவதில் என்ன இவ்வளவு சந்தோஷம்?"

"சொல்லட்டுமா? எங்களை ஏமாற்றுவதற்காக பிரம்மா உங்கள் கையில் கொடுத்திருக்கும் ஜாலவித்தையில் அதிகக் கற்கண்டும் கலந்திருக்கிறுர். அந்த இனிமையான வித்தைக்கே 'மாயை' என்று பெயர்."

"மாயையை ஒழித்துவிடுவது நலமல்லவா?"

"சரியாய்ப் போச்சு! மாயையை ஒழித்துவிட்டால் சம்சாரத்தில் வேறு என்னதான் இருக்கிறது? பிரதிமையின் மேல்வர்ணத்தை நீக்கிஞல் மீதியிருப்பது மண்ணும் கல்லுந்தான். என்னைப் பொறுத்தவரை, தேவி, இந்த முட்டாளை ஏமாற்றிஞலும் சரி, கண்ணில் மையிட்டு மயக்கிஞலும் சரி, உன் இஷ்டப்படி என்ன வேண்டுமாஞலும் செய்யலாம்."

அதன் பிறகு அவ்விருவருக்கும் நடந்த சம்பாஷணை இந்தக் கதைக்குச் சிறிதும் சம்பந்தப்பட்டதல்ல.

# 41

டைரக்டர்களுடைய மீட்டிங்கில மதுசூதனன் இன்றே முதல்முறை தோல்வியடைந்தான். இதுவரை அவனுடைய பிரஸ்தாபம், ஏற்பாடு ஒன்றையும் ஒருவரும் ஆக்ஷேபித்தது கிடையாது. அவனுக்குத் தன்மேல் எவ்வளவு நம்பிக்கை இருந்ததோ அவ்வளவு அவனுடன் இருப்பவர்களுக்கும் அவன்மேல் இருந்தது. இந்த நம்பிக்கையினாலேயே ஏதாவது முக்கிய காரியம் நடக்க வேண்டியிருந்தால் அது மீட்டிங்கில் ஏற்றுக்கொள்ளப்படு வதற்கு முன்பே அந்தக் காரியத்தைச் செய்வதற்கு அவன் எல்லாம் தயாராக்கி வைத்திருப்பான். இம்முறை அவுரிச் சாலைக்காரர்கள் தங்கள் வியாபாரத்திற்காகக் கொஞ்சம் நிலம் வாங்க ஏற்பாடு செய்திருந்தனர். அதற்காக அதிகப் பணமும் செலவழித்தாய்விட்டது. அநேகமாய் எல்லாம் முடிந்துவிட்ட மாதிரியே. பத்திரத்தில் ஸ்டாம்பு ஒட்டி ரிஜிஸ்டர் செய்து விலையைக் கொடுக்கவேண்டியதே பாக்கி. இதுவிஷயமாய்ச் சம்பந்தப்பட்டவர்கள் அவனையே நம்பி யிருந்தார்கள். இவ்வளவும் நேர்ந்த பிறகு இந்தத் தடங்கல் ஏற்பட்டிருக்கிறது. சமீபத்தில் அங்கே ஒரு பொக்கிஷக் காரர் வேலை காலியாயிருந்தது. அதற்கு அவனுக்குத் தூரபந்துவான ஒருவன் தன் மாப்பிள்ளைக்காக மனுப் போட்டான்; அவன் தகுதியற்றவன் என்று மதுசூதனன் அதை ஏற்றுக்கொள்ளவில்லை. அந்த விஷயம் ஒரு விதை போல் மண்ணில்பதிந்து இப்போது திடீரென்று விரோதம் என்ற ரூபமாய் முளைத்துவிட்டது. தகுந்த சந்தர்ப்பமும் இப்போது கிடைத்தது. மதுசூதனன் வாங்குவதற்கு ஏற்பாடு செய்திருந்த நிலத்திற்குச் சொந்தக்காரன் அவனுக்குத் தூரத்து அத்தையின் மைத்துனன் பிள்ளை.

அத்தை வந்து அவனைக் கெஞ்சிக் காலில் விழுந்த சமயம் அவன் கணக்குப் போட்டுப் பார்த்து நிலம் மலிவாகக் கிடைக்குமென்று தெரிந்துகொண்டான்.

லாபத்திற்கு லாபம்; தன்னைச் சேர்ந்தவர்களை ஆதரிக்கிறனென்ற கௌரவமும் உண்டாகும். ஆகையால் இதை வாங்க ஏற்பாடு செய்தான். பொக்கிஷக்காரன் வேலையை எவனுடைய மாப்பிள்ளைக்குக் கொடுக்க மறுத்தானே அவனே இப்போது மிகச் சிரமப்பட்டு மதுசூதனன் தன்னைச் சேர்ந்த பந்துக்களுக்கு லாபம் செய்யப்பார்க்கிறனென்று ருசுவை உரிய இடத்தில் விளம்பரம் செய்தான். இதைத்தவிர ஒவ்வொரு கொடுக்கல் வாங்கலிலும் மதுசூதனன் இரகசியத்தில் கமிஷன் வாங்கிக்கொள்கிறன் என்ற வதந்தியையும் மெதுவாய்ப் பரப்பி வந்தான். இந்த அவதூறுகளை ருசுப்படுத்த ஒருவரும் விரும்பவில்லை. தங்கள் உள்ளத்தில் உண்டாகும் பேராசையைப் போலவே அவனுக்கும் இருப்பது சகஜம் என்று எண்ணிஞர்கள். அதுவே அவர்களுக்குப் போதுமான சாட்சியாயிருந்தது. மற்றொரு காரணமும் இருந்தது: அது மதுசூதனன் ஏராளமாய்ச் செல்வம் பெற்றிருப்பதும் அவனுடைய நடத்தையின் நேர்மை மிகப் பிரசித்தமாயிருப்பதுமே. அதைப் பொறுப்பது கஷ்டமாயிருந்தது. மதுசூதனன் கூட உள்ளுக்குள் கொள்ளையடிக்கிறன் என்ற நினைவு அந்தப் பொறாமைக்காரர்களுக்குச் சிறிது மனச்சாந்தி அளித்தது. பாவம், இந்தக் கொள்ளையில் மூழ்கிப் பணம் சேகரிக்க அவர்கள் வாத்துக்கள்மாதிரி இருக்க விரும்பினாலும் மதுசூதனனுக்கு அண்டையில் ஜலவசதி இருந்தது போல அவர்களுக்கு இல்லையே!

அவுரிச்சாலைச் சொந்தக்காரனுக்கு மதுசூதனன் உறுதிமொழி கொடுத்திருந்தான். நஷ்டம் ஏற்படும் என்ற

பயத்தால் ஒருமுறை சொன்ன வார்த்தையை அவர் பிறகு மாற்றுபவனல்லன். ஆகையால் அந்த நிலத்தைத் தானே சொந்தமாக வாங்கி, அதைக் கம்பெனிக்காரர்கள் வாங்காததனுல் அவர்களுக்கு நஷ்டமே என்று ரூபிப்பதாய் நிச்சயம் செய்துகொண்டான்.

மதுசூதனன் வீட்டிற்கு வர நேரமாயிற்று. தன் அதிர்ஷ்டத்தில் அவனுக்கு அதிகக் குருட்டுநம்பிக்கை இருந்தது. இன்று தன் வாழ்க்கையாகிய வண்டி ஒரு பாதையை விட்டு வேருெரு பாதையில் செல்லப்போகிறதே யென்று அவனுக்குப் பயமுண்டாயிற்று. முதல் அதிர்ச்சியிலேயே அவன் நெஞ்சம் திடுக்கென்றது. மீட்டிங்கிலிருந்து திரும்பிவந்து ஆபீஸ் அறையில் சாய்மான நாற்காலியில் சாய்ந்து ஹூக்காவின் குழாயைக் கையில் பிடித்து அதனுடைய புகைச்சூழலுடன் தன் இருண்ட கவலையையும் சுழலவிட்டுக்கொண்டிருந்தான்.

நவீனன் வந்து, "விப்ரதாஸ் பாபுவிடமிருந்து உங்களைப் பார்ப்பதற்காக ஆள் வந்திருக்கிருன்" என்ருன்.

மதுசூதனன், "போகச் சொல். எனக்கு இப்போது அவகாசமில்லை" என்று எறிந்து விழுந்தான்.

மதுசூதனன் இருக்கும் தோரணையிலிருந்து மீட்டிங்கில் ஏதோ சிக்கல் ஏற்பட்டிருக்கிறதென்று நவீனன் உணர்ந்தான். தமையன் மனம் இப்போது சரியான நிலைமையிலில்லாமல் பலவீனமுற்றிருக்கிறது. பலவீனமுற்றவர்கள் தங்கள் உதாரகுணத்தை இழக்கிருர்கள். அவர்களுடைய ஆத்மாபிமானம் ஓர் பொறுமையற்ற கடோத்தன்மையை அடைகிறது. புண்பட்ட அண்ணுவின் மனம் இரக்கமில்லாமல் மன்னியின் மனத்தைப் புண்படுத்த முயலும் என்பதில் நவீனனுக்குச் சந்தேகமில்லை. அதை எவ்வித

மாகிலும் மாற்றவேண்டும். இதற்குமுன் நவீனன் மனத்தில் தான் செய்யப் போகும் காரியத்தைப்பற்றித் தயக்க மிருந்தது. இப்போது அது அறவே நீங்கிற்று. சற்று நேரம் இங்குமங்கும் சுற்றிவிட்டு மறுபடி அறைக்குள் வந்து விலாசங்கள் குறித்திருக்கும் குறிப்புப் புத்தகத்தை அண்ணு புரட்டிக்கொண்டிருப்பதைப் பார்த்தான். நவீனன் வந்து நின்றதும் மதுசூதனன் தலையைத் தூக்கி, "இன்னும் என்ன? உங்கள் விப்ரதாஸ் பாபுவிற்காக வக்காலத்து வாங்கிவந்திருக்கிருயா?" என்று சீறினன்.

"இல்லை அண்ணு. அந்த மாதிரி எண்ண வேண்டாம். அந்த ஆள் இங்கிருந்து திட்டுக்கேட்டு ஓடியிருக்கிறன்; அவனை இனி நீங்களே நேரில் போய்க் கூப்பிட்டால்கூட இந்தப்பக்கமே திரும்பிப் பார்க்கமாட்டான்."

இதுவும் மதுசூதனனுல் பொறுக்கமுடியவில்லை. "சுண்டுவிரலை ஆட்டினுல் காலில் வந்து விழவேண்டாமா? எதற்காக வந்தானும்?" என்று கேட்டான்.

"விப்ரதாஸ் பாபு கல்கத்தா வர இன்னும் இரண்டு நாள் செல்லும் என்று உங்களிடம் செய்தி சொல்லவே. உடம்பு இன்னும் சிறிது சௌக்கியமானபின் வருவாராம்."

"சரி, சரி; அவரைப்பற்றி எனக்கு அக்கரையில்லை."

"அண்ணு, நாளைக்குக் காலையில் சுமார் ஒரு மணி நேரத்திற்கு நான் வெளியே போய்வரவேண்டும்."

"ஏன்?"

"கேட்டால் நீங்கள் கோபிப்பீர்கள்."

"கேளாவிட்டால் இன்னும் அதிகம் கோபிப்பேன்."

"கும்பகோணத்திலிருந்து ஒரு ஜோஸ்யர் வந்திருக்கிருர். அவரிடம் ஒரு முறை பாக்கியபலன் கேட்டு வரலா மென்றிருக்கிறேன்."

மதுசூதனனுக்குத் தானே நேரில் அவரிடம் சீக்கிரம் போய்த் தன்னைப்பற்றிக் கேட்கவேண்டுமென்ற ஆசை உண்டாயிற்று. வெளிக்குக் கோபிக்கும் பாவனையாய், "நீ இதை நம்புகிறாயா?" என்றான்.

"சாதாரண நிலைமையில் நம்பமாட்டேன். ஆனால் இப்போது பயம் உண்டாயிருப்பதால் நம்புகிறேன்."

"என்ன பயம்?"

நவீனன் விடைசொல்லாமல் தலையைச் சொறிந்தான்.

"யாரிடம் பயம்? சொல்."

"இந்த உலகத்திலேயே எனக்கு உங்களைத்தவிர வேறு ஒருவரிடமும் பயம் இல்லை. சில தினங்களாய் உங்கள் தோரணையைப் பார்த்து மனத்தில் கவலையாயிருக்கிறது."

புலியிடம் பயப்படுகிறமாதிரி ஜனங்கள் தன்னிடம் பயப்படுகிறார்கள் என்பதில் மதுசூதனனுக்குப் பரம திருப்தி. நவீனன் முகத்தைப் பார்த்தவண்ணம் அவன் மௌனமாய் உட்கார்ந்து ஹுக்கா குடித்துக்கொண்டே தன் மேன்மையைக் கம்பீரமாய் அநுபவிக்கலானான்.

"ஆகையாலேயே என் விஷயத்தில் கிரககதி எப்படி இருக்கிறதென்பதையும், அவைகளிலிருந்து எப்போது விமோசனம் கிடைக்குமென்பதையும் தெளிவாய் ஒரு முறை தெரிந்துகொள்ள விரும்புகிறேன்."

"நீ நாஸ்திகன். நீதான் ஒன்றுமே நம்புகிறதில்லையே; கடைசியில்—"

"தெய்வத்தினிடம் நம்பிக்கை வைத்தால் கிரகங்களில் நம்பமாட்டான், அண்ணா. டாக்டர் வைத்தியத்தில் நம்பிக்கையில்லாதவன்கூட சிற்சில சமயம் பாமர வைத்தியன் உதவியைத் தேடுகிறான்."

மதுஸூதனன் தனக்குத் தன் கிரகபலனைத் தெரிந்து கொள்வதில் எவ்வளவு ஆவல் இருந்ததோ அவ்வளவுக் கவ்வளவு அலட்சியம் காண்பித்து, "அட குரங்கே, படித்தும் நீ முட்டாளாகவே இருக்கிறாய்! யார் எது சொன்னாலும் அதை நம்பி விடுகிறதா?" என்றான்.

"அவரிடம் பிருகுஸம்ஹிதை இருக்கிறது. அதில் யார் யார் எங்கே எங்கே எப்போது எப்போது பிறக்கிறார்களோ அவர்கள் எல்லாருடைய ஜாதகங்களும் தயாராய்க் கணிக்கப்பட்டிருக்கின்றன; ஸம்ஸ்கிருத பாஷையில் எழுதப்பட்டிருக்கின்றன. அதற்குமேல் என்ன வேண்டும்! நேரே பரீக்ஷை செய்து பார்க்கலாம்."

"முட்டாள்களை ஏமாற்றி வயிறுவளர்க்கிறவர்களுக்கென்று பிரம்மா உன்னைப் போல் முட்டாள்களையும் சிருஷ்டித்திருக்கிறார்."

"அந்த முட்டாள்களைக் காப்பாற்றுவதற்காக உங்களைப்போன்ற புத்திசாலிகளையும் சிருஷ்டித்திருக்கிறார். பிருகுஸம்ஹிதையை உங்கள் கூர்மையான புத்தியைக் கொண்டு சிறிது பாருங்கள்."

"நிரம்ப சரி. நாளைக்காலையிலேயே நாம் போய் உங்கள் கும்பகோணத்து மோசத்தைப் பார்க்கலாம்."

"அண்ணா, உங்களுக்கு இவ்வளவு பலமான அவநம்பிக்கை இருப்பதால் அவர் கணிப்பதில் பிசகிப்போகலாம். ஒருவன்மேல் நாம் நம்பிக்கைவைத்தால் பிறகு அவன் நம்பத்தகுந்தவனாக ஆய்விடுவதை நாம் பார்க்கிறோம். கிரகங்களிடமும் அதே மாதிரிதான். துரைமார்களைப் பாருங்கள்: அவர்கள் கிரகங்களை நம்புவதில்லை. ஆகையால் அவற்றின் சலனபலன் அவர்களைப் பாதிப்பதில்லை. அன்று பதின்மூன்றும் தினம் என்ற துர்நிமித்தத்தையும் மீறி

உங்கள் ஆபீசு சின்னதுரை குதிரைப் பந்தயத்திற்குப் போய்ப் பந்தயத்தில் ஜயித்து லாபத்தோடு வந்தார். நான் போயிருந்தால் தோற்றுப்போய் நஷ்டமடைந்தது மாத்திர மிருக்காது; அந்தக் குதிரைகளில் ஏதாவது ஒன்று திமிறி மீறி வந்து என் வயிற்றில் உதைத்திருக்கும். அண்ணு, இந்தக் கிரகங்கள் நக்ஷத்திரங்கள்விஷயத்தில் உங்கள் புத்தியைக் கொண்டு ஆராய்ச்சி செய்யாதீர்கள். கொஞ்சம் நம்பிக்கை வையுங்கள்” என்றான் நவீனன்.

மதுசூதனன் மிக்க சந்தோஷமடைந்து முறுவல் முகத்தில் விளையாட ஹுக்கா குடிக்கலானான்.

மறுதினம் காலை ஏழடிப்பதற்கு முன் மதுசூதனன் நவீனனுடன் ஒரு சிறிய சந்தில் குப்பை கூளங்களைக் கடந்து வேங்கடசாஸ்திரியின் வீட்டை அடைந்தான். முதல் தளத்தில் இருள் சூழ்ந்த ஒரு சிறிய அறை; ஈரம் தங்கிச் சுண்ணும்பு விழுந்திருக்கும் சுவர்கள், ஏதோ நீண்ட காலமாய்ச் சர்மவியாதியால் பீடிக்கப்பட்டவை போலிருந் தன. தரையின்மேல் அழுக்கடைந்த ஒரு சிறிய ஜமுக் காளம் விரிக்கப்பட்டிருந்தது. மூலையில் சில ஏட்டுச் சுவடிகள் சிதறிக் கிடந்தன. சுவரில் பார்வதி பரமேச் வரர் படம் ஒன்று தொங்கிற்று. “சாஸ்த்ரீ ஜீ” என்று நவீனன் கூப்பிட்டான். அழுக்கடைந்த அங்கவஸ்திரம் தரித்தவராகி, இளைத்து, கறுத்து, குட்டையாயிருக்கும் ஒருவர் அறைக்குள் நுழைந்தார். அவர்முன்தலை க்ஷவரம் செய்யப்பட்டுக் குடுமியுடனிருந்தது. நவீனன் விநயத்து டன் அவரை நமஸ்கரித்தான். சாஸ்திரியாரின் முகத்தைப் பார்க்கையில் மதுசூதனனுக்குச் சிறிதும் பக்தியுண்டாக வில்லை. இருந்தும் தெய்வத்திற்கும் தெய்வஜ்ஞனுக்கும் நெருங்கிய சம்பந்தம் இருக்கிறதல்லவா? இந்த எண்ணம்

உண்டாகவே பயத்துடன் சிறிது தலைவணங்கிப் பண்ணியதும் பண்ணாததுமாய்ச் சிறிது நமஸ்காரம் செய்துவிட்டு உட்கார்ந்தான். நவீனன் மதுசூதனனின் ஜாதகத்தை ஜோஸ்யர் கையில் கொடுத்தான். ஆனால் சாஸ்திரியார் அதைப் பொருட்படுத்தாமல் மதுசூதனனின் கையைப் பார்க்க இச்சித்தார். மரப்பெட்டி ஒன்றிலிருந்து பேனு, காகிதம் முதலியவைகளை எடுத்துத் தாமே ஒரு சக்கரம் கணித்துக் கொண்டார். பிறகு மதுசூதனனைப் பார்த்து, "பஞ்சமவர்க்கம்" என்றார். மதுசூதனனுக்குச் சிறிதும் புரியவில்லை. ஜோஸ்யர் அதன்மேல் கைவிரல்களை ஒவ்வொன்றாக விட்டு, "கவர்க்கம், சவர்க்கம், டவர்க்கம், தவர்க்கம்" என்று எண்ணினார். அப்போதும் மதுசூதனன் புத்திக்கு ஒன்றும் எட்டவில்லை. "பஞ்சமவர்ணம்" என்றார் ஜோஸ்யர். மதுசூதனன் மிகப் பொறுமையாய் வாயடைத்து உட்கார்ந்திருந்தான். ஜோஸ்யர் ஏதோ சொன்னார். அதிலிருந்து மதுசூதனன் பிருகுமுனிவர் தமது ஸம்ஹிதையை வியாகரணத்தின் முதல் அத்தியாயத்திலிருந்து ஆரம்பித்திருக்கிறார் போலும் என்றே புரிந்துகொள்ளக்கூடும். அதற்குள் வேங்கடசாஸ்திரி, "பஞ்சாக்ஷரகம்" என்றார்.

நவீனன் சட்டென்று, "எனக்குப் புரிந்தது, அண்ணு" என்று மதுசூதனன் காதோடு இரகசியமாய்ச் சொன்னான்.

"என்ன புரிந்தது?"

"பஞ்சம வர்க்கத்தில் பஞ்சம வர்ணமென்பது 'ம' அதில் பஞ்சாக்ஷரகம் என்பது 'ம, து, சூ, த, ன'. கிரகங்கள் உச்சஸ்தானத்தில் இருப்பதால் மூன்று பஞ்சமங்கள் ஒரே இடத்தில் கேந்த்ரமா யிருக்கின்றன."

மதுசூதனன் வியப்புற்றான்.

தாயார் தகப்பனுரால் பெயரிடுவதற்கு ஆயிரக்கணக்கான வருஷங்களுக்கு முன்பு பிருகுமுனிவரின் ரெஜிஸ்டரில் அவன்பெயர் தாக்கல் செய்யப்பட்டிருக்கிறது! இந்தக் கிரகநக்ஷத்திரங்களின் வேடிக்கைதான் என்ன! அதன்மேல் வேங்கடசாஸ்திரி ஸம்ஸ்கிருதபாஷையில் எழுதப்பட்டிருக்கும் அவனுடைய ஜீவிய சரித்திரத்தின் சுருக்கத்தைப் படித்தபோது அவன் திக்பிரமமடைந்து உட்கார்ந்திருந்தான். அவனுக்கு எவ்வளவுக் கெவ்வளவு பாஷை புரியவில்லையோ அவ்வளவுக் கவ்வளவு நம்பிக்கையும் அதிகமாயிற்று. அவனுடைய வாழ்க்கை ஒரு ரிஷியின் வாக்கினுல் ஏற்பட்டது போல உருப்பெற்று விளங்கிற்று. அவன் தன் மார்பைத் தடவினுன். அநுஸ்வாரம், விஸர்க்கம், பிரத்யயம் முதலியவைகள் சேர்ந்து ஏதோ தபோவனத்தில் எழுதப்பட்ட ஏட்டுச்சுவடிபோல அவன் தேகம் புலப்பட்டது. அதற்குப்பின் ஜோஸ்யரின் கடைசி வார்த்தைகள் அவன் காதில் இவ்வண்ணம் விழுந்தன: "இவர்வீட்டில் ஒரு தினம் லக்ஷ்மி தேவியே நேரில் ஆவிர்ப்பாவமாவாள். அவ்வித சௌபாக்யத்திற்கு அறிகுறிகள் இப்போதே தோன்ற ஆரம்பித்திருக்கின்றன. சில தினங்களாய் ஒரு புதிய மணப்பெண்ணின் உருவத்தில் லக்ஷ்மிதேவியே வீட்டில் நுழைந்திருக்கிருள். இனி மிக ஜாக்ரதையுடன் நடந்து கொள்ளவேண்டும். அப்பெண் மணிக்கு மனத்தில் கஷ்டமுண்டானுல் பாக்கியலக்ஷ்மி கோபித்துக்கொள்வாள்."

மேலும் வேங்கடசாஸ்திரி, "கோபித்திருப்பதாகவே சூசனைகள் தென்படுகின்றன. ஜாதகன் இனியும் எச்சரிக்கையுடன் இல்லாவிட்டால் கஷ்டம் அதிகரிக்கும்" என்று கூறினர்.

மதுசூதனன் அசைவற்று மௌனமாய் உட்கார்ந்திருந்தான். தனக்கு விவாகமானவுடன் எதிர்பாராத லாபம் உண்டானதும், இப்போது ஏற்பட்டிருக்கும் தோல்வியும் அவனுக்கு ஞாபகம் வந்தன. லக்ஷ்மியே நேரில் ஆவிர்ப்பாவமாவாள் என்பது மிக அதிர்ஷ்டமே. ஆனால் அதனால் ஏற்படும் பொறுப்பும் சுவல்பமானதல்ல.

திரும்பிவரும் சமயம் மதுசூதனன் வண்டியிலும் வியப்புற்றவண்ணமே உட்கார்ந்திருந்தான். சிறிதுநேரம் கழித்து நவீனன், "எனக்கென்னவோ இந்த வேங்கட சாஸ்திரி வார்த்தையில் கொஞ்சமும் நம்பிக்கை இல்லை. உங்களைப்பற்றி யாரிடமாவது முன்னாலேயே விசாரித்து வைத்திருப்பார்" என்றான்.

"நிரம்பப் புத்திசாலி நீ. எங்கே யார் யார் இருக்கிறார்களோ அவர்களைப்பற்றியெல்லாம் முன்னாடியே தகவல் விசாரித்து வைத்துக்கொள்வது நிரம்ப சுலபமல்லவா!"

"மனிதர்கள் ஜன்மமெடுப்பதற்கு முன் கோடிக் கணக்காக அவர்கள் ஜாதகத்தை எழுதிவைப்பதைவிட இந்த வேலை சுலபமானதே. பிருகுமுனிவருக்கு இவ்வளவு காகிதம் எங்கிருந்து கிடைக்கும்? வேங்கடசாஸ்திரியின் அச்சிறிய வீட்டில் அவ்வளவு இடம் எப்படிக் கிடைக்கும்!

"அட! முன் காலத்து ரிஷிகளெல்லாம் ஒரு வரியில் ஆயிரக் கணக்கான வார்த்தைகள் எழுதி விடுவார்களே!"

"நடக்கக்கூடியதாய்த் தோன்றவில்லை."

"உன் புத்திக்கு எட்டாததை நடக்காது என்பாய். இந்த வாக்குவாதமெல்லாம் இருக்கட்டும். அன்று அங்கேயிருந்து ஒரு குமாஸ்தா வந்தானே; அவனை நீயே போய் அழைத்துக்கொண்டு வா; இன்றே வரவேண்டும்; தாமதம் செய்யாதே."

அண்ணாவை ஏமாற்றினது பற்றி நவீனன் மனத்திற்குள் மிகவும் சங்கடப்பட்டான். அவனை ஏமாற்றுவது இவ்வளவு சுலபமாய் இருந்ததும், அதன் பலனாக அண்ணா இவ்விதம் பரிகசிக்கத் தகுந்த நிலைமையை அடைந்திருப்பதும் அவனுக்கு மிக வெட்கத்தையும் வருத்தத்தையும் உண்டாக்கின. முன்பு சிறு விஷயங்களில் அவன் தன் அண்ணாவைப் பலமுறை ஏமாற்றியிருக்கிறான். அப்போதெல்லாம் அவன் மனம் வருந்தவில்லை. ஆனால் இன்று இவ்வளவு சிரமப்பட்டுப் பெரிய வலை வீசினதுபற்றியே அவனுடைய மனம் அவனை வாட்டிக்கொண்டிருந்தது போலும்!

---

## 42

மதுசூதனன் மனத்திலிருந்து ஒரு பெரிய பாரம் விலகினமாதிரி இருந்தது; ஆத்மாபிமானம் என்ற உருவத்துடன் வந்து மிகக் கடுமையுடன் அவனைக் கண்டித்து, அவனிடம் குருத்துவிட்டுத் தோன்றும் அன்பின் முளையை நசுக்கிவரும் கொடூரமான ஆத்மகௌரவத்தின் பாரம் விலகிற்று. குமுதத்தினிடம் அவன் மனம் மயங்கும்போதெல்லாம் அவனுள்ளத்தில் முரண்பாடு ஏற்பட்டுக்கொண்டேயிருந்தது. வேறுவழியின்றி அவளிடம் தான் இணங்கிப் போவதை நினைக்கும்போதெல்லாம், தன்னையும் மீறி அவனுக்குக் குமுதினியின்மேல் குரோதம் உண்டாயிற்று. இந்தச் சமயம் கிரகநக்ஷத்திரங்களின் நல்ல பார்வையால் லக்ஷ்மி அவன் வீட்டில் ஆவிர்ப்பாவமாயிருக்கிறாள். அவளைப் பிரசந்நப்படுத்தவேண்டும் என்று கிரககதியின் பலனாய் உத்தரவு கிடைத்திருக்கிறது. ஆகையால் எல்லா முரண்பாடும் விலகி அவன் சரீரம், மனம் இரண்டும் புளகித

மாயினை. அடிக்கடி தன் மனத்திற்குள், "லக்ஷ்மீ! என் அகத்துத் திருவே! நான் கொடுத்துவைத்த பெரும் பாக்கியமே!" என்று சொல்லிக்கொண்டான். உடனே எல்லா வெட்கத்தையும் ஒதுக்கிவிட்டுக் குமுதத்தினிடம் சென்று அவளை ஸ்துதி செய்து வரவேண்டும்; "ஏதாவது அபராதம் செய்திருந்தாலும் அதைப் பொருட்படுத்தாதே" என்று சொல்லிவிட்டு வரவேண்டுமென்று மனத்தில் விருப்பமுண்டாயிற்று. ஆனால் ஓய்வு ஏது? வியாபாரத்தைச் சீர்படுத்த ஆபீஸ் செல்லவேண்டும். உள்ளே சென்று சாப்பிட்டுவரக்கூட அவகாசம் இல்லை.

நாள்முழுவதும் குமுதத்தின் மனம் துடித்துக்கொண்டிருந்தது. மறுதினம் தமையன் வரப்போகிறானென்றும், அவனுக்கு உடம்பு சரியாயில்லையென்றும் அவளுக்குத் தெரியும். அவனைப் பார்க்க முடியுமா முடியாதா என்பதைத் தீர்மானமாய்த் தெரிந்துகொள்ள அவள் மனம் ஆவலுடனிருந்தது. நவீனன் ஏதோ வேலையாய்ப் போனவன் இன்னும் வரவில்லை. நவீனனுக்கு இன்று மதுசூதனன் தானே நேரில் சென்று மன்னியை எல்லாவிதத்திலும் திருப்தி செய்ய முயல்வானென்பது நன்ருய்த் தெரியும். ஏதாவது முன்னுடியே குறிப்பிட்டுச் சொல்லி ரஸபங்கம் செய்ய அவன் விரும்பவில்லை.

இன்று மேல்மாடியில் உட்கார ஸௌகர்யப்படவில்லை. நேற்று மாலை முதல் மேகங்கள் திரண்டு கொண்டிருந்தன. இன்று மத்தியான்னத்திலிருந்து சிறிய மழையும் ஆரம்பித்திருக்கிறது. விரும்பாத ஓர் விருந்தாளியைப்போல் வருவது குளிர்காலத்து மழை. மேகத்தில் ஒருவித வர்ண ஸௌந்தர்யமும் இல்லை. மழையில் ஒருவித ஓசை இன்பமும் இல்லை. உற்சாகம் தராது வீசியது ஈரக்காற்று. சூர்ய

னின் ஒளியை இழந்து ஆகாயம் ஏழ்மையுடன் நிற்பதைப் பார்த்துப் பூமி வெட்கியிருந்தது. படிகளில் ஏறி மாடியை அடைந்ததும், படுக்கையறைக்குப் போகும் வழிக்கு அடுத்து இருக்கும் சிறிய வெளிமாடியில் குமுதம் உட்கார்ந்திருந்தாள். அவள் தேகத்தில் நின்று நின்று மழைச் சாரல் தெறித்துக்கொண்டிருந்தது. இருள் கவிழ்ந்து, மனத்திற்கு வெறுப்பைத்தரும் நாந்தல்தினம். குமுதினிக்கு வாழ்க்கை ஓர் மலைப்பாம்பு மாதிரி தன்னை விழுங்கிவிட்டது போலவும், அதன் நாற்ற உடலில் அகப்பட்டுத் தான் வெளிவர வழியின்றித் தவிப்பதுபோலவும் தோன்றிற்று. தன்னை இவ்விதம் திக்கற்ற நிராசையென்னும் கடல்நடுவில் கொண்டுவந்துவிட்டிருக்கும் தெய்வத்தினிடம் அவளுக்கு உண்டான ரோஷம் மனத்தில் புகைந்துகொண்டு இன்று கோப உருவம் கொண்டு கொழுந்துவிட்டெரியலாயிற்று. சட்டென்று எழுந்துநின்றாள். சாய்வு மேஜையைத் திறந்து தன்னுடைய ராதாகிருஷ்ணன் படத்தை வெளியே எடுத்தாள். அது ஒரு பட்டுத் துணியால் மூடப்பட்டிருந்தது. "உம்மேல் எனக்குக் கொஞ்சங்கூட நம்பிக்கையேயில்லை" என்று வாய்விட்டுக் கூவி அதைக் கிழித்தெறிய விரும்பினாள். மூடியிருக்கும் பட்டை அவிழ்க்க முடியவில்லை. இழுக்க இழுக்க அது இன்னும் கெட்டியாயிற்று. ஆத்திரமுண்டாகிப் பற்களால் பிய்த்தெறியலானாள். ஆனால் வெகுகாலமாய்ப் பூஜித்துவரும் அந்தத் திருவுருவம் கண்களில் படவே அவளால் சகிக்க முடியவில்லை. அதைச் சட்டென்று மார்போடு அணைத்து அழலானாள். அதனுடைய மரச்சட்டம் மார்பில் உறுத்த உறுத்த அதைப் பின்னும் ஆதரவுடன் அணைத்துக்கொண்டாள்.

அதற்குள் படுக்கையைத் தட்டிப் போடக் கிழவன் முரளி வந்தான். குளிரினால் அவன் கைகள் நடுங்கிக்

கொண்டிருந்தன. ஒரே ஒரு கிழிந்த மெல்லிய துணியை அவன் மேலே போர்த்திருந்தான். தலை வழுக்கையாய், கன்னங்கள் சுருங்கி, தாடை குழிவிழுந்து, க்ஷவரம் செய்யாததனால் தாடி குச்சி குச்சியாய் வளர்ந்திருந்தது. அவன் சிறிது தினங்களுக்கு முன்பே மலேரியா ஜுரத்தில் அடிபட்டு எழுந்து வந்திருக்கிறான். உடம்பில் ரத்தமே யில்லை என்று சொல்லலாம். வேலையை விட்டுவிட்டுச் சொந்தக் கிராமம் போய்ச் சிறிதுநாளிருந்துவிட்டு வருமாறு டாக்டர் சொல்லியிருந்தார். ஆனால் வயிற்றுப் பிழைப்புக்கு வழிதேடியாக வேண்டாமா?

"குளிருகிறதா, முரளி?" என்று குமுதம் கேட்டாள்.

"ஆமாம், அம்மா. மழைபெய்து குளிர் எடுத்து விட்டது."

"உன்னிடம் கம்பளிப் போர்வை யில்லையா?"

"பட்டம் கிடைத்த தினம் மகாராஜா சால்வை கொடுத்தார்கள். ஆனால் பேரன் காசரோகத்தில் படுத்துக் கொள்ளவே டாக்டர் அதை அவனுக்குக் கொடுத்துவிடச் சொன்னார். கொடுத்துவிட்டேன்."

குமுதம் அடுத்த அறைக்குச் சென்று அலமாரியிலிருந்து ஒரு சாயம்போன பழைய போர்வையை எடுத்து வந்து, "இந்தா, என்போர்வை; எடுத்துக்கொள்" என்றாள்.

முரளி கும்பிடு போட்டுவிட்டு, "மன்னிக்கவேண்டும், அம்மா; மகாராஜா கோபிப்பார்கள்" என்றான்.

இந்த வீட்டில் தயைகாண்பிக்கக்கூட வழியில்லை என்பது குமுதத்திற்கு ஞாபகம் வந்தது. தன்பொருட்டாவது தெய்வத்தினிடமிருந்து தயையைப்பெறவேண்டாமா!

புண்ணிய கர்மமே அதைப் பெறுவதற்கு வழி! அவள் மனத்தில் உண்டான ஆத்திரத்தினால் அந்தப் போர்வையைக் கீழே எறிந்தாள்.

முரளி கைகளைக் குவித்துக்கொண்டு, "ராணியம்மா, நீங்கள் லக்ஷ்மி போன்றவர்கள்; கோபிக்கக்கூடாது. அந்தக் கம்பளிச் சால்வை எனக்கு வேண்டாம். நான் ஹுக்காவிற்கு நெருப்புத் தயாரிக்கும் உள்ளே இருக்கிறேன். அங்கே கணப்பு எரிந்துகொண்டே இருக்கிறது" என்றான்.

"முரளி, நவீனபாபு வந்துவிட்டாரென்றால் அவரை இங்கே அனுப்பு" என்றாள் குமுதம்.

நவீனன் அறைக்குள் நுழைந்ததும், "நீங்கள், எனக்கு ஓர் உதவி செய்வீர்களா?" என்று கேட்டாள்.

"அதனால் எனக்குக் கெடுதல் ஏற்படுமென்றால் செய்யத் தயார்; உங்களுக்குக் கெடுதல் ஏற்படுமென்றால் ஒருநாளும் செய்யமாட்டேன்."

"எனக்கு இன்னும் என்ன கெடுதல் வரப்போகிறது! நான் ஒன்றுக்கும் பயப்படவில்லை" என்று சொல்லித் தன் கையிலிருந்த கனமான தங்கவளைகள் இரண்டையும் கழற்றி, "இந்த இரண்டு வளையல்களையும் விற்று அண்ணாவின் உடம்பு சௌக்யமாகப் பரிகாரங்கள் செய்யுங்கள்" என்றாள்.

"அவசியமில்லை; மன்னி, நீங்கள் அவரிடம் கொண்டிருக்கும் பக்தியின் புண்ணிய விசேஷத்தினாலேயே அவருக்குச் சௌக்யமாய்விடும்" என்றான் நவீனன்.

"அண்ணாவிற்காக என்னால் வேறெதுவும் செய்ய முடியவில்லை. தெய்வத்திற்குப் பிரீதி செய்து அதன்

மூலமாய் அவருக்கு ஏதாகிலும் தொண்டு செய்யலாம் என்று எண்ணினேன்."

"நீங்கள் ஒன்றும் செய்யவேண்டாம், மன்னி. நாங்கள் எல்லாரும் எதற்காக இருக்கிறோம்? உங்கள் சேவைக்காகத்தானே?"

"நீங்கள் என்ன செய்வீர்கள்?"

"நாங்கள் பாபிஷ்டர்கள். பாபத்தைச் செய்வோம். அவ்விதம் ஏதாகிலும் பாபகாரியம் செய்து அதன்மூலம் உங்களுக்குச் சாதகம் ஏற்பட்டால் நாங்கள் தந்யரா வோம்."

"பரிகாசம் செய்யவேண்டாம்."

"கொஞ்சங்கூடப் பரிகாசமேயில்லை. புண்ணியம் செய்வதைவிடப் பாபம் செய்வதே மிகக் கஷ்டமான காரியம். தெய்வம் இதை உணர்ந்தால் பாபம் செய்பவர் களுக்கே வெகுமதி கொடுக்கும்."

நவீனன் வார்த்தையிலிருந்து அவனுக்குத் தெய்வத்தி னிடம் பக்தி இல்லையென்பதை அறிந்த குமுதினி வியசனித்தாள். ஆனால் அவள் தமையனுக்கும் இவ்விதத் தெய்வபக்தி இல்லை. ஆகையால் இதனால் அவளுக்குக் கோபமுண்டாகவில்லை. சிறு குழந்தைகள் தவறு செய் தால் தாயார் அன்புடன் பொறுப்பதுபோல அவளும் பொறுத்தாள்.

குமுதம் சற்று வருத்தமான புன்சிரிப்புடன், "வாழ்க் கையில் புருஷர்களாகிய நீங்கள் உங்கள் சக்தியை உபயோ கித்து வேலை செய்யக் கூடும். ஆனால் எங்களால் அந்தச் சக்தியை உபயோகிக்க முடிவதில்லையல்லவா! ஒருவர்மேல் அன்புகொண்டிருந்தும் அவருக்கு உதவிசெய்வது எப்படி? ஒவ்வொரு நாளும் கழிப்பது ஒரு யுகமாயிருக்கிறது.

இதற்கு ஒருவழியும் தெரிந்துகொள்ள முடியவில்லையே! எங்கள்மேல் இரக்கங்கொள்ள யாரும் இல்லையா?" என்றனள்.

நவீனன் கண்களில் நீர் ததும்பிற்று.

"அண்ணாவிற்காக நான் ஏதாகிலும் செய்யவேண்டும். இந்த நகை என் தாயாருடையது. அவள் சார்பாய் நான் இதை உபயோகப்படுத்தி என் தெய்வத்திற்குச் சமர்ப்பிக்கிறேன்."

"பகவானுக்கு நீங்கள் ஒன்றும் சமர்ப்பிக்க வேண்டாம். உங்களுடைய பிரார்த்தனையைத் தாமாக அவர் அங்கீகரிப்பார். இரண்டு தினங்கள் பொறுத்திருங்கள், மன்னி. அதற்குள் தெய்வம் பிரசந்நமாகாவிடில் நீங்கள் சொல்லுகிறபடியே செய்கிறேன்."

இராத்திரி இருட்டி வந்தது. மெத்தைப் படியில் ஜோடின் காலடிச்சத்தம் கேட்டது. நவீனன் திடுக்கிட்டான். தன் தமையன் வருகிறானென்றுணர்ந்தான். ஓட முடியவில்லை. தைரியத்துடன் அவன் வருகையை எதிர் பார்த்து அமர்ந்திருந்தான். இந்தப்புறம் குமுதினி ஓரே நிமிஷத்தில் அதிகமாகக் கூசி நின்றனள். மறைவான ஓர் விரோதத்தின் அதிர்ச்சி அவளுடைய ஒவ்வொரு நாடியையும் அசைத்துச் சென்றதைப் பார்த்தால் மிகவும் பயமாயிருந்தது. இந்தப்பாபம் ஏனோ அவளை வாட்டுகிறது!

ஏதோ எண்ணம் உண்டாகவே குமுதம், "எனக்குக் குருவாக இருந்து உபதேசம் செய்யக் கூடியவர் யாரையாகிலும் உங்களுக்குத் தெரியுமா?" என்று கேட்டாள்.

"எதற்காக? மன்னி!"

"என் மனத்திலுண்டாகும் உணர்ச்சிகளை என்னால் தாங்கியிருக்க முடியவில்லை."

"அது உங்கள் மனத்தின் தோஷமல்லவே?"

"கேடு வெளியிலிருந்தும், தோஷம் மனத்திலுள்ளும் ஏற்படுகிறதென்று அண்ணு அடிக்கடி சொல்லக் கேட்டிருக்கிறேன்."

"உங்கள் அண்ணுவே உங்களுக்கு உபதேசம் செய்வார்; பயப்படாதீர்கள்."

"அந்த நாள் இனி எனக்குக் கிடைக்காது."

• மதுசூதனனின் சுவபாவமாயுள்ள பணத்தாசையுடன் இப்போது அவன் மனத்தில் புதிதாயுண்டாயிருக்கும் குமுதத்தின்மேலுள்ள அன்பு ஒன்ருய்ச் சேர்ந்துவிட்டபடியால் அவ்வன்பு அவனுடைய் எல்லாக் காரியங்களிலும் பொங்கி வழிந்து பரவலாயிற்று. குமுதத்தின் சுந்தர வதனத்தில் அவனுடைய பாக்கிய லக்ஷ்மி வீற்றிருக்கிருள். அவனுக்கு ஏற்பட்ட கஷ்டங்கள் நீங்கிவிடும் என்பதற்கு இன்றே அத்தாட்சி கிடைத்திருக்கிறது. நேற்று யார் யார் அவனுக்கு விரோதமாய் மீட்டிங்கில் பேசிஞர்களோ அவர்களே இன்று தங்களுடைய பாட்டின் ராகத்தை மாற்றிக்கொண்டு அவனுக்குக் கடிதம் எழுதியிருக்கிருர்கள். மதுசூதனன் அந்த நிலத்தைத் தானே சொந்தத்திற்கு வாங்கிக் கொள்வதாய்ச் சொல்லவே, "அடாடா, ஏமாந்துபோய்விட்டோம்" என்று சிலர் எண்ணிஞர்கள். மற்றவர்கள் இந்த விஷயத்தைப்பற்றி இன்னும் நன்ருய் யோசிக்கவேண்டும் என்று சொல்லலாஞர்கள்.

நேரங்கழித்து வந்ததற்காக ஒரு வாயிற்காப்போனின் சம்பளத்தில் பாதியைப் பிடித்திருந்தான். இன்று மத்தியான்னம் சிற்றுண்டி அருந்தும் சமயம் அவன் மதுசூதனன் காலில் விழுந்த மாத்திரத்திலேயே மன்னிப்புப் பெற்ருன். அதாவது மன்னிப்பதென்ருல் தன் கையிலிருந்து மது

சூதனன் அவனுக்கு ரூபாயைக் கொடுத்து அபராதத்தைச் செலுத்துவதுதான். அபராதம் ரத்து செய்யப்படவில்லை. நீதியை மீறிச் சட்டத்தை மாற்ற வழி ஏது!

அன்று மதுசூதனனுக்கு மிக ஆச்சர்யகரமான தினம். வெளியில் ஆகாயத்தில் மேகாடம்பரம். மழை தூறிக்கொண்டிருந்தது. ஆயினும் அது அவன் உள்ளத்தில் பொங்கும் ஆனந்தத்தை அதிகப்படுத்தியது. ஆபீஸிலிருந்து வந்த பிறகு இரவு போஜனம் செய்யும்வரை மதுசூதனன் வெளிப்பக்கத்து அறையிலேயேதான் இருப்பது வழக்கம். விவாகமான பிறகு சிற்சில சமயம் வழக்கத்திற்கு விரோதமாக அந்தப்புரம் போகும்போதும் பிறர்கண்ணில் தென் படாமல் போக முயல்வான். ஆனால் இன்று அவன் தன் குமுதத்தைப் பார்க்கச் செல்வதை வீடு முழுவதற்கும் மிக்க ஆர்ப்பாட்டத்துடன் தெரியப்படுத்த விரும்பினான். தனக்கு ஏற்பட்டிருக்கும் இவ்வளவு மகத்தான அதிர்ஷ்டத்தைக் கண்டு உலகமுழுவதும் தன்னைப் பார்த்துப் பொறுமை கொள்ளவேண்டும் என்பது அவன் எண்ணம்.

சிறிது நேரம் மழை ஓய்ந்திருந்தது. இன்னும் விளக்கு ஏற்றப்படவில்லை. கிழவி ஆனந்தி கையில் தூபக்கிண்ணத்தை எடுத்துக்கொண்டு ஒவ்வோர் அறைக்குள்ளும் சென்று தூபம் காட்டிவந்தாள்.* ஒரு துரிஞ்சல் முற்றத்து வெளியிலிருந்து லாந்தல் எரியும் அந்தப்புர வாயில்வரை சுற்றிச்சுற்றிப் பறந்துகொண்டிருந்தது. வேலைக்காரிகள் தாழ்வாரத்தில் கால்களை நீட்டி உட்கார்ந்து நூல்திரி தயாரித்துக்கொண்டிருந்தவர்கள் ராஜா வருவதைப்

---

* வங்காளி வீடுகளில் சாயங்காலங்களில் தூபம் காட்டுவது வழக்கம். சங்கம் ஊதுவது ஓர் ஆசாரம். இது மங்களத்தை உத்தேசித்து அவர்கள் செய்வது.

பார்த்துச் சட்டென்று முகத்தை மூடிக்கொண்டு ஓடினார்கள். காலடிச் சத்தம் கேட்டுச் சியாமசுந்தரி தன் அறையிலிருந்து கையில் வெற்றிலைத் தட்டை எடுத்துக் கொண்டு வெளியே வந்தாள். மதுசூதனன் ஆபீஸிலிருந்து வந்ததும் அவள் வெற்றிலை மடித்து அந்தத்தட்டில் அவனுக்கு அனுப்புவது வழக்கம். மதுசூதனனுக்குப் பிடித்தவிதம் வெற்றிலை மடிக்கச் சியாமசுந்தரி ஒருத்திக்கே தெரியும். இதில் மற்றொரு மர்மமும் அடங்கியிருந்தது. அது ஜாடையாக எல்லாருக்கும் தெரிந்ததே. அந்தத் தைர்யத்தினால் சியாமசுந்தரி மதுசூதனன் வரும் வழியில் நின்று தட்டை நீட்டி, "இதோ உங்களுக்கு வெற்றிலை. எடுத்துக்கொள்ளுங்கள்" என்றாள். முன்போன்ற நிலைமையிருந்தால் இதையே சாக்காக வைத்துக்கொண்டு இன்னும் இரண்டொரு வார்த்தைகள் பேசச் சந்தர்ப்பம் கிடைத்திருக்கும். அந்த வார்த்தைகளில் சிறிது இன்பரஸமும் கலந்திருக்கும். இன்று என்ன ஏற்பட்டதோ, யாருக்குத் தெரியும்! சியாமாவின் காற்றுக்கூடத் தன்மேல் படக் கூடாது என்று மதுசூதனன் தாம்பூலத்தை வாங்கிக் கொள்ளாமல் வேகமாய்ப் போய்விட்டான். சியாமாவின் விசாலமான இரண்டு கண்களிலும் ரோஷத்தினால் தீப் பொறி பறந்தன. பிறகு பெரிய பெரிய கண்ணீர்த் துளிகள் உதிர்ந்தன. மதுசூதனன்மேல் சியாமா காதல் கொண்டிருக்கிறாள் என்பது அந்தர்யாமியான பகவானுக் கல்லவோ தெரியும்!

மதுசூதனன் அறைக்குள் நுழைந்ததும் நவீனன் குமுதத்தின் கால்களைத் தொட்டு நமஸ்கரித்து விட்டு எழுந்து நின்று, "குருவைப்பற்றினவிஷயம் ஞாபகமிருக்கிறது. தேடிப்பார்க்கிறேன்" என்றான். பிறகு தமையனைப்

பார்த்து, "மன்னி குருவின் வாய்மூலமாய்ச் சாஸ்திரோப தேசம் கேட்க விரும்புகிறார். நம்முடைய குரு இருக் கிறார்" என்பதற்குள் மதுசூதனன் சற்று ஆத்திரத்துடன், "சாஸ்திரோபதேசமா? பார்க்கலாம். ஆனால் நீ இதற்காக ஒன்றும் செய்யவேண்டாம்" என்றான்.

நவீனன் போய்விட்டான்.

மதுசூதனன் இன்று வழிமுழுவதும் மனத்திற்குள், 'படோபஹா நீ வந்தால் என் வீடே பிரகாசமாயிருக் கிறது' என்று சொல்லிவந்தான். இந்தமாதிரி பேசுவது அவனுக்கு அப்பியாசமேயில்லை. ஆகையால் அறைக்குள் நுழைந்ததும் தாமதிக்காமல் இந்த வார்த்தைகளை உடனேயே சொல்லிவிடுகிறதென்று அவன் நிச்சயித்திருந் தான். ஆனால் நவீனனைப் பார்த்ததும் வார்த்தை நின்று விட்டது. அதற்குமேல் சாஸ்திரோபதேசத்தைப் பற்றிப் பேச்சு ஏற்படவே அது அவன் வாயை அடியோடு அடைத்துவிட்டது. அவன் மனத்திற்குள் செய்துகொண்டு வந்த ஏற்பாடெல்லாம் இச்சிறிய தடங்கலால் பயனற்ற தாய்ப் போய்விட்டது. இது தவிர குமுதத்தின் முகத்தில் ஒருவித பயத்தின் பாவனை தென்பட்டது; அவள் சரீரத் திலும் மனத்திலும் ஒரு சங்கோசம் இருப்பதாய்க் காணப் பட்டது. வேறொரு தினமாயிருந்தால் இது அவன் கண் ணில் பட்டிருக்காது. ஆனால் இப்போது அவன் மனத்தில் புதிதாய் உண்டாயிருக்கும் உணர்ச்சியினால் அவன் பார் வையின் சக்தியும் அதிகரித்திருந்தது. குமுதத்தைப்பற்றிச் சூக்ஷ்மமாக அவன் மனம் ஆராயத் தொடங்கியது. இன் றைக்குக்கூடக் குமுதினிக்கு ஏன் இந்தப் பாராமுகம்? இது மிகவும் அநியாயமென்று அவன் மனத்தில் பட்டது. இருந் தும் இதைப் பொருட்படுத்தக் கூடாதென்று தீர்மானித்

தான். ஆனால் சுலபமாக நடக்கக்கூடிய ஒரு விஷயம் இப்போது சுலபமாயில்லை.

சிறிது நேரம் மௌனமாயிருந்துவிட்டு மதுசூதனன், "எழுந்து போகப் போகிறாயா, படோபஹா? சற்று உட்காரமாட்டாயா?" என்று கேட்டான்.

மதுசூதனனின் வார்த்தையையும் அவன் குரலையும் கேட்டுக் குமுதம் ஆச்சர்யமடைந்து, "இல்லை; போவானேன்?" என்றாள்.

"உனக்காக ஒரு வஸ்து கொண்டுவந்திருக்கிறேன்; திறந்து பார்" என்று சொல்லி அவள் கையில் ஒரு தங்கடப்பியைக் கொடுத்தான்.

அந்த டப்பியைத் திறந்து அதற்குள் தன் அண்ணா கொடுத்த நீலமோதிரம் இருப்பதை அவள் பார்த்தாள். மார்பு படபடவென்று அடித்துக்கொண்டது. அவளுக்கு என்ன சொல்வது என்று ஒன்றும் புரியவில்லை.

"இந்த மோதிரத்தை உன் கையில் போட்டுவிட எனக்கு ஆசையாயிருக்கிறது; போடட்டுமா?"

குமுதம் தன் கையை நீட்டினாள். மதுசூதனன் அவள் கையைத் தன்மடியில் இழுத்துவைத்துக்கொண்டு வேண்டுமென்றே மிகத் தாமதத்துடன் விரலில் மோதிரத்தைத் தரித்துவிட்டான். அதன் பின் கையைத் தூக்கி முத்தமிட்டுவிட்டு, "உன் கையிலிருந்து மோதிரத்தை நான் எடுத்தது தவறு. உன் கையில் எந்தவித ரத்தினம் இருந்தாலும் ஒருவிதத் தோஷமும் ஏற்படாது" என்றனன்.

குமுதத்தை அவன் நன்றாய் அடித்திருந்தால்கூட அவளுக்கு இவ்வளவு ஆச்சர்யமுண்டாயிராது. சிறு குழந்தையைப் போல் இவ்விதம் குமுதம் ஆச்சரியப்படுவதைப் பார்த்து மதுசூதனன் பூரித்துப்போனான். அவள்

முகபாவனையிலிருந்து அவன் கொடுக்கும் இந்தத்தானம் சாமான்யமானதல்ல என்பது நன்ருய் விளங்கிற்று. இருந்தும் அவன் இன்னொரு விஷயம் ஒளித்துவைத்துக்கொண்டிருந்தான். அதையும் இப்போது வெளிப்படுத்தினன்; "உங்கள் வீட்டிலிருந்து காளிதாஸ் முகர்ஜீ வந்திருக்கிருர். அவரைப் பார்க்கிருயா?" என்று கேட்டான்.

குமுத்ததின் முகம் பிரகாசமடைந்தது.

"முகர்ஜீ அண்ணுவா?" என்று கேட்டாள்.

"அவரை இங்கே வரச்சொல்கிறேன். நீங்கள் இரண்டு பேரும் பேசிக்கொண்டிருங்கள். அதற்குள் நான் சாப்பிட்டுவிட்டு வருகிறேன்" என்ருன் மதுசூதனன்.

குமுதத்தின் கண்கள் நன்றியறிவுடன் துடித்தன.

---

# 43

சட்டர்ஜி ஜமீன்தார்களுடன் காளிதாஸ் முகர்ஜீக்கு உள்ள சம்பந்தம் தலைமுறை தலைமுறையாயிருப்பது. நம்பிக்கையாய்ச் செய்யவேண்டிய காரியமெல்லாம் அவர் மூலமாய்த்தான் நடைபெறும். அவர்களுடைய முன்னோர்களில் ஒருவர் சட்டர்ஜீ குடும்பத்தாருக்காக ஜெயிலுக்குப் போயிருக்கிருர். இப்போது விப்ரதாஸ் கொடுக்க வேண்டிய வட்டியைக் கொடுத்து ரசீது வாங்கி வருவதற்காக அவர் மதுசூதனனிடம் வந்திருந்தார். குட்டைச் சரீரம்; சிவந்த மேனி; பரந்த விசாலமான வதனம்; அதனில் சிறிது வெளுத்து அடர்ந்து வளர்ந்திருக்கும் புருவங்களின் கீழ் அகன்ற கண்கள். மீசைவெளுத்திருந்த போதிலும், அவருடைய தலைமயிர் இன்னும் கறுப்பாகவே யிருந்தது. சாந்திபுரத்து நாட்டுவேஷ்டி தரித்திருத்தார். இடது

கைவிரலில் ஒரு மோதிரம்; அதில் பதித்திருந்த கல்லும் அல்பமானதல்ல. பெரியவீட்டு மனிதர் என்று காட்ட அவர் உடம்பில் ஒரு பூப்போட்ட சால்வை.

அவர் அறைக்குள் நுழைந்ததும் குமுதம் அவரை நமஸ்கரித்தாள். இருவரும் ரத்தின கம்பளத்தின்மீது உட்கார்ந்தனர். "அம்மா, குழந்தாய், நீ இங்கே வந்து கொஞ்ச நாட்களே ஆகின்றன. ஆனால் உன்னைப் பார்த்து எத்தனையோ வருஷமாகி விட்டாற் போலிருக்கிறது" என்று அவர் சொன்னார்.

'அண்ணாவிற்கு உடம்பு எப்படி இருக்கிறது? முதலில் அதைச் சொல்லுங்கள்."

"அவரைப் பற்றித்தான் கவலையாக இருக்கிறது. நீ வந்த மறுநாள் முதலே வியாதி அதிகமாய்விட்டது. ஆனால் அவர் சரீரம் பலமானதல்லவா? சமாளித்துக் கொண்டுவிட்டார். டாக்டர்களுக்குக்கூட ஆச்சரியமாயிருந்தது."

"அண்ணா நாளைக்கு வருகிறாரா?"

"அந்த மாதிரிதான் ஏற்பாடு இருந்தது. ஆனால் வர இன்னும் இரண்டுநாள் தாமதமாகும். பௌர்ணமியன்று புறப்பட்டால் மறுபடி ஜுரம் வந்தால் என்ன செய்கிறது என்று எல்லாரும் தடுத்தார்கள். அது இருக்கட்டும்; நீ எப்படி இருக்கிறாய், அம்மா?"

"நான் சௌக்யமாகத்தான் இருக்கிறேன்."

முகர்ஜீ ஒன்றும் சொல்லவில்லை. ஆனால் குமுதத்தின் முகத்தில் முன்பு இருந்த லாவண்யம் எங்கே? கண்களின் கீழே கறுத்து இருப்பானேன்? அப்படிப்பட்ட மேனியின் காந்தி எதனால் மங்கிப்போய் விட்டது? "அண்ணா என்னை ஞாபகம் கொண்டு எனக்காக ஒரு செய்தியும்

சொல்லியனுப்பவில்லையா?" என்று கேட்கவேண்டு மென்று குமுதத்தின் மனத்தில் உதித்தது. ஆனால் அதை வெளிச்சொல்ல வில்லை. அவளுடைய மனத்திலிருக்கும் கேள்விக்கு விடைகூறுவது போலவே முகர்ஜீ, "அண்ணா என்மூலம் உனக்கு ஒரு வஸ்து அனுப்பியிருக்கிறார்" என்று சொன்னார்.

குமுதம் ஆவலுடன், "என்ன அனுப்பியிருக்கிறார்? எங்கே அது?" என்று கேட்டாள்.

"அதை வெளியறையிலேயே வைத்துவிட்டு வந்தேன்."

"ஏன் இங்கே கொண்டு வரவில்லை?"

"ஆத்திரப்படாதே. மகாராஜா அதைத் தாமே நேரில் கொண்டுவந்து கொடுப்பதாய்ச் சொன்னார்."

"அது என்ன? சொல்லுங்களேன்."

"சொல்லக்கூடாதென்று சொல்லியிருக்கிறார்."

அறையைச் சுற்றுமுற்றும் பார்த்து விட்டு அவர், "உன்னைச் சௌக்யமாய் ஆதரவுடன் வைத்துக் கொண் டிருக்கிறார். அண்ணாவிடம் சொன்னால் சந்தோஷப்படு வார். முதலில் உன் கடிதங்கள் வரத் தாமதமாயிற்று. அண்ணா நிரம்பக் கவலைப்பட்டார். தபாலாபீசில் குழறு படிபோலிருக்கிறது. பின்னால் மூன்று கடிதம் சேர்ந் தாற்போல் கிடைத்தன" என்றார்.

தபாலில் குழறுபடி ஏற்பட்டதன் காரணத்தை ஊகிக்கக் குமுதத்திற்கு அதிகநேரமாகவில்லை.

முகர்ஜீயண்ணாவைச் சாப்பிடச் சொல்லவேண்டு மென்பது குமுதத்தின் விருப்பம்; ஆனால் அவ்விதம் சொல்லத் தைரியமில்லை; சிறிது வெட்கத்துடன், "முகர்ஜீ யண்ணா இன்னும் ஒன்றும் சாப்பிடவில்லையே?" என்றாள்.

"நானும் பார்க்கிறேன். கலகத்தா வந்தால் சாயங் காலத்திற்குமேல் சாப்பிட்டால் எனக்கு ஒத்துக்கொள்வ தில்லை, அம்மா. அதற்காக வைத்யர் ராமதாஸிடங் கூடக் கொஞ்சம் மகரத்வஜம் வாங்கிச் சாப்பிட்டுப்பார்த்தேன். விசேஷ குணம் ஒன்றும் காணும்" என்றார் முகர்ஜீ.

'வீட்டிற்குப் புதிதாய் வந்தபெண். இன்னும் ஏற்பா டெல்லாம் அவள் கைக்கு வரவில்லை. ஆகையாலேயே வாய்திறந்து சாப்பிடச் சொல்லாமல் கஷ்டப்படுகிறாள்' என்று அவர் ஊகித்துக் கொண்டார்.

இதற்குள் நிஸ்தாரிணி கதவோரமாய் வந்து நின்று குமுதத்தைச் சமிஜ்ஞைசெய்து கூப்பிட்டு, "உங்கள் பிறந்தவீட்டிலிருந்து முகர்ஜீ பாபு வந்திருக்கிறாரே; அவருக்காகச் சாப்பாடு தயாராயிருக்கிறது. கீழே அழைத் துக்கொண்டு போய்ச் சாப்பிடச் சொல்" என்றாள்.

குமுதம் சட்டென்று வந்து, "வாருங்கள், முகர்ஜீ யண்ணா, சாப்பிட வரவேண்டும். வைத்யர் சொன்னதை ஒதுக்கிவையுங்கள். இன்று சாப்பிட்டே யாகவேண்டும்" என்றாள்.

"இதென்ன சங்கடம்! நீயோ நிர்ப்பந்தம் செய்கிறாய். இன்றைக்கு வேண்டாம்; விட்டுவை. மற்றொரு தினம் பார்க்கலாம்."

"கூடாது, கூடாது. அது முடியாது. வாருங்கள்."

கடைசியில் போய்ச் சாப்பிட்டபோது மகரத்வஜத் தினால் போதுமான குணம் ஏற்பட்டிருக்கிறதென்றும், பசிக்குக் குறைவொன்றுமில்லையென்றும் தெரியவந்தது.

முகர்ஜீயைச் சாப்பிடச் செய்துவிட்டுக் குமுதம் மாடியிலுள்ள தன்னறைக்கு வந்தாள். இன்று அவள் உள்ளம் பிறந்த வீட்டின் ஞாபகங்களால் நிறைந்திருந்தது.

இந்நாட்களில் நூர்நகரத்தில் புழைக்கடைத் தோட்டத்தில் மாமரங்கள் பூவிட்டிருக்கும். புஷ்பித்திருக்கும் நாவல் மரத்தடியில் குளக்கரையில் படிக்கட்டின் திண்ணையில் இடது கரத்தைத் தலையணையாய் வைத்துப் படுத்து எண்ணிறந்த பகற்பொழுதை அவள் கழித்திருக்கிறாள். வெயிலும் நிழலும் இழைத்த, வண்டுகளின் ரீங்காரத்துடன் ஒலிக்கும் அந்தப்பகற்பொழுதுகள் எவ்வளவு இனிமையாய் இருந்தன! அவள் மனத்தில் திடீரென்று ஒரு வேதனை உண்டாயிற்று. அதன் காரணம் அவளுக்குத் தெரியவில்லை. அந்த வேதனையே அவளுக்கு அந்தி வேளையில் ஆவின் புழுதி எழும் கோகுல வீதிகளின் விசித்ரக்கனவை மூட்டிவிட்டது. யௌவனதசையில், நீரிலும் நிலத்திலும் எங்கும் மாயையை விளைவித்து, அவள் உபாசிக்கும் ராதாகிருஷ்ணவடிவில் மறைந்து திரியும் காண்டற்கரிய அத்தோழன், எஸ்ராஜில் எழும் மூல்தான் ராகத்தின் கமக ரக்தியினால் தன் மனத்திடையே இழுக்கப் பட்டதை அவள் அறியாள்.

வீட்டின் ஒவ்வோர் இடமும் அவளுக்குத் தன் இளமையில் அடைய முடியாத அந்த மணாளனைப் பற்றின எண்ணங்களுடன் இணைக்கப்பட்டதா யிருந்தது. வளைந்து செல்லும் கிராமத்துப் பாதையும், அதனருகில் புலங்களிலுள்ள கடுகுச்செடியின் அக்னி வர்ணங்களும் தெரியும் அந்த மேல்மாடி அறை, புழைக்கடை வேலிக்கு அருகில் ஒரு புற்று, மறந்துபோன பழையதோர் கதையின் மங்கலான சித்திரமென விளங்கும் சுவரில் படிந்த பாசியின் பசுமையும் கருமையும் ஆகிய இவையெல்லாம் அந்த மணாளனின் ஞாபகத்துடன் கலந்து இருந்தன.

மாடியில் படுக்கையறையிலிருந்து, தூக்கம் கலைந்ததும், வெகுதூரத்தில் காலை வானம் சிவக்கும் சமயம் படகின் வெள்ளைப் பாய்மரச்சீலைகளை அவள் பார்ப்பாள். திசைமுடிவில் அவை மறைவது மனத்திலுள்ள ஒரு கோரிக்கை எதையும் குறிக்காமல் செல்வது போலிருக்கும். இளமையில் மூண்ட, கானல்ஜலம் போன்ற ஒரு பிரமம், கல்கத்தாவில் இருக்கும்போது அவள் செய்யும் பூஜையிலும் அங்குள்ள புஷ்பவனத்திலும் தோன்றிற்று. இந்தப் பிரமமே ஒருசமயம் தெய்வசங்கேதம் போல வந்து அவளைக் குருட்டுத்தனமாய் விவாகம் என்னும் உயிர்ச் சுருக்கில் மாட்டிவிட்டது. இந்தமாதிரி எண்ணங்களிடையில் வெயில்வேளையில் அவள் தன்னை மறந்து இருந்தாள்.

இதற்குள், எப்போது மதுசூதனன் வந்தானோ தெரியாது; அவன் குமுதத்தின் பின்புறம் நின்றுகொண்டு சுவரில் மாட்டியிருக்கும் கண்ணாடியில் குமுதத்தின் பிரதிபிம்பத்தைப் பார்த்துக்கொண்டிருந்தான். குமுதத்தின் மனம் அவன் பார்க்காததும் அறியாததுமான ஓர் உலகத்தில் உலாவிக்கொண்டிருக்கிறதென்பதை உணர்ந்தான். வேறொரு தினமாய் இருந்தால் இவ்விதம் குமுதம் தன் நினைவிழந்து கற்பனையில் ஆழ்ந்திருப்பதனால் அவனுக்குக் கோபமுண்டாகும். இன்று சாந்தம் நிறைந்த வருத்தத்துடன் அவள் பக்கத்தில் உட்கார்ந்து, "எதைப்பற்றி யோசிக்கிறாய், படோபஹூ?" என்று கேட்டான்.

குமுதத்திற்குத் தூக்கி வாரிப்போட்டது. முகம் வெளுத்தது. மதுசூதனன் அவள் கையை அசைத்து, "நீ என்ன, ஒருநாளும் எனக்கு வசப்படப்போகிறதில்லையா?" என்று உறுமினான்.

இந்த வார்த்தைக்கு விடைதரக் குமுதத்திற்குத் தெரியவில்லை. ஏன் வசப்படவில்லை என்ற கேள்வியே அவள் மனத்திலும் எழுந்துகொண்டேயிருந்தது. மதுசூதனன் கரேமாய் நடந்துகொள்ளும் சமயம் அவனுக்கு விடை சொல்வது அவளுக்குச் சகஜமாயிருந்தது. ஆனால் அவன் தன்னைத் தாழ்த்திக்கொள்ளும்போது, குமுதம் தன்னை நொந்துகொள்வதைத் தவிர வேறுவழியை அறியவில்லை. கணவனுக்குத் தன் மனத்தையும் பிராணனையும் பூர்ணமாய் அர்ப்பணம் செய்யாமலிருப்பது மகாபாபம் என்பதில் குமுதத்திற்குச் சிறிதும் சந்தேகம் இல்லை. இருந்தும் அவளுக்கு இம்மாதிரி நிலைமை வருவானேன்? பெண்களுக்குள்ள ஒரே லக்ஷ்யம், சாவித்ரியைப்போல் சதியாக இருப்பது. அந்த லக்ஷ்யத்திலிருந்து விலகிச் செல்லாமலிருக்கும்படி அவள் தன்னைக் காப்பாற்றிக்கொள்ள விரும்பினாள். ஆகையாலேயே அவள் கலக்கமடைந்தவளாய்த் தன் கணவனிடம், "என்மேல் தயைகொள்ளவேண்டும்" என்று பிரார்த்தித்தாள்.

"எதற்காகத் தயை காட்டவேண்டும்?"

"என்னை உங்களைச் சேர்ந்தவளாய்ச் செய்துகொள்ளுங்கள். உத்தரவிடுங்கள். என்னைத் தண்டியுங்கள். நான் உங்களுக்குத் தகுந்தவளல்லள் என்று தோன்றுகிறது."

இதைக்கேட்டதும் மதுசூதனனுக்குத் துயரமுண்டாயிற்றெனினும் அதனுடன் சிரிப்பும் வந்தது. குமுதம் பதிவ்ரதாத்தன்மையைக் காக்க விரும்புகிறாள். குமுதம் சாதாரண மனைவியாயிருந்தால் இதுவே அவனுக்கு யதேஷ்டமாயிருந்திருக்கும். ஆனால் அவள் அவனுக்கு மந்திரபூர்வமாக மணந்த மனைவியைவிட விசேஷமாகத்

தோற்றினாள். அந்த விசேஷத்தைப் பெறுவதற்காக அவன் கொடுப்பவையெல்லாம் வீணாய்க்கொண்டிருக்கின்றன. திரும்பத் திரும்ப அவனே தாழ்மையுற வேண்டியிருக்கிறது. குமுதத்திற்கும் அவனுக்கும் இடையிலிருக்கும் கடக்க முடியாத வேற்றுமை மேன்மேலும் கலக்கத்தை வளர்த்துக்கொண்டே வந்தது.

ஓர் நீண்ட பெருமூச்சு விட்டுவிட்டு மதுசூதனன், "உனக்கு ஒரு வஸ்து கொடுத்தால் நீ என்ன கொடுப்பாய்? சொல்" என்றான்.

அது அண்ணா அனுப்பின வஸ்துவாகத்தான் இருக்க வேண்டுமென்று குமுதம் ஊகித்தாள். அவள் ஆவலுடன் மதுசூதனன் முகத்தைப் பார்த்தவண்ணம் நின்றாள்.

"ஆனால் சாமான் எவ்வளவு அருமையோ அதற்குத் தகுந்த விலையை எடுத்துக்கொள்வேன். ஞாபகம் இருக்கட்டும்" என்று சொல்லி மதுசூதனன் கட்டிலின் கீழிருந்து பட்டு உறையால் மூடப்பட்ட எஸ்ராஜ் வாத்தியத்தை எடுத்து அதன் உறையை நீக்கினான். யானைத்தந்தம் அமைத்த அவளுடைய பழைய எஸ்ராஜ்! பிறந்த வீட்டிலிருந்து வரும்போது அதை அங்கேயே வைத்துவிட்டு வந்திருந்தாள்.

"இப்போது சந்தோஷந்தானே? எனக்குச் சேர வேண்டியது எங்கே?" என்றான் மதுசூதனன். அவன் எவ்விதமான சம்மானம் விரும்புகிறானென்பது குமுதத்திற்குத் தெரியவில்லை. அவன் முகத்தைப் பார்த்தவண்ணம் நின்றிருந்தாள். "இதை எனக்கு வாசித்துக் காண்பி" என்று மதுசூதனன் சொன்னான்.

ஒன்றும் பிரமாதமில்லாவிட்டாலும் இது மிகவும் கஷ்டமான வேண்டுகோள். மதுசூதனன் மனத்தில்

சங்கீதஞானம் பெயருக்குக்கூடக் கிடையாது என்பது குமுதத்தின் அபிப்பிராயம். அவனெதிரில் எஸ்ராஜ் வாசிப்பதில் சங்கோசமுண்டாயிற்று. அச்சங்கோசத்தை விலக்குவது பிரயாச மாயிருந்தது. குமுதம் தலையைத் தொங்கவிட்டுக்கொண்டு எஸ்ராஜின் வில்லைப் புரட்டிக் கொண்டிருந்தாள்.

"வாசிக்கமாட்டாயா குமு? என்னிடம் உனக்கென்ன வெட்கம்?" என்றான்.

"சுருதி சரியாயில்லை" என்றாள் குமுதம்.

"உன் மனத்தில் சுருதி சரியாயில்லை என்று சொல்லேன்."

அவன் சொன்னது உண்மையே. குமுதத்தின் உள்ளத்தில் அது சுரீரென்று பட்டது. "முதலில் இதைச் சரிப்படுத்திக்கொள்கிறேன். பிறகு இன்னொருநாள் வாசித்துக் காண்பிக்கிறேன்" என்றாள்.

"எப்போது வாசித்துக் காண்பிப்பாய்? சரியாகச் சொல்; நாளைக்கு—?"

"உம், நாளைக்கு—"

"சாயங்காலம் ஆபீஸிலிருந்து வந்தவுடன்—?"

"ஆகட்டும்."

"எஸ்ராஜ் வந்ததுபற்றி, சந்தோஷந்தானே?"

"ஆமாம், நிரம்பச் சந்தோஷந்தான்.

மதுசூதனன் தன் அங்கவஸ்திரத்தினுள்ளிருந்து ஒரு தோற்பெட்டியை எடுத்து, "உனக்காக ஒரு முத்து மாலை கொண்டுவந்திருக்கிறேன். அது உனக்கு அவ்வளவாகச் சந்தோஷமளிக்குமா?" என்று கேட்டான்.

இந்தமாதிரி சங்கடமான கேள்விகளை ஏனோ கேட்க வேண்டும்? குமுதம் மௌனமாய் உட்கார்ந்து எஸ்ராஜின் வில்லை ஆட்டிக்கொண்டிருந்தாள்.

"மனு அங்கீகரிக்கப்படவில்லை என்பது தெரிகிறது."

குமுதத்திற்கு அதன் அர்த்தம் விளங்கவில்லை.

"உன் இதயத்தில் என்னுடைய அந்தரங்கமான கோரிக்கையைச் சொல்லலாமென்று ஆசைப்பட்டேன். ஆனால் அதற்கு முன்னேயே என் விஷயம் டிஸ்மிஸ் செய்யப்பட்டிருக்கிறது."

குமுதத்தின் எதிரில் மேஜைமேல் நகை திறந்து கிடந்தது. இருவரும் ஒன்றும் சொல்லாமல் மௌனமாய் உட்கார்ந்திருந்தனர். அடிக்கடி தன்னை மறந்து கனவில் ஆழ்ந்துவிடுவதுபோல் அவள் இப்போதும் சுவப்ன லோகத்தில் ஐக்யமாயிருந்தாள்.

சிறிது நேரம் பொறுத்துத் திடீரென்று பிரஜ்ஞை பெற்றவள்போலக் குமுதம் அந்த மாலையை எடுத்துத் தன் கழுத்தில் போட்டுக்கொண்டு மதுசூதனனை நமஸ்கரித்தாள்; "நான் பாடுகிறேன் கேட்கிறீர்களா?" என வினவினாள்.

"உம், கேட்கிறேன்" என்றான் மதுசூதனன்.

"இதோ பாடுகிறேன்" என்று சொல்லிக் குமுதம் எஸ்ராஜின் சுருதியைக் கூட்டினாள். கேதார ராகத்தில் ஆலாபனத்தை ஆரம்பித்தாள். அறையில் வேறு யாராவது இருக்கிறார்களா வென்பதைக் கூட மறந்துபோனாள். கேதாரத்திலிருந்து சாயா நாட்டைக்கு மாறிற்று, இசையின் மூர்ச்சனை. அவளுக்குப் பிடித்த, "வாள்போல் உருவி நில்லாய் (என்) கண்முன் வந்து" என்ற பாட்டை வாசித்தாள்.

பாட்டினில் கண்டறிந்து இதயத்தின் மூலமாகப்பெற்ற அந்தத் திவ்யத்தோற்றம் ஸ்வர ஆகாயத்தில் பல வர்ணங்களைத் தீட்டிச் சென்றது. ஆனால் அதை நேரில் காண வேண்டுமென்ற ஓர் தீராத ஆவலே என்றும் அவளுக்கு இருந்தது.

மதுசூதனன் சங்கீதத்தின் சுவையையே அறியாதவன். ஆனால் உலகத்தையே மறந்திருக்கும் குமுதத்தின் வதனத்தின்முன் விளையாடும் இன்னிசையும் எஸ்ராஜின் ஸ்வரக் கட்டில் விரல்கள் பட்டுக் குதித்தெழும் சந்தமும் அவன் மனத்தைக் கலக்கிவிட்டன. அவனுக்கு ஏதோ வரதானம் அளிப்பதுபோல் இருந்தது. மெய்மறந்து வாசித்துக்கொண்டிருக்கையில் குமுதம் சட்டென்று மதுசூதனன் தன்னையே கண்கொட்டாமல் பார்ப்பதைக் கவனித்தாள். உடனே அவள் கை நின்றுவிட்டது. வெட்கம் உண்டாகவே வாசிப்பதை நிறுத்திவிட்டாள்.

மதுசூதனனின் உள்ளத்தில் அன்பு நிறைந்து ததும்பியது.

“படோபஹூ, உனக்கு என்னவேண்டும்? சொல்” என்றான். அண்ணாவிற்குச் சிலநாள் சுச்ரூஷை செய்துவிட்டு வரவேண்டுமென்று குமுதம் சொல்லியிருந்தால் மதுசூதனன் அதற்குக் கூடச்சம்மதித்திருப்பான். சங்கீதத்தில் மயங்கியிருக்கும் அவள் முகத்தைப் பார்த்த அவன் அடிக்கடி தனக்குள், “வாஸ்தவந்தான். என் வீட்டிற்கு லக்ஷ்மியே வந்திருக்கிறாள். என்ன ஆச்சரியம்!” என்று வியந்து கொண்டிருந்தான்.

குமுதம் எஸ்ராஜைக் கீழே வைத்துவிட்டு மௌனமாய் உட்கார்ந்திருந்தாள்.

மதுசூதனன் மறுபடியும், "குமு, ஏதாவது என்னைக் கேள். நீ எது கேட்டாலும் கொடுக்கிறேன்" என்று வேண்டிக்கொள்ளும் பாவனையாய்ச் சொன்னான்.

"கிழவன் முராளிக்குக் குளிருக்காக ஒரு போர்வை கொடுக்கலாமா?"

ஒன்றும் வேண்டாம் என்று சொல்லியிருந்தால் இதைவிடத் தரமாயிருந்திருக்கும். கிழவன் முராளிக்குக் கம்பளியா! தலைக்குக் கிரீடத்தைக் கொடுக்கத் தயாராயிருக்கிறவனிடம் கால் ஜோட்டின் நாடாவையா யாசிப்பது?

மதுசூதனனுக்கு வேலைக்காரன்மேல் கோபமுண்டாயிற்று; "தரித்திரம் பிடித்த முராளி உன்னைத் தொந்தரவு பண்ணினானா?" என்று கேட்டான்.

"இல்லை. நானே வலுவில் என்போர்வையைக் கொடுத்தேன். அவன் வாங்கிக்கொள்ளமாட்டேனென்று சொல்லிவிட்டான். நீங்கள் உத்தரவு கொடுத்தால் அவன் வாங்கிக் கொள்வான்."

மதுசூதனன் சிறிது மௌனமாயிருந்துவிட்டுப் பிறகு, "பிச்சையளிக்க விரும்புகிறாயா? எங்கே உன்போர்வை?" என்று கேட்டான்.

குமுதம் தன்னுடைய பழைய பாதாமிவர்ணப் போர்வையைக் கொண்டுவந்து கொடுத்தாள். மதுசூதனன் அதை வாங்கித் தானே போர்த்திக்கொண்டான். மேஜை மேலிருந்த ஒரு சின்ன மணியை அடிக்கவே ஒரு வேலைக்காரக் கிழவி வந்தாள்; "முராளியை அனுப்பு" என்று அவளிடம் சொன்னான்.

முராளி வந்து கைகூப்பி நின்றான். குளிர் பயம் இரண்டும் சேர்ந்ததால் அவன் கைகள் நடுங்கின.

"உன் எஜமானி அம்மாள் உனக்கு இனும் கொடுக்கிறாள்" என்று சொல்லித் தன் ஜேபியிலிருந்த பாக்கெட் கேஸைத் திறந்து ஒரு நூறுரூபாய் நோட்டை எடுத்து மடிப்பைப் பிரித்துக் குமுதத்தின் கையில் கொடுத்தான். மதுசூதனன் ஆயுட்காலத்தில் காரணமில்லாமலும் கேட்கப்படாமலும் வேலையாளுக்கு இனும் கொடுப்பது இதுவே முதன்முறை. இந்த அசம்பாவிதச் செய்கையைக் கண்டு முரளி இன்னும் அதிகம் பயந்தவனாய்ச் சங்கடத்தில் அகப்பட்டு, குரல் நடுங்க, "எசமான்—" என்றான்.

"எசமான் என்னடா, மடையா! அம்மா கொடுப்பதை வாங்கிக்கொள். இந்த ரூபாயைக்கொண்டு உன் இஷ்டப்படிக் கம்பளி வாங்கிக்கொள்ள வேண்டும்."

விஷயம் இதனுடன் முடிந்தது. அன்றைத்தினத்திய இதர விஷயங்களும் இத்துடன் முடிந்துவிட்ட மாதிரி இருந்தன. குமுதத்தின் மனம் எந்தப் பிரவாகத்தில் மிதந்து சென்றுகொண்டிருந்ததோ அது சட்டென்று அடைபட்டுவிட்டது.

குறுகிய புத்தியையும் மீறிப் பொங்கியெழுந்த மதுசூதனனின் தியாக உணர்ச்சி, கேவலம் ஒரு வேலைக்காரனுக்காகக் குமுதினி யாசித்த வேண்டுகோளைப் பூர்த்தி செய்யும்வரை வந்து நின்று மீண்டும் ஆழத்தில் இறங்கி விட்டது.

இனி முன்போல் சாதாரணப் பேச்சுப் பேசுவது இருவருக்கும் இயலாதது. நிலம் வாங்குவதைப்பற்றிப் பேசுவதற்காகச் சிலர் வந்து சாயங்காலம்முதல் ஆபீஸ் அறையில் உட்கார்ந்திருந்தனர். அதை மதுசூதனன் அடியோடு மறந்துபோயிருந்தான். இப்போது திடீரென்று அது ஞாபகம் வரவே, தன்னை நொந்துகொண்டான். சட்

டென்று எழுந்து நின்று, "சிறிது வேலையிருக்கிறது, போகிறேன்" என்று சொல்லி வேகமாய்ப்போய்விட்டான்.

போகுங்கால் சியாமசுந்தரியின் அறைக்கு எதிரே வந்ததும் சற்று உரத்த குரலில், "உள்ளே இருக்கிறாயா?" என்று கேட்டான்.

சியாமா இன்று சாப்பிடவில்லை. போர்த்திக்கொண்டு ஒரு பாயின்மேல் குப்புறப் படுத்திருந்தாள்.

மதுசூதனன் குரலைக் கேட்டதும் சியாமா எழுந்து ஓடிவந்து, "என்ன?" என்று கேட்டாள்.

"எனக்கு வெற்றிலை கொடுக்கவில்லையே!"

---

## 44

வெளியே இருட்டில் கதவோரம் மௌனமாய் ஓர் உருவம் இதுவரை நின்றுகொண்டிருந்தது. அது மோதி. அவனுக்கு மதுசூதனனைக்காணும்போது யமனைக் காண்பது போலப் பயமிருந்தாலும் மரப்பாவைபோல அசையாமல் நின்றிருந்தான். என்ன தைர்யம்! அன்று பெரியப்பாவிடம் வசவுகேட்டபின் அவன் பெரியம்மாவைப் பார்க்க வரவேயில்லை. ஆனால் அவனுடைய மனத்திற்குள் ஆவல் மட்டும் இருந்தது. இன்று இவ்விதம் இரவுவேளையில் இங்கே வருவது மிக ஆபத்துக்கிடமான விஷயமே. ஒருகால் பெரியப்பாவைச் சந்திக்க நேரிடலாம். இருந்தும் அவன் தாயார் அவனைத் தூங்குவதற்காகப் படுக்கவைத்து விட்டு ஏதோ வேலையாய்ப் போனதும் அவன் காதில் எஸ்ராஜ் வாசிக்கும் சப்தம் கேட்டது. யார் வாசிக்கிறார்கள், என்ன வாசிக்கிறார்கள் என்பது அவனுக்கு விளங்கவில்லை. ஆனால் பெரியம்மா அறையில்தான் அது வாசிக்கப்படு

கிறது; இது நிச்சயம். பெரியப்பா அங்கே இருக்கமாட்டாரென்பது அவனுக்குத் திண்ணம். ஏனென்றால் பெரியப்பா எதிரில் பாடக்கூடிய தைரியம் ஒருவருக்கும் இராதென்பது அவன் எண்ணம். மாடிக்குச் சென்று அறையின் கதவை யடைந்ததும் அங்கே வெளியில் பெரியப்பாவின் செருப்பு வைத்திருப்பதைப் பார்த்துவிட்டு உடனே ஓட்டம்பிடிக்க எத்தனித்தான். ஆனால் பெரியம்மா வாசிக்கிறாளென்று தெரிந்தது. அவனால் அங்கிருந்து போக முடியவில்லை. கதவண்டை ஒளிந்துநின்று கேட்டுக்கொண்டிருந்தான். பெரியம்மாவிடம் அவனுக்கு உண்டான ஆச்சரியத்திற்கு எல்லையில்லை. பெரியப்பா வெளியே சென்றதும் அவனால் இருக்கமுடியவில்லை. அறைக்குள் நுழைந்து குமுதத்தின் மடியில் உட்கார்ந்து அவள் கழுத்தைக் கட்டிக்கொண்டு காதருகில் வாயை வைத்து, "பெரியம்மா!" என்றான்.

குமுதம் அவனை மார்போடு அணைத்து, "அட, இது என்ன! உன் கைகள் இவ்வளவு ஜில்லிட்டு இருக்கிறதே! குளிர்காற்றில் திரிந்துகொண்டிருந்தாயா?" என்று கேட்டாள்.

மோதி பதில் சொல்லவில்லை. பெரியம்மா தன்னைப் படுத்துத் தூங்கப்போகும்படிச் சொல்லப் போகிறாளே என்று அவனுக்குப் பயம் உண்டாயிற்று. குமுதம் அவனைப் போர்வையால் மூடித் தன் தேகத்துடன் அணைத்துக்கொண்டு, "இன்னும் தூங்கப் போகவில்லையா? கோபாலா!" என்று கேட்டாள்.

"நீ வாசிப்பதைக் கேட்க வந்தேன். எப்படி வாசிக்கிறாய், பெரியம்மா?" என்று கேட்டான்.

"கற்றுக்கொண்டால் நீயும் வாசிக்கலாம்."

"எனக்குக் கற்றுக்கொடுப்பாயா?"

இதற்குள் அவன் தாயார் சூறுவளியைப் போல் வந்தாள். அறைக்குள் நுழையும்போதே, "திருட்டுப் பயலே. இங்கேயா ஒளிந்துகொண்டிருக்கிறாய்? உன்னை எங்கெல்லாம் தேடித் தவிக்கிறேன்! சாயங்காலமாய்விட்டால் உள்ளேவிட்டு வெளியே வருவதற்குக்கூட நடுங்குவாயே. இப்போது பெரியம்மா உள்ளுக்கு வருவதற்கு மாத்திரம் பயமில்லையா? போ. தூங்கப்போ" என்றாள்.

மோதி குமுதத்தைக் கெட்டியாய்ப் பிடித்துக்கொண்டு நின்றான்.

"சற்று இருக்கட்டுமே; விட்டு வை" என்றாள் குமுதம்.

"இப்படி அவனுக்கு இடங்கொடுத்தால் பிறகு பிடிவாதம் அதிகமாய்விடும், மன்னி. அவனைத் தூங்கச் செய்துவிட்டு வருகிறேன்."

குழந்தைக்குப் பக்ஷணமோ, விளையாட்டுச் சாமானோ ஏதாகிலும் கொடுக்க வேண்டுமென்று குமுதத்திற்கு விருப்பமாயிருந்தது. ஆனால் கொடுக்கத் தகுந்ததாய் ஒன்றுமில்லை. ஆகையால் அவனை முத்தமிட்டுவிட்டு, "இப்போது போய்த் தூங்கிவிடு; என் செல்லமாச்சே. நாளைக்குப் பாடிக் காண்பிக்கிறேன்" என்றாள்.

அவன் தன் முகத்தைப் பரிதாபகரமாய் வைத்துக் கொண்டு தாயுடன் படுக்கச் சென்றான்.

சிறிதுநேரம் கழித்து நிஸ்தாரிணி திரும்பி வந்தாள். நவீனன் செய்த சூழ்ச்சி பலித்ததா வென்பதை அறிய அவளுக்கு ஆவலாயிருந்தது. குமுதத்தின் பக்கத்தில் உட்கார்ந்ததும் அவள் கைவிரலிலிருந்த நீலமோதிரம் கண்ணில் பட்டது. காரியம் பலித்ததென்று அறிந்து

கொண்டாள். பேச்சைத் தொடங்குவதற்காக, "மன்னி, இந்த எஸ்ராஜ் எப்படிக் கிடைத்தது?" என்று கேட்டாள்.

"அண்ணு அனுப்பினுர்."

"மைத்துனர் கொண்டுவந்து கொடுத்தாரா?"

"ஆமாம்" என்று குமுதம் சுருக்கமாய் விடையளித்தாள்.

குமுதத்தின் முகத்தில் ஸந்தோஷமாகிலும் ஆச்சர்யமாகிலும் இருக்கிறதாவென்று நிஸ்தாரிணி ஆராய்ந்து பார்த்தாள். ஒன்றும் தெரியவில்லை.

"உங்கள் அண்ணுவைப்பற்றி நீங்கள் ஒன்றும் கேட்கவில்லையா?"

"இல்லை."

"நாளைக்கு மறுநாள் அவர் வருவாரே. அவரிடம் போவதைப்பற்றி ஒன்றும் பேசவில்லையா?"

"இல்லை, அண்ணுவைப்பற்றி ஒன்றுமே பேசவில்லை."

"நீங்கள் வலுவில் சொல்வதற்கென்ன, மன்னி?"

"அவரிடமிருந்து வேறு ஏதாகிலும் கேட்டாலும் கேட்பேன்; இதைமட்டும் கேட்க முடியாது."

"நீங்கள் ஒன்றும் கேட்கவேண்டியதில்லை, மன்னி. போகிறேன் என்று சொன்னுல் மைத்துனர் ஆக்ஷேபிக்க மாட்டார்."

மதுசூதனன் பிரியத்துடன் நடந்துகொள்வது குமுதத்திற்குச் சங்கடத்தையே உண்டாக்குகிறதென்பதை நிஸ்தாரிணி இன்னும் அறியவில்லை. அவன் அவ்விதம் இருந்துகொண்டு பிரதிபலனுய் எதை விரும்புகிறுனே அதைக் குமுதத்தால் அளிக்க முடியவில்லை. அவனுடைய

இதயத்தில் அன்பு வற்றி உலர்ந்துவிட்டது. ஆகையால் மதுசூதனனிடமிருந்து தானம் வாங்கிக்கொண்டு கடனை அதிகப்படுத்துவதில் குமுதத்திற்கு வெட்கமுண்டாயிற்று. அண்ணு சிலநாள் கழித்து வந்தால்கூடத் தேவலை யென்ற எண்ணம் குமுதத்திற்கு உண்டாயிற்று.

சிறிது பொறுத்து நிஸ்தாரிணி, "இன்று மைத்துனர் மிகப் பிரசந்நமாக இருக்கிறமாதிரி தோன்றுகிறது" என்றுள்.

தன் மனத்திலெழும் சந்தேகத்தால் மிகுந்த கலக்கமடைந்த கண்களுடன் குமுதினி நிஸ்தாரிணியைப் பார்த்து, "எதனுல் இவ்விதம் பிரசந்ந மாயிருக்கிறுரென்பது எனக்கு ஒன்றும் தெரியவில்லை. அதனுலேயே பயமாயிருக்கிறது. என்ன செய்வது? ஒன்றும் தோன்றவில்லை" என்றுள்.

குமுதினியின் தாடையைப் பிடித்துக்கொண்டு நிஸ்தாரிணி, "ஒன்றும் செய்யவேண்டாம். இவ்வளவு நாட்கள் அவர் வியாபாரத்தில் ஈடுபட்டிருந்தார். உங்களைப் போன்றவர்களைப் பார்த்ததுகூடக் கிடையாது. இப்போது உங்களைப்பற்றி நன்றுகத் தெரியவே, உங்கள்மேல் பிரியம் அதிகமாகிறது. அதுகூட உங்களுக்குத் தெரியவில்லையா!" என்று ஆதரவாய்ச் சொன்னுள்.

"அதிகம் பழகுவதால் அதிகம் தெரிந்துகொள்ளும்படி என்னிடம் ஒன்றுமில்லையே, அம்மா. நானேதான் பார்க்கிறேன்: என் உள்ளம் சூந்யமாயிருக்கிறது. அந்த சூந்யமே நாளுக்குநாள் அதிகமாய் வெளித்தெரிகிறது. ஆகையால் அவர் சந்தோஷமாயிருப்பதைப் பார்த்தால் அவர் ஏமாந்து போயிருக்கிருர் என்பது தெரிகிறது. என்

அசக்தி வெளிப்பட்டதும் அவர் இன்னும் அதிகமாய்க் கோபிப்பார்."

"உங்கள் மதிப்பைப்பற்றி உங்களுக்கு என்ன தெரியும், மன்னி? அவர் வீட்டிற்கு நீங்கள் வந்ததே அதிகம். அதற்குப் பிரதியாய் அவர் எவ்வளவு கொடுத்தாலும் தகும். உங்கள் மைத்துனர் உங்களுக்காகச் சமுத்திர லங்கனம் செய்வதற்கும் தயாராயிருக்கிறார். உங்கள்மேல் எனக்கும் பிரியமில்லாவிட்டால், இதுபற்றி அவருக்கும் எனக்கும் சண்டை உண்டாகும்."

குமுதம் சிரித்துவிட்டு, "எனக்கு இந்தமாதிரி மைத்துனர் கிடைத்திருப்பது அதிர்ஷ்டமே" என்றாள்.

"அந்த மைத்துனருக்கு இந்தமாதிரி மனைவி கிடைத்திருப்பது உங்கள் பாக்கிய ஸ்தானத்தில் ராகு அல்லது கேது போலவா?"

"உங்கள் இருவரில் ஒருவர் பெயரைச் சொன்னாலும் இருவரும் என்றே அர்த்தமாகும். மற்றொருவர் பெயரைச் சொல்லவேண்டிய அவசியமேயில்லை."

நிஸ்தாரிணி தன் இடதுகையைக் குமுதத்தின் கழுத்தில் போட்டு, "உங்களிடம் ஒன்று கேட்கிறேன்" என்றாள்.

"என்ன, சொல்."

"உங்கள் மனத்திலிருப்பதை என்னோடு சொல்லுங்கள். நீங்கள் ஏன் இம்மாதிரி சோர்ந்துபோய் உட்கார்ந்திருக்கிறீர்கள்? எனக்கு அதன் காரணம் தெரியவில்லையே!"

சிறிது நேரம் குமுதம் நிஸ்தாரிணியைப் பார்த்தவண்ணம் உட்கார்ந்திருந்தாள். பிறகு, "நிஜத்தைச் சொல்லட்டுமா? எனக்கு என்னிடமே பயமுண்டாகியிருக்கிறது."

"இது என்ன வார்த்தை! தம்மிடமே எதற்கு ஒருவர் பயப்படுவது?"

"நான் எவ்விதம் இருப்பேனென்று எண்ணினேனே அந்தமாதிரி இல்லையென்பது எனக்கு இப்போது தெரிகிறது. என் மனத்தில் எல்லாம் தீர்மானித்துக் கொண்டு கவலையற்றவளாய் இங்கே வந்தேன். அண்ணு முதலியவர்கள் சந்தேகப்பட்டபோது நான் நிர்ப்பந்தம் செய்தேன். என் பிடிவாதத்தினுலேயே இந்தப் புதுவழியில் அவன் செல்ல ஆரம்பித்தான். ஆனுல் அப்போது தைர்யமாய் முன்வந்த ஆத்மா இப்போது எங்கேயோ மறைந்து விட்டது."

'உங்கள் மனம் காதல்கொள்ள விரும்பவில்லை. இருக்கட்டும். என்னிடம் ஒளிக்காமல் சொல்லுங்கள். யாரிடமாவது நீங்கள் அன்பு கொண்டிருக்கிறீர்களா? காதல் என்ருல் என்னவென்று உங்களுக்குத் தெரியுமா?'

"தெரியும் என்று சொன்னுல் நீ சிரிப்பாய். சூர்யோதயத்திற்கு முன் எவ்வித வெளிச்சம் பரவுகிறதோ அவ்விதமே என் உள்ளத்தின் ஆகாயத்தைக் காதல் ரகாசிக்கச்பி செய்தது. ஒவ்வொரு க்ஷணமும் சூர்யன் இதோ உதயமாவான் என்றே தோன்றிற்று. அந்தச் சூர்யோதயமாகுமென்று நம்பிக்கொண்டு நான் அர்க்கியமும் தீர்த்தோதகமும் எடுத்துக்கொண்டு வந்தேன். நான் இவ்வளவு காலமாக ஆராதித்துவந்த தெய்வம் எனக்கு உற்சாகம் அளிப்பது போலிருந்தது. இருள் சூழ்ந்த இரவை இருளென்று நினைக்காமல் தன் காதலனை நாடிச் செல்லும் அபிசாரிகை போல நானும் வந்தேன். இப்போது வெளிச்சத்தில் கண்களைத் திறந்து பார்க்கும்போது என் உள்ளத்தில் ஒரு பொருளையும் வெளியில் வேருென்றையும் காண்

கிறேன். இனி ஒவ்வொரு வருஷமும் ஒவ்வொரு நாளும் எனக்கு எவ்விதம் கழியும்?"

"மைத்துனரின்மேல் சிறிதும் அன்புகொள்ள முடியாதென்று உங்களுக்குத் தோன்றுகிறதா?"

"அன்புகொள்ள என்றால் முடியும். எல்லா விஷயத்திலும் பூரண அன்புடன் நடந்துகொள்ளவேண்டுமென்ற பிரதிஜ்ஞையுடன் வந்தேன். அந்தச் சங்கல்பம் என் மனத்தில் முளைத்ததுமே உன் பெரிய மைத்துனர் அதைச் சின்னபின்ன மாக்கிவிட்டார். இப்போது எல்லா விஷயமும் எனக்குக் கொரோமாய் இருக்கிறது. என்னைத் துன்புறுத்துகிறது. என் சரீரத்தின் மேல்தோலை யாரோ உரித்து எடுத்துவிட்டமாதிரி இருக்கிறது. அதனால் நாலுபக்கத்திலிருந்தும் எல்லாம் என்னை முள்போலக் குத்தித் துளைக்கின்றன. எதைத் தொட்டாலும் அதன் ஸ்பர்சத்தினால் திடுக்கிடுகிறேன். இதற்குமேல் இனித் தோல் காய்ச்சிப்போனால் எல்லாம் பொறுத்துக்கொள்வது சகஜமாய்ப் போய்விடும். ஆனால் என் வாழ்க்கையில் இனி இன்பத்தை அநுபவிக்க முடியாது."

"அதை எப்படிச் சொல்லமுடியும்?"

"நன்றாகச் சொல்லலாம். இன்று என் மனத்தில் சிறிதாகிலும் மோகம் என்பதில்லை. என் வாழ்க்கை மிகத் தெளிவாய்த் தெரிகிறது. என்னை மறந்து இருக்கச் சிறிது மறைவிடம் எங்கும் இல்லை. மரணத்தைத் தவிரப் பெண்களுக்குத் தம்மை மீட்டுக்கொள்ள ஒருவழியும் இல்லையா? அவர்களின் இல்வாழ்க்கையை நிஷ்டூரமான பிரம்மா ஏன் இவ்வளவு நெருக்கமாக அமைத்திருக்கிறார்!"

இவ்வளவு ஆத்திரத்துடன் சொல்லப்படும் வார்த்தைகளைக் குமுதத்தின் வாயிலிருந்து நிஸ்தாரிணி இது

வரை கேட்டதில்லை. அதிலும் இன்று மைத்துனர் இவ்வளவு பிரியமாயிருக்கையில் இவள் இவ்விதம் பேசுவதைக் கேட்டு அவள் பயந்தாள். கொடியின் வேர் வெட்டுப் பட்டு விட்டதென்றும், தோட்டக்காரன் மேலேயிருந்து தண்ணீர்விட்டாலும் அதைத் தளிர்க்கச் செய்யமுடியாதென்றும் அவள் உணர்ந்துகொண்டாள்.

சற்றுப் பொறுத்துக் குமுதம், "கணவருக்குச் சிரத்தையுடன் ஆத்மசமர்ப்பணம் நான் செய்யாமலிருப்பது மகாபாபம் என்பது எனக்குத் தெரிகிறது. இந்தப் பாபங் கூட எனக்கு அவ்வளவாகப் பயத்தைத் தரவில்லை. சிரத்தையில்லாமல் நான் என்னை அர்ப்பணம் செய்து கொள்வதனால் வரும் அபவாதமே என்னைப் படுத்துகிறது" என்றுரைத்தாள்.

நிஸ்தாரிணி என்ன சொல்வதென்று ஒன்றும் தோன்றாமல் அசைவற்று உட்கார்ந்திருந்தாள். சற்று மௌனமாயிருந்துவிட்டுக் குமுதம், "நீ பாக்கியம் பண்ணியவள், அம்மா. எவ்வளவு புண்ணியம் பண்ணினாயோ மைத்துனர் மேல் இந்த மாதிரி முழு அந்தக்கரணத்துடன் அன்பு கொள்ள! முதலில் நான், காதல்கொள்வதென்பது மிகச் சுலபம் என்று நினைத்திருந்தேன். எல்லாப் பெண்களும் தத்தம் கணவரிடம் சகஜமாய்ப் பிரியம் கொள்ளுகிறார்கள் என்பது என் எண்ணம். பிரியம் கொள்வதே எல்லாவற்றையும்விடக் கஷ்டமென்று இப்போது தெரிகிறது. ஜன்மஜன்மாந்தரத் தவத்தினால்தான் அது கைகூடும். நிஜத்தைச் சொல்லம்மா: எல்லாப் பெண்களும் தங்கள் கணவரிடம் காதல்கொண்டிருக்கிறார்களா?"

நிஸ்தாரிணி சற்றுச் சிரித்து விட்டு, "காதல் இல்லாமலேயே நல்ல மனைவியாய் இருக்கமுடியாதா? அப்படி

இராவிட்டால் சம்சாரம் எப்படி நடக்கும்?" என்று கேட்டாள்.

"அந்த வழியை எனக்குக் காண்பி. மற்றவைகளைச் செய்யமுடியாவிட்டாலும், நல்ல மனைவியாயிருக்க முயலுவேன். அதிலேதான் அதிகப் புண்ணியம். அதுவே மிகக் கடினமான ஸாதனை."

"அதற்கும் வெளியிலிருந்து விக்நங்கள் வருகின்றன."

"நம் மனத்திலிருக்கும் திடத்தினால் அந்த விக்நங்களைத் தடுத்துக்கொள்ளலாம். நான் அவ்விதமே செய்யப் போகிறேன். ஒரு நாளும் தோல்வியடைய மாட்டேன்."

"உங்களால் முடியாவிட்டால் பின் வேறு யாரால் தான் முடியும்?"

மழை பலமாகக் கொட்டிற்று. காற்றடிக்கவே விளக்கின் கொழுந்து நின்று நின்று அசைந்தது. நனைந்திருக்கும் ஒரு நிசாசரப்புள் இறகை அடித்துக்கொண்டு வருவது போல் பெருங்காற்று அறையில் நுழைந்தது. குமுதத்தின் மனத்திலும் சரீரத்திலும் ஓர் நடுக்கமுண்டாயிற்று. "என் தெய்வத்தின் பெயரைச் சொல்வதால் எனக்கு இப்போது தெம்புண்டாவதில்லை. மந்திரத்தை ஜபிக்க உட்காருகிறேன்; ஆனால் என் மனம் முகத்தைத் திருப்பிக்கொள்கிறது. மந்திரத்தை உச்சரிக்க முடிவதில்லை. அதனாலேயே எனக்கு அதிக பயமாயிருக்கிறது" என்றாள்.

ஏதாவது சமயத்திற்குத் தகுந்த வார்த்தைகளைச் சொல்லிப் பொய்யாக ஆறுதல் சொல்ல நிஸ்தாரிணி விரும்பவில்லை. ஒன்றும் விடைசொல்லாமல் குமுதத்தை மார்போடு அணைத்துக்கொண்டாள். அப்போது வெளியிலிருந்து நவீனன் அவளைக் கூப்பிடும் குரல் கேட்டது.

குமுதம் முகம் மலர்ந்தவளாய், "வாருங்கள், வாருங்கள்" என்று கூப்பிட்டாள்.

"அந்திவேளையில் என் அறையில் திகழும் ஒளியைக் காணவில்லை. அதைத் தேடிக்கொண்டுதான் வந்தேன்" என்றான் நவீனன்.

"பாவம்! மாணிக்கத்தை இழந்த பாம்பைப் பார்க்க வேண்டுமென்றால் இதோ பாருங்கள், மன்னி" என்றாள் நிஸ்தாரிணி.

"யார் மாணிக்கம், யார் பாம்பு என்பது படம் எடுத்துச் சீறுவதிலிருந்தே தெரியவில்லையா, மன்னி?"

"என்னைச் சாக்ஷியாகப் போடாதீர்கள்."

"தெரியும். அந்தமாதிரிச் செய்தால் நான்தான் மோசம் போவேன்."

"காணாமற்போன உங்கள் பொருளை எடுத்துக் கொண்டுபோங்கள்; நான் தடைசெய்யவில்லை."

"காணாமற்போன பொருளைப்பற்றி அவருக்கு ஒரு கவலையுமில்லை, மன்னி. இந்தக் காரணத்தைக் கொண்டு பாதங்களைத் தரிசித்துவிட்டுப்போக வந்திருக்கிறார்" என்றாள் நிஸ்தாரிணி.

"அந்தமாதிரி செய்வது எதற்கோ? பாதங்களைத் தரிசிப்பது சுலபமாகவே எனக்குக் கிடைத்திருக்கிறது. எல்லாவற்றையும்விடக் கடினமானதைப் பெற யார்தான் தவம் செய்வார்கள்? அவை தாமாகவே அகப்பட்டுக் கொள்ளுகின்றன. உலகத்தில் என்னைவிடத் தகுதியானவர்கள் எவ்வளவோ பேர்கள் இருக்கிறார்கள். இருந்தும் இந்த அழகிய பாதத்தைத் தொட்டு நமஸ்கரிக்கும் அதிர்ஷ்டம் எனக்கே கிடைத்திருக்கிறது. மற்றவர்கள் அதைத் தொட முடியாது. அதற்குப் பிரதியாய் ஈடு

ஒன்றும் கொடுக்காமலேயே நவீனன் ஜன்மம் சாபல்ய மடைந்திருக்கிறது."

"ஓ ஹோஹோ! என்னென்னவோ சொல்கிறீர்களே!! உங்கள் என்ஸைக்ளோபீடியாவிலிருந்து ஒருகால்—"

"அந்தமாதிரி சொல்லாதீர்கள், மன்னி. 'பாத கமலங்கள்' என்பதற்கு என்ன அர்த்தம் என்பது அவர்களுக்கு எப்படித் தெரியும்? குறுகின அழுத்தமான ஜோட்டினுள் தங்கள் பெண்மணிகளின் பாதங்களை அந்தப்புரத்தில் இருப்பதுபோல அடைத்து வைத்திருக்கிறார்கள். இந்தப் பாதமகிமையைப்பற்றி என்ஸைக்ளோபீடியா எழுதியவர்களுக்கு என்ன தெரியும்? பதினான்கு வருஷத்திய வனவாசத்தையும் லக்ஷ்மணன் தன் தமையன் மனைவியின் பாதங்களைத் தரிசித்தே கழித்தான் என்பதன் அர்த்தம் நம்நாட்டு மைத்துனர்களுக்கல்லவோ தெரியும்? நீங்கள் புடைவையை இழுத்துக் கால்களை மூடிக்கொள்கிறீர்களா? நல்லது, அப்படியே செய்யுங்கள். எனக்கு அதைப்பற்றிக் கவலையில்லை. தாமரை மாலையில் மூடிக் கொள்கிறது. ஆனால் எப்போதுமா அப்படியே இருக்கிறது! பொழுது விடிந்ததும் மறுபடியும் மலர்கிறதல்லவா?"

"ஏனம்மா, இந்த மாதிரி யெல்லாம் ஸ்துதிசெய்து தான் மைத்துனர் உன்னை மயக்கிவிட்டாரா?" என்று குமுதம் நிஸ்தாரிணியைக் கேட்டாள்.

"கிடையவே கிடையாது, மன்னி. இனிமையான வார்த்தைகளை வீணுக்குபவரல்லர் அவர்."

"ஒருகால் ஸ்துதிசெய்ய அப்படி அவசிய மொன்றும் இல்லையோ?"

"மன்னி, பெண்களுக்குத் தங்களைப்பற்றிய ஸ்தோத்திர வார்த்தைகளைக் கேட்பதிலிருக்கும் ஆவல் அடங்குவதேயில்லை. அது அவர்களுக்கு அவசியம் வேண்டியிருக்கிறது. ஆனால் சிவனைப்போல் எனக்கு ஐந்து முகம் இல்லை. எனக்கு இருப்பது ஒரே வாய். அதைக்கொண்டு நான் செய்யும் முகஸ்துதி அம்மாளுக்குப் பழகிப்போய் விட்டது. அது இப்போது அவளுக்கு ரஸிப்பதேயில்லை."

அச்சமயம் கிழவன் முரளி வந்து நவீனனிடம், "மகாராசா ஆபீஸ் அறையில் உங்களை எதிர்பார்க்கிறாங்க" என்றான். அதைக்கேட்டு நவீனன் மனம் வாட்டமடைந்தது. இன்று மதுசூதனன் ஆபீஸிலிருந்து வந்ததும் நேரே மாடிக்கு வருவானென்று அவன் எதிர் பார்த்திருந்தான். படகு மறுபடியும் எங்கேயோ மணல்திட்டில் கரைதட்டிவிட்டது போலும்!

நவீனன் சென்ற பிறகு நிஸ்தாரிணி மெதுவாய்க் குமுதத்தினிடம், "இருந்தும், பெரிய மைத்துனர் உங்களிடம் அன்புகொண்டிருக்கிறார் என்பதும் ஞாபகமிருக்கட்டும்" என்றாள்.

"அதுவே எனக்கு ஆச்சரியமாயிருக்கிறது" என்றாள் குமுதம்.

"ஏன் அவ்விதம் சொல்கிறீர்கள்? உங்கள்மேல் அன்பு கொள்வது ஆச்சரியமா? அவர் என்ன கல்லால் செய்யப்பட்டவரா?"

"நான் அவருக்குத் தகுந்தவளல்லவே?"

"உங்களுக்குத் தகுந்த புருஷர் எங்கே யிருக்கிறார்?"

"அவர் சக்தி என்ன! கௌரவம் என்ன! எவ்வளவு கூர்மையான புத்தி! அவர் எவ்வளவோ பெரிய மனிதர்.

என்னிடமிருந்து அவர் என்ன பெறமுடியும்? நான் எவ்வளவு திறமையற்றவள் என்பது நான் இங்கே வந்த பிறகே எனக்கு நன்ருய்த் தெரிகிறது. அதனுலேயே அவர் பிரியமாயிருப்பது எனக்கு மிகவும் பயத்தை உண்டாக்கு கிறது. என்னிடமிருந்து ஒன்றும் அவருக்குக் கிடைக்க வில்லையே! இவ்வளவு பெரிய ஏமாற்றத்தை வைத்துக் கொண்டு நான் எப்படி அவருக்குத் தொண்டு செய்வது? நேற்று ராத்திரி உட்கார்ந்து இதைப்பற்றியே நான் யோசித்துக்கொண்டிருந்தேன். நான் ஒரு ஸ்டாம்பு ஒட்டாத கடிதம் போலவும், காசுகொடுத்து வாங்கினபின் உடைத்துப்பார்த்தால் உள்ளே ஒன்றுமில்லாத வெறும் உறையாக நான் இருப்பதுபோலவும் எனக்குத் தோன்று கிறது.''

''மன்னி, உங்கள் வார்த்தையைக் கேட்டால் எனக் குச் சிரிப்பு வருகிறது. மைத்துனர் பெரிய வியாபாரம் செய்கிருர். வியாபார விஷயத்தில் அவருக்கு நிகரானவர் ஒருவருமே இல்லை. இது எல்லாருக்கும் தெரிந்ததே. ஆனுல் நீங்கள் என்ன அவர் வியாபாரத்தில் மானேஜர்வேலை பார்க்க வந்து, அதற்குத் தகுந்த யோக்கியதை இல்லையே என்று அதைரியப்படுகிறீர்கள்! மைத்துனர் தம்மனத்தில் இருப்பதை ஒளிக்காமல் சொல்வதென்ருல், உங்களுக்குத் தாம் தகுந்தவரல்லர் என்றே நிச்சயமாகச் சொல்வார்.''

''அதை அவர் என்னிடம் சொன்னுர்.''

''உங்களுக்கு அதில் நம்பிக்கை யில்லையல்லவா?''

''இல்லை. எனக்கு நேர் விரோதமாகவே எண்ணம் உண்டாகியிருக்கிறது. அவர் என் விஷயத்தில் தப்பிதமாய் எண்ணியிருக்கிருர். அந்தத் தவறு ஒருநாள் இல்லாவிடில் ஒருநாள் வெளியாகிவிடும்.''

"ஏன் உங்களுக்கு அவ்விதம் தோன்றுகிறது? சொல்லுங்கள்."

"சொல்லட்டுமா? திடீரென்று நடந்த என் விவாகத்தை நிச்சயம் செய்து நடத்திக்கொண்டது நானே. ஆனால் அந்தச்சமயம் எனக்கு இருந்த மயக்கத்தையும் அறியாமையையும் எப்படிச் சொல்வது? என்னை அப்போது இந்தக் காரியத்தைச் செய்யும்படித் தூண்டின விஷயம் ஒரு முழு மோசமான எண்ணமே. ஆனால் எனக்கு இருந்த திடமான நம்பிக்கையையும் பிடிவாதத்தையும் ஒருவராலும் அசைக்க முடியவில்லை. அண்ணாவிற்கு என் மனத்தை மாற்ற முடியாதென்பது தெரியும். ஆகையால் வீணாய் ஒருவிதத் தடங்கலும் சொல்லவில்லை. ஆனால் அவர் எவ்வளவு பயத்துடனும் கவலையுடனும் இருந்தாரென்பது எனக்குத் தெரியாதா! தெரிந்திருந்தும் என் பிடிவாதத்தை நான் விடவில்லை. அவ்வளவு பெரிய முட்டாள் நான்! இன்று முதல் என்றைக்கும் நான் கஷ்டமே அநுபவிக்கப்போகிறேன். தவிர ஒவ்வொருநாளும் இவையெல்லாம் நானாகவே செய்துகொண்டவையென்பதும் மனத்தில் பட்டுக்கொண்டே யிருக்கும்."

இதற்கு விடை என்ன சொல்வதென்று நிஸ்தாரிணிக்குத் தெரியவில்லை. சற்றுப் பேசாமலிருந்துவிட்டு, "இருக்கட்டும், மன்னி. என்ன நினைத்து நீங்கள் கலியாணம் செய்துகொண்டீர்கள்?" என்று கேட்டாள்.

"கணவன் எப்படியிருந்தபோதிலும் நம்முடைய பதிவ்ரதாத்தன்மையைக் கடைப்பிடிக்க அவர் ஒருசாதனமே தவிர வேறில்லை என்ற நிச்சயமான எண்ணம் எனக்கு அப்போதிருந்தது. பிரம்மா எந்தமாதிரியான கணவரை விதித்திருந்தாலும் அவரிடம் நான் அன்பு கொள்ளக்கூடு

மென்ற விஷயத்தில் எனக்குச் சிறிதும் சந்தேகமே இல்லை. சிறுவயது முதல் நான் அம்மாவை மாத்திரமே பார்த்திருக்கிறேன். நான் படித்த கதைகளிலிருந்தும் புராணங்களிலிருந்தும் சாஸ்திர வழிப்படி நடப்பது நிரம்பச் சுலபம் என்றே எனக்குத் தோன்றியது."

"மன்னி, பத்தொன்பது வயதுக் கன்னிகைக்காகச் சாஸ்திரம் எழுதப்படவில்லை."

"வாழ்க்கையில் அன்பு கொள்வதென்பது அப்புறம் மேற்கொண்டு வரும் ஓர் அநுபவமென்றே இன்று எனக்குத் தோன்றுகிறது. அதைத் தனியாய் வைத்துவிட்டுத் தர்மத்தையே கைப்பிடித்துச் சம்சாரசாகரத்தில் மிதக்க வேண்டும். தர்மம் என்பது இனிமையாக இருந்து நமக்குப் புஷ்பமும் பழமும் கொடுக்காவிட்டாலும், ஆழ்ந்த ஜலத்தில் மூழ்கிவிடாமல் நம்மை மிதக்கச் செய்கிறதல்லவா?"

மோதியின் தாய் தான் ஒன்றும் சொல்லாமல் குமுதத்தையே தன் மனத்திலிருப்பவைகளை யெல்லாம் திறந்து சொல்லும்படிச் செய்து கேட்டுக்கொண்டிருந்தாள்.

---

## 45

மதுசூதனன் ஆபீஸ் சென்று விசாரித்த சமயம் அங்கே நல்ல செய்தி கிடைக்கவில்லை. அவன் கம்பெனியுடன் வியாபாரங்கள் செய்துவந்த சென்னை பாங்கி ஒன்று திவாலாகிவிட்டது. சில டைரக்டர்களின் பக்ஷமாகக் குமாஸ்தாக்கள் மதுசூதனனுக்குத் தகவல் சொல்லாமலேயே அவனுடைய கணக்குப் புஸ்தகங்களைப் புரட்டுகிறார்கள் என்ற செய்தி காதில்பட்டது. இதுவரை அவனைப்

பற்றிச் சந்தேகிப்பதற்குக்கூட ஒருவருக்கும் தைரியம் இல்லை. இப்போது யாரோ திடீரென்று அவனைச் சுற்றி யிருந்த ஓர் மந்திர சக்தியை அகற்றிவிட்டமாதிரி இருந் தது. பெரிய காரியங்களில் சிறிய சிறிய குற்றங்களைக் கண்டுபிடிப்பது எளிது. ஜயகாலத்தில் சேனாதிபதி யாக இருக்கிறவன் சில்லரை விஷயங்களில் தோல்வி யடைவதைப் பொருட்படுத்தாமல் துணிந்தே பெரிய ஜயத்தை அடைகிறான். மதுசூதனன் எப்போதும் இவ்வித வெற்றியையே அடைந்து வந்தான். ஆகையால் அவ னுடைய பெரிய வெற்றியைக் கண்ட ஜனங்கள் அவன் சில்லரை விஷயங்களில் நடந்துகொள்வதைக் கவனித்த தில்லை. இருந்தும் அவனுடைய சிறிய வியவகாரங்களைப் பொறுக்கி எடுத்து ஒரு சாதாரண மனிதன் எதிரில் வைத் தால், அவன் தன்னுடைய சாமர்த்தியத்தைக் காட்டுவதற் காக, "இவ்விதத் தவறை நானாக இருந்தால் செய்தேயிருக்க மாட்டேன்" என்றே சொல்வான். அடியில் துவாரம் கொண்ட படகைக்கொண்டு மதுசூதனன் எதிர்க்கரையை அடைய விரும்பினது மட்டுமல்ல; உண்மையிலேயே அதை அடைந்துவிட்டான். இதை யார் அவர்களுக்கு எடுத்துச் சொல்வது? ஆனால் இப்போது அவனுடன் ஓர் ஆபத்து மின்றிக் கரையேறினவர்கள் படகில் ஏற்பட்ட ரந்திரங் களைச் சோதிக்கும் சமயம் தாங்கள் எவ்விதமான ஆபத் துக்களில் இருந்தோமென்று நினைத்து மயிர்க்கூச்சலடைந் தனர். இம்மாதிரி அற்பவிஷயங்களை வைத்துக்கொண்டு வியாபார விஷயமே அறியாதவர்கள் அவநம்பிக்கை கொள்வது சகஜம். சாதாரணமாய் அவ்விதமானவர்களுக் குத் தங்களுக்குக் கிடைக்கும் லாபத்தைப் பெறுவதில் இச்சையே தவிர, வியாபாரத்தை ஆராய்ந்து பார்க்க

விருப்பம் இராது. ஆனால் ஒவ்வொரு சமயம் அவர்கள் வியவகாரங்களை விசாரிக்க உட்கார்ந்தாலோ நிலைமை மிக எக்கச்சக்கமானதாய்விடுகிறது. இவ்விதம் விஷயமறியாத முட்டாள்களிடம் மதுசூதனனுக்கு அதிகக் கோபமே உண்டாகும். இருந்தும் இந்தமாதிரி முட்டாள்களின் தொகையே அதிகமாயிருப்பதால் அவர்களுக்குச் சமாதானம் சொல்வது அவசியமாயிருக்கிறது. உளுத்திருக்கும் ஏணி ஆடுகிறது. அது முறிந்து விழுமோ என்ற பயம் உண்டாகிறது. மேலே செல்பவன் ஏணியின் கால்கள் சரியாயிருக்கிறதா வென்று பார்த்துவிட்டு ஜாக்ரதையுடன் செல்லவேண்டியதாயிருக்கிறது. அதைப் பிளந்து விடலாமா வென்றுகூடக் கோபம் உண்டாகிறது. இருந்தும் அவ்விதம் செய்தால் அவனுடைய நிலைமை இன்னும் கஷ்டமாகத்தானே போய்விடும்!

தன் குட்டிகளுக்கு ஆபத்து நேரிடும்போலிருந்தால் பெண்சிங்கம் தன் வேட்டையைக்கூட மறந்துவிடுகிறது. இந்தமாதிரி ஒரு மனோநிலைமை வியாபாரவிஷயத்தில் மதுசூதனனுக்கு இருந்தது; இது அவனால் உண்டாக்கப்பட்டது. இதனிடம் அவனுக்கு இருக்கும் பாசம் கேவலம் ரூபாய்க்காகமாத்திரம் ஏற்பட்ட பாசம் அன்று. ஒரு புது விஷயத்தைச் சிருஷ்டிக்கும் சக்தியுள்ளவன், தான் சிருஷ்டித்திருக்கும் விஷயத்தில் தன்னையே அறிந்துகொள்கிறான். அவ்விதம் அறிந்துகொள்வதில் ஆபத்து நேரிடும் போலிருந்தால் வாழ்வில் தோன்றும் சுகமோ துக்கமோ ஆசையோ அவனுக்குத் துச்சமாகி விடுகின்றது. சில தினங்களாய்க் குமுதம் அவன் மனத்தைப் பலமாய்க் கவர்ந்திருந்தாள். அந்த ஆகர்ஷணம் இப்போது சட்டென்று விலகிவிட்டது. வாழ்க்கையில் காதலின் அவசியத்தைப் பற்றி மதுசூதனன் மிக வயதான பிறகே அதிக பலமாய்

உணரலானான். அந்த உணர்ச்சி அகாலத்தில் தோன்றினால் அது கட்டுக்கு அடங்காமல் போய்விடுகிறது. மதுசூதன னுக்கு மனத்தில் அதிர்ச்சி பலமாய் ஏற்பட்டிருந்தது. ஆனால் இன்று அவனுடைய வேதனை எங்கேயோ போய்விட்டதே!

நவீனன் அறைக்குள் நுழைந்ததும் மதுசூதனன், "என்னுடைய சொந்தச் செலவுகளின் கணக்கு வெளி ஆசாமி யார் கையிலாவது அகப்பட்டதா? உனக்குத் தெரியுமா?" என்று கேட்டான்.

"இதென்ன சங்கதி?" என்று நவீனன் திடுக்கிட் டான்.

"இதை விசாரி. கஜானுக்காரனிடம் யாராவது அதிக மாய்ப் பரிசயம் கொண்டாடுகிறார்களா வென்று தெரிந்து சொல்."

"ரதிகாந்தன் மிக்கநம்பிக்கையானவனாயிற்றே! அவன் என்ன—"

"அவன், தெரியாமல் யாராவது குமாஸ்தாக்களோடு பேசியிருக்கலாம். இதுவே சந்தேகத்திற்குக் காரணமா யிருக்கிறது. இதில் எவர்கள் தலையிட்டிருக்கிறார்களென் பதை மிக ஜாக்ரதையாய் விசாரிக்கவேண்டும்."

வேலையாள் வந்து போஜனம் ஜில்லிட்டுப்போகிற தென்றான். மதுசூதனன் அவன் சொன்னதைச் சிறிதும் பொருட்படுத்தாமல் நவீனனிடம், "சீக்கிரம் எனக்காக வண்டி தயார்ப்படுத்தச் சொல்" என்றான்.

"சாப்பிட்டுவிட்டுப் பிறகு போகலாமே! இரவு நிரம்ப நாழியாகிவிட்டதே!" என்றான் நவீனன்.

"வேலையிருக்கிறது. வெளியிலேயே எங்கேயாவது சாப்பிடுகிறேன்."

நவீனன் தலையைத் தொங்கவிட்டுக்கொண்டு ஏதோ சிந்தித்தவண்ணம் வெளியில் வந்தான். அவன் செய்த சூழ்ச்சியும் வெளிப்பட்டுவிடுமோ என்னவோ!

சட்டென்று மதுசூதனன் மறுபடி நவீனனைக் கூப்பிட்டு, "இந்தக் கடிதத்தைக் குமுதத்தினிடம் கொடு" என்றான்.

அது விப்ரதாவிடமிருந்து வந்த கடிதமென்று நவீனன் தெரிந்துகொண்டான். அன்று காலையிலேயே கடிதம் வந்திருக்கிறதென்பதையும் சாயங்காலமாய்க் குமுதத்தின் கையில் அதைத் தானே நேரில் கொடுக்க வேண்டுமென்று மதுசூதனன் நிறுத்தி வைத்துக்கொண்டிருக்கிறானென்பதையும் ஊகித்தான். இவ்விதம் ஒவ்வொரு முறை குமுதத்தைச் சந்திக்கும்போதும் கையில் ஏதாகிலும் காணிக்கை எடுத்துக்கொண்டு போகவேண்டுமென்பது அவன் விருப்பம். அன்று திடீரென்று ஆபீஸ் வேலையில் புயல் அடிக்க ஆரம்பிக்கவே இந்த அன்பின் அறிக்கை நடுவிலேயே நின்றுவிட்டது.

சென்னையில் தவறிப்போயிருக்கும் பாங்கியில் முன்பு ஜனங்கள் அதிக நம்பிக்கையே கொண்டிருந்தனர். அதனுடன் கோஷால கம்பெனிக்கு ஏற்பட்டிருந்த சம்பந்தத்தைப்பற்றி டைரக்டர்களுக்காவது பணம் போடுகிறவர்களுக்காவது சிறிதும் அவநம்பிக்கையே இல்லை. ஆனால் யந்திரத்தில் சற்றுப் பிசகு ஏற்பட்டதும் எல்லாரும், "எனக்கு முன்பே தெரியுமே" என்றெல்லாம் சொல்லலானார்கள்.

அழிக்கக்கூடியதோர் அதிர்ச்சிவரும் சமயம் எல்லோரும் ஒன்றுசேர்ந்து வியாபாரத்தைக் கைதூக்கிவிடுவது

அவசியம். ஆனால் அந்தச் சமயத்தில் அபஜயமடைந்த தைப்பற்றியே அவதூறு அதிகம் சொல்லிக்கொண்டு, யார் மேல் எல்லாருக்கும் அதிகம் பொறாமையோ அவனுடைய நாசத்தையே விரும்புவதனால், ஏற்கனவே நிலைகுலைந்த வியாபாரம் கவிழ்ந்துவிடுகிறது. மதராஸ் பாங்கி தவறி விட்டதால் கோஷால கம்பெனிக்கு ஏற்பட்டுள்ள நஷ்டம் எவ்வளவென்று திட்டமாகத் தெரிய இன்னும் சமயம் வர வில்லை. ஆனால் மதுசூதனன் மதிப்பைக் குறைக்க இது வும் ஓர் கருவியாக உபயோகப்படும். அதில் சந்தேக மில்லை. எவ்விதமிருந்தும் காலம் சரியாயில்லை. மற்ற எல்லா விஷயங்களையும் மறந்துவிட்டு இதிலேயே மது சூதனன் முனையவேண்டும்.

இரவு மதுசூதனனுடன் பேசிவிட்டு நவீனன் திரும்பிச் சென்றபோது குமுதமும் நிஸ்தாரிணியும் இன்னமும் பேசிக்கொண்டிருப்பதைக் கண்டான். "மன்னி, உங்க ளுக்கு ஒரு கடிதம் வந்திருக்கிறது" என்று நவீனன் சொன்னான்.

குமுதம் சட்டென்று எழுந்து கடிதத்தை வாங்கிக் கொண்டாள். அதைப் பிரிக்கும்போது கைகள் நடுங்கின. அதில் ஏதாகிலும் கவலைப்படும்விதமான விஷயம் இருக்கப் போகிறதே யென்ற பயமுண்டாயிற்று. ஒரு வேளை இப்போது வரமுடியவில்லையோ! மிகவும் தயக்கத்துடன் மேல் உறையைப் பிரித்துக் கடிதத்தைப் படித்தாள். பிறகு சற்று நேரம் மௌனமாயிருந்தாள். ஆனால் அவள் முகபாவனையிலிருந்து ஏதோ வருத்தம் மூண்டிருப்பது போல் தோன்றிற்று. நவீனனிடம், "அண்ணா இன்று மத்தியானம் மூன்று மணிக்குக் கல்கத்தா வந்துவிட்டார்" என்று சொன்னாள்.

"இன்றே வந்துவிட்டாரா?—அவருக்கு—"

"இரண்டுநாள் கழித்து வருவதாயிருந்தது. ஆனால் ஏதோ முக்கிய காரணத்தினால் முன்னாடியே வரவேண்டிய தாயிற்று என்று எழுதியிருக்கிறார்."

குமுதம் வேறொன்றும் சொல்லவில்லை. கடிதத்தின் கடைசியில், "உடம்பு சற்றுச் சௌக்கியமானதும் உன்னைப் பார்க்க வருகிறேன். அதற்காக எதிர்பார்த்துக் கவலைப் படவேண்டாம்" என்றிருந்தது. முந்தின கடிதத்திலும் இவ்விதமே எழுதியிருந்தது. ஏன்? என்ன நடந்துவிட்டது? அவள் என்ன அபராதம் செய்தாள்? இதற்கு அர்த்தம், "நீ என் வீட்டிற்கு வரவேண்டாம்" என்றல்லவோ ஏற்படுகிறது! தரையில் படுத்துப் புரண்டு கதற வேண்டும் போலக் குமுதத்தின் மனத்தில் துக்கம் பொங்கிற்று. அதை அடக்கிக்கொண்டு சிலைபோல் உட்கார்ந்திருந்தாள்.

கடிதத்தில் ஏதோ வருத்தமான விஷயம் இருக்கிறதென்று நவீனன் உணர்ந்தான். குமுதத்தின் முகத்தைப் பார்க்கவே அவன் மனம் மிக்க இரக்கங்கொண்டு வருந்திற்று; "மன்னி, நாளைக்கே அவரைப் பார்க்கப் போக வேண்டும்" என்றான்.

"மாட்டேன்; நான் போகமாட்டேன்" என்று சொல்வதற்குள் துக்கம் அடக்கமுடியாமற் போகவே இரண்டு கைகளாலும் முகத்தை மூடிக்கொண்டு அழலானாள்.

நிஸ்தாரிணி ஒரு கேள்வியும் கேட்காமல் குமுதத்தை மார்போடு அணைத்துக்கொண்டாள்; "அண்ணா என்னை வரவேண்டாமென்று சொல்லியிருக்கிறார்" என்று தழு தழுத்த குரலில் குமுதம் பிரலாபித்தாள்.

"இல்லை, இல்லை. மன்னி! நீங்கள் சரியாய்த் தெரிந்து கொண்டிருக்கமாட்டீர்கள்" என்று நவீனன் சொன்னான்.

குமுதம் வேகமாய்த் தலையை ஆட்டித் தான் தவறாக அர்த்தம் செய்துகொள்ளவில்லை என்பதைத் தெரிவித்தாள்.

"நீங்கள் ஏன் சரியாக அர்த்தம் தெரிந்துகொள்ள வில்லை தெரியுமா? எங்கள் அண்ணா உங்களை அங்கே அனுப்பச் சம்மதிக்கமாட்டாரென்று விப்ரதாஸ் பாபு நினைத்திருப்பார். ஆகையால் உங்களுக்கு ஏமாற்றம் ஏற்படக்கூடாதென்று அவர் உங்களைக் கூப்பிடவில்லை. பிற்பாடு உங்களுக்குக் கஷ்டம் ஏற்படக்கூடாது, உங்கள் மனம் நோவக்கூடாது என்ற கவலையினாலேயே, உங்களைக் காப்பதற்காக அவ்விதம் செய்திருக்கிறார்" என்றான் நவீனன்.

குமுதத்திற்குச் சட்டென்று மனச்சாந்தி ஏற்பட்டது. நீர்நிறைந்த இமைகளோடு நவீனனை நன்றியுடன் நோக்கினாள். நவீனன் சொல்வது முற்றும் உண்மை என்பதைப் பற்றி அவளுக்கு இப்போது சிறிதும் சந்தேகமேயில்லை. தன் தமையனின் அன்பைப்பற்றித் தான் தவறாக நினைத்துக் கொண்டதற்காகத் தன்னையே நொந்துகொண்டாள். அவள் உள்ளத்தில் ஒருவித பலம் ஏற்பட்டது. உடனே ஓடிப்போய் அண்ணாவைப் பார்ப்பதைவிட அவன் தன்னைக் காண வருவதை எதிர்பார்த்திருப்பதே நலம்.

மோதியின் தாய் குமுதத்தின் முகத்தைத் தூக்கி, "அட! அண்ணாவின் வார்த்தைகள் அரைகுறையாகப் புரிந்ததற்கு இவ்வளவு ரோஷம் பொங்கிவிட்டதே!" என்றாள்.

"மன்னி, நாளைக்கே நீங்கள் போவதற்கு ஏற்பாடு செய்யட்டுமா?" என்று நவீனன் கேட்டான்.

"வேண்டாம்; அதற்கு அவசியமில்லை."

"அவசியமில்லாமல் என்ன? உங்களுக்கு அவசியம் இல்லாவிட்டாலும் எனக்கு அவசியம் இருக்கிறது."

"உங்களுக்கு என்ன அவசியம்?"

"வெகு அழகு! எங்கள் அண்ணாவைப்பற்றி உங்கள் அண்ணா தம் இஷ்டப்படி நினைக்கும்படி விட்டுவிடுகிறதா? எங்கள் அண்ணாவின் சார்பாய் நான் அவருடன் சண்டை போடுவேன். நீங்கள் நாளைக்கு அங்கே போகத்தான் வேண்டும்."

குமுதினி சிரித்தாள்.

"மன்னி, இது வேடிக்கையல்ல. உங்கள் வீட்டிற்கு அபகீர்த்தி வந்தால் உங்கள் கௌரவமும் குறையும். நீங்கள் போய் முகத்தை அலம்பிக்கொள்ளுங்கள். சாப்பிட நேரமாய்விட்டது. அண்ணாவிற்கு இன்று மானேஜர் வீட்டிலிருந்து அழைப்பு வந்திருக்கிறது. ஒருகால் இன்று ராத்திரி படுத்துக்கொள்வதற்குக்கூட அந்தப் புரம் வரமாட்டார் என்று தோன்றுகிறது. வெளியறையிலேயே அவருக்குப் படுக்கை போடப்பட்டிருக்கிறது."

இந்தச் செய்தியைக் கேட்டுக் குமுதம் தனக்குள் திருப்தியையே அடைந்தாள்; அடுத்த க்ஷணமே தான் அவ்விதம் திருப்தியடைந்ததற்காக வெட்கினாள்.

இரவு படுக்கச் சென்ற சமயம் நவீனனும் அவன் மனைவியும் இதைப்பற்றிப் பேசிக்கொண்டார்கள்.

"நீங்கள் மன்னிக்கு ஆசையை எனனமவா காண பித்துவிட்டீர்கள். ஆனால் இப்போது?" என்று நிஸ் தாரிணி கேட்டாள்.

"ஆனால் இப்போது என்ன? நவீனன் சொல்வது ஒன்று; செய்வது வேறு? மன்னி அவசியம்போகவேண்டும். பிற்பாடு என்ன நடக்கிறதோ நடக்கட்டும்" என்றான் நவீனன்.

புதிதாய் ராஜபதவி பெற்றவர்களுக்குத் தங்கள் கௌரவத்தைப்பற்றி அதிக தீவ்ர அபிப்பிராயம் ஏற்பட்டு விடுகிறது. விவாகமான பிறகு தங்கள் மனைவி முன் இருந்ததை விட அதிக மேன்மையை அடைந்திருக்கிறுளென்றும் ஆகையால் பிறந்தகம் என்ற ஓர் அவகேடு இருக்கிற தென்பதையே அவள் மறந்துவிடுவது நலம் என்பதும் அந்த ராஜாக்களின் கொள்கை. இவ்வித நிலைமையில் இரு திறத்தாருக்கும் இஷ்டப்படி நடப்பது இயலாவிடினும் ஒருதிறத்தாருக்காவது திருப்தியளிக்கும்விதம் நடப்பது உசிதம். எந்தப் பக்கத்தாருக்குத் திருப்தியளிப்ப தென்பதைப்பற்றி நவீனன் தன் மனத்திற்குள் நிச்சயம் செய்துகொண்டான். சில நாட்களுக்கு முன்பாயிருந்தால் இவ்விதம் தன் தமையனுக்கே சர்வ அதிகாரமுள்ள இந்த விஷயத்தில் தமையனுடன் எதிர்த்து நிற்பதற்குத் தான் துணியக்கூடும் என்று நவீனன் கனவிலும் கருதியிருக்க மாட்டான்.

கணவனும் மனைவியுமாக யோசித்து மறுதினம் காலையில் குமுதம் ஒரு முறை விப்ரதாஸைப் போய்ப் பார்த்துவிட்டு வர அநுமதி கேட்பதென்று நிச்சயித்தார்கள். மதுசூதனன் சம்மதித்து அனுப்பினால் பிற்பாடு குமுதம் தன் தமையன் வீட்டிலேயே இரண்டு தினம் தங்கிவிட்டுவர

ஏதாகிலும் உபாயம் கிடைப்பது கஷ்டமல்லவென்று நவீனன் நினைத்தான்.

மதுசூதனன் இரவு வெகுநேரம் கழித்து வீடு வந்தான். கையில் காகிதக்கட்டுகள் இருந்தன. தமையன் வந்ததும் படுத்துக்கொள்ள ஏற்பாடு செய்யாமல், மூக்கில் கண்ணாடியை மாட்டிக்கொண்டு, கையில் நீலப் பென்ஸிலை எடுத்து ஆபீஸ் அறையில் தஸ்தவேஜிகளில் அடையாளம் செய்துகொண்டிருப்பதை நவீனன் கவனித்தான். நவீனன் தைர்யமாய் அறைக்குள் நுழைந்து, "அண்ணா! நானும் ஏதாவது காரியம் செய்து கொடுக்கட்டுமா?" என்று கேட்டான்.

மதுசூதனன் சுருக்கமாய், "வேண்டாம்" என்று சொன்னான். வியாபாரத்தில் ஏற்பட்டிருக்கும் இந்தச் சிக்கலைத் தானே தெளிவாகத் தெரிந்துகொள்ள மதுசூதனன் விரும்பினான். எல்லா விஷயத்திலும் அவன் கண்பார்வை இருக்கவேண்டும். இந்த வேலையில் பிறருடைய பார்வையின் உதவியைப் பெறுவது தனக்குப் பலவீனத்தை உண்டாக்கிக்கொள்வது போலாகும்.

மேலே ஏதாகிலும் சொல்வதற்கு நவீனனுக்குச் சந்தர்ப்பம் கிடைக்கவில்லையாகையால் திரும்பிச்சென்றான். சீக்கிரத்தில் அவ்விதச் சந்தர்ப்பம் கிட்டாதென்றும் அவனுக்குத் தோன்றியது. மறுதினம் காலையிலேயே மன்னியை அனுப்புவதென்று அவன் பிரதிஜ்ஞைசெய்து கொண்டிருந்தான். இன்றிரவே அதற்கு அநுமதி பெற்றாக வேண்டும்.

சிறிதுநேரம் கழித்து ஒரு விளக்கை எடுத்து அண்ணா மேஜையின்மேல் வைத்து நவீனன், "வெளிச்சம் மட்டாயிருக்கிறதே" என்றான்.

அந்த விளக்கு அவன் செய்யும் வேலைக்குச் சாதகமாயிருக்கிறதென்று மதுசூதனன் ஒப்புக்கொண்டான்; இருந்தும் இந்தக் காரணத்தினுற்கூட மேலே பேச்சுப் பேசமுடியவில்லை. நவீனன் மறுபடி வெளிச்செல்ல வேண்டியதாயிற்று.

சற்றுப்பொறுத்து நவீனன் ஹுக்கா தயாரித்து எடுத்துக்கொண்டு வந்து அதை மதசூதனனின் வழக்கப் படி அவனுடைய நாற்காலிக்கு வலது பக்கம் வைத்து மெதுவாய் அதன் குழாயை மேஜையின் மேல் வைத்தான். அதனுடைய அவசியத்தையும் மதுசூதனன் ஒப்புக் கொண்டான். ஒரு கணநேரத்திற்குப் பென்ஸிலை வைத்து விட்டு ஹுக்காக் குடிக்கலானுன்.

சந்தர்ப்பம் கிடைக்கவே நவீனன் பேச்சைத் தொடங்கினுன்; "அண்ணு, படுத்துக்கொள்ளப் போகவில்லையா? நிரம்ப நேரமாகிவிட்டதே. ராணி ஒரு வேளை உங்களுக்காகக் காத்துக்கொண்டிருப்பார்."

'காத்துக்கொண்டிருப்பார்.' இந்த வார்த்தை மதுசூதனன் உள்ளத்தில் சட்டென்று பதிந்தது. பெரிய அலைகளுக்கிடையில் கப்பல் ஆடித் தள்ளாடிச்சென்று கொண்டிருக்கையில் அதன் கொடிமரத்தின்மேல் ஒரு சிறிய நிலப்பறவை உட்கார்ந்தால், அலைக்கின்ற அக்கடலின் நடுவே ஒரு க்ஷணநேரம், பசுமையான தீவினுள் காட்டின் அடர்ந்த நிழலின் சித்திரம் மனக்கண்முன் எப்படித் தோன்றுமோ அப்படி யிருந்தது மதுசூதனனுக்கு இந்த வார்த்தை. ஆனுல் இவைகளிலெல்லாம் கவனத்தைச் செலுத்த இது சமயமல்ல. கப்பலை மேலே நடத்திச் செல்லவேண்டும்.

மதுசூதனன் தன் உள்ளத்தில் ஒருக்ஷணகாலம் ஏற்பட்ட இந்தச் சஞ்சலத்திற்கே பயந்துபோனான். அப்போதே அதை அடக்கிக்கொண்டு, "மன்னியைத் தூங்கப் போகச் சொல். நான் இன்று இங்கேயே படுத்துக் கொள்வேன் என்று சொல்" என்றான்.

"இல்லாவிடில் அவரையும் இங்கே அனுப்புகிறேன்" என்று ஹுக்காவின் நெருப்பை ஊதிக்கொண்டே நவீனன் சொன்னான்.

"வேண்டாம், வேண்டாம்" என்று பரபரப்புடன் மதுசூதனன் தடுத்தான்.

இவ்வளவு ஆனபோதிலும் நவீனன் விட்டுவிடவில்லை; "அவர் உங்களுடன் கலந்துபேசக் காத்துக்கொண்டிருக்கிறார்" என்றான்.

"கலந்து பேசுவதற்கெல்லாம் இப்போது சமயமில்லை."

"உங்களுக்கோ சாவகாசமில்லை. அதே மாதிரி அவருக்கும் தாமதிக்கச் சாவகாசமில்லை, அண்ணா."

"ஏன், என்ன?"

"விப்ரதாஸ் கல்கத்தா வந்திருக்கிறார் என்று செய்தி கிடைத்திருக்கிறது. ஆகையால் மன்னி நாளைக்காலை..."

"காலையில் போக விரும்புகிறாளா?"

"அதிக நாழியல்ல; ஒரே ஒருமுறை—"

மதுசூதனன் வேகமாய்க் கையை ஆட்டிவிட்டு, "அப்படியானால் போவதற்கென்ன? போகட்டுமே. இப்போது நீ போ" என்றான்.

உத்தரவு கிடைத்தவுடன் நவீனன் அங்கிருந்து ஓர் ஓட்டம் பிடித்தான். வெளியில் வந்ததுமே மதுசூதனன், "நவீன" என்று கூப்பிடுங்குரல் காதில் பட்டது.

அண்ணா உத்தரவைத் திருப்பி மீட்டுக்கொண்டு விடப்போகிறாரேயென்று அவனுக்குப் பயமுண்டாயிற்று. அறைக்குள் வந்துநின்றதும், "மன்னி இன்னும் சில தினங்களுக்கு அவளுடைய அண்ணா வீட்டிலேயே தங்கியிருப்பாள். அதற்கு நீ ஏற்பாடு செய்" என்றான்.

இந்தச் செய்தியைக் கேட்டதனால் எங்கே தன் மனத்தில் உண்டான சந்தோஷம் முகத்தில் வெளியாகித் தன் தமையனுக்குத் தெரிந்துவிடப்போகிறதேயென்று நவீனனுக்கு அச்சமுண்டாயிற்று. ஆகையால் அவன் மனத்தில் சந்தேகப்படுகிறவன் போலப் பாவனை காண்பித்துத் தலையைச்சொறிந்து கொண்டு, "மன்னி போய்விட்டால் வீடு வெறிச்சென் றிருக்குமே!" என்றான்.

மதுசூதனன் ஒன்றும் விடைசொல்லாமல் ஹுக்காக் குழாயை கீழே வைத்துவிட்டுத் தன் வேலையில் மூழ்ந்தான். அவன் மனத்தை வேலையிலிருந்து நீக்கிக் கவர்ந்து கொள்வதற்கு வழி அதுவரையில் திறந்திருந்தது. குமுதம் சிறிது காலம் சென்றிருந்தால் அது அடைபட்டுவிடும் என்று அவன் நினைத்தான்.

நவீனன் மிகச் சந்தோஷமாய்ச் சென்றான். மதுசூதனன் வேலையில் மூழ்ந்திருந்தான். தன் வேலையின் மேலுள்ள கவனத்துடன் நேர்மாறான இன்னொரு மனப்போக்குச் செல்வதை அவன் வெகுநேரம்வரை அறியவே இல்லை. நீலப் பென்ஸிலில் தன் வேலை முழுவதும் முடிவதற்கு முன்பே ராஜா எடுத்துக்கொண்டுவிட்டது. ஹுக்காவின் குழாய் அவன் வாயில் ஏறிற்று. பகலில் அவன் மனம் குமுதத்தை முற்றும் மறந்து வேலையில் பதிந்திருந்த சமயம் முன்போலத் தன் மனத்தை அடக்கி வெற்றிபெற்றதைப் பற்றி மதுசூதனன் சந்தோஷித்திருந்தான். ஆனால்,

இப்போது இரவில் நேரம் ஆக ஆகச் சத்துரு கோட்டையை விட்டு இன்னும் அகலவில்லை, சுரங்கத்திற்குள் ஒளிந்துகொண்டே இருக்கிருன் என்ற சந்தேகம் அவனுக்கு உண்டாயிற்று.

மழை நின்றுவிட்டது. கிருஷ்ணபக்ஷத்துச் சந்திரன் தோட்டத்தில் ஒரு மூலையில் இருந்த சிம்சுபா விருக்ஷத்திற்கு மேலே ஆகாயத்தில் உதித்து, நனைந்திருக்கும் பூமியைக் களிபொங்கச் செய்தான். குளிர்காற்று அடித்தது. படுக்கையில் படுத்து உஷ்ணத்தைத் தரும் மிருதுவான ஸ்பர்சசுகத்தை மதுசூதனனின் சரீரம் அவாவ ஆரம்பித்தது. நீலப்பென்ஸிலை எடுத்துக்கொண்டு அவன் வெகு தீவிரமாய்க் கணக்குக்களில் ஈடுபட முயன்முன். ஆனல் அவனுடைய மன ஆகாயத்தில் ஒரு மெல்லிய காற்று மிகத் தெளிவான குரலில், "ராணி ஒரு வேளை கண் விழித்துக் காத்துக்கொண்டிருப்பாள்" என்று சொல்வது போல இருந்தது.

ஏதோ ஒரு முக்கிய காரியத்தை அன்றிரவே செய்து முடிப்பதாய் மதுசூதனன் நிச்சயம் செய்து கொண்டிருந்தான். அதை மறுதினம் காலையில் முடித்தாலும் பாதகமில்லை. ஆனல் தான் நிச்சயித்தபடியே நடத்துவது அவனுடைய வியாபார விதிகளில் ஒன்ருகும். ஏதாகிலும் காரணத்தைக்கொண்டு அவ்விதம் செய்ய இயலாவிடில் பிறகு அவன் தன்னை மன்னித்துக்கொள்ளமாட்டான். இதுவரை அவன் மிக்க கண்டிப்புடனேயே தன் நியமங்களைக் கைப்பற்றி வந்திருக்கிருன். அதற்குத் தகுந்த வெகுமதியும் அவனுக்குக் கிடைத்திருக்கிறது. ஆனல் இப்போது சில தினங்களாய்ப் பகலில் இருக்கும் மதுசூதனனுக்கும் இரவிலிருக்கும் மதுசூதனனுக்கும் வித்தியாசம்

இருந்தது, ஒரே வீணையில் இரண்டு தந்திகள் இருப்பது போல. எந்தத் திடப்பிரதிஜ்ஞையுடன் அவன் தன்வேலையில் கவனம் செலுத்த மேஜையின்மேல் குனிந்தானோ, அப்பிரதிஜ்ஞை இரவு ஆக ஆக ஏமாந்து சற்று இடம் கொடுத்த சமயம் ஓர் எண்ணம் வண்டுபோல, "ராணி காத்துக் கொண்டிருப்பாள்" என்று ரீங்காரம் செய்ய ஆரம்பித்தது.

எழுந்திருந்தான். விளக்கைத் தணிக்காமலே மேஜை மேலிருந்த கணக்குப் புத்தகங்கள், காகிதங்கள் எல்லாவற்றையும் அப்படியே போட்டுவிட்டு, தன் படுக்கையறையை நோக்கி மாடிக்குச் சென்றான். அந்தப்புரத்தில் மூன்றும் மாடிக்குச் செல்லும் வழியில் முற்றத்திற்கு மேற்புறம் இருக்கும் இரண்டாவது மாடி வராந்தாவில் கைப்பிடியின் ஓரமாகச் சியாமசுந்தரி உட்கார்ந்து கொண்டிருந்தாள். சந்திரன் அச்சமயம் நடு ஆகாயத்திலிருந்தான். அந்த வெளிச்சம் அவளைச் சுற்றிப் பரவியிருந்தது. அவளைப் பார்க்கும்போது ஏதோ கதைப் புத்தகத்திலிருக்கும் சித்திரம்போலக் காணப்பட்டாள். நித்தியம் இருக்கும் மனுஷியாய் இல்லாமல், அதி சமீபமான பரிசயத்தை மீறி அகன்றிருப்பவள் போல் தோன்றினாள். இந்த வழியாகவே மதுசூதனன் தூங்குவதற்காக மாடிக்குச் செல்வான் என்று அவள் அறிவாள். அவன் அவ்விதம் செல்லும் காட்சி அவளுக்கு அதிக வேதனையை உண்டாக்கும்.

அதுவே அவளை இங்குப பலமாக இழுத்தது. ஆனால் கேவலம் வீண் வேதனைப்பட்டுத் தன் நெஞ்சைப் புண்படுத்திக்கொள்வதற்காக மட்டும் அவள் இங்கே உட்கார்ந்திருக்கவில்லை. அவள் உள்ளத்தில் வேறோர் ஆசையும்

இருந்தது. 'க்ஷணத்திற்குள் ஏதாவது நடக்காதா! அசம்பாவிதமானது சம்பவிக்காதா' என்ற ஆவலினாலேயே அவள் இவ்விதம் வழியில் உட்கார்ந்திருந்தாள்.

அவளை ஓர் பார்வை பார்த்துவிட்டு மதுசூதனன் மாடிக்குச் சென்றான். சியாமசுந்தரி தன் அபாக்கியத்தை நொந்துகொண்டு கைப்பிடிக் கம்பியில் தன் தலையை இடித்துக்கொண்டாள்.

மாடியில் தன் அறைக்குள் சென்றதும் அங்கே குமுதம் தனக்காகக்காத்துக் கொண்டிருக்கவில்லை என்று மதுசூதனன் தெரிந்துகொண்டான். அறை இருட்டாயிருந்தது. அதனை அடுத்திருக்கும் ஸ்நான அறையின் பாதி திறந்திருக்கும் கதவின்மூலம் சிறிது வெளிச்சம் வந்துகொண்டிருந்தது. திரும்பிப் போய் விடலாமென்று மதுசூதனன் நினைத்தான்; ஆனால் திரும்பமுடியவில்லை. காஸ் லைட்டை ஏற்றினான். குமுதம் படுக்கையில் ரஜாயி போர்த்துப் படுத்துக்கொண்டு ஆழ்ந்தநித்திரையில் இருந்தாள். விளக்கு ஏற்றின பின்னும் தூக்கம் கலையவில்லை. அவள் இவ்விதம் சுகமாய்த் தூங்குவதைக் கண்டு அவனுக்குக் கோப முண்டாயிற்று. மிக ஆத்திரத்துடன் கொசுவலையைத் தூக்கி விட்டுக் கட்டிலின்மீது தொப்பென்று உட்கார்ந்து கொண்டான். கட்டில் கிடுகிடுத்தது.

குமுதம் திடுக்கிட்டு எழுந்து உட்கார்ந்தாள். இனறு அவன் வரமாட்டான் என்றே அவள் நினைத்திருந்தாள். அவனைத் திடீரென்று பார்த்ததனால் அவள் முகத்திலுண்டான குறியைக் கண்டதும் மதுசூதனனுக்கு இதயத்தில் அம்பு தைத்த மாதிரி இருந்தது. இரத்தம் தலைக்கேறிற்று. "என்னைக் கண்டால் உனக்குச் சகிக்கமுடியவில்லையா?" என்று கேட்டான்.

இம்மாதிரியான கேள்விக்கு என்ன பதில் சொல்வதென்று அவளுக்குத் தெரியவில்லை. உண்மையில் மதுசூதனனைக் கண்டதும் திகிலினால் அவள் மார்பு அடித்துக் கொண்டது. அச்சமயம் அவள் புத்தி ஜாக்கிரதையுடனில்லை. எந்த உணர்ச்சியை அவள் தன்னிடமிருந்தே ஒளித்துவைக்க விரும்பினாளோ, எதன் வேகத்தை அவளே இன்னும் முற்றிலும் உணரவில்லையோ அந்த வெறுப்பானது சட்டென்று அவள் முகத்தில் வெளிவந்துவிட்டது.

மதுசூதனன் பற்களைக் கடித்துக் கொண்டு, "அண்ணாவிடம் போக மனம் துடிக்கிறதல்லவா?" என்றான்.

குமுதம் அந்த க்ஷணம் அவன் கால்களில் விழத் தயாராக இருந்தவள் அவன் வாயிலிருந்து அண்ணாவின் பெயரைக் கேட்டதும் சட்டென்று கல்லெனச் சமைந்து விட்டாள்.

"இல்லை" என்று உரைத்தாள்.

"நீ போக இஷ்டப்படவில்லையா?"

"இல்லை; நான் இஷ்டப்படவில்லை."

"என்னோடு பேசுவதற்காக நீ நவீனனை அனுப்பவில்லையா?"

"அண்ணாவிடம் போக மாட்டேனென்று நான் அவரிடம் சொன்னேன்."

"ஏன்?"

"அது என்னால் சொல்லமுடியாது."

"சொல்ல முடியாதா? மறுபடி உன் நூர்நகரத்துக் குணத்தைக் காண்பிக்கிறாயா?"

"நான் நூர்நகரத்துப் பெண்தானே!"

"போ, நீ அங்கேயே போ. நீ இந்த இடத்திற்குத் தகுந்தவளல்லள். தயைகாட்டிப் பார்த்தேன். உனக்கு அதன் அருமை தெரியவில்லை. உன்னைப் பார்த்து இனிப் பச்சாத்தாபந்தான் படவேண்டும்."

குமுதம் பதில் சொல்லாமல் சிலையைப்போல் உட்கார்ந்திருந்தாள். குமுதத்தின் கையைப் பிடித்துக்கொண்டு மதுசூதனன், "மன்னிப்புக் கேட்கக்கூடத் தெரியாதா?" என்று இரைந்தான்.

"எதற்காக?"

"என் படுக்கையில் படுத்துக் கொள்கிருயே, அதற காகத்தான்."

குமுதம் உடனே கட்டிலை விட்டிறங்கி அடுத்த அறைக்குள் சென்ருள்.

மதுசூதனன் வெளிச்சென்ருன். வழியில் வராந்தாவில் சியாமா முன்போலவே சுருண்டு படுத்திருப்பதை அவன் பார்த்தான். மதுசூதனன் அருகில் சென்று அவளைத் தூக்க விரும்பினவனுய், "என்ன செய்கிருய், சியாமா?" என்று கேட்டான். அது செவியிலே பட்டதும் சியாமா எழுந்து உட்கார்ந்து மதுசூதனன் கால்களைத் தன்மார் புடன் அணைத்துக்கொண்டு, "என்னைக்கொன்று விடுங்களேன்" என்று தழுதழுத்த குரலில் கெஞ்சினுள்.

மதுசூதனன் அவளைக் கையைப் பிடித்துத் தூக்கி நிறுத்தினுன்; "உன் உடம்பு என்ன இப்படி ஜில்லிட்டுப் போயிருக்கிறதே! வா, உன்னைப் படுக்க வைக்கிறேன்" என்று சொல்லி அவளைத் தன் போர்வையால் மூடி இடது கையால் கெட்டியாய்ப் பிடித்துக்கொண்டு அவளுடைய அறைக்கு அழைத்துச் சென்ருன். அங்கே சென்றதும்,

"சற்று உட்காரமாட்டீர்களா?" என்று சியாமா மெது வான குரலில் கேட்டாள்.

எனக்கு வேலை இருக்கிறது" என்றான் மதுசூதனன்.

ன்றிரவு என்ன காரணமோ இப்படி மதுசூதனன் வேலைக்கு விக்கினம் ஏற்பட்டுக்கொண்டே யிருக்கிறது. ஆனால் இனிமேல் அது பாதிக்காது. குமுதத்தினிடம் தனக்குக் கிடைக்காதது வேறோர் இடத்தில் சேர்ந்து கிடைக்கு மென்று அவன் தெரிந்துகொண்டான். மனிதன் தான் தோன்றியதன் பூர்ண பலனைக் காதலின் மூலமாக அடைகிறான். இன்று இரவு அப்பேர்ப்பட்ட ஓர் அநுபவத்தை மதுசூதனன் வேண்டி நின்றான். சியாம சுந்தரி தன் முழு உள்ளத்துடன் அவனையே எதிர்பார்த்து இருக்கிறாள். இந்தச் சமாதானத்தைப் பெற்ற மதுசூதன னுக்கு வேலையில் உற்சாகம் உண்டாயிற்று. அவமானம் என்னும் ஒரு முள் அவன் உள்ளத்தில் தைத்து உறுத்திக் கொண்டிருந்தது. அதனுடைய வேதனை இப்போது மிகக் குறைந்துவிட்டது.

இந்தப் பக்கம் அன்று இரவு குமுதினி அடைந்த சங்கடத்தில் அவளுக்கு ஓர் ஆறுதலிருந்தது. மதுசூத னன் அவளிடம் அன்புகாட்டும்போதெல்லாம் குமுதினி யின் மனம் அதற்கிணங்காமல் இழுத்துப்பறித்துக் கொண்டு வருகிறது. அவன் காண்பிக்கும் அன்பிற்குப் பிரதியாகத் தானும் அன்பு காண்பிக்கவேண்டும் என்ற கடமையை உணர்ந்து அவள் மனம் மிகச் சஞ்சலம் அடையும். இந்தப் போட்டியில் குமுதினி வெற்றி யடை வது சந்தேகம். ஆனால் தோல்வி யுறுவதோ வெட்கக்கேடு. அதை மறைக்கவேண்டியே குமுதம் இத்தனை நாள் பாடு பட்டுவந்தாள். நேற்று இரவு ஒரே க்ஷணத்தில் அவளு

டைய இந்தப் பிரயாசை வெளிக்குத் தெரிந்துவிட்டது. விஷயம் என்னவென்றால், மதுசூதனன் குமுதினியை அடைய விரும்புகிறான். அவன் முன்கோபம் கொண்டு அவளைத் திரஸ்கரிப்பதும் உண்மையே. வாஸ்தவமாய் மதுசூதனன் படுக்கையில் படுக்கக் குமுதினிக்கு அதிகாரம் இல்லைதான். அப்படிப் படுத்துக்கொண்டாலும் அவள் அவனுக்கு ஏமாற்றமே அளிக்கிறாள். இந்த வீட்டிலே அவளுக்குள்ள ஸ்தானம் மிகக் கேவலமானது.

இன்று இரவு குமுதினியின் மனத்தில் அடிக்கடி ஒரு கேள்வி எழுந்துகொண்டேயிருந்தது. மதுசூதனன் தன்னை ஏன் இப்படி நிர்ப்பந்தம் செய்யவேண்டும்? அவனோ ஒவ்வொரு வார்த்தைக்கும் நூர்நகர ஜாலம் என்று குத்திக் குத்திக் காட்டுகிறான். அதன் அர்த்தம் குமுதினிக்கும் அவனுக்கும் எவ்வளவோ வித்தியாசம் என்பதென்று ஏற்படவில்லையா? இயற்கையில் வித்தியாசம், குலத்தில் வித்தியாசம். அப்படியிருக்க மதுசூதனன் ஏன் அவளிடம் அன்பு காட்டவேண்டும்? இது உண்மையான காதலாகுமா? மதுசூதனன் இன்று எவ்விதம் நினைத்திருந்த போதிலும் அவன் தன்னிடம் திருப்தியடைய முடியாதென்று குமுதம் நிச்சயமாய் எண்ணினாள். இதை மதுசூதனன் எவ்வளவு சீக்கிரம் உணருகிறானோ அவ்வளவுக்கவ்வளவு இரு பக்ஷத்தாருக்கும் நன்மையே.

முதல்தினம் இரவு தமையன் உத்தரவைப் பெற்று நவீனன் எவ்வளவு சந்தோஷமாகத் தூங்கச் சென்றானோ அவ்வளவும் மறுதினம் மாயமாய் மறைந்துவிட்டது. இரவு சுமார் இரண்டரை மணியிருக்கும். மதுசூதனன் நவீனனைக் கூப்பிட்டு அனுப்பினான். அவன் வந்ததும் குமுதத்தை மறுதினமே விப்ரதாஸின் வீட்டிற்கு அனுப்ப

வேண்டுமென்றும், தான் மறுபடி சொல்லியனுப்பும் வரை அவள் இங்குத் திரும்பிவரவேண்டிய அவசியமில்லை யென்றும் உத்தரவிட்டான். இது நிர்வாஸதண்டனை யென்று நவீனன் உணர்ந்தான்.

முற்றத்திற்கு மேற்புறத்தில் வராந்தாவில் எந்த இடத்தில் சியாமசுந்தரியும் மதுசூதனனும் சந்தித்தார்களோ அதற்கு நேர் எதிர்ப்புறம் தாழ்வாரத்தின் கீழ் நவீனனுடைய அறை இருந்தது. அச்சமயம் அவ்விருவரும் குமுதத்தைப்பற்றியே பேசிக்கொண்டிருந்தார்கள். ஏதோ பேச்சுக் குரலைக்கேட்டு நிஸ்தாரிணி கதவைத் திறந்து பார்த்த சமயம் நிலவு வெளிச்சத்தில் சியாமாவும் மதுசூதனனும் சந்தித்த காட்சி அவர்கள் கண்களில் பட்டது. இந்த இரவில் நிச்சப்தமாகக் குமுதத்தின் பாக்கிய இழையில் மற்றொரு சிக்கலான முடிச்சு விழுந்து விட்டதென்பதை அவர்கள் உணர்ந்தார்கள்.

“இந்த மாதிரிச் சந்தர்ப்பத்தில் மன்னி போவது சரியா?” என்று நிஸ்தாரிணி தன் கணவனைக் கேட்டாள்.

“இத்தனை நாட்களாய் மன்னி இல்லை. காரியம் இவ்வளவு தூரம் கெட்டுப் போகவில்லை. மன்னி இருப்பதாலேயே இவ்விதம் ஏற்பட்டது” என்றான் நவீனன்.

“நீங்கள் என்ன இந்தமாதிரி சொல்கிறீர்கள்!”

“அடங்கியிருந்த பசியை மன்னி கிளப்பிவிட்டார். ஆனால் அதைத் தணிக்க அவரால் இயலவில்லை. அதனாலேயே இவ்வித அனர்த்தம் ஏற்படுகிறது. இச்சமயம் அவர் விலகியிருப்பதே உசிதம். வேறொன்றும் இல்லாவிடினும் அவராவது நிம்மதியாயிருக்கலா மல்லவா?”

“ஆனால் இது இந்த மாதிரியே நடப்பதா!”

"நெருப்பை அணைக்க முடியாவிட்டால் அது, தானாக அணைகிறவரை தூரத்திலிருந்துதான் பார்க்கவேண்டும். வேறு என்ன செய்வது?"

மறுதினம் காலை குழந்தை மோதி குமுதத்துடனேயே சுற்றினான். பாடம் சொல்லிக் கொடுப்பதற்காக வந்த உபாத்தியாயர் அவனைக் கூப்பிட்டனுப்பின சமயம் அவன் குமுதத்தின் முகத்தை நோக்கலானான். குமுதம் போகச் சொன்னால் அவன் படிக்கப் போய்விடுவான். ஆனால் குமுதம் வேலையாளிடம் இன்று மோதிக்கு விடுமுறை வேண்டுமென்று சொல்லி அனுப்பிவிட்டாள்.

வீட்டு மருமகள் சிலதினத்திற்குப் பிறந்தவீடு போய் வருகிறாள் என்ற முழக்கம் அன்று குமுதம் புறப்படும் சமயம் காணவில்லை. அந்தவீடு அவளை அன்று இழந்து விடப்போவதுமாதிரி இருந்தது. கூட்டில் அடைபட்டிருந்த கிளி இன்று கதவு சிறிது திறக்கப்பட்டதும் பறந்து போய், மீண்டும் கூட்டினுள் வந்து அடையாதென்று தோன்றியது.

நவீனன் சொன்னான்: "மன்னி, சீக்கிரம் திரும்பி வர வேண்டுமென்று என் மனப்பூர்வமாய்க் கேட்டுக்கொள்ள விரும்பினாலும் அந்த வார்த்தை வாயிலிருந்து வெளிவர மாட்டேனென்கிறது. எந்தவிடத்தில் உங்களைச் சரியாக மதிப்பிடுகிறார்களோ அங்கேயே இருங்கள். எப்போதாகிலும் நவீனனால் ஏதாகிலும் ஆகவேண்டியிருந்தால் ஞாபகம் வைத்துக்கொள்ளவேண்டும்."

மோதியின் தாய் தன் கையால் செய்த முரப்பா, ஊறுகாய் முதலியவைகளை ஒரு மண்பாண்டத்தில் நிரப்பிப் பல்லக்கில் வைத்தாள். அவள் அதிகமாக ஒன்றும் சொல்லவில்லை. ஆனால் அவள் மனத்தில் மாத்திரம் எவ்வளவோ

குறையிருந்தது. மதுசூதனன் குமுதத்தை வெளிப்படை யாக அவமதித்தபோது நிஸ்தாரிணி குமுதத்தினிடம் மிக இரக்கம் கொண்டாள். ஆனால் நுட்பமான உள்ளூறப் புண் படுத்தும் ஓர் அவமானம்— அது எத்தகையது என்று ஆராய்ந்து சொல்வது கடினம்; அதனுடைய வேதனையோ அதிகமானது—அதன் மர்மத்தை மோதியின் தாயாரால் உணர முடியவில்லை. கணவன் எப்போது சந்தோஷித் திருக்கிறாரோ அந்தக்கணமே தன்னுடைய சௌபாக்கியம் என்று நினைத்துப் பெண் திருப்தி அடையவேண்டும் என்று நிஸ்தாரிணி நினைத்திருந்தாள். அதை மீறிச் செல்வது அழகாயிராது. அதுமட்டுமல்லாமல் நவீனன் குமுதத் தினிடம் இன்னமும் அநுதாபப் படுகிறானென்பதனால் நிஸ்தாரிணிக்குக் கோபமுண்டாயிற்று. குமுதத்திற்குச் சுவபாவமாக ஏற்பட்ட வெறுப்பு, கர்வத்தினால் உண்டான தல்ல; அந்த வெறுப்பை அடக்க முடியாததால் அவள் மிக மனம் நொந்து தன்னைக் கண்டித்துக்கொண்டேயிருக் கிறாள். இதன் நோக்கம் சாதாரணப் பெண்களுக்குப் புரியாது. சீன தேசத்துப் பெண்கள் தங்கள் கால்களை இறுகக் கட்டிவைத்துக்கொள்கிறார்கள். அதைப் பெரி தாக வளரவிடுவது அத்தேச வழக்கத்திற்கு விரோதம். ஆகையால் அவ்விதம் செய்வதில் அவர்களுக்குத் தப்பிதம் ஒன்றும் தோன்றுவதில்லை. கால்களைச் சிறியதாகச் செய்து கொள்ளும் வேதனையைப் பொறுக்க இஷ்டமில்லாமல் அதைத் தாராளமாக வளரும்படி விட்டுவிடும் பெண்களும் இருக்கிறார்கள் என்று அறிந்தால் அவர்கள் மிக ஏளனமே செய்வார்கள். அந்தமாதிரி இருப்பது சுத்த மடத்தனம் என்றுகூடச் சொல்லுவார்கள்.

ஆழ்ந்து பார்க்கும்போது எது சுவபாவமாக இருக் கிறதோ அதையே அவர்கள் சுவபாவத்திற்கு விரோதம்

என்று கருதுகிறார்கள். குமுதத்தைவிட அதிகத் துக்கம் நிஸ்தாரிணி ஆரம்பத்தில் அநுபவித்திருக்கலாம். ஒருகால் அதனாலேயோ என்னவோ அவள் மனம் குமுதினியின் விஷயத்தில் கடினமாகிக்கொண்டே வந்தது. எதிரிடையாக இருந்த பாக்கியம் இப்போது மாறி வரதானம் அளிக்க வரும்போது அதன் வரத்தைப் பெறுமலிருக்கும் ஒரு தௌர்ப்பாக்யவதியை நிஸ்தாரிணி எப்படிப் புகழ்ந்து கூறுவாள்! ஏன்; அவளை மன்னிப்பதுகூட நிஸ்தாரிணியால் இயலாத காரியம்.

---

## 46

வீட்டின் எதிரில் வந்ததுமே குமுதம் பல்லக்கின் கதவைச் சிறிது திறந்து மேல்மாடியை நோக்கினாள். தினந்தோறும் அச்சமயம் விப்ரதாஸ் மாடியில் வாசற்புற வராந்தாவில் பத்திரிகை படித்துக்கொண்டிருப்பான். ஆனால் இன்று அங்கே ஒருவரையும் காணோம். இன்று குமுதம் வரப்போகிறாளென்ற செய்தி அங்கே சொல்லி அனுப்பப் படவேயில்லை. பல்லக்குடன் வரும் ராஜா பகதூரின் வில்லை தரித்த வேலையாளைப் பார்த்ததும் அந்த வீட்டு ஆட்கள் பயந்துவிட்டார்கள். சின்னம்மாள் வருகிறார்களென்று தெரிந்து கொண்டார்கள். சிவிகை அந்தப் புரத்தின் வாயிலுக்குச் சென்றது. குமுதம் அதை நடுவிலேயே நிறுத்தி அதிலிருந்து இறங்கி மெத்தைப் படிகளில் ஏறி மேல்தளத்திற்குச் சென்றாள். மற்ற யாரையும் பார்ப்பதற்குள் முதல்முதல் அண்ணாவைப் பார்க்க வேண்டுமென்பது அவள் விருப்பம். வாசற்புறமாக இருக்கும் நல்ல வசதியான அறையிலேயே வியாதிஸ்தனை தன் தமையன் படுத்திருப்பானென்பது அவளுடைய நிச்சயம். அவ்

வறையின் ஜன்னல் வழியாய்த் தோட்டத்திலுள்ள பல அழகிய புஷ்பச் செடிகள் கண்களில் தென்படும். காலையில் இள வெயில் மரக்கிளையின் மூலமாக அந்த அறையில் தான் முதலில் பிரவேசிக்கும். அந்த இடமே விப்ர தாஸிற்குப் பிடித்திருந்தது.

குமுதம் படிகளினருகில் சென்றதும் முதல்முதல் விப்ரதாஸின் நாய் 'டாம்' ஓடிவந்து அவள் மேல் விழுந்து வாலையாட்டியவண்ணம் தன் பாஷையில் என்னென்னவோ சொல்லிற்று. அதுவும் குமுதத்துடன் கூடவே துள்ளிக் குதித்துக்கொண்டு மேலே ஏறிச் சென்றது. விப்ரதாஸ் ஒரு சோபாவில் படுத்து அரைத்தூக்க நிலைமையில் இருந்தான். கால்களின்மேல் ஒரு போர்வை போர்த்தப் பட்டிருந்தது. ஒரு புத்தகத்தைப் பிடித்தவண்ணம் இடது கை படுக்கையின்மேல் படிந்து, சோர்வுற்று, சற்று முன்புதான் புத்தகத்தை மூடிவைத்த மாதிரி இருந்தது. டீ குடித்த கப்பும், ஒரு சிறிய ரொட்டித் துண்டு மிகுந் திருக்கும் ஸாஸரும் அருகில் தரையில் விழுந்துகிடந் தன; தலைப்புறம் சுவரில் தொங்கும் மரஷெல்பில் தாறு மாறுய்ப் புத்தகங்கள்; இரவில் எரிந்துகொண்டிருந்த விளக்கு, புகையேறி இன்னமும் ஒரு மூலையில் எரிந்து கொண்டிருந்தது.

குமுதம் விப்ரதாஸின் முகத்தைப் பார்த்துத் திடுக் குற்றுள். அண்ணுவின் முகம் இவ்வளவு வெளுத்தும் நோய்ப்பட்டும் இருந்ததை அவள் அதற்குமுன் கண்டதே யில்லை. முன்பிருந்த விப்ரதாஸிற்கும் இப்போதிருக்கும் விப்ரதாஸிற்கும் யுகங்கள் வித்யாசம் காணப்பட்டது. அண்ணுவின் காலடியில் தலையை வைத்துக் குமுதம் அழ லானுள்.

"குமு வா, வந்துவிட்டாயா? வா, இங்கே வா" என்று சொல்லி விப்ரதாஸ் அவளை அருகில் இழுத்துக்கொண்டான். கடிதத்தில் அவளை வரவேண்டாமென்று விப்ரதாஸ் ஜாடையாய்த் தடுத்திருந்தபோதிலும் குமுதம் ஒருகால் வருவாளென்று அவனுக்கு ஓர் ஆசை இருந்தது. அவள் வந்திருப்பதைப் பார்த்ததும் குமுதத்திற்கு வீட்டில் ஒரு விதத் தொந்தரவுமில்லை, எல்லாம் சௌகரியமாக இருக்கிறதென்று எண்ணலானான். தான் முதலில் பிரஸ்தாபித்துப் பல்லக்கும் ஆட்களும் அனுப்பி அழைத்து வரவேண்டிய குமுதம் இவ்விதம் சுவாதீனமாய் வரக்கூடிய நிலைமையில் மதுசூதனன் வைத்துக்கொண்டிருப்பானென்று அவன் சிறிதும் எதிர்பார்க்கவேயில்லை.

விரிந்துகிடந்த அவன் தலை மயிரை இரண்டுகைகளாலும் கோதிச் சேர்த்த வண்ணம் குமுதம், "அண்ணு, உன் முகம் இவ்வளவு மாறிவிட்டதே!" என்றாள்.

"என் உடம்பு இளைக்காமலிருக்க நான் இங்கே அப்படி ஒன்றும் நல்ல நிலைமையில் இல்லை. ஆனால் உனக்கென்ன? நீ நிரம்ப இளைத்து விட்டாயே!"

இதற்குள் குமுதம் வந்திருக்கிறாளென்ற செய்தி எட்டி க்ஷேமா அத்தை வந்தாள். அவள் பின்னோடு வேலைக்காரர்கள், வேலைக்காரிகள் எல்லோரும் வாயிலண்டை கூடிவிட்டார்கள். அத்தையைக் குமுதம் நமஸ்கரித்தாள். அத்தை அவளை வாரியணைத்து மார்போடு தழுவி நெற்றியில் முத்தமிட்டாள். வேலையாட்கள் வந்து குமுதத்தின் கால்களைத் தொட்டு வணங்கினர். எல்லாருடனும் க்ஷேம சமாசாரம் பேசினபின் குமுதம், "அத்தை, அண்ணுவின் உடம்பு நிரம்பக் கெட்டுவிட்டதே" என்றாள்.

"வேணுமென்று வரவழைத்துக்கொண்டது. உன் கையிலிருந்து சுச்ருஷை பெறுமையால் அவனுக்கு உடம்பு

சௌக்யமாகவே மாட்டேனென்கிறது. எத்தனையோ நாட்களாய்ப் பழகிவிட்டதல்லவா!"

"அத்தை, குமுதவைச் சாப்பிடச் சொல்" என்றான் விப்ரதாஸ்.

"சாப்பிடாமலென்ன! அதுகூடச் சொல்ல வேண் டுமா! பல்லக்குக்காரர்கள், சிப்பாய்கள் எல்லோரையும் அனுப்பிவிட்டு வருகிறேன். போகிறேன். அவர்களுக்குச் சாப்பாடு போட்டு அனுப்புகிறேன். அதுவரையில் நீங்கள் இரண்டு பேரும் பேசிக்கொண்டிருங்கள்."

விப்ரதாஸ் அத்தையை அருகில் கூப்பிட்டு அவள் காதில் என்னவோ சொன்னான். தன் கணவன் வீட்டி லிருந்து வந்திருக்கிறவர்களுக்கு விடைகொடுத்து அனுப்பு வதைப்பற்றிப் பேசுகிறார்களென்று குமுதம் தெரிந்து கொண்டாள். இந்தப் பேச்சுக் கிடையில் இன்று குமுதம் வேறு மனுஷியாகிவிட்டாள். இதில் அபிப்பிரா யம் சொல்ல அவளுக்கு இடம் இல்லை. குமுதத்திற்கு இது சற்றேனும் பிடிக்கவில்லை. அதற்குப் பிரதியாக இவ்வீட்டில் தனக்கு வெகு நாளாய் இருந்த ஸ்தானத்தை நன்றாக நிலைப்படுத்திக்கொள்ளும் வேலையில் முனைந்தாள்.

முதலில் அண்ணாவின் கான்ஸாமா கோகுலனைக் கூப்பிட்டு ஏதோ சில உத்தரவுகள் செய்துவிட்டுப் பிறகு அந்த அறையைத் தன் இஷ்டப்படி ஒழுங்கு படுத்த ஆரம்பித்தாள். பிளேட்டு, கோப்பை, விளக்கு, காலியான சோடா புட்டி, பிரம்பு பிய்ந்த நாற்காலி, அழுக்கடைந்த சவுக்கங்கள், பனியன்கள் முதலியவற்றை யெல்லாம் எடுத்து வராந்தாவில் அப்புறப்படுத்தினாள். புத்தகங்களை ஷெல்பில் சரியாக அடுக்கி வைத்தாள். அண்ணாவின் கைக்கு எட்டக்கூடிய தூரத்தில் ஒரு மேஜை

யை வைத்து, அதன்மேல் அவன் படிக்கும் புத்தகம், பேனு ஸ்டாண்டு, மை ஒத்துகிற காகிதம், குடிக்கத் தண்ணீருடைய கண்ணுடி கூஜா, ஒரு சின்ன முகம் பார்க்கும் கண்ணுடி, சீப்பு, பிரஷ் இவைகளை வைத்தாள்.

இதற்குள் கோகுலன் ஒரு பித்தளைப் பாத்திரத்தில் சுடுதண்ணீரும் சவுக்கமும் கொண்டுவந்து பிரம்பு நாற்காலியில் வைத்தான்.

அண்ணுவின் அநுமதியைக் கேளாமலே குமுதம் சவுக்கத்தை வெந்நீரில் நனைத்து அவனுடைய முகத்தையும் கைகளையும் துடைத்துவிட்டு, தலைமயிரை வாரிவிட்டாள். விப்ரதாஸ் ஒரு குழந்தையைப்போல எல்லாவற்றையும் ஏற்றுக்கொண்டான். எப்போது எந்த மருந்து கொடுக்கவேண்டும், எந்த மாதிரியான பத்தியம் என்ற விவரமெல்லாம் அவள் தெரிந்துகொண்டிருந்ததை நோக்கினுல் அவள் வாழ்க்கையில் இந்த இடம் தவிர வேறெங்கேயும் ஒருவிதப் பொறுப்பும் இல்லையென்று தோற்றியது.

விப்ரதாஸ் தன் மனத்திற்குள், "இதற்கென்ன அர்த்தம்?" என்று எண்ணலானுன். முதலில் தன்னைப் பார்க்க வந்திருக்கிருளென்றும், திரும்பிப் போய்விடுவாளென்றும் நினைத்திருந்தான். ஆனுல் அவள் இருக்கும் மாதிரியில் அவ்வித உத்தேசம் உண்டு என்று தோற்றவில்லை. கணவன்வீட்டில் குமுதத்தின் நிலைமை எவ்விதமானதென்று விப்ரதாஸ் அறிய விரும்பினுன். ஆனுல் அவளைக் கேட்க அவன் நாணினுன். குமுதம் தானே வலுவில் சொல்வாளென்று எதிர்பார்த்திருந்தான். ஒரே ஒருமுறை மாத்திரம் தயக்கத்துடன், "நீ இன்று எப்போது போகவேண்டும்?" என்று கேட்டான்.

"நான் இன்று போகவேண்டியதில்லை" என்றுள் குமுதம்.

விப்ரதாஸ் ஆச்சரியத்துடன், "இதனால் உன் புருஷன் வீட்டார்களுக்கு யாதொரு ஆக்ஷேபணையும் இராதே?" என்று கேட்டான்.

"இல்லை; என் கணவர் சம்மதித்திருக்கிறார்."

விப்ரதாஸ் பேசாமல் இருந்தான். குமுதம் அறையின் ஒரு மூலையில் ஒரு மேஜைமீது சவுக்கம் விரித்து, அதன் மேல் மருந்துப் புட்டிகள் முதலியவற்றை அடுக்கி வைக்கலானாள். சிறிது நேரம் கழித்து விப்ரதாஸ், "ஆனால் நீ நாளைக்குப் போகவேண்டுமா? "என்று கேட்டான்.

"இல்லை; இன்னும் சிலநாளைக்கு நான் உன் அருகில் இருப்பேன்."

விப்ரதாஸின் நாய் கட்டிலின்கீழ் நிம்மதியாய் நித்ரா தேவியை ஆராதிப்பதில் ஈடுபட்டிருந்தது. குமுதம் அதைத் தூண்டிவிட்டு அதன் சுகநித்திரையைக் கலைத்தாள். அது துள்ளிவந்து குமுதத்தின் மடியில் முன்னங் கால்களைத் தூக்கி ஊன்றிக்கொண்டு தன் பாஷையில் உச்சஸ்வரத்தில் ஆலாபனம் செய்ய ஆரம்பித்தது. குமுதம் ஒரு வியாஜத்தை உண்டாக்கிப் பேச்சை மறைக்கிறாள் என்று விப்ரதாஸ் உணரலானான்.

சிறிது நேரம் கழித்து நாயுடன் விளையாடுவதை நிறுத்தி விட்டுக் குமுதம், "அண்ணா, நீ பார்லிக்கஞ்சி குடிக்கும் நேரமாய்விட்டதே; அதைக் கொண்டு வரட்டுமா?" என்று கேட்டாள்.

"இல்லை; இன்னும் நேரமாகவில்லை" என்று சொல்லிக் குமுதத்தைக் கட்டிலினருகில் உட்காரும்படிச் சமிக்ஞை செய்தான். தன் கையில் அவள் கையை வைத்துக்கொண்டு, "குமுதம், என்னிடம் ஒளிக்காமல்

சொல். நீங்கள் எப்படி இருக்கிறீர்கள்?" என்று கேட்டான்.

குமுதத்தால் உடனே பதில் சொல்ல முடியவில்லை. தலையைத் தொங்கவிட்டுக்கொண்டு உட்கார்ந்திருந்தாள். பார்க்கையிலேயே முகம் சிவந்தது. சிறுவயதில் செய்தது போல் அண்ணாவின் அகன்ற மார்பில் முகத்தைப் பதித்துக்கொண்டு அழலானாள்; "அண்ணா, நான் எல்லாவற்றையும் தப்பாக நினைத்திருந்துவிட்டேன். எனக்கு அச்சமயம் ஒன்றுமே தெரியாது" என்றாள்.

விப்ரதாஸ் மெதுவாய் அவள் தலையைத் தடவிக்கொடுத்தான். சிறிது நேரம் கழித்து, "உனக்கு ஒன்றும் சரியாய்ச் சொல்லிக் கொடுக்க என்னால் முடியவில்லை. அம்மா இருந்தால் உன்னைப் புக்ககம் போவதற்குச் சரியாய்த் தயாரித்திருப்பாள்" என்றான்.

"எனக்குச் சிறுவயது முதல் நம் வீட்டாரை மாத்திரந்தான் தெரியும். நம் வீட்டாருக்கும் மற்றவருக்கும் இவ்வளவு வித்யாசம் இருக்குமென்று நான் கனவிலும் நினைக்கவில்லை. சிறுவயது முதல் நான் கற்பனை செய்ததும் உங்களைப் போன்றவர்களையேதான். ஆகையால் என் மனத்தில் சிறிதும் பயம் ஏற்படவேயில்லை. அம்மாவிற்கு அப்பா எவ்வளவோமுறை கஷ்டம் கொடுத்திருக்கிறாரென்பது எனக்குத் தெரியும். ஆனால் அது வெளியிலிருந்து ஏற்பட்ட கஷ்டம். அதன் புண் வெளியிலிருந்தது. உள்ளத்தில் இல்லை. இங்கேயோ முழுவதும் என் உள்ளத்திலேயே கஷ்டம் உண்டாகிறது. அதுதான் எனக்குப் பெரிய அவமானமாயிருக்கிறது."

விப்ரதாஸ் விடையொன்றும் கூறாமல ஒரு பெருமூச்சு விட்டுவிட்டுச் சிந்தனையிலாழ்ந்திருந்தான். விவாக ஏற்பாடு

களை செய்யத்தொடங்கும்போதே மதுசூதனன் தங்களுக்கு நேர்மாறான குணமுள்ளவனென்று அவன்தெரிந்துகொண்டான். அதன் பயனாய் உண்டான கவலையினாலேயே அவன் உடம்பு ஒருவிதத்திலும் சௌக்கியத்தையடையும் வழியாக இல்லை. இந்த மலைப்பாம்பின் பிடியிலிருந்து குமுதத்தை விடுவிக்கவோ ஒருவழியும் தெரியவில்லை. இந்த மனிதனிடம் அவனுடைய சொத்து முழுவதும் கடன்பட்டிருப்பது எல்லாவற்றையுங்காட்டிலும் கஷ்டம். இந்த அவமானமான சம்பந்தம் குமுதத்தையும் வாட்டிற்று. நோயுடன் படுத்திருந்த இத்தனை நாட்களும் மதுசூதனனிடம் பட்டிருக்கும் இந்தக் கடனிலிருந்து எவ்விதம் விடுபடுவதென்பதைப்பற்றியே விப்ரதாஸ் ஓயாமல் சிந்தித்தான். குமுதத்தின் புக்ககத்தாருடன் தான் சகஜமாய்ப் பழகமுடியாமலிருக்கப் போகிறதே என்ற எண்ணத்தினாலேயே விப்ரதாஸிற்குக் கல்கத்தா வருவதற்கு இஷ்டமில்லை. குமுதத்தினிடம் அவனுக்கு இருக்கும் சுவபாவமான அன்பு க்ஷணத்திற்கு க்ஷணம் ஏமாற்றமடைந்து தாழ்மையடையாமலிருக்க வேண்டுமென்று எண்ணி அவன் நூர்நகரத்திலேயே வசிப்பது என்று நிச்சயித்திருந்தான். ஆனால் யாரிடமாகிலும் கடன்வாங்கியே தீரவேண்டும் என்ற நிர்ப்பந்தம் ஏற்பட்டதால் கல்கத்தா வர நேரிட்டது. தான் வந்த காரியம் மிகவும் கஷ்டமானது என்பது அவனுக்குத் தெரியும். இந்தக் கவலை ஓர் பெரிய பாரமாயிருந்தது.

சற்றுப் பொறுத்துக் குமுதம் தன் முகத்தை மறுபுறமாய்த் திருப்பிக்கொண்டு, "அண்ணா, கணவர்விஷயத்தில் எவ்வளவு முயன்றும் நான் பிரசன்னமாக இருக்க முடியவில்லையே. இது நான் செய்த பாவமா?" என்றாள்.

"குமு, பாபபுண்ணிய விஷயத்தில் நான் சாஸ்திரங்களில் சொல்லியிருப்பதை ஒப்புக்கொள்வதில்லை என்பது உனக்குத் தெரியுமே!"

குமுதம் சித்திரங்களடங்கிய ஓர் இங்கிலீஷ்ப் பத்திரிகையின் பக்கங்களைப் புரட்டினாள். விப்ரதாஸ் மேலும் சொல்லலானான்: "வெவ்வேறு மனிதர்களின் வாழ்க்கையில் ஏற்படும் சம்பவங்களில் தனித்தனி மாறுபாடுகள் காண்கின்றன. ஒருவனுக்கு ஏற்படுகிறப் போலவே மற்றொருவன் விஷயத்தில் ஏற்படுவதில்லை. அவ்விதம் இருக்க, இதுதான் சரி, அது தவறு என்று தீர்மானமாகச் சொல்ல முடியாது. இதுதான் வழக்கம் என்றுமாத்திரமே சொல்லக்கூடும். ஆனால் அதுதான் அவனுடைய தர்மம் என்று சொல்ல முடியாது."

குமுதம் தன் கையிலிருந்த பத்திரிகையை நோக்கிய வண்ணம் தலை குனிந்து, "மீராபாயின் வாழ்க்கையைப் போல" என்றாள்.

தன்னுள்ளத்தில் எது கடமை, எது கடமையல்ல என்பதைப்பற்றி முரண்பாடு ஏற்படும் சமயமெல்லாம் குமுதத்திற்கு மீராபாயைப்பற்றி ஞாபகம் வரும். மீராபாயின் லக்ஷ்யத்தை தனக்கு யாராவது நன்றாக எடுத்துச் சொல்லவேண்டுமென்று அவள் மிக விரும்பினாள்.

குமுதம் சற்றுச் சிரமப்பட்டுத் தன் சங்கோசத்தை ஒதுக்கிக்கொண்டு, "அண்ணா, மீராபாய் தன்னுடைய உண்மையான பதியைத் தன் உள்ளத்தில் அடைந்துவிட்டாள். ஆகையாலேயே சமூகவாழ்க்கையில் ஏற்பட்ட பதியை அவளால் தன் மனத்தை விட்டு அகற்றுவது சாத்தியமாயிருந்தது. ஆனால் வீட்டைத் துறந்து அந்த மாதிரி

வைராக்கியம் பெற எனக்கு எவ்விதம் அதிகாரமுண்டு?" என்றாள்.

"உன் பகவானை உன் முழு உள்ளத்துடன் அடைய முடிகிறதோ, குமு?" என்று விப்ரதாஸ் கேட்டான்.

"ஒரு சமயம் அவ்விதமே தோன்றிற்று. ஆனால் மனது சங்கடத்தில் அகப்பட்டுத் தவிக்கும் சமயம் என் பிராணன் ஒடுங்கிவிடும். நான் எவ்வளவோ முயன்றும் அவருடைய உண்மைத் தோற்றம் என் கண்களில் தோன்றுவதில்லை. எனக்கு அதுவே எல்லாவற்றிலும் பெரிய துக்கமாயிருக்கிறது."

"குமு, உன் மனத்தில் பல கலவரங்கள் எழுந்து வருகின்றனவா? ஒன்றுக்கும் பயப்படாதே. இரவு அடிக்கடி வந்தபோதிலும் அதனால் பகல் மறைந்து போகிறதா? உனக்குக் கிடைக்கும் சொற்ப ஒளியும் உன் ஆத்மாவுடன் கலந்துவிடுகிறது."

"அண்ணா, அவரை இழக்காமலிருக்கும்படி ஆசீர்வாதம் செய். தயையற்ற அவர் என்னைத் தனக்கு அர்ப்பணம் செய்துகொடுக்க வேண்டுமென்றே துன்புறுத்துகிறார். அண்ணா என்னைப்பற்றியே பேசிப் பேசி உனக்கு அலுப்பு உண்டாக்குகிறேன்."

'குமு, உன்னுடைய சிறுவயதுமுதல் உனக்காகச் சிந்தனை புரிவது எனக்கு வழக்கமாகிவிட்டது. இன்று உன் விஷயங்களைத் தெரிந்துகொள்வதை நிறுத்தி உனக்காகச் சிந்திப்பதை விட்டுவிட்டேனென்றால் அது எனக்கு வெறிச்சென்றிருக்கிறது; சூன்யமாயிருக்கிறது. அந்தச் சூன்யத்தில் சுற்றிச் சுற்றி வந்து என் மனம் அலுத்துப் போகிறது."

குமுதம் விப்ரதாஸின் கால்களை வருடிக்கொண்டே, "அண்ணா, எனக்காக நீ ஒன்றும் கவலைப்படாதே. என்னைக் காப்பாற்றுகிறவர் என் உள்ளத்திலேயே இருக்கிறார். எனக்கு யாதொரு தீங்கும் நேரிடாது" என்றாள்.

"இந்தப் பேச்சுக் கிடக்கட்டும். முன்பு நான் உனக்குப் பாடச் சொல்லிக்கொடுத்த மாதிரி இப்போதும் சொல்லிக்கொடுக்க வேண்டுமென்று இருக்கிறது."

"நீ சொல்லிக் கொடுத்தது நல்லதாயிற்று; அண்ணா, அதுவே என்னைக் காப்பாற்றிற்று. ஆனால் இன்று ஒன்றும் வேண்டாம். உன் உடம்பு சௌக்யமாகட்டும். அதற்குப் பதில் நான் இன்று ஒரு பாட்டுப் பாடுகிறேன், கேள்."

தமையனின் தலைப்புறம் உட்கார்ந்து குமுதம் மெது வாய் மீராபாயின் கீர்த்தனை ஒன்றைப் பாடலானாள்:

"பிய கர ஆயே ஸோஈ ப்யாரீ பிய ப்யாரரே
மீரா கே ப்ரபு கிரிதர நாகர
சரண கமல பலி ஹார ரே."[1].

(என் அன்பர் அகத்திற்கு வந்துவிட்டார், என் அன்பர்,—என் அன்பர்—மீராவின் பிரபு ஆனந்தகிரிதரன் பாதமே அவளுக்குப் பரம திருப்தி.)

விப்ரதாஸ் கண்களை மூடிகமகொணடு கேட்டான. பாடிக்கொண்டே வருகையில் ஏதோ ஓர் அபூர்வ தரிசனத்

---

पिय घर आये सोई प्यारी पिय प्यारे
मीरा के प्रभु गिरिधर नागर
चरण-कमल बलि हार रे.

திஞல் குமுதத்தின் இரண்டு கண்களிலும் நீர் நிறைந்தது. அவள் உள்ளம் பிரகாசம் அடைந்தது. அன்பர் வீடு வந்து விட்டார். அவருடைய சரணகமலங்களின் ஸ்பரிசம் அவள் இதயத்தில் பதிந்துவிட்டது. அன்பரை நெருங்கும் இடமாகிய அவளுடைய மனவுலகம் உணர்ச்சியின் மிகுதி யால் உண்மையாக விளங்கிற்று. பாட்டைப் பாடிக்கொண் டே அந்த அன்பரைச் சந்திக்கும் நிலையை அடைந்தாள்; "சரண கமல பலி ஹார ரே!"— இவள் வாழ்க்கை முழு வதும் அந்தச் சரணகமலங்களால் நிரம்பியது; அதற்கு முடிவே யில்லை; சம்சாரத்தில் துக்கத்திற்கும் அவமானத் திற்கும் இனி இடம் ஏது? "அன்பர் வீடு வந்தார்": இதைவிட இனி என்னவேண்டும்! இந்தப் பாட்டு முடியா மலேயே இருந்தால் குமுதத்திற்கு ஒருவிதத் துன்பமும் இராது.

கொஞ்சம் ரொட்டியின் டோஸ்டும், ஒரு கோப்பை யில் பார்லிக் கஞ்சியும் எடுத்துக்கொண்டு கோகுலன் வந்தான். குமுதம் பாடுவதை நிறுத்திவிட்டு, "அண்ணு, சில தினங்களுக்கு முன் என் மனது ஒரு குரு வேண்டு மென்று நாடிற்று. ஆனல் எனக்குக் குரு எதற்காக? நீ சொல்லிக் கொடுத்திருக்கும் இந்த இசையின் மந்திரம் ஒன்றே போதும்" என்ருள்.

"குமு, எனக்கு வெட்கமாயிருக்கிறது. என்னைப் போன்ற குரு ஒவ்வொரு தெருவிலும் அகப்படுவார்கள். மற்றவர்களுக்கு உபதேசிப்பதைத் தாங்கள் பின்பற்ற அறியார்கள். குமு, நீ எவ்வளவு நாட்கள் இங்கே இருக்க லாம்? சரியாய்ச் சொல்."

"கூப்பிட்டனுப்பும் வரை."

'நீ இங்கே வரவேண்டுமென்று விரும்பினயா?"

"இல்லை."

"பின் உன்னை அனுப்பியதன் நோக்கம்?"

"நோக்கத்தைப்பற்றி யோசிப்பதில் பயனில்லை. எவ்வளவு கஷ்டப்பட்டாலும் அவர் நோக்கம் உனக்குப் புரியாது. எதுவாயிருந்தால் என்ன, உன்னிடம் வந்திருக்கிறேன்; அதுபோதும். எவ்வளவு நாட்கள் இங்கே இருக்கலாமோ அவ்வளவுக்கவ்வளவு நலம். நீ இன்னும் சாப்பிடவில்லையே. அண்ணு, முதலில் சாப்பிடு."

வேலையாள் வந்து, "முகர்ஜீ பாபு வந்திருக்கிருர்" என்றுன்.

விப்ரதாஸ் சற்றுக்கவலையுடன், "உள்ளே வரச்சொல்" என்றுன்.

---

## 47

முகர்ஜீ அறைக்குள் நுழைந்ததும் குமுதம் அவரை நமஸ்கரித்தாள். "அம்மா, குழந்தாய், வந்துவிட்டாயா? இனிமேல் அண்ணுவிற்கு உடம்பு சௌக்கியமாய்விடும்" என்றுர்.

குமுதத்தின் கண்கள் கலங்கின. கண்ணீரை அடக்கிக் கொண்டு, "அண்ணு, பார்லியில் எலுமிச்சம்பழரஸம் பிழியவில்லையே!" என்றுள்.

இல்லாவிட்டால் என்ன பாதகம் என்று குறிக்கும் பாவனையாய் விப்ரதாஸ் அலுப்புடன் கையை ஆட்டினுன். அவனுக்குப் பார்லிக் கஞ்சி பிடிக்காதென்பது குமுதத்திற்குத் தெரியும். ஆகையால் அவள் தன் தமையனுக்கு எப்போது பார்லிக்கஞ்சி கொடுத்தாலும் அதில் கொஞ்சம் எலிமிச்ச ரஸம், பன்னீர், பனிக்கட்டி ஆகிய இவைகளைச் சேர்த்து அதைச் சர்பத்துமாதிரிச் செய்து கொடுப்பாள்.

அவ்விதம் தயாரித்துக் கொடுப்பவர் ஒருவருமில்லை. இருந்தும் விப்ரதாஸ் தனக்கு அவ்விதம் வேண்டுமென்று வாய் திறந்து கேட்பதில்லை. எதை எதிரில் வைத்தாலும் பிடிக்காதிருப்பினும் கஷ்டத்துடன் சாப்பிட்டுவிடுவான்.

பார்லிக்கஞ்சியைச் சரியாய்ச் செய்துகொண்டு வரக் குமுதம் வெளியே சென்றாள்.

விப்ரதாஸ் மிகக் கவலையுடன், "முகர்ஜீயண்ணு, செய்தி என்ன? சொல்லுங்கள்" என்றான்.

"உன் கையெழுத்து மாத்திரம் பெற்றுக் கடன் கொடுக்க ஒருவரும் சம்மதிக்கவில்லை. சுபோதின் கையெழுத்தும் வேண்டுமாம். மார்வாடிகளில் ஒருவர் இருவர் கொடுப்பார்கள். ஆனால் அவ்விதம் கொடுப்பதைத் திரும்பிப் பெறுவது சிரமம் என்று எண்ணி அதிகமாக வட்டி கேட்கிறார்கள். அது நமக்குச் சரிப்படாது."

"திரும்பி வருமாறு சுபோதிற்குத் தந்தி கொடுங்கள். இனித் தாமதிக்கக் கூடாது."

"எனக்கும் அப்படியேதான் தோன்றுகிறது. அந்தத் தடவை உன் மோதிரத்தை விற்ற பணத்தைக்கொண்டு அசல் கடனைக் கொஞ்சம் தீர்த்து வரலாமென்று நான் போனபோது மதுசூதனன் அதை வாங்கிக்கொள்ளச் சம்மதிக்கவே மாட்டேனென்று சொல்லிவிட்டான். அப்போதே நிலைமை சரியாயில்லை யென்று உணர்ந்து கொண்டேன். தன் இஷ்டம் போல என்றைக்காகிலும் திடீரென்று நிர்ப்பந்தம் செய்வான்."

விப்ரதாஸ் மௌனமாய்ச் சிந்தனையில் ஆழ்ந்திருந்தான்.

"இன்று குமுதம் திடீரென்று காலையில் புறப்பட்டு வந்திருக்கிறாளே: ஏதாவது கோபித்துக்கொண்டு வந்து

விட்டாளா? மதுசூதனனுக்குக் கோபமுண்டாக்கும் நிலைமையில் இப்போது நாம் இல்லையே!" என்றார் முகர்ஜீ.

"கணவன் சம்மதியின்மேல்தான் வந்தேன் என்கிறாள் குமுதம்."

"அந்தச் சம்மதம் எவ்வித மனத்துடன் கொடுக்கப் பட்டதோ? அதை நன்றாய்த் தெரிந்துகொள்ளவேண்டும். அவனுடன் எவ்வளவு ஜாக்ரதையுடன் நான் நடந்துகொள்கிறேனென்பது உங்களுக்குத் தெரியுமா! கோபத்தினால் என் தேகம் முழுதும் எரிந்துகொண்டிருக்கும்போது கூட அவன் சொல்வதை மிக்க பொறுமையுடன் சகிக்க வேண்டியிருக்கிறது. பகல் வெயிலினும் கரையாத கௌரி சங்கரமலைச் சிகரத்திலிருக்கும் பனிக்கட்டிபோல் இருந்தேன். நமக்குக் கடனும் கொடுத்திருக்கிறான்; மாப்பிள்ளை முறையும் ஆகிறான்; அவனை எப்படி அடக்க முடியும்?"

விப்ரதாஸ் ஒன்றும் சொல்லவில்லை. சிந்தித்திருந்தான்.

குமுதம் பார்லிக்கஞ்சியை எடுத்துக்கொண்டு வந்தாள். தன் தமையன் அருகில் அதை வைத்து, 'அண்ணா, இந்தா, இதைக் குடி" என்றாள். அவள் மொழியைக் கேட்டு விப்ரதாஸ் திடுக்குற்றதிலிருந்து தன் தமையன் ஏதோ ஆழ்ந்த சிந்தனையில் இருக்கிறான் என்று குமுதம் உணர்ந்தாள்.

முகர்ஜீ அறையைவிட்டு வெளி வந்ததும் குமுதம் அவர்பின்னோடு சென்று, "முகர்ஜீயண்ணா, என்ன சமாசாரம்? எனக்குச் சொல்லவேண்டும்" என்று கேட்டாள்.

"எந்தச் சமாசாரத்தைக் கேட்கிறாய், அம்மா?"

"நீங்கள் எல்லாரும் ஏதோ கவலையாயிருக்கிறீர்களே!"

"சொத்து நிலங்கள் இருந்தால் கவலையில்லாமலிருக்குமா, அம்மா? இது ஒரு முள் நிறைந்த மரத்தின் பழமல்லவா? பசியால் பீடிக்கப்பட்டு அதன் பழத்தைப் பறித்துத் தின்னவேண்டியிருக்கிறது. ஆனால் பறிக்கும் சமயம் முட்கள் தேகமுழுவதும் தைத்துவிடுகின்றன."

"அவை யெல்லாம் இருக்கட்டும். என்ன நடந்தது? சொல்லுங்கள்."

"ஜமீன் விஷயத்தைப்பற்றி யெல்லாம் பெண்களிடம் சொல்லக்கூடாது."

"நீங்கள் என்ன விஷயத்தைப்பற்றிப் பேசிக்கொண்டிருந்தீர்களென்பது எனக்குத் தெரியும்; சொல்லட்டுமா!"

"சொல்."

"என் கணவருக்கு அண்ணு கொடுக்க வேண்டிய கடனைப்பற்றி."

முகர்ஜீ பதில் சொல்லவில்லை. குதூகலமும, ஆச்சரியமும், சிரிப்பும் கொண்ட தம் கண்களைக் கொட்டிக் கொட்டிக் குமுதத்தைப் பார்த்துக்கொண்டு நின்ருர்.

"நான் சொன்னது சரிதானு என்று சொல்லுங்கள்."

"அண்ணுவிற்கு ஏற்ற தங்கையல்லவா? சொல்வதற்கு முன் தெரிந்துகொள்கிருய்."

விவாகத்திற்குப் பிறகு மதுசூதனன் ஒரு தினம் மிக டம்பத்துடன் விப்ரதாஸைப்பற்றி ஏளனமாய்ப் பேசினுன். அன்றே குமுதம் தன் தமையன் கடனைப்பற்றி ஊகித்துக்கொண்டாள். ஒவ்வொரு தினமும் இது கழி

படவேண்டுமே என்பதைப்பற்றியே சிந்தித்திருந்தாள். தன் தமையன் மனத்திலும் இதுவே அதிகமாக வேதனையை உண்டுபண்ணிக்கொண்டிருக்கிறதென்று அவள் அறிவாள். அன்று விப்ரதாவின் கடிதத்தின் அர்த்தத்தை நவீனன் விளக்கி எடுத்துரைத்ததும் இவையெல்லாவற்றிற்கும் அடிப்படையாக இருப்பது அந்தக் கடன் விஷயமே என்ற எண்ணம் அவளுக்கு உண்டாயிற்று. தன் தமையன் உடம்பு இவ்வளவு துர்ப்பலமாயிருப்பதற்குக் காரணமும் கல்கத்தாவிற்கு முக்கியமான கார்யமாக வந்ததும் இதுவே.

"முகர்ஜீ யண்ணு, என்னிடம் ஒளிக்காதீர்கள். அண்ணு யாரிடமாவது கடன் வாங்குவதற்காகவா இங்கே வந்திருக்கிறுன்?"

"ஆமாம்; ரூபாய் ஆகாயத்திலிருந்து குதிக்கிறதா? கடன் வாங்கியே கடனை அடைக்கவேண்டும். உறவினர் களிடம் கடன்பட்டிருப்பது நல்லதல்ல."

"ஆமாம்; அது சரியே. ரூபாய்க்கு ஏதாவது ஏற்பாடு முடிந்ததா?"

"அதற்காகத்தான் அலைகிறேன். ஏற்பாடு ஆகும்; ஏன் கவலைப்படவேண்டும்?"

"இல்லை, எனக்குத் தெரியும். சரியான ஏற்பாடு ஒன்றும் செய்ய முடியவில்லை."

"நல்லதம்மா, எல்லாந்தான் உனக்குத் தெரிந்திருக் கிறதே; என்னை ஏன் கேட்கிறுய்? சின்னக் குழந்தையா யிருக்கும்போது ஒருநாள் என் மீசையைப் பிடித்துக் கொண்டு, 'மீசை ஏன் முளைக்கிறது?' என்று கேட்டாய். சரியானகாலத்தில் அதன் விதையை விதைத்தால் மீசை முளைக்கும் என்று நான் சொன்னேன். அச்சமயம் அந்த

விடையைக்கொண்டு திருப்தியடைந்தாய். இப்போது கேட்டாயானால் உனக்குப் பதில் சொல்ல டாக்டரைத் தான் கூப்பிடவேண்டும். எல்லா விஷயமும் உனக்குத் தெளிவாய்ப் புரியும்படி சம்சாரத்தில் ஏற்படவில்லையே!"

"அண்ணா சமாசாரம் முழுவதும் எனக்குத் தெரிந்தே யாகவேண்டும்."

"அண்ணாவிற்கு எப்படி மீசை முளைக்கிறது என்பது கூடவா?"

"இந்தமாதிரி பேச்சை மறைக்காதீர்கள். அண்ணா முகத்தைப் பார்த்ததுமே ரூபாய்க்கு ஏற்பாடு செய்ய முடியவில்லை என்பது எனக்குத் தெரிகிறது."

"இருக்கட்டுமே; ஏற்பாடு செய்ய முடியவில்லை என்றால் நீ அதைத் தெரிந்துகொண்டு என்ன செய்ய முடியும்?"

"அதைச் சொல்ல முடியாது. ஆனால் இந்த விஷயம் எனக்குத் தெரிந்தே யாகவேண்டும். உங்களுக்குக் கடன் அகப்படவில்லையா?"

"இல்லை; அகப்படவில்லை.

"சுலபமாய் அகப்படாதா?"

"நிச்சயம் அகப்படும்; ஆனால் சுலபமாய் அகப்படாது அம்மா. உன் வார்த்தைகளுக்குப் பதில் சொல்வதை விட ரூபாயைத் தேடிக்கொண்டுபோனால் ஏதாவது காரிய லாபமுண்டாகும். நான் போகிறேன்."

சிறிது தூரம் சென்றதும் அவர் திரும்பி வந்து, "அம்மா, நீ இன்று புறப்பட்டு வந்தாயே: அதுவிஷயமாய் ஒருவிதத் தகராறும் ஏற்படவில்லையே? வாஸ்தவத்தைச் சொல்" என்று கேட்டார்.

"இருந்ததோ இல்லையோ, எனக்குத் தெளிவாய்த் தெரியவில்லை."

"கணவருடைய சம்மதம் கிடைத்ததா?"

"நான் கேட்காமல் இருக்கையிலேயே சம்மதம் கொடுத்துவிட்டார்."

"கோபித்துக்கொண்டா?"

"அது எனக்குச் சரியாய்த் தெரியாது. கூப்பிட்டனுப்புவதற்குமுன் வரவேண்டாம் என்று சொன்னார்."

"சே, சே, அப்படியிருக்கக்கூடாது. அதற்குமுன்பே நீயாகவே போகவேண்டும்."

"போனால், அது அவர் சொன்னதை மீறினதாகுமல்லவா?"

"இருக்கட்டும். நான் எல்லாவற்றையும் தெரிந்து கொண்டு வருகிறேன்."

அண்ணாவிற்கு இப்போது ஏற்பட்டிருக்கும் துன்பத்திற்கெல்லாம் தானே காரணம் என்பதைக் குமுதத்தால் மறக்க முடியவில்லை. தன்னை நொந்துகொண்டாள். தன்னை அடித்துத் துன்பப்படுத்திக்கொள்ள விரும்பினாள். முட்படுக்கையில் சில தபஸ்விகள் படுக்கிறார்களென்று கேள்விப்பட்டிருக்கிறாள். தான் அவ்விதம் படுத்துக்கொள்வதால் ஏதாவது லாபமுண்டாகுமெனில் அவள் அவ்விதம் செய்வதற்குத் தயாராய் இருந்தாள். யாராவது ஓர் யோகி அல்லது ஓர் சித்த புருஷர் அவளுக்கு ஏதாகிலும் வழி காண்பிக்கக் கூடுமானால் அதற்காகத் தன்னை விற்பதற்கும் அவள் தயாராக இருந்தாள். 'அந்தமாதிரி ஒருவர் நிச்சயமிருப்பார். ஆனால் அவர் எங்கே அகப்படப்போகிறார்? பெண்ணாக இல்லாமலிருந்தால் ஏதாவது உபாயம் செய்யக்

கூடும். சின்னண்ணாதான் என்ன செய்கிறான்? எல்லாச் சுமையையும் பெரியண்ணாவின்மேல் போட்டுவிட்டு இங்கிலாந்தில் எவ்விதம் இருக்கமுடிகிறது?'

அறைக்குள் குமுதம் நுழைந்ததும் விப்ரதாஸ் படுக்கையில் படுத்து உத்தரத்தை நோக்கிச் சிந்தித்தவண்ணம் இருப்பதைப் பார்த்தாள். இந்தமாதிரிக் கவலைப்பட்டால் உடம்பு எவ்விதம் சௌக்கியமாகும்? தன் கொடும் விதியிடம் சென்று தலையை முட்டிக்கொள்ளலாமென்று அவளுக்குத் தோன்றியது.

தமையனின் தலைப்புறம் உட்கார்ந்து அவன் தலையைத் தடவிக்கொண்டே குமுதம், "சின்னண்ணா எப்போது வருவான்?" என்று கேட்டாள்.

"அது எப்படிச்சொல்ல முடியும்?"

"வரச்சொல்லி எழுது."

"எதற்காக?"

"காரியங்களின் பொறுப்பெல்லாம் உன்மேலேயே விழுகிறதே! இதை நீ ஒருவனாக எப்படித் தாங்கமுடியும்?"

"சம்சாரத்தில் சிலர் உழைக்கிறார்கள்; சிலர் அநுபவிக்கிறார்கள். உழைப்பதன் பொறுப்பை நான் என்னுடையதாய் ஏற்றுக்கொண்டிருக்கிறேன். பிறருக்குக் கொடுப்பானேன்?"

"நான் புருஷனாக இருந்தால் எல்லாவற்றையும் உன்னிடமிருந்து பலவந்தமாகப் பிடுங்கிக்கொள்வேன்."

"ஆனால் உழைப்பதிலும் ஒரு திருப்தி இருக்கிறதென்று நீ உணருகிறாயல்லவா, குமு? இப்போது உன்னால் உழைக்கமுடியவில்லையே யென்று என்னிடமிருந்து பொறுப்பை வாங்கிச் சின்னண்ணாவிடம் கொடுத்து

உன் ஆற்றலைத் தணிக்க இஷ்டப்படுகிறாய். அவ்விதம் என்னிடமிருந்து நீ வாங்கிக்கொள்ளும்படி நான் என்ன தப்பிதம் செய்தேன்?"

"அண்ணா, நீ கடன் வாங்குவதற்காகத்தானே வந்திருக்கிறாய்?"

"உனக்கு எப்படித் தெரிந்தது?"

"உன் முகத்தைப் பார்க்கையிலேயே தெரிந்தது. இருக்கட்டும்; நான் ஒன்றும் செய்யமுடியாதா?"

"என்ன செய்வாய்?"

"ஏதாவது தஸ்தாவேஜியில் கையெழுத்துப் போடுவது, அந்தமாதிரி ஏதாவது செய்ய முடியாதா? என் கையெழுத்துக்கு மதிப்புக் கிடையாதா?"

"அதிகம் உண்டு. ஆனால் இந்த மதிப்பு என்னிடத்தில் தான் செல்லும். கடன் கொடுப்பவனிடத்தில் அல்ல."

"உன் காலில் விழுந்து கெஞ்சுகிறேன், அண்ணா. என்னால் ஒன்றும் செய்யமுடியாதா? சொல்."

"பொறுமையுடன் எல்லாவற்றையும் பார்த்துக் கொண்டிரு. சம்சாரத்தில் இதுவும் ஓர் அவசியமான காரியம். புயலுக்கு நேரே கப்பலைச் சரியாய் வைத்துக் கொள்வது எவ்வளவு அவசியமோ அவ்விதமே நம் புத்தியையும் சரியாய் வைத்துக்கொள்ளவேண்டும். என் எஸ்ராஜை எடுத்துக் கொஞ்சம் வாசி."

"அண்ணா, ஏதாவது செய்யவேண்டுமென்று எனக்கு ஆசையாயிருக்கிறது."

"வாசிப்பது என்பது 'ஏதாவது' இல்லையா?"

'ஏதாவது கஷ்டமான காரியம் செய்ய வேண்டும்."

"தஸ்தவேஜில் கையெழுத்துப் போடுவதைவிட எஸ்ராஜ் வாசிப்பது மிகவும் கடினமான வேலை. அதை எடுத்துக்கொண்டு வா."

---

## 48

மதுசூதனனிடம் மற்றவர்கள் பயந்தது போலச் சியாமசுந்தரியும் ஒரு சமயம் மிக்க பயத்துடன் இருந்தாள். உள்ளுக்குள் ஒவ்வொரு சமயம் மதுசூதனன் தன்னிடம் ஆகர்ஷிக்கப்பட்டிருக்கிறு னென்பதை அவள் ஊகித்தாள். ஆனால் எந்தப் புறத்திலிருந்து அவன் உள்ளத்தை அணுகுவது என்பதை அவளால் அறியமுடியவில்லை. இருட்டில் தழவுவது போல் அவள் பலவித முறைகளை மேற்கொண்டு பார்த்தும் இதுவரை ஒருவித வெற்றியும் அடைய முடியவில்லை. மதுசூதனன் வியாபாரம் ஒன்றிலேயே ஏகாக்ரசித்தனாய் லயித்திருந்தான். பணத்தைச் சம்பாதிக்க முயன்றிருக்கும் அவன், பெண்களை மிகத் துச்சமாய் மதிப்பிட்டான். ஆகையாலேயே பெண்கள் அவனிடம் மிகப் பயப்பட்டார்கள். ஆனால் இப் பயத்திலும் ஒரு வசீகரணசக்தி யிருக்கிறது. பயத்தினால் நெஞ்சம் படபடவென்று அடித்துக்கொள்ள, வெட்கத்துடன் சியாமசுந்தரி மதுசூதனன் அருகில் சுற்றிக்கொண்டிருந்தாள். நடுவில் நடுவில் மதுசூதனன் அவளுக்குச் சற்று இடம் கொடுப்பான். ஆனால் அதுவே மிக ஆபத்தாயிருந்தது. ஏனென்றால் உடனேயே தான் இடம் கொடுத்தது பற்றி வருந்தி மதுசூதனன் அதற்கு அடுத்த சில தினங்களில் அதற்கு நேர் விரோதமாக நடந்துகொண்டு தன் வாழ்க்கையில் பெண்கள் அவசியமே இல்லை என்பதை ரூபிப்பான். ஆகையால் சியாமசுந்தரி இதுவரை தன்னை அடக்கிக்கொண்டிருந்தாள்.

மதுசூதனனுக்கு விவாகமான பிறகு அவளால் பொறுத்திருக்கமுடியவில்லை. மதுசூதனன் மற்றப் பெண் களிடத்தில் நடந்துகொள்வதுபோல் குமுதத்தையும் கவனியாமல் இருந்திருந்தால் சியாமாவிற்குச் சற்று ஆறுதலாய் இருந்திருக்கும். ஆனால் மதுசூதனனைப் போன்றவனும் ஒரு பெண்ணிடம் கண்மூடித்தனமாய் மயங்கிவிடக்கூடும் என்பதைக் கண்ட சியாமாவிற்குத் தன்னை அடக்கிக்கொள்வது கஷ்டமாய்விட்டது. கொஞ்ச நாட்களாகச் சியாமா சற்றுத் தயக்கத்துடன் முன்னே வருகிருள். அவ்விதம் முன் செல்லக் கூடும் என்பதை அவள் அறிந்துகொண்டாள். இடையிடையே சிலதடை கள் ஏற்பட்டன. ஆனால் அவைகளும் பிறகு விலகிக் கொண்டுவந்தன. மதுசூதனனின் பலவீனம் வெளிப் பட்டுவிட்டது. ஆகையால் சியாமாவின் தைரியம் கட்டுக் கடங்காமல் நின்றது. குமுதம் போவதற்கு முதல்நாளிரவு மதுசூதனன் சியாமாவைத் தன் அருகில் எவ்வளவு ஏற்றுக்கொண்டானே அவ்வளவு அதற்குமுன் ஒருநாளும் செய்ததில்லை. அவள் மனத்தில், அதற்குத் தக்கபடி மறுதினம் பெரிய ஏமாற்றம் ஏற்படப்போகிறதே என்ற பயமும் இருந்தது. ஆனால் தான் கோழைத்தனம் காண் பிக்காமல் தைரியமாயிருந்தால் என்றும் பயப்படவேண் டியதில்லையென்று சியாமா தீர்மானித்தாள்.

மதுசூதனன் காலையிலேயே வெளியே போய்விட்டான். மத்தியான்னம் ஒருமணிக்கு வீடுவந்தான். அவனுடைய ஸ்நான ஆகாராதி நியமங்களுக்கு வெகுநாட்களாய் ஒருவித இடையூறும் நேரிட்டதில்லை. இன்று மிக்க அலுப்புடன் வீடு வந்த அவனுக்கு முதலில் குமுதத்தின் ஞாபகமே உண்டாயிற்று. இன்று குமுதம் சந்தோஷமாய்த் தன்

தமையனைப் பார்க்கச் சென்றுவிட்டாள். இதுவரை மதுசூதனன் தன்னைக் காப்பாற்றிக் கொள்ளும் சக்தியுடன் இருந்தான். ஆனால் இப்போது சற்றுச் சக்திக்குறைவு ஏற்பட்டுவிட்டது; சரீரமும் மனமும் சோர்வுற்றிருக்கும் சமயம் ஒரு பெண்மணியின் அன்பைப் பெறுவதற்கு மனத்தில் இச்சையுண்டாகிறது. ஆகையாலேயே இவ்விதம் குமுதம் சிறிதும் வருத்தமில்லாமல் சென்றதுபற்றி அவன் தன்னை நொந்துகொண்டான். இன்று அவன் போஜனம் செய்யும் சமயம் சியாமா வேண்டுமென்றே அவனருகில் வராமலிருந்தாள். ஒருகால் முதல்நாளிரவு அவன் அவளிடம் நடந்துகொண்ட விதத்தைப்பற்றி இன்று அவள்மேலேயே கோபம் கொண்டிருக்கலாம். சாப்பிட்டான பிறகு மதுசூதனன் மாடியில் தன் சூந்ய மான அறையில் போய் உட்கார்ந்தான். பிறகு அவனே வலுவில் சியாமாவைக் கூப்பிட்டனுப்பினான். சியாமா சிவப்புவர்ணத்தில் ஒரு சீமைப்பட்டுத் தாவணி அணிந்து, சிறிது வெட்கப்படும் பாவனையுடன் அறைக்குள் நுழைந்து ஒரு மூலையில் தலைகுனிந்து நின்றாள். மதுசூதனன், "வா, இங்கே வா. உட்கார்" என்று கூப்பிட்டான்.

சியாமா தலைப்புறம் உட்கார்ந்து, "நீங்கள் இன்று நிரம்பக் களைப்பாய் இருக்கிறீர்களே" என்று சொல்லி அவன் தலையைத் தன் கையால் தடவினாள்.

'ஆ! உன்கை ஜில்லென்று இருக்கிறது" என்றான் மதுசூதனன்.

இரவு மதுசூதனன் படுக்கவந்த சமயம் கூப்பிட்டு அனுப்பாமலிருக்கையிலேயே சியாமா தானாக அவன் அறைக்குள் நுழைந்து, "நீங்கள் தனியாக இருக்கிறீர்களே" என்றாள்.

சியாமசுந்தரி யாதொரு விஷயத்தையும் மூடிவைக் காமலேயே ஓர் அலக்ஷியத்துடன் பகிரங்கமாய் நடந்து கொள்வது வழக்கம். எல்லாரையும் சாக்ஷியாக வைத்துக் கொண்டு தன் அதிகாரத்தை ஸ்தாபித்துக்கொள்ள விரும்புவதுபோல முதலிலிருந்தே சியாமசுந்தரி மதுசூதன னிடம் செல்லும்போது மறைந்து செல்வதில்லை. குமுதம் எப்போது திரும்பிவருவாளோ தெரியாது, அதற்குள் நன்றாய் ஸ்திரப்படுத்திக் கொள்ளவேண்டும், இச்சமயம் லஜ்ஜைப்படுவது சரியல்ல என்பது அவள் எண்ணம். நிலைமையைக் கண்டு வேலையாட்கள் கூடப் பேசிக்கொள்ள ஆரம்பித்தனர். மதுசூதனன் உள்ளத்தில் இவ்வளவு நாட்களாய்த் திரண்டிருந்த நெருப்பானது கட்டுக்கடங் காமல் மீறிவிட்டது. வீட்டிலிருக்கும் யாரையும் பொருட்படுத்தாமல் வரம்பு கடந்து நடக்கலானான்.

இந்த வெள்ளத்தைத் தடுக்கமுடியாதென்று நவீன னும் நிஸ்தாரிணியும் உணர்ந்துகொண்டார்கள்.

"மன்னியை அழைத்து வாருங்கள். இனிமேல் தாமதிப்பது சரியா?" என்று நிஸ்தாரிணி கேட்டாள்.

"நானும் அதைத்தான் யோசித்துக்கொண்டிருக் கிறேன். ஆனால் அண்ணாவின் உத்தரவில்லாமல் என்ன செய்கிறது? பார்க்கலாம்" என்றான் நவீனன்.

ஒருதினம் காலை நவீனன் இதைப்பற்றித் தமைய னிடம் பிரஸ்தாபிக்க எண்ணிப் போன சமயம் அண்ணா எங்கேயோ வெளியே போகத் தயாராயிருப்பதைப் பார்த் தான். வண்டி வாயிலில் காத்திருந்தது.

"எங்கேயாவது போகப்போகிறீர்களா?" என்று நவீனன் கேட்டான்.

மதுசூதனன் சற்றுக் கூச்சத்துடன், "அந்த ஜோஸ்யர் வேங்கடஸ்வாமியிடம் போகப்போகிறேன்" என்றான்.

தன் மனத்தில் உண்டாயிருக்கும் இந்தச் சபலத்தை மைத்துனனிடமிருந்து அவன் ஒளிக்கவிரும்பினான். பிறகு அவனையும் கூட அழைத்துச் சென்றால் அவனும் இதற்கு உடந்தையாவான் என்ற எண்ணமுண்டாகவே, "நீயும் வா" என்றழைத்தான்.

"சங்கடத்தில் அகப்பட்டோமே" என்று எண்ணி நவீனன், "அவர் வீட்டில் இருக்கிறாரா என்பதை முதலில் பார்த்துவருகிறேன். ஊருக்குப் போயிருப்பாரென்று தோன்றுகிறது. போகவேண்டுமென்று சொல்லிக்கொண்டிருந்தார்" என்றான்.

"நாமிருவருமே போய்ப் பார்க்கலாம்" என்றான் மதுசூதனன்.

வேறுவழியில்லாமல் நவீனனும் கூடச் சென்றான். ஆனால் அவன் மனத்தில் கவலை அதிகமிருந்தது.

ஜோஸ்யர் வீட்டின் எதிரில் வண்டி நின்றதுமே நவீனன சட்டென்று குதித்து, "வீட்டில் ஒருவரும் இல்லை போலிருக்கிறதே!" என்றான்.

இதைச் சொல்லி முடிப்பதற்குள் வேங்கடஸ்வாமியே பற்குச்சியைக் கடித்துக்கொண்டு வாயிலண்டை வந்தார். நவீனன் அவரருகிற் சென்று நமஸ்கரித்துக் காதுடன், "ஜாக்ரதையாய்ப் பேசவேண்டும்" என்று முணுமுணுத்தான்.

முன் சென்ற பழைய 'இருட்டு' அறையில் ஜமுக்காளத்தின்மேல் மூவரும் உட்கார்ந்தார்கள். நவீனன் மதுசூதனனுக்குப் பின்புறம் உட்கார்ந்தான். மது

சூதனன் சொல்வதற்குமுன் நவீனன், "மகாராஜாவிற்கு இப்போது காலம் மிகக் கெட்டிருக்கிறது. எப்போது கிரஹங்கள் சரியாகும்? சொல்லுங்கள், சாஸ்திரிஜீ" என்முன்.

நவீனன் இவ்விதம் ஒழுங்கில்லாமல் கேள்வி கேட்டது பற்றி வெறுப்புற்றவனாய் மதுசூதனன், அவன் துடையில் தன் விரலால் அழுத்தி அவனை அடக்கினான்.

வேங்கடஸ்வாமி ராசிசக்கரத்தைக் கணித்துப் பார்த்து மதுசூதனனின் தனராசியில் சனியின் திருஷ்டி இருக்கிறதென்பதைத் தெளிவாய் விளக்கினார்.

கிரஹத்தின் பெயரைத் தெரிந்துகொண்டதால் மதுசூதனனுக்கு ஒருவிதப் பயனும் இல்லை. சனிக்கிரஹத்துடன் ராஜி ஏற்பாடு ஒன்றும் செய்யமுடியாது. தனக்கு விரோதமான மனிதர்களின் விவரமே தெரிய வேண்டும். எழுத்துவர்க்கத்தில் எந்த எழுத்தாக இருந்தாலும் சரி, அவர்கள் பெயர் தெரிந்தாக வேண்டும். நவீனனுக்கு மதுசூதனனின் ஆபீஸ் விஷயம் ஒன்றுமே தெரியாது. ஆகையால் அவன் சமிஜ்ஞையால் கூட ஜோஸ்யருக்கு உதவி செய்ய முடியவில்லை. வேங்கடஸ்வாமி முக்தபோதத்திலுள்ள சூத்திரங்களைச் சொல்லிக் கொண்டே அரைக்கண்ணால் மதுசூதனன் முகத்தைக் கவனித்து வந்தார். இன்று பிருகுமுனிவர் ஊமையாயிருந்தார், பெயரைக் குறிப்பிடவில்லை. சட்டென்று சாஸ்திரியார், "விரோதம் ஓர் பெண்ணின் மூலமாய் ஏற்படுகிறது" என்றார்.

நவீனன் மறுபடி மூச்சுவிடலானான். அந்தப் பெண்மணி சியாமசுந்தரி என்று சொல்லச் செய்துவிட்டால் பிறகு ஒருவிதக் கஷ்டமும் இல்லை. மதுசூதனன் பெண்ணின்

பெயர் என்னவென்று தெரிந்துகொள்ள விரும்பி னான். சாஸ்திரியார் எழுத்துக்களைச் சொல்ல ஆரம்பித் தார். "க" வர்க்கத்தைச் சொல்லிய வண்ணம் பிருகு முனிவர் பக்கம் செவிகொடுத்துக் கேட்பவர் போலிருந் தார். பார்வை மதுசூதனன் முகத்திலிருந்தது. "க" வர்க்க எழுத்தைக் கேட்கையிலேயே மதுசூதனன் முகத்தில் சிறிது மாறுதல் காணப்பட்டது. பின்னால் இருந்து கொண்டு நவீனன் அது அல்ல என்று தெரிவிக்கவிரும்பித் தலையை இப்படியும் அப்படியுமாய் ஆட்டினான். சென்னை வாசிகள் இவ்விதம் தலையாட்டினால் அதற்கு எதிர்விதமான அர்த்தம் கொள்வார்களென்பதை நவீனன் எவ்விதம் அறிவான்! வேங்கடஸ்வாமிக்கு இப்போது சிறிதும் சந்தேகமேயில்லை. சற்று அழுத்தத்துடன் "க வர்க்கம்" என்றார். மதுசூதனன் முகபாவனையிலிருந்து "க" வர்க்கத்து முதலெழுத்தே என்பதையும் தெரிந்துகொண் டார். ஆகையால் அதை இன்னும் சற்று வியாக்யானம் செய்து "க"வில்தான் மதுசூதனனுடைய "கு" அதாவது கெடுதல், அசுபம் முதலியவை முழுவதும் இருக்கின்றன என்று சொன்னார்.

இதற்கு மேல் முழுப்பெயரையும் தெரிந்துகொள்ள விரும்பாமல் மதுசூதனன் வருத்தத்துடன், "இதற்குப் பரிகாரம் என்ன?" என்று கேட்டான்.

வேங்கடஸ்வாமி அழுத்தமாய், "கண்டகேனைவ கண் டகம்" என்றார். அதாவது பரிகாரமும் மற்றொரு பெண்மணியால் ஏற்படும் என்பதாம்.

மதுசூதனன் திடுக்குற்றான். வேங்கடஸ்வாமி மனித ரின் மனோபாவங்களை அறிவதில் தேர்ச்சி பெற்றிருக் கிறார்!

நவீனன் மிகச் சஞ்சல மடைந்தவனாய், "ஸ்வாமிஜீ, குதிரைப்பந்தயத்தில் மகாராஜாவின் குதிரை ஜயித்ததா?" என்று கேட்டான்.

பந்தயத்தில் அதிகக் குதிரைகள் ஜயிப்பதில்லை என்று வேங்கடஸ்வாமி அறிவார். ஆகையால் சிறிது கணக்குப் போட்டுப் பார்த்துவிட்டு, "தோல்வியே தெரிகிறது" என்றார்.

சில தினங்களுக்குமுன் மதுசூதனன் குதிரை கஷ்டமான பந்தயத்தில் வென்றது. மதுசூதனனுக்குப் பேசுவதற்குச் சந்தர்ப்பம் அளிக்காமலேயே நவீனன், முகத்தில் மிகக்கவலையுடன் "ஸ்வாமிஜீ, என் பெண்ணின் விஷயம் என்னவாகும்?" என்று கேட்டான். நவீனனுக்குப் பெண் கிடையாது என்று சொல்ல வேண்டியதில்லை.

இவன் வரன் தேடிக்கொண்டிருக்கிறானென்று வேங்கடஸ்வாமி ஊகித்தார். இவன் தோற்றத்திலிருந்து இவன் பெண் அப்ஸரஸாக இருக்கமாட்டாளென்று தெரிந்துகொண்டார். ஆகையால், "வரன் சீக்கிரம் அகப்படாது; அதிகம் பொருள் செலவு ஏற்படும்" என்றார்.

மதுசூதனனுக்குச் சிறிதும் அவகாசம் கொடுக்காமலேயே மேன்மேலும் நவீனன் பத்துப் பன்னிரண்டு தாறுமாறான கேள்விகளைக் கேட்டுவிட்டு அதற்கு விசித்திரமான விடைகளைப் பெற்றபின், "அண்ணா, இன்னும் என்ன? போகலாமே!" என்றான்.

வண்டியில் திரும்பி வரும் சமயம் நவீனன், "அண்ணா! இது முழு ஏமாற்றம்" என்றான்.

"ஆனால் அன்று."

"அன்று அவர் முதலிலேயே விவரம் தெரிந்து கொண்டிருக்கிறார்."

"நான் வருவேனென்று எப்படித் தெரியும்?"

"என்னுடைய முட்டாள்தனத்தினால்தான். நான் உங்களை அவரிடம் அழைத்துச் சென்றதே தப்பு."

ஜோஸ்யரின் மோசம் எவ்வளவு வெளிப்படையாய்த் தெரிந்தபோதிலும் அந்தக் "க" வர்க்கத்தின் "கு" மதுசூதனன் மனத்தில் பதிந்துவிட்டது. கிரஹபலனில் நம்பிக்கையில்லாமல் குருட்டுக் கேள்விகேட்டு அவற்றிற்கு எவ்வித விடை கிடைத்தாலும், சரியான கேள்விக்குச் சரியான விடையே கிடைக்குமென்று அவன் எண்ணினான். மதுசூதனன் ஒருநாளும் எதிர்பாராத இந்த ஆபத்து அவனுடைய விவாகத்திற்குப் பிறகே ஏற்பட்டிருக்கிறது. இதைவிட முக்கிய ருசு என்ன வேண்டும்?

நவீனன் மெதுவாய், "அண்ணு, இரண்டு வாரகாலம் ஆய்விட்டதே, மன்னியை அழைத்து வரலாமா?" என்று கேட்டான்.

"ஏன்? இவ்வளவு அவசரம் என்ன? இப்போதே சொல்லி வைக்கிறேன்; நவீன, இந்த விஷயங்களை யெல்லாம் என்னிடம் சொல்லித் தொந்தரவு செய்யாதே. எனக்கு என்றைக்கு இஷ்டமோ அன்று நானே கூப்பிடுகிறேன்."

நவீனனுக்குத் தன் தமையனின் சுவபாவம் தெரியும். இந்த வார்த்தையை இனிப் பிரஸ்தாபிக்க முடியாது என்று அறிந்துகொண்டான். இருந்தும் சற்றுத் துணிவு கொண்டு, "மன்னியைப் பார்ப்பதற்காக என் மனைவி போகவேண்டுமென்றால், ஒன்றும் ஆக்ஷேபணை யில்லையே?"

என்று கேட்டான். மதுசூதனன் அலக்ஷியத்துடன், "போகக்கூடாது" என்று சொல்லிவிட்டான்.

---

## 49

விப்ரதாஸ் ஒரு நாற்காலியைக் காட்டி, "வாருங்கள், நவீன பாபு, உட்காருங்கள்" என்று பரிவுடன் நவீனனை அழைத்தான்.

"என்னை நீங்கள் இன்னும் நன்ருய் அறிந்து கொள்ளவில்லை போலும். என்னை ஏதோ ராஜா வீட்டுப் பிள்ளை மாதிரியல்லவோ எண்ணிக் கூப்பிடுகிறீர்கள்! நான் உங்கள் தங்கையின் அடிமை. என்னை ஆசீர்வதிக்காமல் நீங்கள் இப்படிக் கௌரவப்படுத்துவது எனக்குப் பிடிக்கவில்லை. இது என்ன! உங்கள் உடம்பு இப்படி இளைத்து நிழலாய் விட்டதே!" என்ருன் நவீனன்.

"சரீரம் சாச்வதமா! அது ஒரு சாஸ்த்ரமோ! இந்த ஞானம் அடிக்கடி வருவது நல்லதே. கடைசியில் வரும் ஒருபாடம் முன்னடியாகவே நமக்குத் தெரியுமல்லவா?" என்ருன் விப்ரதாஸ்.

குமுதம் அறையினுள் பிரவேசித்து, "வாருங்கள், உள்ளே வாருங்கள். ஏதாவது ஆகாரம் செய்துவிட்டுப் பிறகு எல்லாம் பேசலாம்" என்ருள்.

"ஆகாரமா! அது இருக்கவே இருக்கிறது. முதலில் நான் ஒன்று கேட்க விரும்புகிறேன். அது பூர்த்தியடைகிற வரையில் இந்தப் பிராம்மண அதிதி உங்கள் வீட்டு வாயிலில் பட்டினியாகவே கிடப்பான்" என்ருன் நவீனன்.

"அது என்ன சொல்லுங்கள்?" என்று குமுதம் கேட்டாள்.

"நீங்கள் நம் அகத்திலிருந்தபோதே இதைக் கேட்கலா மென்றிருந்தேன். ஆனால் என் மனம் அதைக் கேட்கத் துணியவில்லை. உங்களுடைய படம் ஒன்று பக்தனுக்குக் கொடுத்துத்தானாகவேண்டும். இதோ எதிரே உங்கள் தமையனின் அறையில் படத்தைப் பார்த்ததும் என்னுடைய ஆவல் இன்னும் அதிகமாகிறது" என்றான் நவீனன்.

நல்ல படங்கள் எப்போதும் தெய்வாதீனமாகத்தான் அமைவது வழக்கம். குமுதினியின் இந்தப் படமும் அதுபோலவே ஒரு தெய்விக சிருஷ்டியாக விளங்கிற்று. படத்தில் அவள் முகத்தில் ஓர் அபூர்வ ஒளி விளையாடிற்று. அவளுடைய பரிசுத்தமான அந்தக்கரணமும் புத்தியின் தீக்ஷண்யமும் நெற்றியில் விளங்கின. கண்களில் ஒன்றும் அறியாததோர் பாவனை, கருணை நிறைந்த ஓர் அழகிய பார்வை. நின்ற வண்ணம் பக்கத்திலுள்ள சோபாவின் பிடியில் வலது கையை ஊன்றியவாறு குமுதம் படத்தில் தோன்றினாள். எதிரே தன் வருங்காலத்து நிழலைப் பார்த்துப் பிரமித்துவிட்டமாதிரி இருந்தது அவள் நின்றிருக்கும் பாணி.

குமுதினி தன்னுடைய படம் அங்கு மாட்டப்பட்டிருப்பதைக் கவனிக்கவில்லை. விவாகத்திற்குச் சில தினங்களுக்கு முன்பு கல்கத்தாவிலிருந்து படம்பிடிப்பவனை வரவழைத்து விப்ரதாஸ் குமுதினியைப் படம்பிடித்தான். தன்னுடைய அறையிலேயே அவன் அதை மாட்டி வைத்திருந்தான். அதைப் பார்த்ததும் குமுதினியின் உள்ளம் பூரித்துவிட்டது. அந்தப் படத்தின் பிரதிகள் இன்னும் இருக்கும் என்று எண்ணி அவள் அண்ணாவின் முகத்தைப் பார்த்தாள். அப்போது நவீனன், "பார்த்தீர்களா, விப்ர

தாஸ் பாபு, ராணி அம்மாளுக்கு என்மேல் கிருபை பிறந்துவிட்டது. அதோ பாருங்கள் அவருடைய கண்களை. நான் எதற்கும் தகுதியற்றவன் என்பதாலேயே அவர் என்னிடம் பரிதாபம் கொண்டிருக்கிறார்'' என்றான்.

விப்ரதாஸ் சிரித்துவிட்டு, "குமு, என் தோல்பெட்டியில் இன்னும் படங்கள் இருக்கின்றனவா? பார். உன்னுடைய பக்தனுக்கு நீ இஷ்டப்பட்டதைக் கொடுக்கலாம்'' என்றான்.

குமுதம் நவீனனை உள்ளே சாப்பிட அழைத்துச் சென்றதும் முகர்ஜீ வந்து, "நான் சுபோதிற்குச் சீக்கிரமாய் வரும்படித் தந்தி அடித்துவிட்டேன்'' என்றார்.

"என் பெயரிலா?''

"ஆமாம். உன் பெயரில்தான். கடைசிவரை ஒரு முடிவிற்கும் வராமல் நீ காலம் கழிப்பாய். கடனோ மிக நிர்ப்பந்தமான விஷயமாயிருக்கிறது. டாக்டர் சொல்வதைப் பார்த்தால் நீ ஒருவனாக இந்தக் காரியத்தைச் சமாளிக்க முடியாது'' என்றார் முகர்ஜீ.

விப்ரதாஸின் இதயத்தில் கோளாறு ஏற்பட்டிருக்கிறதென்றும், சரீரத்தையும் மனத்தையும் அலையாமல் வைத்துக்கொள்வது மிக அவசியம் என்றும் டாக்டர்கள் சொன்னார்கள். குஸ்திப்பழக்கத்தில் விப்ரதாஸிற்கு அதிக மோகம். அதை மிதமிஞ்சிச் செய்ததால் இதயம் பலவீனப்பட்டுவிட்டது. அதோடுகூடக் கடன் தொல்லையும் குடும்பக் கலவரங்களும் சேர்ந்தன.

சுபோதை இவ்விதம் அவசரப்படுத்தி வரவழைப்பது நன்மையா, அல்லவாவென்று விப்ரதாஸிற்குத் தெரியவில்லை. மௌனமாக யோசனையில் ஆழ்ந்திருந்தான்.

"நீ எதற்காகச் சிந்திக்கிறாய்? சட்டப்படன்று ஒரு விலேவாரியாக்க வேண்டாமா? அவனுங் கூட இல்லாமல் இவையெல்லாம் எப்படி நடக்கும்? பன்னிரண்டு வட்டிக்கு மார்வாடியின் கையில் தலையைக் கொடுப்பது முடியாது. அதனுடன் அவர்கள் இரண்டு லக்ஷம் ரூபாயை வட்டிக்காக முதலிலேயே எடுத்துக்கொண்டு மிகுதியைத் தருவார்கள். அதற்குமேல் தரகு இருக்கவே இருக்கிறது" என்றார் முகர்ஜீ.

"அப்படியென்றால் சுபோது வந்துதான் ஆகவேண்டும். ஆனால் அவன் வருவானு என்பது சந்தேகம்."

"எப்பேர்ப்பட்ட துரையாகிவிட்டாலும், உன் தந்தியைப் பார்த்து வராமலிருப்பானு? வீண் கவலைப்படாதே. இனிக் காலத்தை ஓட்டினுல் பிரயோஜனமில்லை. குழந்தை குமுதத்தையும் புக்ககத்திற்கு அனுப்பிவிடுவது நல்லது" என்றார் முகர்ஜீ.

விப்ரதாஸ் சிறிது நேரம் சும்மா இருந்துவிட்டு, "மதுசூதனன் கூப்பிட்டால்தானே நான் அனுப்ப முடியும்?" என்று கேட்டான்.

"ஏன்? குமுதம் அப்படி என்ன மதுசூதனன் கீழ்ச்சணல் சுமக்கும் கூலிக்காரியா? தன்னுடைய சொந்த வீட்டிற்குப் போக அநுமதிகூடவா வேண்டும்?" என்றார் முகர்ஜீ.

சிற்றுண்டி உண்டுவிட்டு நவீனன் தனியாக விப்ரதாஸின் அறைக்கு வந்தான். விப்ரதாஸ், "குமுதம் உங்கள்மேல் நிரம்பப் பக்ஷமாயிருக்கிறாள்" என்றான்.

"என் பாக்கியம்; எனக்கு ஒரு யோக்யதையும் இல்லை. அதனுலேயே அவர் என்னிடம் அதிகம் விச்வாசத்துடன் இருக்கிறார்."

"அவளைப்பற்றி உங்களிடம் சில வார்த்தைகள் கேட்கவேண்டும். எதையும் ஒளிக்காமல் சொல்லுங்கள்."

"அப்படி உங்களிடம் ஒளித்துச் சொல்லும்படியாக என்னிடம் ஒன்றுமில்லையே!"

"குமுதம் இங்கே திடீரென்று வந்ததற்கு ஏதோ முக்கிய காரணம் இருக்கவேண்டும்."

"நீங்கள் சொல்வது வாஸ்தவமே. சம்சாரத்தில் யாரைச் சீரும் செல்வமுமாக வைத்துக் கொண்டாட வேண்டுமோ அவர் அலக்ஷியம் செய்யப்பட்டிருக்கிறார்."

"ஆனால் அவள் அலக்ஷியமா செய்யப்பட்டாள்?"

"இந்த வெட்கக் கேட்டினாலல்லவா அவர் இங்கு வந்துவிட்டார். நான் என்ன சொல்லமுடியும்? உங்கள் பாதங்களைத்தொட்டு என் வரையில் மன்னிப்புக் கேட்டுக் கொள்கிறேன்."

"குமுதம் உடனேயே புருஷன் வீடு செல்வது நலமா?"

"வாஸ்தவத்தைச் சொல்லும் பக்ஷத்தில் அவர் இப்போது அங்கே போவது உசிதமில்லை."

என்ன நடந்தது என்பதைப் பற்றி விப்ரதாஸ் நவீனனை வற்புறுத்திக் கேட்கவில்லை. அவ்விதம் கேட்பது மரியாதையல்ல என்றே அவன் எண்ணினான். குமுதினியிடமிருந்து இதை அறிய அவனுக்கு விருப்பமில்லை. மனத்திற்குள்ளேயே துடித்துக்கொண்டிருந்தான். முகர்ஜியைக் கூப்பிட்டு, "நீங்கள் அவர்கள் வீட்டிற்கு அடிக்கடிப் போய்க்கொண்டிருக்கிறீர்களே; மதுசூதனன்

விஷயமாய் ஏதாவது தெரியுமா?” என்று கேட்டான். “ஏதோ கொஞ்சம் காதில் விழுந்தது. அதை முழுவதும் தெரிந்துகொள்ளாமல் எப்படிச் சொல்வது? இரண்டுநாள் பொறுத்திரு; நன்ருய்த் தெரிந்துகொண்டு சொல்கிறேன்” என்ருர்.

பல சந்தேகங்கள் விப்ரதாஸின் மனத்தை வாட்டின. இதற்குப் பதில் ஒன்றும் செய்ய முடியவில்லேயே என்ற ஏக்கம் அவனுக்கு அதிகமாக இருந்தது.

---

## 50

குமுதம் பலநாட்களாய் விரும்பினபடி தனக்கு அறிமுகமான இந்த வீட்டில் அண்ணுவின் ஆதரவின்கீழ் வந்திருக்கிருள். ஆனல் எதிர்பார்த்தபடி அது அவளுக்குத் திருப்தியை அளிக்கவில்லே. ஒவ்வொரு சமயம் ரோஷத்தினல், “திரும்பிப் போய்விடலாமா?” என்று அவளுக்குத் தோன்றும். வீட்டிலுள்ள யாவரும், “இவள் ஏன் இன்னும் திரும்பிப் போகவில்லே? இவளுக்கு என்ன நேரிட்டது?” என்று தங்கள் மனத்திற்குள்ளேயே சொல்லிக் கொள்வது போல் அவளுக்குத் தோன்றிற்று. அண்ணு தன்னிடம் கொண்டுள்ள ஆசையிலும் ஓர் ஏக்கம் கலந்திருந்தது. அது என்னவென்று தீர்ந்து தெளிய இருவரும் பேச முடியவில்லே. எல்லாம் அவள்வரைக்கும் மறைக்கப்பட்டிருந்தது.

மாலேப் பொழுது நெருங்கிற்று. படுக்கையறையின் ஜன்னலில் குமுதம் உட்கார்ந்திருந்தாள். காக்கைகள் கரைவதும், வெளியே வீதியில் வண்டிகள் போவதும், ஜனசந்தடியும் இருந்தன. புதிதாகத் தோன்றின வஸந்தருதுவின்

ஸ்பர்சம் வீடுகள் நிறைந்த இந்நகரில் படியவில்லை. எதிரே யுள்ள வீட்டை அநேகமாய் மறைத்துக் கொண்டு ஒரு பாதாமரம் இலைதழைத்து இருந்தது. காற்று அதன் தளிர்களை அசைத்து அதன்மேல் விழும் மாலை ஒளியைச் சிதறச் செய்தது. இதுபோன்ற காலத்தில்தான் வீட்டில் பழகின மான் தன் காட்டின் நினைவுவந்து அதை நோக்கி ஓடும். மெல்லிய காற்றில் வசந்தத்தின் ஸ்பர்சம் தோன்றும் போது தரணி நீலவானின் நெடுவழியை நோக்கி உவகை கொள்கிறது. நம்மைச் சுற்றிலுமுள்ள தடைகள் யாவும் பொய்யென்றே மனத்தில் படுகிறது. பிடிக்கு அடங்காத ஓர் சித்திரம்; அதன் வர்ணங்கள் ஆகாயத்தில் சிதற, அதன் உருவம் நிலத்திலும் நீரிலும் பலவித மாயைகளை விளைவித்து ஓடிவிடுகிறது. ஆனால் அதுவே உண்மை போல் படுகிறது. எல்லாவற்றையும் உதறிவிட்டுத் தன்னையும் விட்டு, எங்காவது ஓடிவிடவேண்டுவதுபோல குமுதினியின் மனம் அடித்துக்கொண்டது. ஆனால் இது என்ன? ஒன்று அவளைத் தடுக்கிறதே! இந்த வீட்டிலும் அவள் எதேச்சையாய் இருக்க இடமில்லை. அவளுடைய கற்பனையில் மரணமே இன்பமாகத் தோன்றிற்று. "இருண்ட யமுனையின் எதிர்க்கரையில் கறுத்த தாவணி அணிந்து ஒருத்தி தன் காதலனைச் சந்திக்கச் செல்கிறாள். ஒவ்வொருதினமும் மாளாத வழியையும் மீளாத துக்கத்தையும் கடந்து செல்கிறாள்" என்று தனக்குள்ளே சொல்லிக்கொண்டாள். "அண்ணாவிற்கு உடம்பு அசௌக்கியம் அதிகமாகிக் கொண்டே வருகிறது. சுச்ருஷை செய்ய வந்த நான் மனோவியாதியை அதிகமாகும்படிச் செய்துவிட்டேன். நான் எதை எண்ணி வந்தேனோ அதற்கு நேர்மாறாக விளைகிறதே!" என்று முகத்தைக் கைகளால் மூடிக்கொண்டு அழு

தாள். அழுகையின் வேகம் தணிந்ததும், "என் இடத்திற்கே திரும்பிவிடவேண்டும். நடப்பது நடந்தே தீரும். எல்லாவற்றையும் சளைக்காமல் சகித்துக்கொள்வதே கடமை. கடைசியில் விடுதலை இருக்கவே இருக்கிறது: இனிமையான, குளிர்ந்த மரணம்" என்று அவள் எண்ணுவாள். சாவின் தோற்றம் அவள் மனத்தில் ஊன்ற ஊன்ற இல் வாழ்க்கையின் பாரம் அதிகக் கஷ்டமாகத் தோன்றவில்லை. அவள் மனம் பாடத்தொடங்கியது:

'பதபர ரயனீ அந்தேரி
குஞ்ச பாதீப உஜியாரா."

[வழியெங்கும் இரவின் அந்தகாரம்; கொடிமண்டபத்தில் விளக்கின் பிரகாசம்.]

மத்தியான்னம் குமுதம் அண்ணாவைத் தூங்கச்செய்து விட்டு வந்திருந்தாள். இப்போது மருந்தும் பத்தியமும் கொடுக்கும் வேளை நெருங்கிவிட்டது. அறையில் வந்து பார்த்த சமயம் விப்ரதாஸ் தன் மடியில் காகிதம் எழுதும் அட்டையை வைத்துக் கொண்டு சுபோதிற்கு இங்கிலீஷில் நீண்டகடிதம் எழுதுவதைப் பார்த்தாள். அதட்டும் பாவனையாய்க் குமுதம் தன் தமையனை, "அண்ணா, இன்று நீ நன்றாய்த் தூங்கவில்லையே?" என்று கேட்டாள்.

"நான் தூங்கினால் மாத்திரமே சிரமபரிகாரம் ஏற்படுமென்று நீ நினைத்திருக்கிறாய். கடிதம் எழுதவேண்டுமென்று எப்போது மனத்தில் தோன்றுகிறதோ அப்போது அதை எழுதினால் மாத்திரமே ஆயாசம் தீருகிறது" என்றான்.

சுபோதைப்பற்றின வேதனை அவனை வாட்டுகிறது என்று குமுதம் தெரிந்துகொண்டாள். இந்தப் பக்கம்

ஓர் அண்ணாவின் மனம் துயரக்கடலில் ஆழ்ந்திருக்கிறது; மற்றோர் அண்ணா எதையும் கவனிக்காமல் இருக்கிறான். இவர்களுக்கிடையே எந்தவித பாக்கியத்துடன் இப்படி ஒரு தங்கை பிறந்திருக்கிறாளோ! அண்ணாவிற்கு ம கொடுத்து விட்டுக் குமுதம் நிதானமாய், "வந்து நிரம்ப நாளாய் விட்டது. நான் திரும்பிப்போகலாமென்று நினைக்கிறேன்" என்றாள்.

இதன் கருத்து என்னவென்று அறிய விப்ரதாஸ் குமுதினியின் வதனத்தை நோக்கினான். சகோதரன் சகோதரி இருவரும் முன்பு ஒருவருக்கொருவர் எவ்வளவு தெளிவாய்த் தங்கள் மனத்தை வெளியிட்டு வந்தனரோ அதுபோல இப்போது இல்லை. மனத்திலுள்ள விஷயத்தைச் சொல்லவேண்டியிருந்தால் தடுமாறித் தடவிச் சொல்லவேண்டியிருந்தது. விப்ரதாஸ் கடிதம் எழுதுவதை நிறுத்தினான். குமுதினியைத் தன்னருகில் உட்காரவைத்து ஒன்றும் பேசாமல் அவளுடைய கைகளை மெதுவாய்த் தடவிக்கொடுத்தான். அதன் அர்த்தத்தைக் குமுதம் நன்றாய் அறிந்துகொண்டாள். சம்சார பந்தம் கடினமாக இருந்தாலும் அண்ணாவின் அன்பில் மட்டும் அவளுக்குக் குறைவு ஏற்படவில்லை. அவள் கண்களிலிருந்து நீர்த்துளி உதிரும் தருவாயிலிருந்தது. ஆனால் அதை அடக்கிக்கொண்டாள். இனி இந்த அன்பின்பால் அதிகப்பொறுப்பைப் போட்டு வருத்தப்படுத்தக் கூடாது என்று தன் மனத்திற்குள்ளே தெளிந்துகொண்டாள். மறுபடி விப்ரதாஸை நோக்கி, "அண்ணா, நான் போவதாக நிச்சயித்துவிட்டேன்" என்றாள்.

இதற்கு என்ன பதில் சொல்வதென்று விப்ரதாஸிற்குத் தெரியவில்லை. குமுதம் செல்வதே எல்லா விஷயத்

திற்கும் நன்மை. அதுவே அவள் செய்யவேண்டிய கடமையும் ஆகும். அவன் மௌனமாயிருந்தான். அப்போது 'டாம்' தூக்கத்திலிருந்து எழுந்து குமுதத்தின் மடியின்மேல் தாவி இரண்டு முன்கால்களையும் வைத்து விப்ரதாஸ் புசித்து மிகுந்த ரொட்டித் துண்டுகளுக்காக வாலை ஆட்டிற்று.

வேலைக்காரன் வந்து முகர்ஜீ வந்திருப்பதாய்ச் சொன்னான். குமுதம் சற்றுக் கலக்கமடைந்து, "இன்று பகல் நீ தூங்கவேயில்லை. அவரோடு பேசிப் பேசி நீ பலஹீனமடைகிறாய். நான் போய் என்ன சமாசாரம் என்று கேட்டுக் கொள்கிறேன். பிறகு உனக்குச் சொல்கிறேன்" என்றாள்.

"நீ பெரிய டாக்டராய்ப் போய்விட்டாயே. ஒருவர் சமாசாரத்தை இன்னொருவர் கேட்பதால் வியாதிஸ்தருக்கு மனத்தில் நிம்மதி ஏற்படுமோ?"

"ஆனால் சரி, நான் கேட்கவில்லை. ஆனால் இன்று இருக்கட்டும்—"

"குமு, ஓர் இங்கிலீஷ் கவி, 'கேட்ட சங்கீதம் நன்றாயிருக்கிறது. ஆனால் கேட்காத சங்கீதமே அதிலும் இனிமையானது' என்று சொல்கிறார். அதுபோல் கேட்ட செய்தி மனத்திற்குச் சலிப்பைத் தருகிறது; ஆனால் கேட்காத சமாசாரம் இன்னும் அதிக அலுப்பை உண்டாக்குகிறதல்லவா? ஆகையால் இதைச் சிக்கிரம் கேட்டுத் தெளிவதே நல்லது."

"சரி, நான் இன்னும் பதினைந்து நிமிஷத்திற்குள் திரும்பி வருவேன். இதற்குள் நீங்கள் பேசிமுடியாவிட்டால் நான் நடுவில் நுழைந்து எஸ்ராஜை வைத்துக்

கொண்டு பிமபல ஸ்ரீராகத்தை ஆரம்பித்துவிடுவேன்”
என்றாள் குமுதம்.

“அப்படியே செய்” என்றான் விபிரதாஸ.

அரை மணிநேரம் கழித்து எஸ்ராஜூம் கையுமாகக் குமுதம் அறைக்குள் நுழைந்தாள். ஆனால் விப்ரதாஸின் வாடின முகத்தைப் பார்த்ததும் வாத்தியத்தைச் சுவர் மூலையில் சாற்றிவிட்டு அண்ணாவின் பக்கத்தி லுட்கார்ந்தாள். அவனுடைய கரங்களைப் பிடித்துக்கொண்டு, “உனக்கென்ன, அண்ணா?” என்று கேட்டாள்.

குமுதினி தன் தமையனிடம் இந்நாட்களில் ஒரு சஞ்சலமட்டுமே இருப்பதை அறிந்திருக்கிறாள். இன்று அதனுடன் ஓர் ஆழ்ந்த வியாகுலம் தோன்றுவதை அவள் கண்டாள். அவனுடைய வாழ்வில் எவ்வளவோ சோக தாபங்கள் வந்துபோயிருக்கின்றன. அவைகளுக்குப் பயந்து அவன் கலங்கினதை இதுவரை யாரும் கண்டதில்லை. புத்தகம் படிப்பது, பாட்டிசைப்பது, தூர திருஷ்டிக் கருவியினால் நக்ஷத்திரங்களைக் கவனிப்பது, குதிரை சவாரிசெய்வது, பல இடங்களிலிருந்து அபூர்வமான செடிகொடிகள் தருவித்துத் தோட்டம் அமைப்பது என்பன போன்ற பல விஷயங்களிலும் அவனுடைய கவனம் செல்லுமே ஒழிய, தன்னுடைய சுயதுக்கத்தையோ கஷ்டத்தையோ அவன் பாராட்டினது இல்லை. இப்போது நோயுற்றுக் கிடப்பதனால் அவனைச் சற்றுமுள்ள இந்தச் சிறுபந்தம் அவனை அதிகமாக வருத்தியது. இதுவரையில் தனக்காக அவன் யாதொரு சுச்ருஷையும் வேண்டினதில்லை. இப்போதோ பிறர் இஷ்டத்தை நாட வேண்டியவனானான். எதிர்பார்த்தபடி கடிதம் வராமற் போனால் இப்போதெல்லாம் அவனுக்கு ஆத்திரம்

வருகிறது. அவனுடைய எண்ணங்கள் யாவும் இருளடைந்துவிடுகின்றன. அதனாலல்லவா இன்று தமையன்மேல் இருக்கும் குமுதினியின் அன்பு தாயின் வாத்ஸல்யமாக உருவெடுத்து விளங்குகிறது! 'எதற்கும் கலங்காத அப்பேர்ப்பட்ட அண்ணாவிற்கு எங்கிருந்தோ சிறுபிள்ளையின் குணம் வந்துவிட்டதே! எதிலும் மனம் லயிக்காமல் சஞ்சலப்பட்டுக்கொண்டு பிடிவாதத்துடன் இருக்கிறதே' என்று எண்ணியிருந்தாள். ஆனால் இன்று ஓர் ஆழ்ந்த வருத்தமும் ஏக்கமும் இருந்தன.

குமுதம் வந்துபார்க்கையில் அண்ணாவிற்கு மூண்டிருந்த இந்த ஆவேசம் சற்றுத் தணிந்திருந்தது. சிறிது முன்பு அவன் கண்களில் தோன்றிய நெருப்பு, சாக்ஷாத் ஈச்வரனின் நெற்றிக்கண்ணில் தோன்றும் நெருப்புப் போலிருந்தது. உலகத்தில் உலவும் ஒரு கோரபாபத்தை அது எரித்துச் சாம்பராக்குவது மாதிரி இருந்தது. குமுதினியின் வார்த்தைக்கு மறுமொழி ஒன்றும் சொல்லாமல் எதிரேயுள்ள சுவரைக் கண்கொட்டாமல் பார்த்த வண்ணம் விப்ரதாஸ் மௌனமாயிருந்தான். சிறிது நேரம் கழித்துக் குமுதம் மறுபடி, "அண்ணா, உனக்கென்ன? சொல்லேன்" என்றாள்.

தூரத்தில் ஏதோ ஒன்றைப் பார்ப்பவன்போல் விப்ரதாஸ், "துயரத்தை வெல்லவேண்டும். நாம் அதற்குப் பயந்தால் அது மேலும் அதிகமாகிறது. அதற்குப் பயப்படக்கூடாது. அநுபவித்தே தீரவேண்டும்" என்றான்.

"நீ எனக்கு உபதேசம் செய். அதுபோலவே நடந்துகொள்கிறேன், அண்ணா."

"பெண்களை அவமதித்தால் அது சமூகத்தையே அவமதித்தமாதிரி. அந்தக் கஷ்டம் ஒரு தனிப்பெண்ணை மாத்திரம் பாதிக்கவில்லை."

இதன் அர்த்தம் குமுதத்திற்கு நன்றாக விளங்கவில்லை.

"இந்த வேதனையை என்னுடைய சொந்தமான விஷயமென்றே கஷ்டத்துடன் சமாளித்தேன். இன்றோ சமூகத்தின்பொருட்டே அதனுடன் போராட வேண்டு மென்று தோன்றுகிறது" என்றான் விப்ரதாஸ். அவனுடைய வெளுத்த முகத்தில் இரத்தம் ஜிவ்வென்று பரவிச் சிவந்தது. மடியிலிருந்த பட்டுத்தலையணையைத் தூரத்தில் எறிந்தான். படுக்கையை விட்டுப் பரபரப்புடன் நாற்காலியில் உட்காரும் தருணம் குமுதம் அவனுடைய கைகளைப் பற்றி, "சாந்தமாயிரு, அண்ணா. உட்காரு. இதனால் உன் உடம்பிற்குக் கெடுதிவரும்" என்று கூறி, படுக்கையில் உயரமாகத் தலையணையைப் போட்டுச் சற்று வலுவுடனே அண்ணாவைப் படுக்கவைத்தாள்.

விப்ரதாஸ் தன் உடம்பின் மேலிருந்த துணியை இழுத்துப் பிடித்துக் கொண்டு, "துக்கத்தைச் சகிப்பதைத் தவிர்த்துப் பெண்களுக்கு ஒரு வழியுமில்லை யென்றல்லவா அவர்களை இன்னமும் துன்பப்படுத்துகிறார்கள்? இனிமேல் இந்த அநீதியைப் பொறுக்க முடியாது என்று சொல்ல வேண்டிய தினம் வந்துவிட்டது. குமு, நீ இந்த இடத்தை உன் சொந்த இடமாகவே கருதுவாயா? அந்த வீட்டில் நீ மறுபடியும் கால் எடுத்து வைக்கக்கூடாது."

இன்று விப்ரதாஸ் அநேக சமாசாரங்களை முகர்ஜீ சொல்லக் கேட்டான்.

சியாமசுந்தரிக்கும் மதுசூதனனுக்கும் உள்ள சம்பந்தம் பகிரங்கமானதாயிருந்தது. இருவரும் மானத்தைப்

பற்றிச் சிந்திக்கவில்லை; உலகம் தங்களைப்பற்றிப் பலவிதமாகத் தூஷிப்பது தெரிந்தும் பொருட்படுத்தவில்லை; இருவரும் வியவஸ்தை இழந்தனர். இவர்கள் நட்பில் யாதொரு மர்மமும் இல்லாததனாலேயே இவர்கள் உலகத்துக்கு ஒப்ப நடக்கவேண்டுமென்பதைக் கருதவேயில்லை. மதுசூதனன் சிலசமயம் சியாமசுந்தரியை அடித்திருக்கிறானும். அவள் இரைந்து கூவி அமர்க்களம் செய்தபோது மதுசூதனன், "ஓடிப்போ, நாயே, என் வீட்டை விட்டு ஓடு" என்று சொன்னானும். ஆனால் இதனால் ஒன்றும் பாதகம் ஏற்படவில்லை. சியாமசுந்தரியிடம் மதுசூதனனின் ஆத்மகௌரவத்திற்கு ஒரு தீங்கும் ஏற்படவில்லை. அவன் தன் இஷ்டம்போல் சியாமாவிற்கு ஏதாவது கொடுப்பான். அவள் அதற்கு மேற்பட்டு ஏதாகிலும் கேட்கமுயன்றால் அவன் சட்டென்று மறுத்துவிடுவான். இந்தக் குடும்பத்தில் நிஸ்தாரிணி வகித்த முக்கியஸ்தானத்தைத் தான் வகிக்க வேண்டுமென்று சியாமா விரும்பினாள். ஆனால் அதிலும் அவளுக்குத் தடங்கல் ஏற்பட்டது. மதுசூதனன் குடும்பப் பொறுப்பு முழுவதையும் நிஸ்தாரிணியை நம்பியே விட்டிருக்கிறான். ஆனால் சியாமசுந்தரியின்மேல் அவனுக்கு அணுவளவும் நம்பிக்கை இல்லை. சியாமாவின்மேல் அவன் மனத்தில் ஆந்தரமான அன்பு இல்லாவிட்டாலும் ஒரு முரட்டுத்தனமான பற்று இருந்தது. குளிர்காலத்தில் ஒரு மோட்டாக் கம்பளியே உபயோகப்படுகிறது. அதில் வேலைப்பாடோ அழகோ இல்லை. அதை ஜாக்கிரதையுடன் காப்பாற்ற வேண்டுமென்ற அவசியமும் இல்லை. ஆனால் அது குளிருக்கு மிகவும் இன்றியமையாதது. மதுசூதனன் சியாமாவின்மேல் கொண்ட அன்பும் இதைப் போன்றதே. சியாமாவைப் பிரீதி செய்ய முயலவேண்டுமென்ற அவசியமேயில்லை. அவள் மது

சூதனனை மகாமேருபோல் கருதி அவன் எது செய்தாலும் சகித்துக் கொண்டு, அவன் எதுவேண்டு மென்றாலும் செய்யச் சித்தமாய்க் காத்திருந்தாள். அவளுடைய மனோ பாவத்தால் மதுசூதனன் அகங்காரம் குன்றாமலிருப்பது சாத்தியம். குமுதம் இருந்தபோது ஒவ்வொருநாளும் அவனுடைய ஆத்ம மரியாதைக்கு அதிர்ச்சியே ஏற்படும்.

மதுசூதனனைப்பற்றிய இந்தப் புது விருத்தாந்தங்களை அறிய முகர்ஜீ சிரமப்படவில்லை. வீட்டில் வேலையாட்கள் இந்த விஷயத்தைச் சகஜமாய்ப் பேசிக்கொண்டிருந்தனர். இப்போது அவர்கள்கூடப் பேசிப் பேசி அலுத்துப் போயினர்.

சமாசாரத்தைக் கேட்டதும் விப்ரதாஸின் உள்ளத்தில் ஓர் எரிகோல் பாய்ந்த மாதிரி இருந்தது. மதுசூதனன் இதை மறைக்கக்கூடப் பார்க்கவில்லையே! தன் மனைவியை அவமதிப்பது மிக எளிது என்பதனால்தானே இவ்விதம் இருக்கிறான்! புருஷன் தன் மனைவியை இவ்விதம் அவமதித்தால் அதற்கு உலகத்தார் ஒன்றும் செய்யமுடியாதென்ற மமதையல்லவோ அவனுக்கு! இந்தச் சமூகத்தில் ஹிம்சைக்கு உதவியாய் அநேக கருவிகளும் கஷ்டங்களும் சிருஷ்டிக்கப்படுகின்றன. ஓர் அபலையை ஒரு புருஷன் உபத்ரவம் செய்யத்தொடங்கினால், அவளைக் காப்பாற்ற இந்தச் சமூகத்தில் யாதொரு மார்க்கமும் கிடையாது. இந்தக் கொடிய துயரமே—திரஸ்காரமே—பல குடித்தனங்களை நாசம் செய்து யுகம் தவறாமல் நடந்து வருவதை விப்ரதாஸ் ஒரு க்ஷணப்பொழுது தன் கண்முன் கண்டான். சதி என்ற பெயரின் மகிமைக்காகப் பெண்கள் இவ்வளவையும் அநுபவிக்கிறார்கள். இந்த வேதனையை ஒழிக்க வழி

யில்லையா? ஸ்த்ரீ ஜாதி கௌரவத்தை இழந்து அவ்வளவு கேவலமாய் விட்டதா?

"குமு, வேதனையைப் பொறுத்துக் கொள்ளலாம்; ஆனால் அவமானத்தால் ஏற்படும் தாழ்வைப் பொறுக்கக் கூடாது. ஸ்த்ரீகளின் பக்ஷமாக நீ நின்று, உங்களுடைய உயர்வை நிலைநாட்ட முறையிட வேண்டும். இதனால் சமூகம் உன்னை எவ்விதத் துன்பத்திற்கு உட்படுத்தினாலும் சரி" என்றான் விப்ரதாஸ்.

"அண்ணா, அவமானப்படுத்துவது என்று எதைக் குறிக்கிறாய்? எனக்குத் தெளிவாய்த் தெரியவில்லையே!" என்றாள் குமுதம்.

"ஆனால் உனக்குச் செய்தி ஒன்றுமே தெரியாதா?"

'தெரியாது; என்ன? சொல்" என்று கேட்டாள், குமுதம்.

விப்ரதாஸ் சிறிது நேரம் மௌனமாயிருந்துவிட்டு, "பெண்களுக்கு இழைக்கும் இந்த மானக்கேடு முழுதும் என் உள்ளத்தில் குமுறி யிருக்கிறது; ஏன் தெரியுமா?" என்றான்.

குமுதம் ஒன்றும் சொல்லாமல் அண்ணாவைப் பார்த்துக்கொண்டிருந்தாள். கொஞ்சநேரம் கழித்து, "அம்மா தன் உயிரிருக்கும்வரையில் என்ன துக்கத்தை அநுபவித்தாளோ அதை நான் ஒருகாலும் மறக்கமுடியாது. தர்மமும் அறிவும் அழிந்துபோன நம்முடைய சமூகமே இதற்குக் காரணம்" என்றான் விப்ரதாஸ்.

இது விஷயத்தில்தான் அண்ணாவிற்கும் தங்கைக்கும் வேற்றுமை இருந்தது. குமுதினிக்குத் தன் தந்தையின் மேல் பூரண அன்பு. அவருடைய இருதயம் எப்பேர்ப் பட்டதென்று அவள் அறிவாள். எவ்வளவோ தவறுகள்

அவரிடமிருந்தாலும் அவர் உத்தமரே என்பதை அவளால் நினைக்காமலிருக்கமுடியவில்லை. தந்தையின் வாழ்க்கையில் ஏற்பட்ட அந்தத் துக்ககரமான சம்பவத்திற்குத் தன் தாயே காரணம் என்ற மனக்குறை அவளுக்கு இருந்தது.

விப்ரதாஸும் தன் தகப்பனாரை உயர்ந்தவரென்றே பக்தியுடன் பாராட்டி வந்தான். ஆனால் தமது நடத்தையில் நேர்மையில்லாமல் அடிக்கடி அவர் தம்மனைவியை எல்லார் முன்பும் அகௌரவமடையச் செய்தார் என்பதை அவனால் சிறிதும் பொறுக்கமுடிவதில்லை. தன் தாய் அவரை மன்னிக்காதது சரி என்றே அவன் தனக்குள் எண்ணியிருந்தான்.

"அப்பா அம்மாவிற்குச் செய்த அவமானம் மொத்தத்தில் ஸ்த்ரீஜாதியையே பாதிக்கிறது. குமு, உன்னுடைய சொந்த துக்கத்தை மறந்து, பொதுப்படையாய் நீ இந்த அவமானத்தை அடக்க முயலவேண்டும். கொஞ்சமும் பின் வாங்கக்கூடாது" என்றான் விப்ரதாஸ். குமுதம் தலைகுனிந்த வண்ணம் மெதுவாய், "அண்ணா, ஆனால் அப்பா அம்மாவின்மேல் எவ்வளவு பிரீதியுடன் இருந்தார் என்பதை மறந்துவிட்டாயா? அந்த அன்பே அவர் செய்த பாபங்களுக்குப் பிராயச்சித்தமாயிருக்கிறது" என்றாள்.

"அதை ஒப்புக்கொள்கிறேன். ஆனால் இவ்வளவு அன்புக்கிடையில் அவர் அம்மாவை அவமதித்தது சரியா? இந்தப் பாபம் யாரைச் சேர்ந்தது? சமூகத்தையல்லவா? அப்படிப்பட்ட சமூகத்தை எப்படிப் பாராட்டுவது?"

"அண்ணா, நீ என்ன கேள்விப்பட்டாய்?"

"எவ்வளவோ. அதைப் பிறகு உனக்குச் சொல்கிறேன்."

"அப்படியே ஆகட்டும். இந்த மாதிரி நாம் பேசுவது உனக்கு உடம்பு பலவீனமாகி விடுமே! எனக்குப் பயமா யிருக்கிறது."

"அப்படி ஒன்றும் நேராது, குமு. அதற்கு மாறாக ஒரு குணம் ஏற்படும். இத்தனை நாள், துன்பத்தைத் தாளாமல் என் சரீரம் உடைந்துவிட்டது. ஆனால் இப்போது துன்பத்தைப் பொறுக்க முயலாமல், போராடு வது என்று நிச்சயித்திருக்கிறேன். எனக்கு எங்கிருந்தோ பலம் கிடைத்திருக்கிறது."

"எதனுடன் போராடுவது?"

"நமது சமூகம் ஸ்த்ரீகளுக்குரிய மதிப்பைத் தர மறுக்கிறது. அதனுடன் போராடவேண்டும்."

"அதற்காக நீ என்ன செய்வாய், அண்ணா?"

"அப்படிப் பட்ட சமூகத்தைப் பின்பற்றமாட்டேன். அதனுடைய நியமங்களுக்குக் கீழ்ப்படிய மாட்டேன். இது தவிர வேறு என்ன செய்யவேண்டுமென்று யோசிக்க வேண்டும். குமு, இந்த வீட்டில் உனக்கு இடம் இருக் கிறது. இங்கு இருப்பவையெல்லாம் உனக்குச் சொந்தமே. யார் சொல்வதையும் பொருட்படுத்தாமல் நீ யதேச்சை யாய் இருக்கலாம்."

"அப்படியே இருக்கிறேன். ஆனால் பேசிப் பேசி உடம்பை அலட்டிக்கொள்ளாதே" என்றாள் குமுதம்.

அச்சமயம் நிஸ்தாரிணி வந்திருப்பதாகச் செய்தி வந்தது.

---

## 50

குமுதம் நிஸ்தாரிணியை வரவேற்றுத் தன் அறைக்கு அழைத்துச் சென்றாள். இருவரும் பேசிக்கொண்டே

இருந்தனர். இருட்டிவிட்டது. வேலையாள் விளக்கேற்ற வந்தபோது குமுதம் அவனை வேண்டாமென்று தடுத்து விட்டாள். நிஸ்தாரிணியிடமிருந்து எல்லா விஷயத்தை யும் தெரிந்துகொண்டாள். பதில் ஒன்றும் சொல்லவில்லை.

"மன்னி, உங்கள் வீட்டிற்குக் கேடுதான் வந்திருக் கிறது. அங்கே இருப்பதே கஷ்டமாயிருக்கிறது. நீங்கள் வரப்போகிறதில்லையா?" என்று மோதியின் தாய் கேட்டாள்.

"என்னைக் கூப்பிட்டால்தானே!"

"உங்களைக் கூப்பிடவேண்டுமென்பதையே மறந்து விட்டமாதிரி இருக்கிறது. நீங்கள் வராமல் ஒன்றும் நடக்காது."

'அங்கே நான் செய்ய வேண்டியது என்ன இருக் கிறது? என்னால் அவரைத் திருப்திசெய்ய முடியவில்லை. வெறுங்கையுடன் அங்கே போய் என்ன பிரயோஜனம்?" என்றாள் குமுதம்.

"என்ன, மன்னி! இப்படிச் சொல்கிறீர்களே! வீடு உங்களுடைய தல்லவா? நீங்கள் கைவிட்டு விட்டால் எப்படி நடக்கும்?"

"வீடு என்றால் என்ன அர்த்தம்? வீடு வாசல், பண்டம், பாடி, வேலையாட்களா? அவைகளின்மேல் எனக்குப் பாத்தியம் இருக்கிறது என்று சொல்லக்கூட வெட்கமாயிருக்கிறதே! உள்மாளிகையில் என் அதி காரத்தை இழந்துவிட்டு, இந்த வெளிவிஷயங்களில் எனக்கு ஆசை யிருக்குமா?"

"என்ன சொல்கிறீர்கள், மன்னி? ஆனால் இனிமேல் வீட்டிற்கே வரப்போகிறதில்லையா?"

"ஒன்றும் தெளிவாய்த் தெரியவில்லை. சில தினங் களுக்கு முன்பென்றால் பகவானிட மிருந்து ஏதாவது

குறிப்பை எதிர்பார்த்திருப்பேன்; ஜோஸ்யரிடம் கேட்டிருப்பேன். ஆனால் என்னுடைய அந்த நம்பிக்கையெல்லாம் போய்விட்டது. ஆரம்பத்தில் சுபலக்ஷணங்களே தென்பட்டன; முடிவில் ஒன்றுல் சரியாயில்லை. இப்போதெல்லாம் அடிக்கடி என் மனத்தில் முன்பு அந்தமாதிரி தெய்வத்தினிடம் நம்பிக்கை வைப்பதற்குப் பதிலாக அண்ணு சொல்வதைக் கேட்டிருந்தால் இவ்வளவு கஷ்டங்கள் ஏற்பட்டிரா என்று தோன்றுகிறது. இருந்தும் மறுபடி தெய்வத்தினிடம் ஒரு பற்றுதல் மனத்தில் உண்டாகிறது. அதை அகற்ற முடியவில்லை. சுற்றிச் சுற்றி வந்து பகவான் பாதத்திலேயே விழுகிறேன்."

"உங்கள் வார்த்தையைக் கேட்க எனக்கு பயமாயிருக்கிறதே! வீட்டிற்குப் போகவே மாட்டீர்களா?"

"ஒருகாலமும் அங்கே போகமாட்டேனென்று நினைக்கமுடியாது."

"இருக்கட்டும். உங்கள் அண்ணுவை ஒரு முறை கேட்கிறேன். அவர் என்ன சொல்கிறுர் பார்க்கலாம். அவருடைய தரிசனம் கிடைக்குமல்லவா?"

"வா, இப்போதே அழைத்துக்கொண்டு போகிறேன்."

நிஸ்தாரிணி அவ்வறைக்குள் காலை வைத்ததும் விப்ரதாஸின் முகத்தைப் பார்த்துவிட்டு, ஸ்தம்பித்து நின்றுவிட்டாள். பூகம்பத்திற்குப்பின் விளக்குகள் அணைந்து, சிகரங்கள் இடிந்த ஒரு கோயிலைப் பார்ப்பது போலிருந்தது. உட்புறம் ஓர் இருளும், நிச்சப்தமும். நிஸ்தாரிணி அவன் கால்களைத் தொட்டு நமஸ்கரித்துவிட்டுத் தரையில் உட்கார்ந்தாள்.

விப்ரதாஸ் ஆவலுடன், "இதோ நாற்காலி இருக்கிறதே, உட்காரலாமே" என்றுன்.

நிஸ்தாரிணி தலையை அசைத்துவிட்டு, "இதுவே சரியாயிருக்கிறது" என்று சொல்லிவிட்டாள்.

முகமூடிக்குள் அவள் கண்களில் நீர் துளித்தன. தமையனின் இந்த நிலைமையே குமுதத்தை வாட்டுகிறது என்று அவள் தெரிந்துகொண்டாள்.

நிஸ்தாரிணி விப்ரதாஸிடம் சகஜமாய்ப் பேச அநுகூலமாய்க் குமுதம், "அண்ணு, என்னைப்பற்றி உன் அபிப்பிராயம் என்ன என்று கேட்கவே இவர் வந்திருக்கிருர்" என்று சொன்ஞள்.

அதற்குள் மோதியின் தாய், "இல்லை இல்லை. அவையெல்லாம் பிறகு ஆகட்டும். இவருடைய சரணங்களைத் தரிசித்துப் போகவே நான் வந்தேன்" என்ருள்.

'அவர் வீட்டிற்கு நான் போகப் போகிறேஞ, இல்லையா என்று தெரிந்துகொள்ள விரும்புகிருர்" எனக் குமுதம் உரைத்தாள்.

விப்ரதாஸ் எழுந்து உட்கார்ந்து, "அது அன்னியர் வீடு. அங்கே வந்து குமுதம் எப்படி இருக்க முடியும்?" என்று கேட்டான்.

இந்த வார்த்தைகள் கோபத்துடன் சொல்லப்பட்டிருந்தால் அதில் உள்ளூர இருந்த நெருப்பு இந்தமாதிரி எரிந்திராது. குரல் மிகச் சாந்தமாயிருந்தது. முகத்தில் சிறிதாகிலும் ஆவேசமே யில்லை.

நிஸ்தாரிணி மெல்ல என்னவோ சொன்ஞள். அதன் அர்த்தம் குமுதம் தன்னருகில் உட்கார்ந்துகொண்டு தான் சொல்வதை விப்ரதாஸிற்குத் தெரிவிக்கவேண்டுமென்பது. குமுதம் அவ்விதம் செய்யச் சம்மதிக்காமல், "நீயே வாய்திறந்து சொல்" என்றனள்.

நிஸ்தாரிணி குரலை இன்னும் சற்றுத் தெளிவாய்க் கேட்கும்படிச் செய்து கொண்டு, "அவருடையதை எப்படிப் பிறருடையதாகச் செய்ய முடியும்?" என்று கேட்டாள்.

"அந்த வார்த்தை சரியில்லை. குமுதம் அங்கு வந்து புகுந்தவள்தானே! அவளுக்குத் தன்னுடையது என்று என்ன அதிகாரமிருக்கிறது? அவளைத் துரத்திவிட்டால் உலகம் நிந்திக்கத்தானே போகிறது? அவனைத் தடை செய்யப்போகிறதா? எல்லாவிதத் தண்டனையும் கேவலம் அவளுக்குத்தானே? தயையைக் கோரி ஒரு புகலிடம் கொள்வதாயிருந்தால், மகத்தான ஒரு குணவானின் கீழாக இருந்தால் அதைச் சகித்துக்கொள்ளலாம்."

இவ்வார்த்தைக்கு என்ன பதில் சொல்வதென்று நிஸ்தாரிணிக்குத் தெரியவில்லை. கணவனின் ஆதரவு குறைந்தால், பெண்வீட்டுக்காரர்கள் காலில் விழுந்து கெஞ்சி ஸ்தோத்திரம் செய்வது வழக்கம். இது என்ன, இங்கே எல்லாம் அதற்கு நேர் விரோதமாயிருக்கிறது!

சிறிது நேரம் மௌனமாயிருந்துவிட்டு நிஸ்தாரிணி, "ஆனால் தங்கள் வீடுவாசலைவிட்டுப் பெண்கள் எவ்விதம் இருக்கமுடியும்? புருஷர்கள் இப்படியும் அப்படியுமாக ஒண்டாது இருக்கலாம். பெண்களுக்கு எங்கேயாவது ஓர் இருப்பிடம் வேண்டாமா?" என்று கேட்டாள்.

"இடம் எங்கே இருக்கிறது! அவமதிப்பிலா? குமுதத்தை வளர்த்தவன் ஆரம்ப முதல் கடைசிவரை மிகச் சிரத்தையுடன் அவளை வளர்த்திருக்கிறான். அவளை அவமதிக்கத்தக்க யோக்யதை ஒருவருக்குமே இல்லை; சக்கரவர்த்திக்குக்கூட இல்லை."

குமுதத்தினிடம் நிஸ்தாரிணிக்கு அதிகமாகப் பிரியம் உண்டு. அவளை மிகக் கௌரவமாகவே எண்ணினாள். ஆனால் கணவன் அதிகாரத்திற்கும் மேற்பட்டதாய் ஒரு பெண்மணியின் மேன்மை யிருக்குமென்பது அவளுக்குச் சரியாய்த் தெரியவில்லை. வீட்டில் கணவனுடன் சண்டை சச்சரவுகள் ஏற்படும்; பெண்களின் விதியில் அநாதரவும் அவமானமும் வேண்டிய அளவு இருக்கின்றன. அதிலிருந்து தப்புவதற்காக அவர்கள் அபினைத் தின்று, அல்லது கழுத்தில் சுருக்குப் போட்டுக்கொண்டு சாவதும் உண்டு. ஆனால் அதற்காகக் கணவரை விட்டுவிட்டுத் தனியாகத் தம் இஷ்டப்படி பெண்கள் இருக்கலாமா! அப்படிச் செய்வது மிகத் தவறென்றும் கர்வமென்றும் நிஸ்தாரிணிக்குத் தோன்றிற்று. 'பெண்ணாகப் பிறந்து இவ்வளவு திமிர் ஏனோ? மதுசூதனன் எப்படி இருந்தாலும், எவ்வளவு அந்யாயம் செய்தாலும், அவன் கணவனல்லவா? மனைவிக்கு மேற்பட்டவனல்லவா? விதியோடு போராடி ஜயிக்கமுடியுமா!' என்பது நிஸ்தாரிணியின் எண்ணம்.

"எப்படி யிருந்தும் ஒருநாள் அவர் அங்கேதானே வரவேண்டும்? இது தவிர வேறு வழியில்லையே?" என்றாள்.

"வந்துதான் தீரவேண்டும் என்பது விலை கொடுத்து வாங்கின அடிமையைத் தவிர வேறு எவரிடமும் செல்லாது."

"மந்திரத்தைச் சொல்லிப் பெண்ணையும் வாங்கிக் கொள்ளுகிறார்களல்லவா? ஏழு அடிகள் என்றைக்கு நடக்கிறளோ அன்றுமுதல் சரீரத்தாலும் மனத்தாலும் கட்டுப்பட்டவளல்லவோ? இனிமேல் தப்பி ஓட வழி ஏது? இந்தப் பந்தமானது சாவு பரியந்தம் விடாதே! பெண்ணாக எப்போது பிறந்தோமோ, ஜன்மம் முற்றும் நம் விதியை

நாம் அநுபவிப்பதைவிட, அதற்கு மாருகச் செல்ல முடியாது.''

பெண்களைப் பெண்களே மிகக் குறைவாக மதிப்பிடுகிருர்களென்பதை விப்ரதாஸ் தெரிந்துகொண்டான். அதனுல்தான் பெண்களுக்கு ஒவ்வொரு வீட்டிலும் இவ்வளவு அவமானம் உண்டாக்குவது சுலபமாயிருக்கிறதென்பதை அவர்கள் தெரிந்துகொள்ளவில்லை. அவர்கள் தங்கள் ஒளியைத் தாங்களே தணித்துவிடுகிருர்கள். அதற்கு மேல் பயந்து, பயந்து, கவலையால் புண்பட்டு, அயோக்யன் கையில் அகப்பட்டு அடிவாங்கிக்கொண்டு இவ்வளவையும் பொறுத்துக்கொள்வதால்தான் ஸ்த்ரீ ஜன்மம் சாபல்யமாகுமென்று எண்ணுகிருர்கள். கூடாது; மனிதன் இழைக்கும் இவ்வளவு திரஸ்காரங்களுக்கு இடம் கொடுக்கக்கூடாது. சமூகம் யாரை இவ்வளவு தாழ்த்திவைத்திருக்கிறதோ அவர்களே பிரதிதினமும் சமூகத்தைக் கீழான நிலைக்குச் செல்லுமாறு செய்கிருர்கள்.

விப்ரதாவின் கட்டிலினருகில் குமுதம் தலையைத் தொங்கவிட்டுக்கொண்டு தரையில் உட்கார்ந்திருந்தாள். விப்ரதாஸ் நிஸ்தாரிணியிடம் ஒன்றும் சொல்லாமல், குமுதத்தின் நெற்றியில் கையை வைத்து, ''உனக்கு ஒரு விஷயம் சொல்கிறேன், குமு. அதை நன்ருகத் தெரிந்துகொள். சாமர்த்தியமும் யோக்யதையும் இல்லாத ஒருவனை மேன்மையாக வைத்துக்கொண்டால் நமது சமூகத்திற்கு ஹீனமே ஏற்படுகிறது. நான் இதை எவ்வளவோ தடவை உனக்குச் சொல்லியிருக்கிறேன். ஆனுல் நீ உன் வழியை விடவில்லை. கஷ்டம் ஏற்பட்டுவிட்டது. நீ நிரம்ப ஆடம்பரமாய்ப் பிராம்மணர்களுக்கு விருந்து உபசாரம் செய்த சமயம் நான் உன்னைத் தடுக்கவில்லை.

ஆனால் நன்றாக யோசித்துப்பாராமல் ஒருவனை உயர்ந்தவனென்று கொண்டாடுவதால் அவனுக்கு அநிஷ்டம் ஏற்படுவது மாத்திரமல்ல; அதனால் சமூகத்தின் உயர்ந்த நோக்கமும் தாழ்ந்துவிடுகிறது. இந்த மாதிரி மூடபக்தியினால் நமது மனிதகுணமே கெட்டுப்போகிறதே என்பதை யாரும் ஏன் யோசித்துப் பார்க்கமாட்டேனென்கிறார்கள்? குமு, நீ கொஞ்சம் கொஞ்சம் இங்கிலீஷ் இலக்கியங்களையும் படித்திருக்கிறாய். இந்த மாதிரி ஒரு சமூகம் ஏற்படுத்தினவையும், சாஸ்திரம் ஏற்படுத்தினவையுமான விதிகளின் கட்டுக்கு மீறி இருப்பதை எதிர்த்து உலகமுழுவதும் இப்போது போராட ஆரம்பித்திருக்கிறது. மூட அடிமைத்தனத்திற்கு ஒரு பெரிய பெயரை வைத்து, அதற்கு மதிப்புக் கொடுத்துவருவதை அடியோடு ஒழிக்கப் பிரயத்தனம் செய்யவேண்டிய காலம் வந்துவிட்டது" என்றான்.

குமுதம் தலையைத் தொங்கவிட்டுக் கொண்டே, "ஒரு ஸ்த்ரீ தன் புருஷனை மீறி நடக்கலாமென்றா நீ சொல்லுகிறாய், அண்ணா?" என்று கேட்டாள்.

"இல்லை; அநியாயமாய்க் கணவன் மீறிநடப்பதையே கெடுதல் என்று சொல்லுகிறேன். கணவன்கூட மனைவியிடம் ஒழுங்கு தவறி நடக்கக்கூடாது என்பதே நான் சொல்வது."

"அந்த மாதிரி நடந்தால் மனைவி—"

குமுதம் அந்த வார்த்தையை முடிப்பதற்குள் விப்ரதாஸ், "அந்த மாதிரி ஹத்துமீறிநடப்பதை ஒரு பெண் பொறுத்துக்கொண்டால் அவள் எல்லாப்பெண்களுக்கும் துரோகம் செய்தவளாகிறாள். இந்தமாதிரியே ஒவ்வொரு பெண்ணின் மூலமாகவும் கஷ்டம் அதிகரிக்கிறது; வரம்பு

கடந்த செய்கை செய்வதற்கு ஒருவழி ஏற்பட்டுவிடு கிறது.''

நிஸ்தாரிணி சற்றுப் பொறுமையை இழந்தவளாய், "மன்னி மகாபதிவ்ரதையாயிற்றே. அவருக்கு ஏதாகிலும் அவமானம் செய்தாலும் அது அவரைத் தீண்டாதே" என்றாள்.

விப்ரதாஸின் குரல் இப்போது சற்று ஆத்திரமுள்ள தாய்க் காணப்பட்டது; "நீங்கள் பதிவ்ரதைத்தன்மை யைப்பற்றியே யோசித்துக்கொண்டிருக்கிறீர்கள். யாரோ ஒருவன் துராசாரனாய், ஒரு பெண்ணிற்குத் தீங்கு செய் யும் அதிகாரத்தைப் பெற்றுப் பிரதிதினமும் அவ்விதத் தீங்கு செய்து வருவதனால் அவனுக்கு எவ்வளவு கேடு ஏற்படுகிறதென்பதை ஏன் நினைக்க மாட்டேனென்கிறீர் கள்?" என்று கேட்டான்.

குமுதம் உடனே எழுந்து நின்று விப்ரதாஸின் தலைமயிரைக் கோதிய வண்ணம், "அண்ணா, இனிமேல் நீ பேசாதே. களைத்துப் போவாய். நான் மார்க்கமாய் விடுதலை பெறுவதற்கு நீ சொல்லும் வழியைப் பின்பற்ற முடியாமல் எங்கள் இரத்தமே எங்களைத் தடுக்கிறது. மனிதரையும் நம்பிக்கையையும் ஆதாரவாகப் பெற்றே நாங்கள் ஜீவிக்கவேண்டும். அந்த ஆதாரவை விடமுடிவ தில்லை. எவ்வளவு ஏமாற்றமடைந்தாலும் மறுபடி அதையே அணுகுகிறோம். நீங்கள் ஞானத்தினால் அதிகம் தெரிந்துகொள்கிறீர்கள். அதனால் உங்களுக்கு விடுதலை உண்டாகிறது. நாங்கள் எதையும் அதிகமாக நம்பிவிடு வதால் எங்கள் வாழ்க்கை சூன்யமாய்விடுகிறது. நீ எடுத்துச் சொல்லும்போது நாங்கள் செய்வது தவறாக இருக்கலாம் என்று தோன்றுகிறது. ஆனால் தவறைத்

தெரிந்துகொள்வதும் தவறைத் திருத்திக்கொள்வதும் ஒன்றாகிவிடுமா? ஒரு கொடியின் நுனியைப்போல் எங்கள் ஆற்றல் எல்லாவற்றையும் அண்டிப் பிடித்துக்கொண்டு படர்ந்துவிடுகிறது. பிறகு அது நல்லதாயிருந்தாலும் கெட்டதாயிருந்தாலும் அதை விடுவது கஷ்டமாயிருக்கிறது" என்றனள்.

"அதனால்தான் உலகத்தில் துராசாரர்களான புருஷர்களைப் பூஜிக்கப் பூஜாரிகளுக்குக் குறைவிருப்பதில்லை. தூய்மை இல்லாததை அசுத்தம் என்று தெரிந்துகொண்டும், கௌரவிக்கும் சமயத்தில் அதைத் தூய்மையானதென்று கொண்டாடுகிறார்கள்" என உரைத்தான் விப்ரதாஸ்.

"என்ன செய்வது, அண்ணா? சம்சாரத்தை இரண்டு கைகளாலும் தழுவிப் பிடித்துக்கொண்டு தொங்கும்படி எங்களைப் பகவான் சிருஷ்டித்திருக்கிறார். ஆகையாலேயே நாங்கள் மரமாக இருந்தாலும் தழுவிக்கொள்கிறோம்; உலர்ந்த குச்சியானாலும் பிடித்துக்கொள்கிறோம். குருவைப் பூஜிப்பதில் செலவிடப்படும் அவ்வளவு காலம் பாஷண்டியைப் பூஜிப்பதிலும் கழிபட்டுவிடுகிறது. இந்த வலை எங்கள் உள்ளுக்குள்ளேயே இருக்கிறது. இத்துக்கத்திலிருந்து யார் எங்களை மீட்பார்கள்? இதனாலேயே பிறகு வரும் துயரை நாங்கள் சகித்துக்கொண்டு அதில் மூழ்கி எழுந்திருக்கவேண்டியதாயிருக்கிறது. பெண்கள் இவ்விதந்தான் தங்கள் தர்மத்தைத் தழுவி நிற்கின்றனர்."

விப்ரதாஸ் ஒன்றும் சொல்லாமல் மௌனமாயிருந்தான். ஆனால் அவன் அவ்விதம் மௌனமாயிருப்பதும் குமுதத்திற்குக் கஷ்டமாயிருந்தது. ஏதாவது சொல்வதை

விட இந்த மௌனத்திற்கு அதிகமான சக்தி உண்டு என்று அவள் அறிவாள்.

அறையை விட்டு வெளியே வந்ததும் நிஸ்தாரிணி, "என்ன நிச்சயமாயிற்று, மன்னி?" என்று கேட்டாள்.

"நான் வரமுடியாது. வரச்சொல்லி அவர் உத்தரவும் கொடுக்கவில்லையே!" என்று குமுதம் சொன்னாள்.

நிஸ்தாரிணிக்கு உள்ளுக்குள் வெறுப்பு உண்டாயிற்று. தன புக்ககத்தைப்பற்றி அவளுக்கு அதிகம் மதிப்பு இல்லை. இருந்தும் வெகு காலமாய்ப் பழகியதால் அது தன்னைச் சேர்ந்ததுபோல ஓர் எண்ணம் அவளுக்குத் தோன்றிற்று. அந்தப் புக்ககத்தைச் சேர்ந்த ஒரு மருமகள் அதை மீறி நடப்பது அவளுக்குப் பிடிக்கவில்லை. மானிடவர்க்கத்தில் புருஷர்களுக்கு அநுதாபம் என்பது குறைவு. அவர்களுடைய யதேச்சையான பழக்கமோ அதிகம். இது எல்லோருக்கும் தெரிந்த விஷயமே. சிருஷ்டிக்கும் தொழில் நம்கையில் இல்லை. நமக்கு ஏற்பட்டதைக்கொண்டுதானே வாழவேண்டும்? "அவர்களே அப்படித்தான்" என்று மனத்தை திடப்படுத்திக்கொண்டு, "கிடக்கிறது" என்று சம்சாரத்தில் முனையவேண்டும். சம்சாரம் ஒரு பெண்ணால்தானே சீர் அடைய முடியும்? புருஷன் நல்லவனோ, கெட்டவனோ, அவனுடன் இல்லறம் நடத்தித்தானே ஆகவேண்டும்? அது முடியாமல் போனால் சாவைத் தவிர வேறு கதி இல்லை. இதுவே நிஸ்தாரிணி குமுதினிக்குச் சொன்னதன் சாரம்.

குமுதம் சிரித்துவிட்டு, "வேறு வழியில்லாவிட்டால் அது இருக்கவே இருக்கிறது. சாவதில் என்ன தோஷம்?" என்றாள்.

"அந்தமாதிரி வார்த்தை சொல்லாதீர்கள்" என்று நிஸ்தாரிணி வருத்தப்பட்டாள். அந்தப் பேட்டையில்

சமீபத்தில் பதினேழு பதினெட்டு வயதுப் பெண் ஒருத்தி கார்பாலிக் ஆஸிட்டைச் சாப்பிட்டுவிட்டுத் தற்கொலை செய்துகொண்டது குமுதத்திற்குத் தெரியாது. அந்தப் பெண்ணின் கணவன் எம். ஏ. பரீக்ஷையில் தேர்ந்து கவர்ன்மெண்ட் ஆபீஸில் பெரிய வேலை பார்த்து வருகிறான். அந்தப் பெண் ஒரு வெள்ளிச்சிப்பைப் போக்கடித்துவிட்டதைப்பற்றி அவள்மாமியார் புகார் செய்தாள். உடனே அவள் கணவன் அவளை நையப் புடைத்தானும். இந்தவிஷயத்தை நினைக்கும்போதே நிஸ்தாரிணிக்கு மயிர்க் கூச்சலுண்டாயிற்று.

இதற்குள் நவீனன் வந்தான். குமுதத்தின் முகம் உடனே மலர்ந்தது; "எனக்குத் தெரியும், மைத்துனர் வருவதற்கு நாழியாகாதென்று" என்றாள்.

நவீனன் புன்சிரிப்புடன், "மன்னிக்கு நியாய சாஸ்திரத்தில் பாண்டித்யம் இருக்கிறது. ஸ்ரீமதியாகிய புகையைக் கண்டதும் ஸ்ரீமானாகிய அக்னி ஆவிர்ப்பாவமாவாரென்று ஊகித்துக்கொண்டுவிட்டார்" என்றான்.

"மன்னி, நீங்கள் இடம் கொடுத்தே இவர் தலைக்கு, மேல் ஏறிவிடுகிறார். இவரைக் கண்டால் உங்களுக்குச் சந்தோஷமாயிருக்கிறதென்று நினைத்துக்கொண்டிருக்கிறார். அந்தத் தலைக்கிறுக்கினாலேயே—"

"என்னைப் பார்த்துக் கூடச் சந்தோஷப்படுவதென்றால் அதென்ன சுலபமான கார்யமா? என்னைச் சிருஷ்டித்தவர்கூடத் தமது கைத்திறமையைப் பார்த்துவிட்டுப் பச்சாத்தாபப் படுவார். என்னைக் கலியாணம் செய்துகொண்டவரோ—அவர் மனத்தை 'தேவா ந ஜானந்தி குதோ மநுஷ்யா:' (தேவரே அறியார்; மநுஷ்யர் எங்ஙனம் அறிவது!)"

"நீங்கள் இரண்டுபேரும் கூடிப் பேசிச் சாஸ்திர ஆராய்ச்சி செய்யுங்கள். மூன்றுவது ஆளாக இருந்து நான் அதைக் கெடுக்கவில்லை. போகிறேன்" என்றுள் குமுதம்.

"இதென்ன, மன்னி? மூன்றுவது ஆள் யார்? நீஙகளா! நானு? என்னைப் பார்ப்பதற்காக இவர் வண்டி வாடகை கொடுத்து இங்கேவந்திருக்கிறுர் என்று நினைக்கிறீர்களா?" என்று நிஸ்தாரிணி ஆட்சேபித்தாள்.

"இல்லை, அவருக்குச் சிற்றுண்டி அனுப்புகிறேன்" என்று சொல்லிக் குமுதம் போய்விட்டாள்.

---

## 52

"ஏதாகிலும் விசேஷ மிருக்கிறதா?" என்று நிஸ்தாரிணி நவீனனைக் கேட்டாள்.

"இருக்கிறது. தாமதம் செய்யக்கூடாது. உன்னேடு கலந்து பேச வந்தேன். நீ வந்தபிறகு அண்ணு திடீரென்று என் அறைக்கு வந்தார். சுருட்டு வைக்கும் தட்டு ஒன்றைக் காணவில்லையாம். அது மிக மட்டமானது. மேலே கில்ட்டுப் பூசியிருந்ததால் அதை யாரோ தங்கம் என்று ஏமாந்து போய்த் திருடியிருக்கிறுர்கள். உனக்குத் தான் தெரியுமே: அற்பவஸ்து காணுமற்போனுல்கூட அண்ணு தமது ஐச்வர்யத்தின் அஸ்திவாரமே அசைந்து விட்டமாதிரி யெண்ணி அதைச் சகிக்கமாட்டாரே. இன்று காலையில் ஆபீஸ் போவதற்கு முன் சியாமாவை ஊருக்கு அனுப்பிவிடும்படி என்னேடு சொல்லிவிட்டுப் போயிருந்தார். நான் நிரம்ப உற்சாகமாய் இந்தப் புண்ணிய காரியத்தைச் செய்ய இருந்தேன். அவர் ஆபீஸிலிருந்து திரும்பி வருவதற்குள் இதைச் செய்து

விடவேண்டுமென்று நான் நிச்சயித்திருக்கும் போது, மத்தியானம் இரண்டரை மணிக்குத் திடீரென்று நேரே என் அறைக்கு வந்தார். "அவளை இப்போது அனுப்பவேண்டாம்; இருக்கட்டும்" என்று சொல்லிவிட்டு வெளியே போகும் சமயம் என் மேஜையின்மேல் வைத்திருந்த மன்னியின் படத்தின் மீது அவர் பார்வை விழுந்தது. அப்படியே நின்றுவிட்டார். படத்தைப் பார்க்க அண்ணுவிற்கு வெட்கமாயிருக்கிறதென்று நான் ஜாடையாகத் தெரிந்துகொண்டேன். ஆகையால், "அண்ணு, சற்று உட்கார்ந்திருங்கள். டாக்காவிலிருந்து வந்திருக்கும் ஒரு புடைவையை உங்களுக்குக் காண்பிக்கவேண்டும். மோதியின் தாயின் தம்பி சம்சாரத்திற்கு பூச்சூட்டல். அவளுக்கு அனுப்புவதற்காக வாங்கிவைத்திருக்கிருள். ஆனால் கணேசராம் விலையில் என்னை ஏமாற்றிவிட்டான். அதைப் பார்த்து மதிப்புச் சொல்லுங்கள். எனக்குப் பதின்மூன்று ரூபாய் கொடுப்பது அதிகம் என்றே தோன்றுகிறது. நிரம்ப அதிகமானுல் ஒன்பது அல்லது ஒன்பதரை ரூபாய் கொடுக்கலாம் என்றேன்" என்று நவீனன் சொன்ஞன்.

நிஸ்தாரிணி பிரமிப்புடன், "இந்த யோசனையெல்லாம் உங்களுக்கு எப்படித்தோன்றிற்று? என் தம்பி சம்சாரத்தின் பூச்சூட்டல் இப்போது ஒன்றும் நடக்கப்போகிறதில்லையே. அவளுக்குக் கையில் இரண்டரை மாதக்குழந்தை இருக்கிறதே! கதை கட்டுவதில் நிரம்பத் தேர்ச்சி பெற்றுவிட்டீர்களே! இந்தப் புதுவித்தையை யாரிடம் கற்றீர்கள்?" என்று கேட்டாள்.

"காளிதாஸன் யாரிடம் கற்ருனே அந்த வீணுபாணியான கலைமகளிடமிருந்தே."

"கலைமகள் உங்களைவிட்டுப் போகும்வரை உங்களுடன் சம்சாரம் நடத்தமுடியாதுபோலிருக்கிறதே!"

"நான் சுவர்க்கம் போகும்போது நரகத்தைப் பார்த்துவிட்டுப்போவேன்; மன்னியின் பாதங்களில் இதுவே நான் வைக்கும் காணிக்கை."

"ஒன்பதரை ரூபாய்க்கு உங்களுக்கு டாக்கா புடவை சட்டென்று எங்கே கிடைத்தது."

"எங்கேயுமில்லை. இருபது நிமிஷம் கழித்துத் திரும்பி வந்து 'கணேசராம் அதை என்னிடம் சொல்லாமலேயே திருப்பி எடுத்துக்கொண்டுபோய்விட்டான் போலிருக்கிறது!' என்றேன். இதற்குள் அந்தப்படம் அண்ணாவின் மனத்தில் பதிந்து கனவின் உருக்கொண்டு திகழ்வது அவர் முகத்திலிருந்து தெரிந்தது. என்ன காரணத்தினாலோ அண்ணாவிற்கு என்னிடம் வெட்கமாயிருக்கிறது. வேறு யாராவது இருந்தால் உடனே அந்தப் படத்தைச் சங்கோசமில்லாமல் எடுத்துக்கொண்டு போயிருப்பார்."

"நீங்களும் லகுப்பட்டவரல்ல. அதை உடனேயே அண்ணாவிடம் கொடுப்பதற்கென்ன?"

"கொடுத்துவிட்டேன். ஆனால் அப்படிக் கொடுக்கவில்லை. 'அண்ணா, இந்தப் படத்தைக் கொண்டு ஓர் ஆயில் பெயிண்டிங் எழுதி உங்கள் படுக்கையறையில் மாட்டிக்கொண்டால் நன்றாயிருக்குமே!' என்றேன். அண்ணா அலட்சியமாய்ச் சொல்வதுபோல, 'இருக்கட்டும், பார்க்கலாம்' என்று சொல்லிப் படத்தை எடுத்துக்கொண்டு மாடிக்குப் போய்விட்டார். அதற்கப்புறம் என்ன நடந்ததோ தெரியாது. அவர் ஆபீஸிற்குப்போனரோ

என்னவோ! என்படம் திரும்பிக் கிடைக்குமென்ற ஆசை எனக்கு இல்லை."

"உங்கள் மன்னிக்காகச் சுவர்க்கத்தையே இழக்கத் தயாராக இருக்கையில் அதனுடன்கூட ஒரு படத்தையும் இழந்தால் என்ன?"

"சுவர்க்க விஷயம் சந்தேகமானது. ஆனால் படத்தைப்பற்றிச் சந்தேகமேயில்லை. இவ்வளவு அழகான படம் தெய்வச் செயலாகத்தான் அமையும். எந்தச் சமயத்தில் லக்ஷ்மியின் பூர்ணகடாக்ஷமும் அழகும் அவருடைய வதனத்தில் தோன்றினவோ அந்த அபூர்வ சுபவேளையில் இந்தப் படம் பிடிக்கப்பட்டது. ஒவ்வொரு தினமும் இரவில் தூக்கத்திலிருந்து நான் எழுந்து விளக்கேற்றிக் கொண்டு அந்தப் படத்தைப் பார்ப்பதுண்டு. விளக்கு வெளிச்சத்தில் அவர் உள்ளத்தில் ஒளிரும் அழகு இன்னும் அதிகமாகப் பிரகாசிப்பது போலத் தோன்றும்."

"என்ன, என் எதிரிலே இந்த மாதிரிப் புகழ்வதற்கு உங்களுக்குப் பயமாக இல்லையா?"

"பயமிருந்தால் நீ கவலைப்படவேண்டியதுதான். அவரைப் பார்க்கும்போது என் ஆச்சரியம் குறையவே மாட்டேனென்கிறது. நம்மைப்போன்றவர்கள் பாக்கியத்தில் இது எப்படி நேர்ந்தது என்றே தோன்றுகிறது. அவரை நம்முடைய மன்னி என்று சொல்லக்கூடிய பாத்தியம் இருக்கும் என்று நினைக்கும்போதே எனக்கு மயிர்க் கூச்சல் உண்டாகிறது. இந்த அற்பன் நவீனன் அருகில் அவர் உட்கார்ந்து உண்பிப்பது இந்த விசாலமான புவியில் எங்கேயாவது நடக்கிற காரியமா? நம் வீட்டில் எல்லாரையும்விட அண்ணாவே மிகத் துரதிருஷ்டசாலி. அவருக்குச்

சுலபமாய்க் கிடைத்த வஸ்துவை இறுகக் கட்டிப் பிடிக்க முயன்று முழுவதையுமே இழந்து விட்டார்.''

"என்ன சமாசாரம்? மன்னியைப் பற்றிப்பேச ஆரம் பித்தால் ஓயமாட்டீர்கள் போலிருக்கிறதே!"

"இது உனக்குக் கொஞ்சம் கஷ்டமாயிருக்கிறாற் போலிருக்கிறது."

"இல்லையே."

"ஆமாம்; கொஞ்சம் உறுத்துகிறது. இந்த மாதிரி யான வேறொரு விஷயத்தை ஞாபகமூட்டுகிறேன். நூர் நகரஸ்டேஷனில் மன்னியின் அண்ணாவை முதல் முதல் பார்த்துவிட்டு நீ சொன்னதைவிட அதிகம் ஏதாவது சொல்லமுடியுமோ!"

"சரி, சரி, அந்தத் தர்க்கமெல்லாம் இருக்கட்டும். என்ன சொல்லவந்தீர்கள்? சொல்லுங்கள்."

"அண்ணா இன்று நாளைக்குள் மன்னியை அழைப்பா ரென்று தோன்றுகிறது. மன்னி இவ்வளவு ஆவலோடு பிறந்தகம் வந்ததும், அதற்குப் பின்னால் திரும்பிப் போவ தென்ற பேச்சுக்கூட இல்லாமல் இவ்வளவு நாட்கள் இங்கே இருந்ததும் அண்ணாவிற்கு நிரம்பக் கோபமுண் டாக்கி யிருக்கின்றனவென்று தோன்றுகிறது. தங்கக் கூட்டைக் கண்டால் பறவை ஏன் ஆசைப்படவில்லை என்பது அண்ணாவிற்குப் புரியவில்லை. ஜடமான, நன்றியற்ற பறவை!"

"அது நல்ல சமாசாரமே; ஆனால் பெரிய மைத்துனர கூப்பிடவில்லையே!"

"அவர் கூப்பிடுவதற்கு முன்னால் மன்னிபோனால் நல்லதென்று எனக்குத் தோன்றுகிறது. அண்ணாவின்

கோபம் அடங்கிவிடும். அது தவிர, விப்ரதாஸ் பாபுவும் மன்னியை அனுப்பவேண்டுமென்று சொன்னார். நான் தான் வேண்டாமென்று தடுத்தேன்."

விப்ரதாஸுடன் இது விஷயமாய் இன்று என்ன வெல்லாம் பேசினாள் என்பதைச் சொல்லாமலேயே நிஸ்தாரிணி, "விப்ரதாஸ் பாபுவிடம் அதைச் சொல்லுங்கள்" என்றாள்.

"நான் போய்ச் சொல்லுகிறேன்; அவர் கேட்டுச் சந்தோஷிப்பார்."

அச்சமயம் குமுதம் வாயிலுக்கு வெளியில் நின்று கொண்டு, "நான் உள்ளே வரலாமா?" என்று கேட்டாள்.

நிஸ்தாரிணி, "உங்கள் மைத்துனர் உங்களையே எதிர் பார்த்துக்கொண்டு உட்கார்ந்திருக்கிறார்" என்றாள்.

"எத்தனையோ ஜன்மங்களாய்க் காத்திருந்தே இப் போது தரிசனம் கிடைக்கிறது."

"இந்த மாதிரி யெல்லாம் பேச எங்கே கற்றுக் கொண்டீர்கள்?" என்று குமுதம் கேட்டாள்.

"எனக்கே ஆச்சரியமாகத்தானிருக்கிறது: எப்படிக் கற்றுக்கொண்டேனோ தெரியவில்லை."

"சரி, இப்போது சாப்பிட வாருங்கள்."

"சாப்பிடுவதற்கு முன்பு ஒரு தடவை உங்கள் அண்ணாவைக் கண்டு பேசமுடியுமா?"

"வேண்டாம், அது கூடாது."

"ஏன்?"

"அண்ணா இன்று நிரம்பவும் பேசிக் களைத்துப் போயிருக்கிறார். இன்று இருக்கட்டும்."

"நல்ல சமாசாரம்."

"இருந்தாலும் நாளைக்கு ஆகட்டும். இன்று ஒருவித மான பேச்சும் வேண்டாம்."

"நாளைக்கு என்றால் வரமுடியாமல் இருக்கலாம். ஏதாவது விக்நம் ஏற்படலாம். கிருபை செய்து இன்று ஐந்து நிமிஷம் பேச அவகாசம் கொடுங்கள். அண்ணா சந்தோஷப்படுவார். அவருக்கு ஒன்றும் கெடுதல் ஏற் படாது."

"சரி; முதலில் நீங்கள் கொஞ்சம் பலகாரம் செய்யுங் கள்; பிறகு பேசலாம்."

சிற்றுண்டி அருந்தியபின் குமுதம் நவீனனை விப்ர தாஸின் அறைக்கு அழைத்துச் சென்றாள். அப்போது கூட அவன் படுக்கவில்லை. தீப வெளிச்சம் மட்டாக இருந்தது. அறை இருட்டாயிருந்தது. திறந்திருக்கும் ஜன்னல்களின் மூலம் நக்ஷத்திர வெளிச்சம் கண்களில் தென்பட்டன. பலமான தென்றற் காற்று அடித்துக் கொண்டிருந்தது. அறையின் திரைகள், படுக்கையின் ஜாலர்கள், சட்டத்தில் தொங்கிக்கொண்டிருந்த விப்ர தாஸின் ஆடைகள் எல்லாம் காற்றில் அசைவதால் அவை களின் நிழலும் அசைந்துகொண்டேயிருந்தன. ஒரு பத்திரிகையின் தாள் தரையில் இங்குமங்குமாய்ப் பறந்து திரிந்தது. விப்ரதாஸ் சாய்ந்தவண்ணம் அசைவற்று மௌனமாய் உட்கார்ந்திருந்தான். அறைக்குள் முன் செல்ல நவீனனுடைய கால்கள் எழவில்லை. மாலைப்பொழு தின் சாயையும், வியாதியின் பலவீனமும் சேர்ந்து விப்ர தாஸைச் சூழ்ந்து அவன் சம்சாரத்தை விட்டு விலகி நிற்கும் வேறு உலகத்தைச் சேர்ந்தவன் எனத் தோன்றச்செய்தன. அவனைப்போன்ற தனிமையான மனிதன் இவ்வுலகத்தில் ஒருவருமே இல்லை என்று பட்டது.

நவீனன் முன் சென்று விப்ரதாஸின் பாதங்களைத் தொட்டு நமஸ்கரித்துவிட்டு, "உங்களுக்கு நிரம்ப சிரமம் கொடுக்கிறேன். ஒரு வார்த்தை சொல்லிவிட்டுப் போய் விடுகிறேன்: மன்னி வீட்டிற்கு வருவதற்குக் காலம் வந்துவிட்டது. இதற்காகவே நாங்களும் எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறோம்."

விப்ரதாஸ் பதில் ஒன்றும் சொல்லவில்லை; மௌனமாயிருந்தான்.

சற்றுப் பொறுத்து நவீனன், "உங்கள் உத்தரவு கிடைத்ததும் அவரை அழைத்துக்கொண்டு போக ஏற்பாடு செய்கிறேன்" என்று சொல்ல ஆரம்பித்தான்.

அதற்குள் குமுதினி மெதுவாய் வந்து அண்ணாவின் காலடியில் உட்கார்ந்துகொண்டாள். அவளைப் பார்த்து விப்ரதாஸ், "நீ போகவேண்டிய சமயம் வந்துவிட்டதென்று உனக்குத் தோன்றினால், நீ போ, குமு" என்றான்.

"இல்லை, அண்ணா. நான் போகமாட்டேன்" என்று சொல்லிக் குமுதம் விப்ரதாஸின் கால்களில் குப்புற விழுந்தாள்.

அறையில் ஒரே நிச்சப்தம். இடையிடையே காற்றின் வேகத்தால் ஒரு சிதிலமான ஜன்னல் ஆடிற்று. அதனுடன் வெளியில் தோட்டத்திலிருக்கும் மரங்களிலுள்ள தளிர்களின் சலசல சப்தமும் கேட்டது.

குமுதம் சற்று நேரம் கழித்து எழுந்து நின்று, "வாருங்கள். இனி நாழிகையாக்காதீர்கள். அண்ணா, நீ தூங்கு" என்றாள்.

தங்கள் வீட்டிற்கு வந்தபின் நிஸ்தாரிணி நவீனனிடம், "இவ்வளவு கர்வம் கூடாது. இது நன்றாக இல்லை" என்றாள்.

"கண்களில் ஊசியைமட்டும் குத்தலாம்; ஆனால் அவை மட்டும் சிவக்கக் கூடாதா?"

"இல்லை. அவையெல்லாம் ஒன்றுமில்லை. இவர்களுக் குத் திமிர். உலகத்திலேயே இவர்களுக்குச் சமானம் ஒரு வருமில்லை என்று நினைத்துக்கொண்டிருக்கிறார்கள்."

"இவ்வளவு கர்வம் மற்றவர்களுக்கு இருந்தால் அது பொருந்தாது. ஆனால் இவர்கள் விஷயமே தனிப்பட் டது."

"அதனால் உறவினர்களை விட்டுவிடலாமா?"

"உறவு என்றால் எல்லாரும் உறவினர்களாகிவிடுவார் களா? இவர்களுடைய வழியே அலாதி. உறவு என்ற பாத்தியதையைக் கொண்டு இவர்களுடன் பழகுவதே எனக்குக் கூச்சமாயிருக்கிறது."

"இவர்கள் எப்பேர்ப்பட்ட பெரிய மனிதர்களானா லும் இவர்களுக்கும் உறவினர்களுக்கும் ஒரு பந்தம் இருக் கிறது. அதை நீங்கள் கவனிக்கவேண்டும்."

இந்தப் பேச்சினால் குமுதத்தின்மேல் மோதியின் தாயாருக்கு உள்ளூரச் சிறிது பொறாமை இருப்பதை நவீ னன் அறிந்துகொண்டான். சுற்றம் என்னும் பந்தத்திற்கு ஒரு மதிப்பு இருப்பதைப் பெரும்பாலான பெண்கள் நம்புவது உண்மையே. ஆகையால் நவீனன் வீண்தர்க்கம் தொடங்காமல், "இன்னும் கொஞ்சநாள் பார்க்கலாமே. அண்ணாவின் ஆவல் அதிகமாகட்டுமே. அதனால் ஒன்றும் முழுகிவிடாது" என்றிருந்தான்.

# 53

மதுசூதனன் வீட்டில் தன் ஸ்தானம் ஸ்திரப்பட்டு விட்டதென்று சியாமாவால் நினைக்கமுடியவில்லை. முதலில் வேலையாட்களின் மேல் தனக்கு அதிகாரம் கிடைத்திருக்கிறதென்று எண்ணினாள். ஆனால் இப்போது அவர்கள் தன்னை எஜமானிஸ்தானத்தில் வைத்துக்கொள்ளச் சம்மதிக்கவில்லை என்பது தெரிந்தது. வேலையாட்கள் வெளிப்படையாக அவளை அவமதித்துச் சந்தோஷமடைவார்கள். அவ்வித நிலைமைக்கு அவள் வந்துவிட்டாள். இதன் பொருட்டே சியாமா அவர்களைக் கண்டபடி காரணமில்லாமல் கோபிப்பாள். அவர்கள் செய்கையில் குற்றம் கண்டுபிடிப்பாள். சதா சிடுசிடுத்தவண்ணமிருப்பாள். அவர்களுடைய அப்பன் ஆயி எல்லோரையும் வாயில் வந்தபடி திட்டுவாள். சிலதினங்களுக்குமுன்புவரை தனக்கு இந்த வீட்டில் ஒருவித மதிப்பும் இல்லாமலிருந்த ஞாபகத்தை மறைத்துத் துடைக்கச் சியாமா முயன்றாள். ஆனால் அதனால் பலன் ஒன்றும் ஏற்படவில்லை.

வீட்டில் வெகுநாட்களாய் இருந்துவந்த ஒரு பழகின வேலையாள் சியாமா திட்டுவதைப் பொறுக்காமல் வேலையைவிட்டு நீங்கினான். அதனால் சியாமா வெட்கித் தலையைத் தொங்கவிட்டுக்கொள்ளும்படியே நேர்ந்தது. தன்னுடைய அதிர்ஷ்டத்தைப்பற்றி மதுசூதனனுக்குப் பலவிதக் குருட்டுநம்பிக்கைகள் இருந்தன. தனக்கு விருத்தி ஏற்பட ஆரம்பித்த காலத்தில் இருந்த வேலையாள் மரித்தாலும், வேலையை விட்டு நீங்கினானென்றாலும் அதை அவன் ஓர் அபசகுனமென்றே எண்ணுவான். இதே காரணத்தினால் மசிகொட்டியிருக்கும் ஒரு பழைய மேஜை அவனுடைய ஆபீஸ் அறையில் இக்காலத்திட

புதிய சாமான்களுக்கு நடுவில் சற்றும் வெட்கமில்லாமல் வாசம் செய்துவருகிறது. அதன்மேல் அக்காலத்திய மசிக்கூடு ஒன்றும், ஒரு பேனுக்கட்டையும் இன்னும் இருக்கின்றன. அந்தப் பேனுவைக்கொண்டே அவன் முதல் முதல் தான் செய்த பெரிய வியாபாரம் ஒன்றின் தஸ்தாவேஜியில் கையொப்பமிட்டான். அந்தக் காலத்தைச் சேர்ந்த வேலையாள் ததி (ததிமாதவன்) சியாமாவுடன் ஸவால் போட்டதை மதுசூதனன் பொருட்படுத்தாமல் இருந்தது மாத்திரமல்ல; அவ்வேலையாளுக்கு இனும்கூட அதிகம் கிடைத்தது. அதைக் கண்டு சியாமா மிகக் கோபிக்க முயன்ருள். ஆனல் மதுசூதனனிடம் அது பலிக்க வில்லை. அவளுடைய நிலைமை வேலைக்காரன் பார்த்துச் சிரிக்கும்படியாயிற்று. சியாமாவின் தர்மசங்கடம் இதுவே. அவள் மதுசூதனனை உள்ளூர நேசிக்கிருள். அதனுலேயே அவனை அதிகமாக முறுக்கி அவனுடன் மனஸ்தாபம் வைத்துக்கொள்ள அவளுக்குத் தைர்யமில்லை. தனக்கு வந்த அதிர்ஷ்டத்திற்கு ஒருகால் இடையூறு வருமோ என்ற பயத்தினுல் அவள் ஜாக்ரதையாக நடக்க வேண்டிய தாயிற்று. மதுசூதனனும் சியாமா விஷயத்தில் தான் கவலைப்படவேண்டியதில்லை என்பதை நன்ருய்த் தெரிந்து கொண்டிருந்தான். அவளைப் பிரீதி செய்வதற்காகச் செய்யும் காரியங்களைக் குறைத்துக் கொண்டாலும் ஒன் றும் பாதகம் ஏற்படாது. சியாமாவிடம் அவனுக்கு ஒரு மிருகத்தன்மையான மோகமே இருந்தது. இந்த மோகத் தைப் பூர்ணமாகக் கொண்டு அநுபவிப்பதே அவளைச் சுலபமாகச் சமாளிக்கும் வழி. இந்த இன்பமே அவ னுக்கு உத்ஸாகத்தைத் தந்தது. அப்படி இதற்கு ஏதா வது தடை ஏற்பட்டால், அவனுக்குச் சியாமாவிடமிருந்த நட்புக்குத்தானே பங்கம் ஏற்படும்? மதுசூதனனுக்குத்

தன் வேலையைவிட மேற்பட்டது ஒன்றுமில்லை. அவன் மனத்தில் வேறுபாடில்லாமல் காரியத்தில் முனைவதே அவ்வேலைக்கு அவசியமானதாக இருந்தது. ஆகையால் சியாமாவின் அதிகாரம் அதன் எல்லைக்குள் பிரவேசிக்க இடமில்லை. காலை எடுத்து வைத்த உடனே அவள் இடறி விழுந்து திரும்பவேண்டியதா யிருந்தது. சியாமா மேன் மேலும் தன்னைத் தியாகம் செய்தாளே தவிர அதற்குப் பிரதி ஒன்றும் பெறுமல் ஏமாந்து போனுள். பணம் காசு பண்டம் பாடிகள் சியாமாவிற்கு ஒரு நாளும் அதிகம் கிடைத்ததில்லை. அவைகளின்மேல் அவளுக்கு இருக்கும் ஆராமைக்குக் கங்குகரை இல்லை. அவை களில்கூட அவள் கட்டுக்கு அடங்கி நடக்கவேண்டியதா யிற்று. இவ்வளவு பணக்காரனிடமிருந்து சுலபமாய் எதிர்பார்க்கக் கூடியது கூட அவளுக்குக் கிடைக்க வில்லை. ஒவ்வொருதினமும் மதுசூதனன் சந்தோஷித்து அவளுக்கு ஆடை ஆபரணம் ஏதாவது அளிப்பான். ஆனுல் அவைகளைப் பெற்றதனுல் அவளுடைய ஆசை தணிவ தில்லை. சிற்சில சாமான்களை அபகரிக்க அவளுக்குக் கை துடிக்கும். அதிலும் தடங்கல் இருந்தது. இவ்விதம் செய்த ஓர் அற்ப விஷயத்தினுல்தான் அவளை ஊருக்கு அனுப்பிவிடுவதாய் மதுசூதனன் சொன்னுன். இருந்தும் சியாமாவின் சேர்க்கையும் பணியும் மதுசூதனனுக்கு வெற்றிலை, புகையிலைப் பழக்கம்போல் ஆகிவிட்டன. அவற்றை நிறுத்தினுல் தன் வேலைக்குக் குந்தகம் நேரிடுமே யென்று இம்முறை அவளைத் தண்டிக்காமல் விட்டு விட் டான். ஆனுல் தண்டனை கிடைக்குமென்ற பயம் மாத்திரம் அவளுக்கு இருந்துகொண்டேயிருந்தது.

குமுதினி எப்போது திரும்பிவந்து தன்னுடைய ஸ்தானத்தில் அதிகாரம் வகிப்பாளோ என்ற கவலை சியாம

சுந்தரிக்கு மனத்தில் இருந்தது. இந்தப் பொறுமையினால் அவள் மனத்தில் எள்ளளவும் சாந்தியேயில்லை. குமுதத்துடன் தான் போட்டியிடமுடியாதென்பது அவளுக்குத் தெரியும். குமுதம் மதுசூதனனின் அதிகாரத்திற்கு மேற்பட்டவள். அதனாலேயே அவளுக்கு அளவற்ற பலம் இருக்கிறது. சியாமா நொந்து நொந்து, "நான் செத்துப் போகிறேன்" என்று கண்ணீர் விடுவாள். தலையில் அடித்துக் கொண்டு தன் விதியை நொந்தவாறு, "ஏனோ இப்படி நான் இவ்வளவு மலிவாகப் போய்விட்டேன்" என்றெண்ணுவாள். பிறகு மறுபடி, "நான் இப்படி எளிதிற் கிடைக்கக்கூடியவள் என்றதனால்தானே எனக்கு இடம் கொடுக்கப்பட்டது? யாருக்கு மதிப்பு அதிகமோ அவர்களுக்குத்தான் மரியாதை. யார் சுலபமாகக் கிடைக்கக் கூடியவர்களோ அவர்கள் அசட்டைசெய்யப்படுகிறார்கள்" என்று எண்ணுவாள்.

மதுசூதனன் சியாமாவை ஏற்றுக் கொள்வதற்குமுன் அவளுக்கு இவ்வளவு பொறுக்கமுடியாத துக்கம் இல்லை. தன்னுடைய பாக்கியத்தை அவள் ஒருவாறு பெற்று அமைந்திருந்தாள். இடை இடையே கிடைக்கும் அற்ப இன்பத்தைக்கொண்டு திருப்தியடைந்திருந்தாள். இப்போது தனக்கு அதிகாரம் கிடைக்குமோ கிடைக்காதோ என்ற சங்கையினால் அவளுக்கு நிம்மதியே யில்லை. நாம் அதை இழந்து விடப்போகிறோமே யென்ற பயத்தால் மனம் நடுங்கிக்கொண்டே யிருந்தது. அதிர்ஷ்டம் என்னும் ரயில்தண்டவாளம் உறுதியாக இராததால் எந்த க்ஷணம் வண்டி கவிழ்ந்து விடுமோ என்ற பயம் அவளுக்கு இருந்தது. ஒரு முறை நிஸ்தாரிணியிடம் சென்று மனத்திலுள்ளதைச் சொல்லி ஆறுதல் பெறுவதற்கு முயன்றாள். ஆனால் அவள் தலையைத் திருப்பிக்கொண்டு

தன்னிடமிருந்து விலகிப்போன தோரணையைக் கண்டு சியாமாவிற்கு நிஸ்தாரிணியைக் கொன்று போட்டுவிடலா மென்னும்படி ஆத்திரமுண்டாயிற்று. ஆனால் என்ன செய்வது! வீட்டு விஷயங்களைக் கவனிப்பதில் மதுசூதன னுக்கு நிஸ்தாரிணியிடமே நம்பிக்கை. அவளை அசைக்க முடியவில்லை. அது முதல் அவ்விருவரும் ஒருவர் முகத்தில் ஒருவர் விழிப்பதுகூடக் கிடையாது. இவ்விதம் இந்த வீட்டில் சியாமாவின் ஸ்தானம் முதலிலிருந்தே கட்டுப் பட்டு இருந்தது. ஒரு வழியிலும் அவள் தன் இஷ்டப் படி நடக்கமுடியவில்லை.

இவ்விதமிருக்க, ஒருநாள் சாயங்காலம் அவள் படுக்கையறைக்குள் வந்து பார்த்தபோது மேஜைக்கு மேற்புறச் சுவரில் குமுதத்தின் புகைப்படம் தொங்கிக் கொண்டிருந்தது. தன் தலையில் விழப்போகும் இடியின் மின்னல் அவள் கண்களில் ஜொலித்தது. அப்படத்தி னின்று தன் கண்ணை எடுக்க முடியவில்லை. பார்த்த வண்ணமாகவே நின்றிருந்தாள். முகம் வெளுத்தது; கண்க ளில் தீப்பொறி; கைமுட்டிகள் தாமே இறுகிக்கொண்டன. எதையாகிலும் உடைத்துக் கிழித்தெறியவேண்டுமென்ற ஆத்திரமுண்டாயிற்று. அவ்வறையில் இன்னும் தங்கினால் ஏதாகிலும் பொருளை நாசம் செய்து விடுவோமென்ற பயத்தினால் அங்கிருந்து ஓடிவிட்டாள். தன்னறைக்குள் சென்று படுக்கையில் குப்புற விழுந்து தலையணையின் உறையைக் கடித்துச் சுக்கல் சுக்கலாய்க் கிழித்தெறிந்தாள்.

இரவு நேரமாயிற்று. வெளியில் வேலையாள் வந்து மகாராஜா மேலே கூப்பிடுகிறாரென்று சொன்னான். வர மாட்டேனென்று சொல்ல அவளுக்குத் தைர்யமில்லை. சட்டென்று எழுந்து முகத்தைக் கழுவிக்கொண்டு சித்திர

வேலைப்பாடுகள் செய்த ஒரு டாக்கா புடைவை உடுத்துக் கொஞ்சம் வாசனை பூசிக்கொண்டு மாடியிலுள்ள மதுசூதனன் அறைக்குச் சென்றாள். படத்தைப் பாராமலிருப்பது என்று நினைத்திருந்தாள். ஆனால் சரியாய்ப் படத்திற்கு எதிரே விளக்கு இருந்தது. அதன் பிரகாசம் முழுவதும் படத்தின்மேல் விழுந்து அதைச் சோபிக்கச் செய்தது. அவ்வறையிலிருக்கும் எல்லாப்பொருளிலும் அதுவே மிக மேன்மையாய் விளங்கிற்று. சியாமா வழக்கம் போல் வெற்றிலைப்பெட்டியிலிருந்து மதுசூதனனுக்கு வெற்றிலை கொடுத்துவிட்டு, அவன் காலடியில் உட்கார்ந்து அவன் பாதங்களை வருடினாள். என்ன காரணமோ இன்று மதுசூதனன் மிகப் பிரசந்நமாக இருந்தான். மேல்நாட்டுக் கடை ஒன்றிலிருந்து வெள்ளியில் செய்த படம்வைக்கும் சட்டம் ஒன்று வாங்கிக்கொண்டு வந்திருந்தான். மிகக் கம்பீரமாய் சியாமாவிடம் "இந்தா" என்று அதைக் கொடுத்தான். ஏதாவது வெகுமதி வழங்கிச் சியாமாவைச் சந்தோஷிக்கச் செய்யும் சமயங்கூட மதுசூதனன் அன்பை வீணாக்காமல் கிருபணத்தனமே காண்பித்தான். கொஞ்சம் ஆதரவாக இடங்கொடுத்தாலும் சியாமா உடனே தலைக்குமேல் ஏறப்பார்ப்பாளென்று மதுசூதனனுக்குத் தெரியும். அந்தச் சட்டம் ஒரு காகிதத்தில் சுற்றப்பட்டிருந்தது. சியாமா தயக்கத்துடன் அதைப் பிரித்துப் பார்த்து விட்டு, "இது என்ன?" என்றாள்.

"தெரியாதா? இதில் போட்டோவை வைத்துக் கொள்வது."

சியாமாவின் நெஞ்சம் படபடவென்று அடித்துக் கொண்டது. "யார் போட்டோவை வைப்பது?" என்றாள்.

"உன் போட்டோ—அன்றைக்கு எடுத்ததே, அதை வைத்துக்கொள்."

"எனக்கு எதற்கு இந்தக் கோலமெல்லாம்?" என்று சொல்லிச் சியாமா வெள்ளிச்சட்டத்தை வீசிக் கீழே எறிந்தாள்.

மதுசூதனன் பிரமித்து, "இதற்கு என்ன அர்த்தம்?" என்றான்.

"அனர்த்தம்" என்று சொல்லிச் சியாமா கைகளால் முகத்தை மூடிக்கொண்டு அழ ஆரம்பித்தாள். பிறகு படுக்கையை விட்டுக் கீழே இறங்கித் தலையைத் தரையில் முட்டிக் கொண்டாள். நகைகள் வேண்டுமென்று ஆசைப்படுகிறாளோ வென்றும், விலை குறைந்த பொருள் அவளுக்குப் பிடிக்கவில்லை போலும் என்றும் மதுசூதனன் நினைத்தான். நாள்முழுதும் ஆபீஸில் வேலை செய்துவிட்டு வந்தபின் வீட்டில் இந்தத் தொல்லை ஏற்படுவது அவனுக்குப் பிடிக்கவில்லை. இது ஹிஸ்டீரியா மாதிரியல்லவோ இருக்கிறது! ஹிஸ்டீரியாவைக் கண்டாலே அவனுக்கு ஏளனம். கடுகடுப்புடன், "எழுந்திரு, சீக்கிரம்" என்று அதட்டினான்.

சியாமா எழுந்து வேகமாய் வெளிச் சென்றாள். "இதெல்லாம் இங்கே சரிப்படாது" என்று மதுசூதனன் உரைத்தான்.

அவனுக்குச் சியாமாவை நன்றாய்த் தெரியும். இப்போது போய்விட்டுப் பிறகு வந்து காலில் விழுந்து மன்னிப்புக் கேட்பாள்; அப்போது இரண்டொரு வார்த்தை சொல்லலாமென்று அவன் எண்ணியிருந்தான்.

மணி பத்தடித்தது. சியாமா வரவில்லை. மறுபடி சியாமாவின் அறைக்கு வெளியில், "மகாராஜா கூப்பிடுகிறார்" என்ற குரல் கேட்டது.

"உடம்பு சரியில்லை என்று சொல்" என்றுரைத்தாள் சியாமா.

"இவ்வளவு கர்வமா! உத்தரவிட்டால்கூட வர மாட்டேனென்கிறாள்" என்று மதுசூதனன் எண்ணினான்.

சற்றுப் பொறுத்து வருவாளென்று மனத்தில் நினைத்திருந்தான். வரவில்லை. பதினொன்றடிக்கப் பதினைந்து நிமிஷங்கள் பாக்கியிருந்தன. படுக்கையிலிருந்து எழுந்து சியாமாவின் அறைக்கு வேகமாய்ச் சென்றான். அறைக்குள் இருட்டாயிருந்தது. சியாமா தரையில் படுத்திருப்பது தெரிந்தது. இவையெல்லாம் வெறும் ஜாலமென்று மதுசூதனன் எண்ணினான்.

"எழுந்து மாடிக்கு வா, சீக்கிரம். பிடிவாதம் பண்ணாதே" என்று அவன் கர்ஜித்தான்.

சியாமா பதில் பேசாமல் எழுந்து அவனை பினமனை சென்றாள்.

---

## 54

மறுதினம் மத்தியான்னம் மதுசூதனன் சாப்பிட்டு விட்டுச் சிரமபரிகாரம் செய்து கொள்வதற்கு மாடிக்குச் சென்ற சமயம் மேஜைக்கு மேலிருந்த படத்தைக் காணவில்லை. சியாமா மற்றத் தினங்களைப்போல் வெற்றிலை கொடுக்க வரவில்லை. அவளைக் கூப்பிட்டனுப்பினான். அவள் வந்தாள்; ஆனால் தயக்கத்துட னிருந்தாள்.

"மேஜைமேலிருந்த படம் எங்கே?" என்று மதுசூதனன் கேட்டான்.

"படமா! என்ன படம்?" என்று சியாமா ஒன்றும் தெரியாதவளைப்போல் ஆச்சரியப்பட்டாள்.

மதுசூதனனுக்குக் கோபம் அதிகமாயிற்று. புருஷர்களுக்கு எதுவும் தெரியாது என்று பெண்களுக்கு ஓர் அசிரத்தை. அதனாலேயே இந்த அற்ப விஷயம் இவ்வளவு தூரத்திற்கு வந்துவிட்டது.

"நீ படத்தைப் பார்க்கவில்லையா?" என்று மதுசூதனன் சீறினான்.

சியாமா, "இல்லையே!" என்றாள்.

"பொய் சொல்லுகிறாயா?" என்று அவன் கர்ஜித்தான்.

"எதற்காகப் பொய் சொல்லவேண்டும்? படத்தை எடுத்து நான் என்ன செய்யப் போகிறேன்?"

"எங்கே வைத்திருக்கிறாய்? உடனே கொண்டு வந்து கொடு. இல்லாவிட்டால் விரஸமாய்ப் போய்விடும்."

"ஈச்வரா! இதென்ன? உங்கள் படம் எனக்கு எங்கே கிடைக்கும், நான் கொண்டுவருவதற்கு?"

மதுசூதனன் வேலையாளைக் கூப்பிட்டு, "சின்ன எஜமானனை வரச்சொல்" என்றான்.

நவீனன் வந்தான்; "மன்னியை அழைத்துக் கொண்டு வா" என்று மதுசூதனன் சொன்னான்.

சியாமா மரப்பதுமைபோல் மௌனமாய நின்று கொண்டிருந்தாள்.

நவீனன் தலையைச் சொறிந்து கொண்டே, "அண்ணா! நீங்களே அங்கே ஒரு முறை போய்விட்டு வாருங்களேன்; நீங்கள் போய் அழைத்துக்கொண்டு வந்தால் மன்னிக்குச் சந்தோஷமாயிருக்கும்" என்றான்.

மதுசூதனன் சிறிது நேரம் ஹுக்கா குடித்த வண்ணம் இருந்து விட்டுப் பிறகு, "நல்லது; நாளைக்கு

ஞாயிற்றுக்கிழமை. நாளைக்குப் போகிறேன்" என்று உரைத்தான்.

நவீனன் தன் மனைவியிடம் சென்று, "ஒரு காரியம் செய்துவிட்டு வந்திருக்கிறேன்" என்றான்.

"என்னைக் கேட்காமலா?"

"உன்னைக் கேட்கச் சாவகாசம் இல்லை."

"ஆனால் பிறகு பச்சாத்தாபப்படத்தான் வேண்டியிருக்கும்."

"அதில் ஒன்றும் ஆச்சரியமில்லை. என்னுடைய ஜாதகத்தில் புத்தி ஸ்தானத்தில் கிரகம் ஒன்றுமே யில்லை; என் மனைவிதான் இருக்கிறாள். அதனால்தான் உன்னை எப்போதும் கூடவே வைத்துக் கொண்டிருக்கிறேன். விஷயம் இது: இன்று மன்னியை அழைத்துக் கொண்டு வரும்படி அண்ணா உத்தரவு கொடுத்தார். நான் சட்டென்று 'நீங்களே போய்க் கூப்பிட்டுக் கொண்டு வந்தால் நன்றாயிருக்கும்' என்றேன். அண்ணா மனம் என்ன நிலைமையிலிருந்ததோ தெரியாது; உடனே சம்மதித்துவிட்டார். எப்படி முடியப்போகிறதோ? இதையே நினைத்துக்கொண்டிருக்கிறேன்."

"அனர்த்தந்தான் ஏற்படும். விப்ரதாஸ் பாபு இப்போது இருக்கிற தோரணையில் என்னென்ன சொல்வாரோ! கடைசியில் எல்லாம் ஒரு பாரத யுத்தமாய் முடியலாம். ஏன் இந்த மாதிரிச் செய்தீர்கள்?"

"முதல் காரணம் நீ அருகில் இல்லாததால் என் மூளை அச்சமயம் காலியாயிருந்தது. இரண்டாவது காரணம் அன்று மன்னி, நான் வரமாட்டேனென்று சொன்னபோது அதற்கு உள்அர்த்தம் எனக்கு இந்த மாதிரித் தோன்றிற்று. மன்னியின் அண்ணா வியாதியோடு

கல்கத்தா வந்திருக்கிறார். அப்படியிருந்தும் மகாராஜா ஒரு நாள்கூட அவரைப் பார்க்க வரவில்லை என்பது மன்னிக்கு வருத்தமாயிருக்கிறமாதிரி எனக்குத் தோன்றிற்று."

இதைக் கேட்டு நிஸ்தாரிணி தான் ஏன் இதைப்பற்றி இதுவரை யோசிக்கவில்லை என்று வியந்தாள். உண்மையில் அவளுக்குத் தன் புக்ககத்தின் மேன்மையைப்பற்றிச் சற்று இறுமாப்பு உண்டு. அதை அவளே அறியாள். இதர மனிதர்களைப்போல் மகாராஜா மதுசூதனனும் உறவினர்களிடம் நடந்துகொள்ளும் மரியாதை முறைகளைப் பின்பற்ற வேண்டுமே என்ற எண்ணம் அவளுக்கு உண்டாகவில்லை.

இன்று தான் சொல்லியதற்குச் சமாதானம் சொல்வதற்காக நவீனன், "எனக்கோ இந்த விஷயம் ஞாபகத்தில் இல்லை; நீதான் எனக்கு ஞாபகமூட்டினாய்" என்றான்.

"எப்படி?"

"நீதான் அன்றைக்குச் சொன்னாயே: உறவினர்களிடம் கிரமப்படி நடந்துகொள்ளவேண்டும்; கௌரவத்தைவிட அது முக்கியமானது என்றாயே. ஆகையால் தான் எனக்கு மகாராஜாவைப்போன்ற பெரியவரும் விப்ரதாஸ் பாபுவைப் போய்ப் பார்த்துவிட்டுவருவது உசிதம் என்று தோன்றிற்று."

நிஸ்தாரிணி அதற்குமேலும் அவன் செய்தது சரியென்று ஒப்புக்கொள்ளத் தயாராக இல்லை; "எத்தனையோ வேலையிருக்கின்றன. இப்படி வீண்பேச்சுப் பேசிக்கொண்டிருக்கிறீர்களே! இனிமேல் என்ன செய்யவேண்டுமென்பதை முதலில் யோசியுங்கள்" என்றாள்.

"முதலிலேயே எல்லா விஷயத்தையும் முன்யோசனை செய்து வைத்தால் பிறகு ஏமாற்றந்தான் உண்டாகிறது. இப்போது விப்ரதாஸ் பாபுவும் அண்ணுவும் சந்திக்க வேண்டும். அவர்கள் சந்தித்தால் என்ன ஏற்படுமென்று நாம் யோசிப்பதில் பலனில்லை; அது நம் யோசனைக்கு மேற்பட்டது."

"என்னவோ! எல்லாம் எக்கச்சக்கமாய் இருக்கிறது."

---

# 55

அன்றைய தினம் காலை வெகுநேரம்வரை குமுதம் தன் தமையன் அறையில் உட்கார்ந்து பாடிக்கொண்டிருந்தாள். தன்னுடைய வேதனையை இந்த ஜகத்தில் தோன்றும் ஒரு வஸ்துவாக எண்ணி வைகறைராகங்களில் பலவித ரூபங்களில் வெளியாக்கினுள். பாசத்திலிருந்து அவளுக்கு விடுதலை ஏற்பட்டது. பரமசிவன் ஜடையிலிருக்கும் அரவும் ஓர் ஆபரணமாய் விளங்குகிறது. துயரம் என்னும் நதி அகண்டமான துயரக் கடலில் கலந்து பெரியதொரு சாந்தியைப் பெறுகிறது. அந்நதியின் தோற்றம் இப்போது மாறிவிடுகிறது. சமுத்திரத்தின் ஆழ்ந்த கம்பீரத்தில் நதியின் சஞ்சலகுணம் மாறிவிடுகிறது. விப்ரதாஸ் ஒரு பெருமூச்சு விட்டுவிட்டு, "குமு, சம்சாரத்தில் அற்பகாலமே நமக்கு முக்கியமானது போல் தோன்றிவிடுகிறது. அநந்தகாலத்தின் விசால உருவம் தெரிவதில்லை. இசையில் அந்த எல்லையற்ற காலமே நம் எதிரில் புலப்படுகிறது. வாழ்க்கையின் அற்பகாலம் மிகத் துச்சமாய்த் தோன்றிவிடுகிறது. ஆகையாலேதான் இசையின்மூலமாய் மனம் விடுதலை யடைகிறது" என்ருன்.

அச்சமயம், "மகாராஜா மதுசூதனர் வந்திருக்கிறார்" என்ற செய்தி கிடைத்தது.

ஒரு கணத்தில் குமுதத்தின் முகம் வெளுத்துவிட்டது. அதைக் கண்டதும் விப்ரதாஸின் உள்ளத்தில் வேதனை உண்டாயிற்று; "குமு, நீ உள்ளே போ. நீ இருக்கவேண்டிய அவசியமில்லை" என்றான்.

குமுதம் சீக்கிரமாய்ப் போய்விட்டாள். மதுசூதனன் வேண்டுமென்றே முன்னால் தெரிவிக்காமல் வந்திருந்தான். இவர்களுக்குத் தங்கள் ஏழ்மை நிலைமையை ஒளிக்க அவகாசம் கொடுக்கக்கூடாதென்பது அவன் எண்ணம். தான் பெரிய குடும்பத்தைச் சேர்ந்தவன் என்ற கர்வம் விப்ரதாஸிற்கு இருக்கிறதென்று மதுசூதனன் நினைத்திருந்தான். அதனை அவனால் சகிக்க முடியவில்லை. ஆகையாலேயே இன்று விப்ரதாஸைப் பார்ப்பதற்கன்றி, விப்ரதாஸிற்குத் தன் தரிசனம் அளிப்பதற்காக வந்ததுபோல ஆடம்பரத்துடன் வந்திருந்தான்.

மதுசூதனன் அணிந்திருந்த உடுப்பு விசித்ரமாய் இருந்தது. வீட்டு வேலையாட்கள் முதலியோர் பார்த்து அவன் மகிமையைக் கண்டு மயங்கும்படியான ஒருவேஷம்: கோடுகள் போட்ட சீமை ஷர்ட்டின்மேல் வர்ணப் பூப் போட்ட சில்க் வெஸ்ட்கட்; கழுத்தில் மடிப்புக்கலையாத அங்கவஸ்திரம்; இடுப்பில் நன்றாகக் கொசுவப்பட்ட சாந்திப்பூர்க் கறுப்புக்கறை வேஷ்டி; விரல்களில் பெரிய பெரிய கமலமோதிரங்கள் பிரகாசித்தன; முன்நிற்கும் வயிற்றைச் சுற்றி நின்றது கடியாரத்தின் கனமான தங்கச் சங்கிலி; கையில் பொன்னால் செய்த யானைமுகப் பிடி கொண்ட ஒரு நாகரிகமான கைத்தடி; அதில் பல இரத்தினங்கள் இழைக்கப்பட்டிருந்தன. மதுசூதனன் நமஸ்காரம்

செய்வதுபோல் அறைகுறையாய்ப் பாவனை காண்பித்து விட்டுக் கட்டிலினருகில் ஒரு சாய்வான நாற்காலியில் உட்கார்ந்து, "உடம்பு எப்படி இருக்கிறது, விப்ரதாஸ் பாபு? பார்ப்பதற்கு நன்றாயில்லையே!" என்றான்.

விப்ரதாஸ் அதற்கு விடைசொல்லாமல், "உங்கள் உடம்பு சௌக்யமாக இருப்பதாகவே தெரிகிறது" என்றான்.

"அப்படிச் சௌக்யம் என்று சொல்லமுடியாது; தினமும் சாயங்காலம் தலைவலி வருகிறது. நல்ல பசி எடுக்கிறதில்லை. சாப்பாட்டில் சற்றேனும் அபத்யம் ஏற்பட்டால் உடம்புக்கு ஆவதில்லை. சில சமயம் ராத்திரியிலும் தூக்கம் வருவதில்லை. அதுதான் நிரம்பக் கஷ்டமாயிருக்கிறது."

சுச்ருஷைக்கு ஆள் தேவை என்பதற்கு இது பீடிகை.

"ஆபிஸில் நிரம்ப வேலை செய்வதால் இந்தமாதிரி இருக்கலாம்" என்றான் விப்ரதாஸ்.

"அது ஒன்றுமில்லை. ஆபீஸ் வேலை தானாக நடக்கும். அதற்காக நான் செய்யவேண்டியது ஒன்றுமில்லை. மாக்நடன்துரை நிரம்பப் பொறுப்பாய் வேலைசெய்கிறார். ஸர் ஆர்தர் பீபடியும் எனக்கு அதிக ஒத்தாசை செய்கிறார்."

ஹுக்கா வந்தது. வெற்றிலைத்தட்டுடன் வேலையாள் வந்து தாம்பூலாதிகளை நீட்டினான். மதுசூதனன் தட்டிலிருந்து ஓர் ஏலக்காயை மாத்திரம் எடுத்து வாயில் போட்டுக்கொண்டான். ஹுக்காக் குழாயிலிருந்து ஒன்றிரண்டு முறையே மெதுவாய்ப் புகை குடித்தான். பிறகு அக்குழாய் வலதுகையில் தொங்கிக் கொண்டிருந்தது. அப்புறம் அதை உபயோகிக்கும் பிரமேயம் ஏற்படவில்லை. சிற்றுண்டி தயாராயிருக்கிறதென்று உள்ளே யிருந்து

செய்தி வந்தது. மதுசூதனன் அலுப்புடன், "இது என்னத்திற்கு? முதலிலேயே நான் சொன்னேனே; பத்திய மாய்ச் சாப்பிட வேண்டியிருக்கிறது" என்ருன்.

விப்ரதாஸ் இரண்டாம் முறை நிர்ப்பந்தம் செய்ய வில்லை; "அத்தையிடம் அவருக்கு உடம்பு சரியில்லையாம் என்று சொல்" என்று வேலையாளிடம் கூறினன்.

அதற்குமேல் விப்ரதாஸ் மௌனமாயிருந்தான். அவனே குமுதத்தின் பேச்சை எடுப்பான் என்று மது சூதனன் எதிர்பார்த்திருந்தான். இவ்வளவு நாட்களாகி விட்டனவே; குமுதத்தைப் புக்ககம் அனுப்பவேண்டு மென்று விப்ரதாஸ் அல்லவோ அதைச் சொல்லவேண் டும்? ஆனல் அவன் அவள் பெயரைக்கூடச் சொல்ல வில்லை. மதுசூதனனுக்கு உள்ளுக்குள் கோபமுண்டாக ஆரம்பித்தது. இங்கே வந்தது தவறு என்று எண்ணலா னன். எல்லாம் நவீனனுல் ஏற்பட்டதே; வீட்டிற்குச் சென்று அவனை நன்ருகத் திட்டவேண்டுமென்று மது சூதனனுக்கு ஆத்திரமாயிருந்தது.

இதற்குள் கறுப்புக்கறைபோட்ட ஒரு மட்டப்புடை வையை உடுத்தி, 'கோம்டா'வை நெற்றிவரை இழுத்து விட்டுக்கொண்டு குமுதம் வந்தாள். விப்ரதாஸ் இதை எதிர்பார்க்கவில்லை; மிக ஆச்சர்யப்பட்டான். முதலில் கணவனையும் பிறகு தமையனையும் கால்களைத் தொட்டு நமஸ்கரித்துவிட்டுக் குமுதம் மதுசூதனனைப் பார்த்து, "அண்ணவுக்கு உடம்பு சரியில்லை. பலவீனமாயிருக்கிறது. அதிகமாகப் பேசக்கூடாதென்று டாக்டர் சொல்லி யிருக் கிருர். நீங்கள் அடுத்த அறைக்கு வாருங்கள்" என்ருள்.

மதசூதனனுக்கு முகம் சிவந்தது. சட்டென்று எழுந்து நின்ருன். ஹுக்காவின் குழாய் கீழே விழுந்தது.

விப்ரதாவின் பக்கம் திரும்பிக்கூடப் பார்க்காமல், "சரி, நான் போகிறேன்" என்றான்.

முதலில் வண்டியில் ஏறி நேரே வீட்டிற்குச் செல்கிறது என்று அவனுக்கு எண்ணமுண்டாயிற்று. ஆனால் அதற்கு அவன் மனம் சம்மதிக்கவில்லை. வெகுநாட் கழித்து இன்று குமுதத்தைப் பார்க்கிறான். இவ்வளவு மட்டமான புடைவையை அவள் உடுத்துக்கொண்டதை இன்றே பார்த்திருக்கிறான். ஆனால் அவள் இவ்வளவு அழகுடன் இருந்ததை அவன் இதற்குமுன் கண்டதே யில்லை. என்ன வனப்பு! என்ன ஸௌகுமாரம்! மதுசூதனன் வீட்டில் இருக்கையில் அவள் அலங்கரிக்கப்பட்ட மருமகளாய் இருந்தாள்—அயல் வீட்டுப்பெண். இங்கேயோ மிக அருகி லிருப்பவளாய்க் காணப்பட்டாள். கண்குளிரச் செய்யும் என்ன திவ்ய வடிவம்! அவளை உடனே வீட்டிற்கு அழைத்துக்கொண்டு போகவேண்டுமென்று மதுசூதனனுக்கு ஆக்கிரகமுண்டாயிற்று; "அவள் என்னைச் சேர்ந்தவள், என் வீட்டைச் சேர்ந்தவள், என் ஐச்வர்யம், என் உடலும் உயிரும் அவளே!" என்பதையே திரும்பத்திரும்பச் சொல்ல விரும்பினான்.

வெளிப்பக்கத்து அறையில் சோபாவைக் காண்பித்து உட்காரும்படி குமுதம் சொன்னபோது அவன் உட்கார்ந்துவிட்டான். அது அவ்விதம் வெளிப்பக்கத்து அறையாயில்லாவிடில் குமுதத்தின் கையைப் பிடித்து அவளையும் தன் பக்கத்தில் உட்கார வைத்துக்கொண்டிருப்பான். குமுதம் உட்காரவில்லை. ஒரு நாற்காலிக்குப் பின்புறம் அதன் முதுகின்மேல் கையை வைத்துக்கொண்டு நின்றிருந்தாள்; "என்னிடம் ஏதாவது சொல்லவேண்டுமோ?" என்று கேட்டாள்.

அவள் இந்தக் குரலில் இந்தக் கேள்வியைக் கேட்டது அவனுக்குப் பிடிக்கவில்லை. "வீட்டிற்கு வரவில்லையா?" என்று வினவினான்.

"இல்லை."

மதுசூதனன் திடுக்கிட்டு, "என்ன!" என்றான்.

"உங்களுக்கு நான் அவசிய மில்லையே!"

சியாம சுந்தரியைப்பற்றிக் கேள்விப்பட்டிருப்பாள், அதனால் ரோஷமுண்டாயிருக்கும் என்று மதுசூதனன் எண்ணினான். அவள் அவ்விதம் ரோஷப்படுவது அவனுக்கு இனிமையாயிருந்தது.

"என்னென்னவோ சொல்கிறாயே! அவசியமில்லாமல் என்ன? வீடு சூந்யமாயிருப்பது நன்றாயிருக்கிறதா?"

இதைப்பற்றி விவாதிக்கக் குமுதம் தயாராயில்லை. மறுபடி சுருக்கமாய், "நான் வரமாட்டேன்" என்றாள்.

"இது என்ன! வீட்டுக்காரி வீட்டிற்கு வரமாட்டேனென்றால்?"

"மாட்டேன்."

மதுசூதனன் சோபாவிலிருந்து எழுந்து நின்றான். "என்ன? வரமாட்டாயா? வந்தே ஆகவேண்டும்."

குமுதம் விடை சொல்லவில்லை. மதுசூதனன் மறுபடியும், "போலீஸ்காரனைக் கூப்பிட்டு உன்னைக் கழுத்தைப் பிடித்து இழுத்துக்கொண்டு போகமுடியும்; தெரியுமா? மாட்டேன் என்றால் தீர்ந்து விடுமா?" என்றான்.

குமுதம் மௌனமாயிருந்தாள். மதுசூதனன், "அண்ணா[illegible]த்தில் திரும்பவும் நார்நகரத்து ஜாலமெல்லாம் கற்றுக் கொள்ள ஆரம்பித்துவிட்டாய்போலிருக்கிறதே!" என்று கர்ஜித்தான்.

குமுதம் ஒருமுறை அண்ணாவின் அறைப்பக்கம் நோக்கிவிட்டு, "இந்தமாதிரி சத்தம் போடாதீர்கள்" என்றாள்.

"ஏன்? உங்கள் அண்ணாவிற்குப் பயந்துகொண்டு பேச வேண்டுமா? அவனை இந்த க்ஷணமே வீட்டை விட்டுத் துரத்தித் தெருவில் நிற்கச்செய்ய முடியும்; தெரியுமா?"

அடுத்த விநாடி தன் தமையன் அந்த அறையின் வாயிலண்டை வந்து நிற்பதைக் குமுதம் பார்த்தாள். உயர மான தோற்றம்; இளைத்து மெலிந்த சரீரம்; வெளுத்த முகம்; அகன்ற கண்களிலிருந்து நெருப்பு ஜ்வாலை வீசிக் கொண்டிருந்தது. ஒரு தடித்த போர்வையைப் போர்த் திருந்தான். அதன் நுனி தரையில் புரண்டுகொண்டிருந்தது. குமுதத்தை, "வா, குமு, என் அறைக்கு வா" என்று அழைத்தான்.

"இதோ, உன் அலக்ஷியத்தை மனத்தில் போட்டுக் கொண்டேன். உன் நூர்நகரத்துச் செருக்கை அடக்கா விட்டால் என் பெயர் மதுசூதனனல்ல" என்றான் அவள் கணவன்.

தன் அறைக்குள் நுழைந்ததும் விப்ரதாஸ் படுக்கை யில் வீழ்ந்தான். கவலையும் களைப்புங்கொண்டு கண்களை மூடிக்கொண்டான். குமுதம் தலைப்புறம் உட்கார்ந்து விசிறினாள். இவ்விதம் வெகுநேரம் கழிந்தபின் க்ஷேமா அத்தை வந்து, "குமு, இன்று சாப்பிடப் போகிற தில்லையா? வெகு நேரமாயிற்றே!" என்று கேட்டாள்.

விப்ரதாஸ் கண்களைத் திறந்து, "குமு, போய்ச் சாப் பிட்டு வா. முகர்ஜீயை இங்கே அனுப்பு" என்றான்.

"அண்ணு, உன் கால்களில் விழுந்து கெஞ்சுகிறேன்; இன்று முகர்ஜீயுடன் பேசுவது இருக்கட்டும். கொஞ்சம் தூங்கப் பார்" என்று குமுதம் வேண்டினுள்.

விப்ரதாஸ் வாய்மூலம் ஒன்றும் சொல்லாமல் ஆழ்ந்த வேதனையுடன் குமுதத்தைப் பார்த்தவண்ணமிருந்தான். சற்றுப் பொறுத்து ஒரு நீண்ட பெருமூச்சு விட்டு விட்டு மறுபடி கண்களை மூடிக்கொண்டான். குமுதம் மெதுவாய் எழுந்து வெளியேவந்து கதவைச் சார்த்தினுள்.

கொஞ்ச நேரத்திற் கெல்லாம் முகர்ஜீ வந்தார். விப்ரதாஸ் எழுந்து தலையணையின் உதவியைக்கொண்டு உட்கார்ந்தான்.

"மாப்பிள்ளை வந்துவிட்டு நிரம்ப சீக்கிரம் திரும்பிப் போய்விட்டாரே, ஏன்? என்ன சமாசாரம்? குமுதத்தை அழைத்துச் செல்வதைப்பற்றி அவர் ஏதாகிலும் சொன்னுரா?" என்று முகர்ஜீ கேட்டார்.

"ஆமாம். சொன்னுர். போகமாட்டேனென்று குமுதம் சொல்லிவிட்டாள்."

"இதென்ன, சர்வநாசத்திற்கு வழிதேடிக் கொள்வதாய் இருக்கிறதே!"

"சர்வநாசத்திற்கு நாங்கள் அஞ்சவில்லை; அவமானத்திற்கும் அவமதிப்பிற்கும் நாங்கள் சம்மதிக்கமாட்டோம்."

"ஆனுல் அதற்குத் தயாராயிருங்கள். இரத்தத்தில் ஊறி யிருப்பது எங்கே போகும்! உங்கள் தகப்பனுர் ஒரு கலெக்டரின் கர்வத்தைக் குறைக்க இரண்டு லக்ஷம் செலவழித்தார்; எனக்குத் தெரியும். மாரைத் தட்டிக்கொண்டு ஆபத்தை எதிர்கொண்டழைக்கும் குணம் உங்கள் வம்சத்தில் தலைமுறை தலைமுறையாயிருக்கிறது. இது

எங்கள் வம்சத்திற்குக் கிடையாது. அதனுல்தான் உங்கள் பைத்தியக்காரத்தனத்தைப் பார்த்துக் கொண்டிருக்க முடிவதில்லை. ஆனுல் இப்போது எப்படித் தப்புவது?"

விப்ரதாஸ் தூக்கி நின்ற தனது வலது முழங்காலை இடது கையால் பிடித்துக்கொண்டு மெதுவாய்ப் படுத்துக் கண்களை மூடிச் சிறிதுநேரம் சிந்தையிலாழ்ந்திருந்தான். கடைசியில் கண்களைத் திறந்து, "பத்திரத்தில் எழுதியிருப்பதன் பிரகாரம் மதுசூதனன் ஆறுமாத நோட்டீஸ் கொடுக்காமல் நம்மைப் பணம் கேட்கமுடியாது. அதற்குள் ஆடிமாதம் சுபோது வந்துவிடுவான். ஏதாவது வழி ஏற்படும்" என்ருன்.

முகர்ஜீ சற்றுக் கோபத்துடன், "வழிக்கு என்ன! ஒரே மூச்சில் விளக்கு அணைந்து போவதைவிட, கௌரவமாக அது அணைந்துபோகவிடுவதே நல்லது" என்ருர்.

"எரியும் திரி கடைசிக்கு வந்துவிட்டது. அது தானுகவே சீக்கிரத்தில் அணையப்போகிறது. அதை ஊதி அணைக்கவேண்டிய அவசியமேயில்லை. இதனுல் மனம் வேதனையையோ தளர்ச்சியையோ அடையப்போகிறதில்லை. எரிந்துபோகும் இந்த விளக்கின் மங்கலில் இருப்பதைவிட முழு அந்தகாரத்தில் இருப்பதே மேல்."

காளிதாஸ் முகர்ஜியின் நெஞ்சம் சுரீரென்றது. இது வியாதிக்காரன் சொல்லும் வார்த்தை என்று தெரிந்து கொண்டார். விப்ரதாஸ் சாதாரணமாய் இவ்விதம் வெறுத்திருப்பவனல்லன். அவன் தன் குடும்பத்தைக் காப்பாற்ற இதுவரை எவ்வளவோ யோசனைகள் செய்துகொண்டிருந்தான். ஏதாவது வழியில் பிழைத்துவிடலாமென்று இருந்தான். ஆனுல் இன்று அதைப்பற்றியெல்லாம்

நம்பி நினைக்கமுடியவில்லை—தப்புவதற்குக்கூட அவனுக்குச் சக்தியில்லை.

முகர்ஜீ விப்ரதாஸை உருக்கத்துடன் நோக்கி, "நீங்கள் கவலைப்படவேண்டாம். என்ன செய்ய வேண்டுமோ அதை நான் செய்கிறேன். தாகர்களைப்போய் ஒரு முறை சுற்றிப்பார்த்து வருகிறேன்" என்றார்.

மறுதினம் விப்ரதாஸிற்கு மதுசூதனனிடமிருந்து ஆங்கிலத்தில் ஒரு கடிதம் வந்தது. அதன் தோரணை வக்கீல் எழுதியது போலிருந்தது. குமுதத்தை அனுப்ப முடியுமா முடியாதா என்பதைத் தீர்மானமாகத் தெரிவிக்க வேண்டும் என்றும், அதற்குப்பின் தக்க நடவடிக்கை எடுத்துக்கொள்ளப்படும் என்றும் அதில் கண்டிருந்தது.

"குமு, எல்லாவற்றையும் நன்முக யோசித்துக் கொண்டாயா?" என்று விப்ரதாஸ் கேட்டான்.

"நான் யோசிப்பதையே நிறுத்திவிட்டேன். அதனுலேயே என் மனம் இன்று கவலை யில்லாமல் இருக்கிறது. நான் முன்பு இங்கே இருந்ததுபோல இருக்கிறேன்; நடுவில் நடந்தவையெல்லாம் ஒரு கனவு."

"உன்னைப் பலவந்தமாக அழைத்துக்கொண்டுபோகப் பார்த்தால் உன்னுல் நிர்வகிக்கமுடியுமா?"

"உனக்கு இதனுல் கெடுதல் ஏற்படாதென்முல் நான் நிர்வகித்துக்கொள்வேன்."

"நீ கடைசியில் போவதென்முல், இப்போது எவ்வளவு தாமதம் செய்கிருயோ அவ்வளவுக் கவ்வளவு அவர்களுக்கு ஆத்திரம் அதிகமாகும். அதற்காகவே கேட்கிறேன். அவர்களோடு இருந்ததனுல் ஏதாவது ஒரு பாசம் உன் மனத்தைச் சுற்றி யிருக்கிறதா?"

"கொஞ்சங்கூட இல்லை. நவீனன், நிஸ்தாரிணி, மோதி இவர்களிடமே எனக்குப் பிரியம் இருக்கிறது. அவர்கள் அந்த வீட்டில் வேறு மாதிரியாகவே இருந்தார்கள்."

"இதோ பார்: குமு, அவர்கள் அட்டகாசம் செய்வார்கள. சட்டப்படி உபத்ரவிக்க அவர்களுக்கு அதிகாரம் இருக்கிறது. அவைகளையெல்லாம் பொருட்படுத்தாமல் இருக்கவேண்டுமென்றால் லஜ்ஜை, சங்கோசம், பயம் எல்லாவற்றையும் கட்டோடு ஒதுக்கிவிட்டு, சமூகத்தை எதிர்த்து நிற்கவேண்டும். உள்ளும் வெளியும் நாலுபுறமும் கெட்டபெயர் ஏற்படும். அதன் நடுவில் தலை தூக்கி நிற்க வேண்டும்."

"அண்ணு, அதனால் உனக்கு அநிஷ்டமோ, மானக் கேடோ உண்டாகாதே?"

"அநிஷ்டம் என்றும் மானக்கேடு என்றும் எதைச் சொல்கிறாய், குமு? நீ அவமதிப்புக்குள்ளாவதைவிட எனக்கு வேறு பெரிய அநிஷ்டம் ஏது? நீ இருக்கும் வீடு உன் வீடல்ல; உன்னிடம் அதிகப்பாத்தியம் எவருக்கு உண்டோ அவரே உனக்கு அந்நியர் போலிருக்கிறார் என்று தெரிந்துகொள்வதைவிட எனக்குப் பெரிய மனக் கிலேசம் எப்படி உண்டாகும்? அப்பா உன்னிடம் மிகப் பிரியமாயிருந்தார். ஆனால் அக்காலத்தவர்கள் பெண்களிடம் அதிக ஒட்டுதலுடன் இருப்பதில்லை. உன்னைப் படிக்கவைக்க வேண்டுமென்று அவருக்குத் தோன்றியே இராது. நானே ஆதிமுதல் உன்னைப் படிக்கவைத்தேன்; உன்னை உயர்வாக வைத்துக்கொண்டேன். உன் தாயார் தகப்பனார்களைவிட நான் ஒரு விதத்திலும் குறைந்தவனல்ல. உன்னை வளர்த்து வந்ததனால் எவ்வளவு

பொறுப்பு ஏற்படுகிறதென்பது எனக்கு இன்றுதான் தெரிகிறது. நீயும் மற்றப் பெண்களைப்போல் இருந்தால் உனக்கு இப்போது ஒருவிதக் கஷ்டமும் இராது. உன்னுடைய சுதந்திரத்தன்மையை அறியாதவர்களிடம் நீ போய் இருப்பது உனக்கு நரகம் போலல்லவோ இருக்கும்? உன்னை அங்கே அனுப்ப என்மனம் எப்படி விரும்பும்? எனக்குச் சின்னத்தம்பி யிருந்தால் எப்படி இருப்பானோ அப்படியே நீயும் என்னுடனேயே எப்போதும் இரு."

அண்ணாவின் மார்பினருகில் கட்டிலோரமாய்த் தலையை வைத்துக்கொண்டு முகத்தை மற்றொரு புறமாய்த் திருப்பிக்கொண்டு குமுதம், "ஆனால் நானிருப்பது உங்களுக்குப் பாரமாயிருக்காதா, அண்ணா? நீ சொல்வது சரியா?' என்று கேட்டாள்.

குமுதத்தின் தலையைக் கையால் தடவிக்கொண்டே விப்ரதாஸ், "பாரமாயிருப்பானேன், அம்மா? உன்மூலமாகப் பல வேலைகளை நான் செய்து கொள்வேன். என் காரியங்கள் முழுதும் உன்பொறுப்பில் இருக்கும். ஒரு 'பிரைவேட் செக்ரடரி' யால்கூட இவ்வளவு வேலை செய்ய முடியாது. எனக்குப் பாட்டு வாசித்துக் காண்பிக்க வேண்டும்; என் குதிரையைப் பார்த்துக்கொள்ள வேண்டும். இதுதவிரப் படிப்புச் சொல்லிக் கொடுப்பதில் எனக்கு நிரம்ப இஷ்டம்; உன்னைப் போன்ற சிஷ்யை எங்கே அகப்படுவாள்? சொல். பாரஸீகபாஷை கற்றுக் கொள்ளவேண்டுமென்று எனக்கு வெகுநாளாக எண்ணம். ஒருவனாகப் படித்தால் மனம் பதிவதில்லை. உன்னையும் சகபாடியாகச் சேர்த்துக் கொள்கிறேன். நீ நிச்சயம் என்னைவிடச் சீக்கிரம் கற்றுக்கொண்டு விடுவாய்; இருந்

தாலும் எனக்கு உன்மேல் பொறுமை இராது; நீ வேண்டுமானால் பார்" என்றான்.

இவைகளையெல்லாம் கேட்கும்போது குமுதத்தின் மனம் புளகிதமாயிற்று. இதைவிடப் பெரிய சுகம் வாழ்க்கையில் ஏது?

சிறிது பொறுத்து விப்ரதாஸ் மறுபடி, "இன்னொரு வார்த்தை சொல்கிறேன், குமு. நம் நிலைமை வெகு சீக்கிரத்தில் மாறிவிடும். நாம் ஏழைகள்போல வசிக்க நேரும். அப்போது ஏழையாகிய எங்களுக்கு நீ ஒருத்தியே ஐச்வர்யமாயிருப்பாய்" என்றான்.

குமுதத்தின் கண்களில் நீர் நிறைந்தது; "எனக்கு அவ்வித அதிர்ஷ்டம் கிடைக்குமென்றால் நான் உயிரோடிருக்கச் சம்மதிக்கிறேன்" என்றாள்.

விப்ரதாஸ் மதுசூதனன் கடிதத்தை ஒரு புறமாய் வைத்தான். விடை ஒன்றும் எழுதவில்லை.

---

## 56

இரண்டு தினங்கள் கழித்து நவீனன் தன் மனைவியையும் பிள்ளையையும் அழைத்துக்கொண்டு வந்தான். மோதி தன் பெரியம்மாவின் மடியில் உட்கார்ந்து அவளுடைய மார்பில் தலையைப் பதித்துக்கொண்டு அழுதான். எதற்காக அவன் இவ்விதம் அழுகிறான் என்பதைச் சொல்வது கஷ்டம்; முன்பு நடந்ததைப்பற்றின கோபமா? இப்போது இருக்கும் ஆசையா? அல்லது இனிமேல் ஏற்படப் போவதைப்பற்றின கவலையா?

குமுதம் அவனை மார்போடு அணைத்துக்கொண்டு, "கோபாலா, வாழ்க்கையே துன்பமானது. அதில் அழு

கைக்கு முடிவேயில்லை. என்னிடம் என்ன இருக்கிறது? நான் எதைக் கொடுத்து மானிடர்களின் சிசுக்கள் அழாதவண்ணம் சமாதானம் செய்யமுடியும்? நானுங்கூட அழுது அவர்கள் அழுகையைக் குறைக்கப்பார்க்கிறேன். இதைவிட அதிகமாகச் செய்ய என்னால் இயலவில்லை. ஆசையைத் தவிர்த்து வேறு எதை என்னால் கொடுக்கமுடியும்? என் கண்ணே, அந்த அன்பை நீ பெற்றிருக்கிறாய். பெரியம்மா எப்பொழுதுமா இருப்பாள்? இதை ஞாபகம் வைத்துக் கொள், ஞாபகம் வைத்துக்கொள், ஞாபகம் வைத்துக் கொள்" என்று சொல்லி அவனுடைய கன்னங்களில் முத்தமிட்டாள்.

நவீனன், "மன்னி, நாங்கள் ரஜபபுரம் போகிறோம். இவ்விடத்தில் எங்கள் நாட்கள் முடிந்துவிட்டன" என்றான்.

குமுதம், "துரதிருஷ்டசாலியான நான் வந்து உங்களுக்கு இந்தக் கேடு செய்தேன்" எனத் துக்கித்தாள்.

"இதற்கு எதிராக நடந்திருக்கிறது, மன்னி; வெகு நாளாய்ப் போகவேண்டுமென்று ஆசையாயிருந்தது. மூட்டைகள்கூடக் கட்டிவைத்திருந்தோம். அப்போது நீங்கள் எங்கள் வீட்டிற்கு வந்தீர்கள். வீடு பிரகாசமாயிற்று. ஆனால் பகவானுக்கு அது சம்மதமில்லை" என்று நவீனன் சொன்னான்.

அன்று மதுசூதனன் இங்கிருந்து வீடு சென்றதும் வீட்டில் பெரிய அமர்க்களம் நேர்ந்ததென்று தெரிய வந்தது.

நவீனன் என்ன சொன்ன போதிலும் நிஸ்தாரிணிக்குக் குமுதம் வந்ததாலேயேதான் இவ்விதம் வீடு வாசல் விட்டுச்செல்ல நேரிட்டது என்ற எண்ணமிருந்தது.

அந்தக் குற்றத்தை அவளால் மறக்கமுடியவில்லை. இப்போதும் குமுதம் உடனே தன் புக்ககத்திற்குத் திரும்பிப் போக வேண்டுமென்றும், அங்கே எவ்வளவு அவமானம் ஏற்பட்டாலும் அதைப் பொறுத்துக் கொள்ளவேண்டுமென்றும் அவள் நினைத்தாள்; "இனிப் புக்ககம் போக வேமாட்டீர்களா?" என்று சற்றுக் கடுமையுடன் கேட்டாள்.

குமுதம் சற்றுக் கஷ்டத்துடனேயே, "மாட்டேன" என்றுரைத்தாள்.

"ஆனால் வேறு என்ன செய்வீர்கள்?"

"இவ்வளவு பெரிய பூமியில் எனக்கு இருக்க இடமில்லாமல் போய்விடுமா? வாழ்க்கையில் எவ்வளவோ பொருள்களை இழந்துவிடுகிறோம். இருந்தும் மிச்சம் கொஞ்சமாவது நிற்பதில்லையா?"

நிஸ்தாரிணியின் மனத்தில் தன்னைப்பற்றி மாறுதல் ஏற்பட்டிருக்கிறதென்று குமுதம் உணர்ந்தாள்; "நீங்கள் என்ன செய்வீர்கள்?" என்று நவீனனைக் கேட்டாள்.

"நதிக்கரையில் கொஞ்சம் நிலமிருக்கிறது. அதில் ஏதாவது சிறிது சாப்பாட்டிற்குக் கிடைக்கும்."

நிஸ்தாரிணி சற்றுக் கோபத்துடன் நவீனனைப் பார்த்து, "அதைப்பற்றி நீங்கள் கவலைப்படவேண்டாம். அந்த மிர்ஜாபுர அன்ன ஜலத்தில் நமக்கும் பாத்தியம் உண்டு; அதை ஒருவராலும் எடுக்கமுடியாது. மைத்துனர் நம்மை வெளியே அனுப்பிவிட்டதால் உடனேயே சந்நியாசியாகப் போகும்படி நாம் என்ன அவ்வளவு கேவலமாய்விட்டோமா? அவரே, இன்று இல்லாவிடில் நாளைக்காவது கூப்பிடுவார். அப்போது நாம் திரும்பி வருவோம். அதுவரை பொறுத்துக்கொண்டிருப்போம்" என்றாள்.

நவீனன் சற்று மனம் குன்றி, "அது எனக்குத் தெரியும். இருந்தாலும் அதை நான் பிரமாதமாகக் கருதவில்லை. வேறோரு ஜன்மம் எடுத்தால் சாப்பாட்டிற்கு இழுபறி ஏற்பட்டாலும் மானத்துடன் இருக்கவே விரும்புகிறேன்" என்றான்.

உண்மையில் நவீனன் அநேகம் முறை தன் தமையனை விட்டுச் சென்று கிராமத்தில் உழுது பயிரிட்டு ஜீவிப்பது என்று நினைத்ததுண்டு. நிஸ்தாரிணி வாய்ப்பேச்சுப் பேசினாளே யொழியக் காரியத்தைத் தொடங்க எண்ணும் போது அவள் நகரவே இல்லை. இதுவே நவீனனை அடிக்கடி தடுத்துவந்தது. மைத்துனர் வீட்டில் தனக்கும் பாத்தியம் உண்டு என்று அவள் அறிவாள். பெரிய மைத்துனர் மாமனாருக்குச் சமானமானவர். அவர் அநீதிகள் செய்தாலும், அவரைப்பற்றித் தூஷிக்கக்கூடாது என்பது அவளுடைய அபிப்பிராயம். கணவன் எவ்விதம் நடந்துகொண்டாலும், அதற்காகக் குமுதம் கணவன் வீட்டை விட்டு வருவது சரியல்ல என்றே அவள் எண்ணினாள்.

டாக்டர் வந்திருக்கிறாரென்று வேலையாள் சொன்னான். "சற்று இருங்கள். டாக்டர் என்ன சொல்கிறாரென்று கேட்டுவிட்டுவருகிறேன்" என்று சொல்லிக் குமுதம் சென்றாள்.

"நாடியில் கெடுதல் தெரிகிறது. இரவில் தூக்கம் குறைவாக இருக்கிறது. வியாதிஸ்தனுக்கு விச்ராமமே போதாது" என்று டாக்டர் சொன்னார்.

குமுதம் திரும்பி வரும் சமயம் முகர்ஜீ வந்து, "ஒரு வார்த்தை சொல்லாமலிருக்க முடியவில்லை, குமு. வலை மிகச் சிக்கலாய்விட்டது. நீ இப்போது புக்ககம் போகா

விட்டால் தீங்கு அதிகமாகும். எனக்கு வேறு ஒரு வழியும் தெரியவில்லை" என்றார்.

குமுதம் மௌனமாய் நின்றாள். "உன்கணவன் வீட்டி லிருந்து உத்தரவு வந்திருக்கிறது. அதை மீறி நடக்க எங்களுக்குச் சக்தி உண்டா? நாங்கள் அவர் கை முஷ்டி யில் இருக்கிறோம்" என்று அவர் மேலும் சொன்னார்.

வராந்தாவின் கைப்பிடியில் சாய்ந்துகொண்டு குமுதம், "எனக்கு ஒன்றுமே தெரியவில்லை, முகர்ஜீயண்ணா. உயிர் துடிக்கிறது. சாவைத் தவிர வேறு வழியில்லைபோல இருக் கிறது" என்று சொல்லிவிட்டு அங்கிருந்து சட்டென்று போய்விட்டாள்.

குமுதம் தன் தமையன் அறையில் இருந்த சமயம் நிஸ்தாரிணியும் க்ஷேமா அத்தையும் பேசிக்கொண்டிருந் தனர். சிற்சில குறிகளைக் கண்டு இருவருக்கும் குமுதம் கர்ப்பவதி என்று தோன்றிற்று. நிஸ்தாரிணிக்குச் சந்தோ ஷம்; "அந்த மாதிரியே இருக்கும்படி பகவான் கிருபை செய்யவேண்டும். இப்போது அடங்கிவிடுவாள். ரோஷம் கொண்டு புக்ககத்தை ஒதுக்கப் பார்க்கிறாள். தலைப்பில் மாத்திரமா இருவரும் முடியிடப்பட்டிருக்கிறார்கள்? இருவர் ரத்தமும் கலந்துவிட்டதே!" என்று அவள் நினைத் தாள்.

நிஸ்தாரிணி குமுதத்தைத் தனிமையில் அழைத்துச் சென்று, தன் சந்தேகத்தைச் சொன்னாள். குமுதத்தின் முகம் சுண்டிற்று. அவள் தன் கைமுஷ்டியை இறுக்கிக் கொண்டு, "இல்லை, இல்லை; அந்த மாதிரி ஒருநாளும் இராது" என்றாள்.

நிஸ்தாரிணி கோபத்துடன், "ஏனம்மா இராது? நீ எவ்வளவு பெரிய வீட்டுப் பெண்ணாக இருந்தால் என்ன?

உனக்காகத் தனியான நியாயம் இருக்குமா? சம்சாரத்தின் விதி மாறி விடுமா? நீ கோஷாலர் வீட்டு மருமகள்; கோஷால வம்சதேவதை உன்னை எளிதில் விட்டுவிடுமா? ஓடவிடாமல் அது குறுக்கே தடுக்கிறது.”

கர்ப்பவதி என்ற சங்கையினால், குமுதத்திற்கு, தான் கணவனிடம் கொண்ட அற்பகாலப் பழக்கம் நாளுக்குநாள் ளுக்குள்ளே ஒருவித மாறான உருவுடன் விளங்குவது ஸ்பஷ்டமாகத் தெரிந்தது. மனிதரிடையே உள்ள ஒரு பேதத்தை ஒழிப்பது எளிதாயில்லை. அவ்வித பேதத்திற்குக் காரணமாயிருக்கும் தன்மைகள் ஆராய்ந்து சொல்ல முடியாதபடி சூக்ஷ்மமாக இருக்கின்றன. பாஷை, நடை, பாவனை இவைகளில் அது தெரியாமல் போனாலும் வெளிக்குக் காட்டாத இங்கிதத்திலும், குரலிலும், விருப்பத்திலும், ரீதியிலும், வாழ்க்கை செல்லும் லக்ஷியத்திலும் பேதத்தின் லக்ஷணங்கள் குறிப்பாகப் புலனாகின்றன. மதுசூதனனிடமுள்ள ஒரு குணக்குறைவு குமுதினியை வருத்தியதோடுகூட அவளுக்கு ஆழ்ந்த வெட்கத்தையும் விளைவித்தது. அவள் மனத்திற்கு அது அஸப்யமென்று தோன்றிற்று. வாழ்வின் தொடக்கத்தில் மதுசூதனன் மிக ஏழ்மை ஸ்திதியில் இருந்தான். இரத்தத்தில் ஊறிவந்த இந்த ஏழ்மையின் இழிவே அவனைக் காசின் மகத்துவத்தை ஒவ்வொரு வார்த்தையிலும் கர்வத்துடன் சொல்லிக்கொள்ளும்படித் தூண்டிற்று. அவன் இந்தப் பணப் பெருமையை அடிக்கடி எடுப்பதெல்லாம் எதற்கு? குமுதினி பிறந்தகுலத்தைக் குத்திக்காட்டுவதற்கே!

எதிலும் ஒண்டாது அலக்ஷியமாய் இருக்கும் அவனுடைய சுவபாவம், கடோரமான மொழிகள், வினயமற்ற டாம்பீகம், அவனுடைய தேகமும் மனமும் சம்சாரத்தில்

மூழ்கியிருக்கும ஓர் அழகின்மை, இவை யாவும் தினமும் குமுதினியின் சரீரத்தையும் மனத்தையும் குன்றும்படிச் செய்துவந்தன. அவைகளை எவ்வளவுக் கெவ்வளவு தன் நினைவிலிருந்து விலக்கமுயன்றுளோ அவ்வளவுக் கவ்வளவு ஏராளமான அசுசிக்கிடையே அவை நாலு புறமும் கிளம்பிக்கொண்டிருந்தன. அவைகளின்மேலுள்ள இந்த வெறுப்பை வெல்ல அவளே தன் மனத்தினுள் பாடுபட்டு வந்தாள். புருஷன் தெய்வமென்று கருதித் தன்கடமைக் களைச் சரிவரப் புனிதமாக அவள் செய்து வந்ததற்கு முடிவேயில்லை. ஆனல் இத்தகைய தோல்வி ஏற்படு மென்று அவள் எதிர்பார்க்கவேயில்லை. மதுசூதனனுக்கும் தனக்கும் உள்ள சம்பந்தம் அலுத்துப்போகாதபடி ஓர் இரத்தக்கலப்பு மூண்டிருக்கும் விகாரம் அவளைத் தீவ்ர மாகப் பிடித்தது. குமுதம் மிகவும் திகிலடைந்து, "இது உனக்கு நிச்சயமாகத் தெரியுமா?" என்று நிஸ்தாரிணியை வினவினுள்.

நிஸ்தாரிணிக்கு மிக்க கோபமுண்டாயிற்று. தன்னை அடக்கிக்கொண்டு, "நானும் பிள்ளைபெற்ற தில்லையா? எனக்குத் தெரியாமலென்ன? இருந்தாலும் இதற்குள் நிச்சயமாய்ச் சொல்லமுடியாது. யாராவது ஒரு மருத்துவச்சியைக் கூப்பிட்டுக் கேட்பது நல்லது" என்றுள்.

நவீனன், நிஸ்தாரிணி, மோதி மூவரும் செல்ல வேண் டிய காலம் நெருங்கிற்று. ஆனல் தெய்வம் தனக்குச் செய்திருக்கும் இந்தக் கடைசி அநீதியைத் தவிரக் குமுதத் தால் வேறெதையும்பற்றி நினைக்க முடியவில்லை. அதனு லேயே தன் புக்ககத்துப் பந்துக்களாகிய அவர்களுக்கு ஒப்புக்கு விடைகொடுத்தனுப்பினுள். போகும் சமயம் நவீனன், "மன்னி, வாழ்க்கையில் எல்லாவற்றிற்கும் ஓர்

முடிவு இருக்கிறது. ஆனால் திடீரென்று உங்களுக்குப் பணி செய்யும் பாக்கியம் எனக்குக் கிடைக்குமென்றாவது, அல்லது அது இவ்விதம் சட்டென்று முடிந்துவிடுமென்றாவது நான் கற்பனைகூடச் செய்ததில்லை. இனி எப்போது உங்கள் தரிசனம் கிடைக்குமோ!'' என்று சொல்லி நமஸ்கரித்தான். மோதி அழுதான். மோதியின் தாயார் முகத்தைக் கடுமையாய் வைத்துக்கொண்டு ஒருவார்த்தையும் சொல்லாமலிருந்தாள்.

## 57

விஷயம் விப்ரதாஸிற்கு எட்டிற்று. மருத்துவச்சி வந்தாள். குமுதம் கர்ப்பவதியே என்பது நிச்சயமாய்த் தெரிந்தது. மதுசூதனனுக்கும் இந்தச் செய்தி தெரிய வந்தது. அவன் தனம் விரும்பினான்; ஏராளமான தனம் கிடைத்தது; அதற்குத் தகுந்த பட்டமும் கிடைத்தது; தன் மகிமையை நிலைநிறுத்திவிட்டால் இந்த வாழ்வில் அவன் செய்யும் கடமை அதன் கடைசி லக்ஷ்யத்தை அடைந்தமாதிரியாகும். அவன் மனத்தில் மிகக் களிப்படைந்தான். குமுதத்தின்மேலுள்ள எல்லாக் குற்றங்களையும் விப்ரதாஸ்மேலேயே சுமத்தினான். விப்ரதாஸிற்கு மற்றொரு கடிதம் எழுதினான். '*Whereas*' என்று ஆரம்பித்துத் தங்கள் தாழ்மை யுள்ள ஊழியன் (*Your Obedient servant*) மதுசூதன கோஷால் என்று முடித்திருக்கும் அடிக்கடிதத்தில் இடையே (*I shall have the painful necessity*) இல்லாவிடில் நிர்ப்பந்தத்தினால் நான் தீவ்ர நடவடிக்கை எடுத்துக்கொள்ள வேண்டிவரும் என்பன முதலிய பதங்கள் இருந்தன. இந்த மாதிரி

பயமுறுத்துகிற கடிதங்கள் சட்டர்ஜீக்களிடம் பலிப்ப தில்லை; அதுவும் ஒரு மகத்தான கேடுவரும்போல் இருந்தால், அதற்கு எதிராய், அவர்கள் தங்களுக்கு வரு வதை எதிர்கொண்டு அழைப்பார்கள். விப்ரதாஸ் அந்தக் கடிதத்தைக் காளிதாஸ் முகர்ஜீயிடம் காண்பித்தான். அவர் முகம் சிவந்தது; 'இந்தக் கடிதத்தைப் படிக்கும்போது என்னைப் போன்றவனுக்கே இரத்தம் கொதிக்கிறது. ஓர் பாதுஷாவைப் போல் கொத்தவாலைக் கூப்பிட்டு, 'இவன் தலையை வெட்டு' என்று உத்திரவு கொடுக்கவேண்டு மென்று ஆத்திர முண்டாகிறது'' என்றார்.

அன்று மத்தியான்னம் எழுதவேண்டிய வேலை விப்ர தாஸிற்கு அதிகமாக இருந்தது. அதை முடித்துக்கொண்டு சாயங்காலமாய்க் குமுதத்தைக் கூப்பிட்டனுப்பினான். அவள் அன்று முழுதும் அண்ணாவின் அருகில் வர வேயில்லை; தன்னை ஒளித்துக்கொண்டிருந்தாள்.

விப்ரதாஸ் படுக்கையை விட்டு எழுந்து ஒரு ஸோபா வில் உட்கார்ந்தான். வியாதிஸ்தனைப்போல் படுத்துக் கொண்டிருந்தால் மனமும் துர்ப்பலமடைகிறது. தன் னெதிரில் குமுதத்திற்கு ஒரு நாற்காலியை வைத்தான். விளக்கு அறையின் மூலையில் கண்கூச்சமுண்டாக்காத வண்ணம் சற்று மறைவில் வைக்கப்பட்டிருந்தது. வைகாசி ஆனிமாத மாகையால் இரவில்கூடப் புழுக்கமா யிருந்தது. தென்றல் சற்றுச் சற்று அடித்துவிட்டுக் களைத்து நின்றுவிடும். மரத்தளிர்கள் கூட அசைவற்று உற்றுக் கேட்கும் பாவனையாய் நிச்சப்தமாயிருந்தன. நீண்ட மாலைப்பொழுதின் மங்கலான கடைசி ஒளி இரு ளோடு இருளாக மறைய ஆரம்பித்தது. தோட்டத்தி லுள்ள குளம் அந்த இருட்டில் கண்ணுக்குப் புலப்பட

வில்லை. ஆனால் ஜலத்தில் ஒளிரும் ஒரு தாரகையின் அசைவற்ற பிரதிபிம்பம் கீழே குளம் இருப்பதை ஆகாயத்திலிருந்து ஒரு விரல் சுட்டிக் காட்டுவதுபோலிருந்தது. மரங்களின் கீழே வேலையாட்கள் அடிக்கடி லாந்தலும் கையுமாய் வந்துகொண்டும் போய்க்கொண்டும் இருந்தனர். ஆந்தை ஒன்று கிளை கூட்டிக்கொண்டிருந்தது.

குமுதம் சற்றுத் தாமதித்து வந்தாள். விப்ரதாஸின் அருகில் நாற்காலியில் உட்கார்ந்து, "அண்ணா, எனக்கு இப்போது ஒன்றுமே பிடிக்கவில்லை. எங்கேயோ போக வேண்டும் போலிருக்கிறது" என்றாள்.

"இல்லை, குமு. உனக்கு எல்லாம் பிடிக்க ஆரம்பிக்கும். இன்னும் சிலநாள் கழித்தால் உன் மனம் சந்தோஷிக்கும்" என்றான் விப்ரதாஸ்.

"இருந்தாலும்—" என்று சொல்லிவிட்டுக் குமுதம் மௌனமாயிருந்தாள்.

"அது எனக்குத் தெரிகிறது. இப்போது உன்னுடைய பந்தனத்தை யாரால் விலக்க முடியும்?"

"ஆனால் போக வேண்டியதுதானா, அண்ணா?"

"உன்னை வேண்டாமென்று சொல்ல எனக்கு ஒருவித அதிகாரமும் இல்லை. உன் குழந்தையை அதன் வீட்டிலிருந்து எவ்விதம் வஞ்சிப்பேன்?"

குமுதம் வெகு நேரம் மௌனமாய் உட்கார்ந்திருந்தாள்; விப்ரதாஸ் ஒன்றும் சொல்லவில்லை.

கடைசியில் அதிக மிருதுவான குரலில் குமுதம், "ஆனால் எப்போது போவது?" என்று கேட்டாள்.

"நாளைக்கே; இனிமேல் தாமதிக்கக் கூடாது."

"அண்ணா, இப்போது நான் திரும்பிப்போனால் பிறகு என்னை அவர்கள் ஒருநாளும் மறுபடி உன்னிடம் அனுப்பமாட்டார்களென்று உனக்குத் தெரியுமல்லவா?"

"நன்றாய்த் தெரியும்."

"சரி, அப்படியே இருக்கட்டும். ஆனால் இன்னொன்று சொல்லுகிறேன். நீ எந்தக் காரணமாயிருந்தாலும் அவர்கள் வீட்டிற்கு ஒரு நாளும் வராதே. உன்னைப் பார்க்க வேண்டுமென்று என் நெஞ்சம் துடிக்கும்; இருந்தும் அவர்கள் வீட்டில் உன்னைப் பார்க்க எனக்குச் சகிக்காது."

"இல்லை, குமு. அதைப்பற்றி நீ கவலைப்படவேண்டாம்."

"அவர்கள் உன்னைக் கஷ்டப்படுத்துவார்களே!"

"ஏதோ அவரால் செய்யக்கூடியதைச் செய்துவிட்டால் பிறகு அவருக்கு எங்கள்பேரில் ஒருவித அதிகாரமும் இராது. நான் சுவாதீனம் பெறுவேன். அதை ஏன் கஷ்டம் என்று சொல்லுகிறாய், குமு?"

"அண்ணா, நீ சுவாதீனம் பெற்றதும் என்னையும் சுவாதீனம் அடையும்விதம் செய்ய வேண்டும். அதற்குள் அவர் குழந்தையை அவரிடம் கொடுத்துவிட்டு நா வருகிறேன். பிள்ளையின்பொருட்டுக்கூடச் சகிக்க் கூடாத சிலவிஷயங்கள் இருக்கின்றன."

"நல்லது; முதலில் குழந்தை பிறக்கட்டும். அத மேல் அதைப்பற்றிப் பேசுவோம்."

"உனக்கு நம்பிக்கையில்லை. ஆனால அமமா மச தது ஞாபகமில்லையா? அவள் வேண்டுமென்றே உயி விட்டாள். வாழ்க்கையில் அவளுக்கு இருக்க இட இல்லை. ஆகையாலேயே பிள்ளைகுட்டிகளைப் பொரு

படுத்தாமல் போய்விட்டாள். மனிதர் முக்தியை விரும்ப ஆரம்பித்தால் அதற்குமேல் அவர்களை ஒருவராலும் தடுக்கமுடியாது. அண்ணு; நான் உன்னுடைய தங்கை; உன்னைப்போலவே விடுதலையில் ஆசைப்படுகிறேன்; என் பந்தனம் என்றையதினம் என்னைவிட்டு அகலுகிறதோ, அன்றே அம்மா என்னை ஆசீர்வதித்து அழைத்துக்கொள் வாள்."

மறுபடி வெகுநேரம்வரை இருவரும் மௌனமா யிருந்தனர். திடீரென்று ஒரு காற்று அடிக்கவே மேஜை மேலிருந்த விப்ரதாஸின் புத்தகத்தின் தாள்கள் புரண் டன. தோட்டத்திலிருந்து மல்லிகைப்பூவின் மணம் அறைமுழுவதும் கமழ்ந்தது.

"அவர் என்னை வேண்டுமென்று கஷ்டப்படுத்துவா ரென்று நினைக்காதே. அவரால் எனக்குச் சுகமுண் டாகாதவிதம் என்னைப் பிரம்மா செய்திருக்கிறார். நானும் அவரைச் சந்தோஷப்படுத்த முடியவில்லை. அவரைச் சுலபமாய்ச் சந்தோஷிக்கச் செய்யக்கூடியவள் இடத்தை நான் அபகரித்துக்கொண்டு அதில் இருந்தால் கஷ்டங்கள் ஏற்படுவது கிரமந்தானே! சமூகம் குற்றம் சொன்னால் அதை முழுவதும் நானே வகிப்பேன். அவர்மேல் ஒருவித தோஷமும் சொல்லும்படி விடமாட்டேன். ஆனால் ஒருதினம் அவருக்கும் விடுதலை அளித்து நானும் அதை அடைவேன்; புறப்பட்டுவிடுகிறேன்; நீயே பார். அசத்தியத்தை வழ்விப் பொய்யான வாழ்வு வாழ்கிறேன். நான் அவர் மனைவியே. ஆனால் நான் குமுதம் என்பதை ஒழித்துவிட முடியுமா? அண்ணு, நீ தெய்வத்தினிடம் பக்தி வைக்கவில்லை. நான் வைத்திருக்கிறேன். மூன்று மாதங்களுக்குமுன் இருந்ததைவிட இப்போது அதிக

பக்தி வைத்திருக்கிறேன். நாலுபக்கமும் இவ்வளவு குழப்பம்—ஆனால் இதில் உலகம் ஏன் முழுகிப்போகாமல் இருக்கிறதென்றுதான் நான் இத்தனைநாளாக யோசித்து வருகிறேன். இவைகளையெல்லாம் ஒதுக்கிவிட்டல்லவோ ஒளிரூபங்களான சந்திரசூர்யனை வைத்துக்கொண்டு உலகம் நடக்கிறது? எங்கு இந்த மாசு நுழைய இடமில்லையோ அங்கேதான் வைகுண்டம்; என்னுடைய கடவுளிருக்கும் இடமும் அதுவே. உன் எதிரில் இவையெல்லாம் சொல்வது கூச்சமாயிருக்கிறது. ஆனால் சொல்வதற்கு இனிமேல் சமயம் கிடைக்காதாகையால் சொல்லவேண்டியதை இப்போதே சொல்லிவிடுகிறேன். இல்லாவிட்டால் நீ என்னைப்பற்றித் தவறாகக் கவலைப்பட்டுக்கொண்டிருப்பாய். எல்லாம் போயும் மிகுதியாக ஒன்று நிற்பதை நான் கண்டு கொண்டேன். அதுதான் அழிவற்ற என்னுடைய தெய்வம். அதை நான் அறியாமற்போனால், இங்கேயே உன்காலடியில் தலையை மோதிக்கொண்டு செத்திருப்பேனே ஒழிய அந்தச் சிறையில் நுழையமாட்டேன். அண்ணா இந்த வாழ்வில் எனக்கு நீ ஒருவன் இருக்கிறாய் என்ற தைரியத்தினாலேயே உயிர்வைத்துக்கொண்டிருக்கிறேன்.”

இவ்வண்ணம் உரைத்துக் குமுதம் நாற்காலியிலிருந்து கீழே இறங்கி அண்ணாவின் காலடியில் தலையை வைத்துக் கொண்டு விழுந்தாள். இரவு நேரமாயிற்று. விப்ரதாஸ் கண்கொட்டாமல் ஜன்னல்வழியாய் வெளிப்புறம் நோக்கிய வண்ணம் சிந்தையில் ஆழ்ந்திருந்தான்.

---

## 58

மறுதினம் விப்ரதாஸ் விடியற்காலையிலேயே எழுந்திருந்து குமுதத்தைக் கூப்பிட்டனுப்பினான். குமுதம்

வந்ததும் அவன் தன் படுக்கையில் உட்கார்ந்து மடியில் ஓர் எஸ்ராஜ் வைத்துக்கொண்டிருப்பதையும் அருகில் மற்ருேர் எஸ்ராஜ் வைத்திருப்பதையும் பார்த்தாள். "எஸ்ராஜை எடுத்துக்கொள். நாம் இரண்டுபேருமாய் வாசிக்கலாம்" என்ருன்.

அப்போது இன்னும் சற்று இருட்டாகவே இருந்தது. குளிர்ந்த வைகறைக் காற்று அரசமரத் தளிர்களிடையில் விளையாடிற்று. காக்கைகள் கரைய ஆரம்பித்தன. இருவரும் பைரவிராகத்தில் ஆலாபனத்தைத் தொடங்கிஞர்கள். கம்பீரமும், சாந்தமும், உருக்கமும் கொண்ட இராகம்; ஸதியை விட்டுப் பிரிந்தபோது பரமசிவன் தன் விரகதாபத்தை ஆற்றும் உதய தியானத்தைப் போன்றது. இவர்கள் வாசித்துக்கொண்டிருக்கையில் புஷ்பித்திருக்கும் மயிர்க்கொன்றையின் கிளையின் மூலமாய் அருணோதயம் சிவந்துகொண்டே வந்தது. காலைக் கதிரவன் தோட்டத்தின் வேலிக்குமேல் புறப்பட்டான். வேலையாட்கள் அறையின் வாயில்வரை வந்து நின்று விட்டுத் திரும்பிச் சென்ருர்கள். அறை இன்னும் சுத்தம் செய்யப்படவில்லை. அறையினுள் வெயில் பிரவேசித்தது. வாயிற்காப்போன் மெதுவாய் வந்து மேஜைமேல் பத்திரிகையை வைத்துவிட்டுத் திரும்பிச் சென்ருன்.

கடைசியில் வாசிப்பதை நிறுத்திவிட்ட விப்ரதாஸ், "குமு, நான் ஒருவித தர்மத்தையும் பின்பற்றுவதில்லை என்று நீ நினைக்கிருய். சொல்லுக் கடங்காதது என்னுடைய தர்மம். அதனுலேயே அதைப்பற்றி நான் சொல்லவில்லை. இசையின் மூலமாக அதன் ரூபத்தைக் காண்கிறேன். ஆழ்ந்த வேதனையும் எல்லையற்ற இன்பமும் அதன் மத்தியில் கலந்திருக்கின்றன. அதை என்ன

வென்று நான் வர்ணிப்பது! குமு, நீ இன்றைக்குப் போய் விடுகிறாய். மறுபடி உன்னைப் பார்ப்பேனோ மாட்டேனோ. இன்று அதிகாலையில் உன்னை எல்லா அபஸ்வரங்களை விட்டும், வருத்தும் எல்லாக் கஷ்டங்களை விட்டும் முன்னே கொண்டு வந்து விட்டேன். சகுந்தலையைப்பற்றிப் படித்திருக்கிறாய். துஷ்யந்தன் வீட்டிற்குச் செல்வதற்காகச் சகுந்தலை புறப்பட்ட சமயம் கண்வர் அவளுடன் கொஞ்ச தூரம் வழியனுப்ப வந்தார். அவர் அனுப்ப உத்தேசித்த இடத்தை அவள் சேருமுன் பலவிதத் துன்பமும் அவமானமும் சகிக்க வேண்டியிருந்தது. இருந்தும் அவள் தான் இருந்த இடத்திலேயே நின்று விடவில்லை. அந்தக் கஷ்டங்களை யெல்லாம் தாண்டிச் சென்று நிலை பெற்ற சாந்தியை அடைந்தாள். இன்றைய காலை நேர பைரவி ராகத்தில் அவ்விதச் சாந்தியின் இன்னிசை இருக்கிறது. நான் என் முழு உள்ளத்துடன் உனக்குச் செய்யும் ஆசீர்வாதம் உன்னை அந்த நிர்மலமான பரிபூரணத்தன்மையை அடைய அழைத்துச் செல்லட்டும். அந்தப் பரிபூரணத் தன்மையானது உன் உள்ளும் புறமும் இருந்து, உன் துக்கம் அவமானம் எல்லாவற்றையும் நீக்கிவிடட்டும்" என்றுரைத்தான்.

குமுதம் ஒன்றும் சொல்லவில்லை. விப்ரதாஸின் காலடியில் தலையை வைத்து நமஸ்கரித்தாள். சிறிது நேரம் ஜன்னலுக்கு வெளியில் தெரியும் வெளிச்சத்தை நோக்கினவண்ணம் நின்றிருந்தாள். பிறகு, "அண்ணு, உனக்கு ரொட்டியும் டீயும் செய்து கொண்டுவருகிறேன்" என்று சொல்லிச் சென்றனள்.

மதுசூதனன் இன்று ஜோஸ்யரைக் கூப்பிட்டுக் குமுதம் புறப்பட்டு வருவதற்கு நல்ல முகூர்த்தம் காலை

பத்து மணிக்குமேல் பார்த்து வைத்திருந்தான். சரியான வேளைக்கு ஜரிகை போட்ட சிவப்புப் படுதா கட்டின பல்லக்கு, கைத்தடிபிடித்த சேவகர்களுடன் வாயிலில் வந்து சேர்ந்தது. குமுதத்தை அழைத்துக்கொண்டு மிர்ஜாபுர மாளிகைக்குச் சென்றனர். அங்கே இன்று மேளம் முழங்கிற்று; பிராம்மண போஜனம் நடந்தது; பூரிதக்ஷிணை வழங்கப்பட்டது.

வேலையாள் மாணிக், பார்லிக் கஞ்சி எடுத்துக்கொண்டு விப்ரதாஸ் அறைக்கு வந்தான். இன்று விப்ரதாஸ் படுக்கையில் படுத்திருக்கவில்லை. ஜன்னலருகில் நாற்காலியை எடுத்துச் சென்று அதில் அசைவற்று உட்கார்ந்திருந்தான். கஞ்சி எப்போது வந்ததென்பதைக்கூட அவன் கவனிக்கவில்லை. வேலையாள் திரும்பிச் சென்றான். பிறகு அத்தை பத்தியம் எடுத்துக்கொண்டு வந்தாள். விப்ரதாஸின் தோளில் கையை வைத்து, "அப்பா விபு, நிரம்ப நாழிகையாய் விட்டதே" என்றாள்.

விப்ரதாஸ் நாற்காலியிலிருந்து எழுந்து வந்து படுக்கையில் படுத்தான். எவ்வளவு ஆடம்பரத்துடன் ஆதரவாய்க் குமுதத்தை அழைத்துச் சென்றார்களென்பதை வர்ணிக்க வேண்டுமென்று அத்தைக்கு ஆசை. ஆனால் விப்ரதாஸின் அசைவற்ற மௌனத்தைக் கண்டு அவள் வாயிலிருந்து ஒரு வார்த்தையும் வரவில்லை.

விப்ரதாஸ், "அத்தை, முகாஜ்யை என்னிடம் அனுப்பு" என்று சொன்னபோது ஆழ்ந்த நிச்சப்தமான சாயையிலிருந்து ஒலிப்பது போலிருந்தது. அத்தைக்கு மயிர்க்கூச்சலுண்டாயிற்று.

முகர்ஜீ வந்தசமயம் விப்ரதாஸ் அவர் கையில் ஒரு கடிதத்தைக் கொடுத்தான். சுபோது சீமையி லிருந்து எழுதிய கடிதம்: 'பார்' டின்னர்களைப் பூர்த்தி செய்யாமல் அவன் திரும்பிவந்தால் மறுபடி சீமைக்குப் போக வேண்டியிருக்கும். ஆகையால் கடைசி டின்னரிலிருந்து லீவுபெற்று மாசி பங்குனியில் இங்கே திரும்பிவந்தால் அநாவச்யமான செலவை மிகுக்கலாம். இங்கே இருக்கும் காரியங்கள் அதுவரை பொறுத்திருக்கலாம் என்று தான் நம்புவதாய் அவன் எழுதியிருந்தான்.

இன்று பணவிஷயமாய்ப் பேசி விப்ரதாஸிற்குத் தொந்தரவு கொடுக்க முகர்ஜீக்கு இஷ்டமில்லை; "இதுவரையில் பணத்தைத் திருப்பிக்கொடுப்பதைப்பற்றிப் பேச்சுவரவில்லை. இன்னும் சிலநாள் ஜாக்ரதையாக இருந்தோமானால் அதிக உபத்திரவம் ஏற்படாது. எப்படியிருந்தாலும் நீங்கள் கவலைப் படாதீர்கள்" என்று அவர் சொன்னார்.

"எனக்கு ஒரு கவலையுமில்லை, முகர்ஜி. துளிக்கூட இல்லை." என்றான் விப்ரதாஸ்.

விப்ரதாஸ் கவலைப்படுவது முகர்ஜீக்குப் பிடிக்கவில்லை. ஆனால் இவ்விதம் அடியோடு கவலை யற்றிருப்பதும் கஷ்டமாயிருந்தது.

விப்ரதாஸ் பத்திரிகையை எடுத்துப் படிக்கலானான். அவனுக்கு இவ்விஷயமாய் இனிமேலே பேச இஷ்டமில்லை என்று முகர்ஜீ அறிந்துகொண்டார். மற்றதினங்களில் வேலை முடிந்ததும் அவர் போய்விடுவார். இன்றோ மௌனமாய் உட்கார்ந்திருந்தார். ஏதாகிலும் சிறிது பேசுவோம், உதவி செய்வோம் என்று அவருக்கு விருப்ப

மாயிருந்தது; "அந்த வெளிப்புறத்து ஜன்னலை மூடட்டு மா? வெயிலடிக்கிறதே!" என்ருர்.

"அவசியமில்லை" என்று விப்ரதாஸ் கையை நீட்டிஞன்.

இருந்தும முகாஜ உட்கார்ந்திருந்தார். அண்ணு வின் அருகில் இன்று குமுதம் இல்லை. அந்தச் சூந்யம் யவர் மனத்தைத் தைத்தது. கட்டிலின்கீழே படுத்திருந்த ப்ரதாஸின் நாய் திடீரென்று தேம்பித் தேம்பி அழலா ற்று. குமுதம் புறப்பட்டுப் போகையில் அது பார்த் ருந்தது. என்ன தெரிந்துகொண்டதோ என்னவோ, தனுல் வாய்விட்டுச் சொல்லமுடியவில்லை!